# திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள்:

## ஒரு பொதுநிலை ஆய்வு





மு. ப. சியாமளா, எம்.ஏ., எம்.ஃபில்.

## எனக்குத் துணை

நாளும் பெரிய பெருமாள்
　　அரங்கர் நகைமுகமும்
தோளும் தொடர்ந்தென்னை யாளும்
　　விழியும் தமராய்மனைக்கும்
தாளும் கரமும் கரத்திற்சங்
　　காழியும் தண்டும்வில்லும்
வாளும் துணைவருமே தமியேனை
　　வளைந்து கொண்டே [1]

— திவ்வியகவி

## திருவரங்கநாதன் திறம்

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
　　கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்;
　　'தாமரைக்கண்' என்றே தளரும்;
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு!' என்னும்;
　　இருநிலம் கைதுழா விருக்கும்;
செங்கயல் பாய்நீர்த் திருவரங்கத்தாய்!
　　இவள்திறத் தென்செய்கின் றாயே [2]

— நம்மாழ்வார்

---

1. திருவர. மாலை-காப்பு.
2. திருவாய். 7.2 :1

# திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள்:

## ஒரு பொதுநிலை ஆய்வு

எம்.ஃபில் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

**மு. ப. சியாமளா,** எம்.ஏ., எம்.ஃபில்.
பிஎச். டி., ஆய்வு மாணவி
***தமிழ்மொழித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்***

*விற்பனை உரிமை :*
**பாரி நிலையம்**
*184, பிரகாசம் சாலை*
*சென்னை-600 108.*

முதற் பதிப்பு : டிசம்பர், 1992


9, ஏகப்ப நாயகர் தெரு,
கொருக்குப்பேட்டை,
சென்னை-600 021.

பக்கங்கள் : XXIV + 296 = 320

விலை : ரூ. 44-00

VENKATAM PUBLICATIONS
A D-13 (Plot No. 335)
Anna Nagar, Madras-600 040
Phone : 62 11 583

---

அச்சிட்டோர் :
சுந்தரம் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
133, பிடாரியார் கோயில் தெரு, சென்னை-600 001.
தொ. பே. : 514 357

ஸ்ரீ:

# சமர்ப்பணம்

என் பாட்டனார் வைணவச் சான்றோர்
அருளிச்செயல் அண்ணல்

## ஸ்ரீமான் வீ. துரைசாமி நாயகர்

அவர்கள் திருவடிகளில் இந்த ஆய்வு நூலைப்
பணிவுடன் சமர்ப்பிக்கின்றேன்.

தெண்கடல் வளாகம் தெளிவுறச் சேர்ந்து
தண்ணொளி பரப்பித் தகைமையோர்க் கெல்லாம்
தன்னுறு நற்பதம் தகவுற ஈந்து
தன்புகழ் நாட்டிடுந் தாமரைக் கண்ணன்
விசயனுக் கன்று வெம்போர் தன்னில்
விசயம் பெறவே விழைந்து தேரோட்டிச்
சீர்பெறு அல்லிக் கேணி தன்னில்
கோயிற் கொண்ட பார்த்தசா ரதிபதம்
மறவா துள்ளும் குணப்பெருஞ் சீலர்

**துரைசாமி நாயகர்** எனப்பேர் கொண்டு
ஈன்றதாய் வல்லி யம்மாளும் தந்தை
வீரா சாமியும் பெரிதும் உவப்பக்
குழவி யின்ப மளித்த பின்னர்

வாலிபப் பருவ மெய்திப் பல்கலை
பயின்று பன்மொழிப் புலவராய்த் திகழ
செந்தமிழ் வடமொழி ஆங்கிலம் ஹிந்தி
தெலுங்கு இன்ன மொழிபல தேர்ந்து

இருப தாண்டினில் திருமழிசை வந்து
வீறுகொண் டிருந்தஸ்ரீ வைணவச் சான்றோர்
ஸ்ரீநிவாச சுவாமிகளின் திருவடித் தாறாய்
நலம்பெறத் திகழ்ந்து அவர்முதற் சீடராய்
ஏற்கப் பெற்று வைணவத் திருவே
எங்கும் தழைத்து ஓங்கத் தமமையே

நல்கித் தலைமை யேற்றுத்தம் மனையில்
ஸ்ரீ வேங்க டேசப் பெருமாள் பேரில்
பக்த ஜனசபை யொன்றை நிறுவிப்
பதினை யாண்டு சென்ற பின்னர்

சென்னை கொருக்குப் பேட்டைசெய் தவத்தால்
கோயி லொன்றை நிறுவி யாங்கண்
இதிஹாச புராண கீதை திவ்ய
பிரபந்தம் முதலாப் பிரவசனஞ் செய்து
சக்கர வர்த்தியாய்ப் போற்ற நின்று

தம்மையே தொண்டினிற் கர்ப்பணஞ் செய்த
சீலராய்த் தன்னலஞ் சிறிது மின்றிப்
பிறர்க்கே யுழைத்து ஏழைய ராகிக்
கரிசேர் பொழில்சூழ் வேங்கட வற்கே
அடியராய்த் திகழ்ந்து அல்லும் பகலும்
பகவத் தியானமே பொழுதுபோக் காக

உண்ணும் உணவும் பருகும் நீரும்
எல்லாம் கண்ணன் எம்பெரு மானே
என்றே அனவரதம் ஸ்மரித் திலங்கி
எழுபதின் மூன்றாண் டிசையுடன் வாழ்ந்து
மறைந்தும் மறையா மாமணி யாகிச்
செங்கண் திருமுகச் செல்வத் திருமால்
வைகுந்தம் கொடுக்க நித்தரா னாரென்.



குற்றங்கள் நீக்கிக் குணங்கொள்ளுஞ் சீலராய்ச்
சுற்றந் தழுவிய சான்றோரே! —எற்றைக்கும்
ஓங்கி யுலகளந்த உத்தமன் பேருலகில்
பாங்காக வாழ்க பரிந்து.

# பதிப்புரை

'அருங்கலைக்கோன்', 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
'தமிழ்ப் பேரவைச் செம்மல்'
பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்,
எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பி.எச்.டி.,
சென்னை-600 040.

மின்இலங்கு திருவுருவும் பெரிய தோளும்
கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும்
தன்அலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே
தாழ்ந்துஇலங்கு மகரம்சேர் குழையும் காட்டி
என்நலமும் என்நிறையும் என்சிந் தையும்
என்வளையும் கொண்டுஎன்னை ஆளும் கொண்டு
பொன் அலர்ந்த நறும்செருந்திப் பொழிலி னூடே
புனல்அரங்கம் ஊர்என்று போயி னாரே.[3]

—திருமங்கையாழ்வார்.

எம்பெருமான் ஏழுமலையான் ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால்பட்டு ஈடுபடுவதற்குப் பல்வேறு வாய்ப்புகளை நல்கி வருகின்றான். கரும்பு தின்னக் கூலி கொடுப்பதுபோல் இந்த வாய்ப்புகள் அமைகின்றன. இத்தகைய வாய்ப்பு ஒன்று செல்வி மு. ப. சியாமளாவின் "திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள் ஒரு பொதுநிலை ஆய்வு" என்ற தலைப்பில் அமைந்த எம்.ஃபில். ஆய்வேட்டினைப் பதிப்பிக்கும் வாய்ப்பினை நல்கினான். திருமலை — திருப்பதி தேவஸ்தானம் நிதி உதவி பெறுவது முதல் அச்சிற்குக் கொடுத்து நூல் அச்சு வடிவம் பெறும்வரை பொறுப்பினை நல்கினான். சற்றேறக்குறைய முப்பத்திரண்டு ஆண்டுகளாக ஆழ்வார் பாசுரங்களிலும் அவற்றின் வியாக்கியானங்களிலும் தோய்ந்து கிடக்கும் அடியேனுக்கு மீன் குஞ்சை நீரில் விட்டது போன்று அமைந்து விட்டது — இந்த வாய்ப்பு.

செல்வி மு. ப. சியாமளா வழிவழி வரும் வைணவ குடும்பத்தைச் சார்ந்தவர். ஆழ்வார் பாசுரங்களில் மிகவும் ஆழங்கால் பட்டுப் பாசுரங்களை முறையாகப் பயின்று அவற்றின் உரைகளை —குறிப்பாக பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகளின் திவ்யார்த்த தீபிகையை—ஆழ்ந்து கற்று அவற்றின் துணை கொண்டு இந்த ஆய்வை நிகழ்த்தியுள்ளார். இவருக்கு வழிகாட்டியாக அமைந்த பேராசிரியை டாக்டர் திருமதி சு. சுனந்தா தேவி ஒவ்வொரு நிலையிலும் உதவி இருப்பதை நூலெங்கும் மின்வெட்டுபோல் பளிச்சிடுவதைக் காண முடிகின்றது.

இந்த ஆய்வேடு 1. நுழைவாயில், 2. திருமழிசையாழ்வாரின் அவதாரமும் அருளிச் செயல்களும், 3. திருமழிசையாழ்வாரின் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள் — ஏற்றங்கள், 4. பரத்துவ

---

3. திருநெடுந். 25

திர்ணயமும்—திருவேங்கடமுடையானின் சிறப்பும், 5. புராண இதிகாசக் கதைகள் - தசாவதாரங்கள், 6. திருமழிசையாழ்வாரின் வைணவ தத்துவங்கள், 7. ஆய்வு முடிவுகள் என்ற ஏழு இயல்களாக அமைகின்றது. மேலும், இயல்களையொட்டி பின்னிணைப்புகள் இடம் பெறுகின்றன. செல்வி மு. ப. சியாமளா பாசுரங்களில் ஆழங்கால் பட்டமை, ஒவ்வொரு சிறு செய்தியையும் விடாது அற்புதமாக விளக்குந்திறன், தன்னையே மறந்த நிலையில் பாசுரங்களில் தோய்ந்து அநுபவித்த திறன் முதலியவற்றை நூலின் பககங்கள்தோறும் கண்டு மகிழலாம். ''அவனருளாலே அவன்தாள் வணங்கும்'' பேறு பெற்றவளாகையாலே இறைவனின் திருவருள் இவளிடம் வெள்ளங் கோத்து நிற்கின்றது.

இந்தப் பெண்மணி தன் பிஎச்.டி., ஆய்வுக்கு ''கலியனின் பாசுரங்களைத்'' தேர்ந்தெடுத்துக்கொண்டு தத்துவப் பார்வையில் ஆய்ந்து வருகின்றார்; வைணவ மரபில் வந்த பேராசிரியர் டாக்டர் அ. அ. மணவாளன் (சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்மொழித் துறைப் பேராசிரியர் —துறைத்தலைவர்) இவருக்கு வழிகாட்டியாக அமைந்து வழி நடத்துவது இந்தப் பெண்ணின் பெரும் பேறாகும். இந்த ஆய்வு மிகச் சிறப்பாக நடைபெறுவதைக் காணும் வாய்பபு கிட்டியதனால் இதனை அறிய முடிகின்றது.

திருமழிசையார் பற்றிய இந்த ஆய்வு இளம் ஆய்வாளர்கட்கு ஒரு முன்மாதிரியாக இருக்கும் எனபது அடியேனின் கருத்து. இந்தப் பெணமணிக்கு எம்பெருமான் ஏழுமலையான் வைணவ செல்வததை முற்றூட்டாக அருளி இவரது இம்மை - மறுமை வாழ்வு சிறப்பாக அமையவும் திருவருள் பாலிக்க வேண்டுமென்று அவன் திருவடிகளை வணங்கி வாழ்த்துகின்றேன்.

> வெற்புஎன்று வேங்கடம் பாடினேன் ; வீடாக்கி
> நிற்கின்றேன் ; நின்று நினைக்கின்றேன் — கற்கின்ற
> நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
> கால்வலையில் பட்டிருநதேன் காண். [4]
>
> —திருமழிசையாழ்வார்.

''வேங்கடம்''
அண்ணா நகர்,
சென்னை-600 040.
19-11-1992.

இங்ஙனம்,
ந. சுப்பு ரெட்டியார்
தொ.பே. 62 11 583

4. நான். திருவந். 40

ஸ்ரீ:

HIS HOLINESS

# SRI VARADHA ETHIRAJA JEEYAR

MATATHIPATHI HEREDITARY RELIGIOUS
DHARMAKARTHA MUDRAKARTHA
SRI ADIKESAVA PERUMAL AND
SRI BASHYAKARA SWAMY TEMPLE
ETHIRAJA JEEYAR MATAM
No. 26, SANNADHI STREET,
SRI PERUMBUDUR, CHINGLEPUT DT., TAMIL NADU-602 105.
SRI RAMANUJO VIJAYATHE ETHIRAJA RAJAHA.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: தேதி: 12-12-1992.

**ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும்
தாழ்வாக நினைப்பவர்கள் தாம்நரகில் — வீழ்வார்கள்
என்று நினைத்து நெஞ்சேஎப்பொழுதும் நீயவர்பால்
சென்றணுகக் கூசித் திரி.**

*கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே.*

''ஏகோ ஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசாந:
மகாயாம் மகரமாஸே சக்ராமசம் பார்கவோத பவம்
மஹீஸார புராத்சம பக்திசார மஹம் பஜே.''

## ஸௌபாக்கியவதி ச்யாமளாவின் திருமழிசையாழ்வார் பற்றிய ஆய்வுக் கட்டுரைக்கொரு மங்களாசாஸனம்.

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் வஜ்ர வைடூர்ய கோமேதக புஷ்பராக மரகத மாணிக்க நீல ஸ்வர்ண கதித விலக்ஷணர்களாகப் போற்றப் பட்டாலும், திருமழிசையாழ்வார் பெற்றிருக்கும் சிறபபு மிகமிகத் தனிப்பட்ட அஸாதாரண சிறப்பாகும். தமக்குப் பிற்பட்ட நம்மாழ்வாரின் கண்டாங்கமாக இவ்வாழ்வார் பெற்றிருக்கும் தன்மை இவ்வாழ்வாரின் அஸாதாரணச் சிறப்பு என்பது வெள்ளிடைமலை.

பேயாழ்வாரால் திருத்திப் பணிகொள்ளப்பட்ட துவாபரயுகோத் பவரான இவ்வாழ்வாரின் ''சக்ஷுர்த்வயம'' போன்ற பிரபந்தங்களான திருச்சந்த விருத்தமும், நான்முகன் திருவந்தாதியும் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு இரு கண்களாகும். இப்பிரபந்தங்களுக்கு நாயகனான இவ்வாழ்வாரின பரமான ஆயவுக் குறிப்பிற்கு ஏற்ற செல்வி ச்யாமளா, திருச்சந்த விருத்தத்தின் 120 பாசுரங்களால் பெரும்பூதூர்மாமுனிவனின் திருநக்ஷத்திரங்களை ஸூசிப்பதால், எதிராஜனின் இன்னருளுக்கு என்றுமிலக்காகியிருப்பதும் ஸுவ்யக்தம். அங்ஙனமேயே நான்காவது திருவந்தாதி என்னாதே, நான்முகன் திருவந்தாதி எனப்பெரியோர் பணித்திருப்பது ஆழ்வார் தன்முகமாய், நான்முகனின் நான்கு வேதங்களின் ஸாரங்களையும் ஐந்தாம் வேதமான பாரதத்துக் கீதையின் ஸ்ரீ வாசுதேவ வாக்ய ஸாரங்களையும் ஸூசிப்பித்திருக்கிறார் எனக் கொள்ளத் தட்டில்லை, காண் என்றபடி.

"நாராயணாத் ப்ரஹ்மோ ஜாயதே ப்ரஹ்மாத் ருத்ரோஜாயதே" என்ற வேத வாக்கியங்களுக்குச் சேர ஆழ்வார் "நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான்முகமாய சங்கரனைத் தான் படைத்தான்" என்று மொழி பெயர்த்திருப்பதை விழிகொண்டார் எழில் கொண்டு மொழிவளம் கண்டு பேருவுகை கொள்ளலாம்.

இன்னும் பல அஸாதாரண சிறப்புகள் கொண்ட தனிப் பெருஞ் சிறப்பு ஆழ்வார் மணிவண்ணன் ஸ்ரீமந் நாராயணனையே, "பைந்நாகப்பாய் சுருட்டிக் கொள்ளவும். பைந்நாகப் பாயில் படுத்துக் கொள்ளவும்" செய்த தாகும். மற்றும் "கிடந்தவாறு எழுந்திருந்து பேசு" என்று அதிகாரமிட்டுப் பேசிப் பயனடைந்தது வேறெந்தாழ்வாரும் அநுபவிக்காத வீரத்தன்மை என்பதை அறியவெளிதாம் மற்றும் இவ்வாழ்வார் ஒருவரே மற்றெலா மாற்று மத தெய்வங்களை வழிபட்டு திருப்தியடையாது அம் மதங்களின் தததுவங்களை ஆராய்ந்து பின்னால் "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம் இனியறிந்தேன் எம்பெருமான் உன்னை" என்று ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை "கதமிதிசேத்" என்று நிலை நாட்டினார்.

செல்வி ச்யாமளா இவ்வாழ்வாரின் ஆய்வுக்கட்டுரையை அதிஸாஹஸத்துடன் ஏற்று வெற்றிகொண்டு அதை வெளியிட்டு இருப்பது ஸ்வாமி எம்பெருமானாரின் கடாக்ஷத்தையே வெளிப்படுத்துவதுடன் ஜ்ஞானசீல வயோ வ்ருத்தராய் குடத்திலிட்ட திருவிளக்கே போன்ற ஸௌலப்யத்துடன் வீற்றிருக்கும் ஸ்ரீ உ. வே. ஜெகன்னாதாசசார் ஸ்வாமியின் மாதுகரத்தையும் ஸூசிப்பிக்கின்றது. சிறு மாமநுஷியாய் செல்வி ச்யாமளா (பெரிய) ஆழ்வார் திருமகளார் ஆண்டாள போலே (திருமழிசை) ஆழ்வார் திருமகளாய் ஆழ்வார் தாம் சலங்கைத் தமிழில் ராமக்ருஷ்ணாநுபவமாகவும், ஸ்ரீ மந் நாராயண பரத் வத்தை அவனின் சரீர சரீரிபாவங்களுடன் கீதாவாக்ய ஸாரங்களுடனும் நிலை நாட்டியிருப்பதை, வகுத்து, பகுத்து, தொடுத்த மலர்க்கொடி போலே தன் கட்டுரையில் மிக மிக மலியவைத்தது தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி போலவும் மின்னாகத் தெழுகின்ற மேகம்போலவும் பரந்து நிற்பது கட்கூடு. ஆழ்வாருக்கும் ஸ்ரீ வாஸுதேவனுக்குமுண்டான ஸாம்யாதிகளால் தனது நெடிதுயர்ந்த ஜ்ஞான விசேஷத்தைப் ப்ரதிபலித்து தன் திறனை "மணமெலாக் கொணடு மணத்தைக்கொண்மின்" என்றபடி காட்டியிருப்பது ஸூமநோஹர ஹர்ம்ய ரம்ய ஸந்தோஹ ஸம்மோஹந வைணவத்தின் சரித்திரப் பகுதியாகும் எனத்தடையில்லை.

இம்மங்கை நல்லாள் மேலும் தான் ஏற்றிருக்கும் "மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம்" கூற அவதரித்த திருமங்கை மன்னன் திருவாய் மலர்ந்தருளிய திவ்ய நூல்களின் மங்கை மார்பன் பரமான ஆய்வுக் கட்டுரையிலும் தனித் தன்மையுடன் ஜெய பேரிகை கொண்டு, பல்லாண்டு ஸ்ரீ வைஷ்ணவத் தொண்டு பூண்டமுதமுண்டு வாழ மந்திராக்ஷதையுடன் அனுக்ரஹித்து "ஸ்ரீ வைஷ்ணவ சூடாமணி" என்று செல்விக்கு விருதிட்டு மகிழ்கிறோம்.

மங்களாசாஸனங்கள் :

ஸ்ரீ கோதாயை நித்ய மங்களம் :
ஸ்ரீ எதிராஜாய மங்களம் :
நித்ய ஸ்ரீ நித்ய மங்களம்.

**ஸ்ரீ வரத எதிராஜ ஜீயர்,**
மடாதிபதி பரம்பரை தர்மகர்த்தா
ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள்
**ஸ்ரீ பாஷ்யகார ஸ்வாமி தேவஸ்தானம்,**
**ஸ்ரீ பெரும்பூதூர்.**

ஸ்ரீ:

பேராசிரியர் C. ஜெகந்நாதாசார்யர்,
M.A. (HISTORY), M.A. (TAMIL), L.T., P.O.L.,
Dipl. Geog., VIDWAN,
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், விவேகாநந்தர் கல்லூரி.
மயிலை, சென்னை-600 004.
U.G.C. பேராசிரியர்.

# அணிந்துரை

தொண்டர்தமக் கமுதுண்ணச் சொன்ன விந்தத்
தேறியசீர் மழிசையர்கோன் ஆய்வு நூலைப்
பண்டைமுறை பிறழாமல் வகைப் படுத்திப்
பான்மையுறச் சீரியநன் னடையிற் பெய்து
திண்ணமுற வைணவத்தின் பெருமை தோன்றத்
தீட்டியசீர் சியாமளா தேவி சேவை
எண்ணவெண்ண மகிழ்ச்சிமீ தூரப் பெற்றே
எழிற்குடந்தை அமுதனருள் எய்து வாரே.

மறந்தும் புறந்தொழா மாந்தரா யிருமின்
சிறந்துநீர் வாழ்வீ ரென்ற மழிசையர்
கறந்த பால்போ லீந்த அறவுரை
பிறந்த பயனாக் கொண்டனள் நங்கை.

பிற்நுகன் றன்னோ டெதிர்வனா னெனும்படி
அஞ்ஞாந சுகிருதம் பெற்ற மழிசைப்பிரான்
அஞ்ஞையாய் யாவர்க்கும் சொன்ன வந்தாதி
சுஞ்ஞானம் நல்கும் ஆதரிமின் என்றாள்.

வயிணவத்தின் காப்பாளர் பக்திசார ராவார்
கயிரவக் கேணித் தவத்தில் —கயிலைவாழ்
கண்ணுதலோன் வாதிடநுப் போற்றிய பான்மையை
எண்ணுறவே யீந்தனளிந் நங்கை.

செவிக்கின்ப மாவது செங்கண்மால் நாமம்
புவிக்கணி யாவதிவ் வாய்வு —அவிக்குமே
தொல்லைப் பழவினையை யாக்குமே செல்வத்தை
வல்லை வழங்குமே வீடு.

புலவர்க்கு நல்விருந்து பேராப் பிறவிச்
செலவிற்கு நன்மருந்து செந்நா —நலத்தின்
நியாயநூல் நற்றமிழ்க்கோர் நல்லாய்வு என்னே
சியாமளா செய்த திறம்.

இவ்வாய்வு நூல் திருமழிசைப் பிரானையும், அவர் அருளிச் செய்த இரு பிரபந்தங்களையும் பற்றியது. நான்முகன் திருவந் தாதி—96 நேரிசை வெண்பாக்களைக் கொண்டு திகழ்வது. திருச்சந்தவிருத்தம்—120 பாசுரங்களைக் கொண்டிலங்குவது. நால் வகைப் பாக்களுக்குள்ளே சிறந்தது—ஒண்பாவாகிய வெண்பாவே. இதனை ''வெண்பாவிற் புகழேந்தி'' என்று முதலில் வைத்த சிறப்பினையுடைய தனிப்பாடலின் பெற்றிமை கண்டு தெளியலாம். இத் திருவந்தாதியில் ஒப்பாரும் மிக்காருமில்லாத திருமாலின் பரத்துவம் அசைக்கலாகாதபடி நிலைநிறுத்தப்பட்டுள்ளது. இத்திறத்தைச் செல்வி சியாமளா திறம்பட ஆய்வு செய்து நிலை நாட்டியுள்ளாள். திருச்சந்த விருத்தம்—சந்தப்பா யாப்பி னுக்கு முன்னோடியாகும். உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், உயிர்மெய்யெழுத்துக்கள் இவை சந்தமுறப் பயிலும்படி வைத்திருக்குந் திறம் பெரிதும் பாராட்டற்பாலது. இத் திருச்சந்த விருத்தத்தின்படி ஆழ்வார் காட்டும் வைணவ தத்துவங்களையும், தம் வரலாற்று நிகழ்ச்சிகளையும், பல திவ்ய தேசங்களின் சிறப்புக்களையும், பக்திசாரர் என்ற தம் விருதுப் பெயருக் கேற்பப் பக்தியின் சிறப்பை உணரவைக்குந் திறத்தினையும், சந்தயாப் பின் போக்கையும், இன்னோரன்ன பல நுண் பொருள்களையும் செல்வி சியாமளா இவ்வாய்வு நூலில் எடுத்துக் காட்டி யுள்ளாள். சுருங்கக் கூறின், இது வைணவத்திற்கு வைப்பு நிதியாகும்; தமிழ்த்தாய்க்கு நல் அணிகலனாகும்.

செல்வி சியாமளா பரம்பரையாக வந்த வைணவப் பெரியோர்களின் வழித் தோன்றியவளாவள்; நல்ல பண்பினள்; பணிவும் அடக்கமும் உள்ளவள்; நல்லனவே பேசும் திறமுடையவள்; ''பருகுவனன்ன ஆர்வத்தளாகிச் செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத்தமைத்துப் போற்றுந் தகைமையள்.'' இத்தகைய சீர்மை கொண்ட செல்வி சியாமளாவின் நன்முயற்சியைப் பாராட்டி அன்னாரை ஆசீர்வதிக்கின்றேன்.

1, தேரடித் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை-5,
19—11—1992,

இங்ஙனம்,
C. ஜெகந்நாதாசார்யர்.

# நூல்முகம்

**மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து**
**துறைப் பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தங்**
**கறைப் பாம்பணைப் பள்ளியா னன்பரீட்டங்களித்தருந்த**
**நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே**[5]

— பிள்ளைப் பெருமாளையங்கார்.

முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை, மூவா
மூவுலகும் கடந்து அப்பால் முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை, அரங்கம் மேய
அந்தணனை, அந்தணர்தம் சிந்தை யானை
விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
'வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக!' என்று
மடக் கிளியைக் கைகூப்பி வணங்கி னாளே.[6]

—திருமங்கையாழ்வார்.

பெரியபெருமாள் திருவருளால் வைணவ சம்பிரதாயத்தில் வந்த அடியேன் திருமழிசையார் பாசுரங்களை எம்.ஃபில் பட்ட ஆய்விற்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ள நேர்ந்தது. அவனருளால் பட்டமும் பெற்று. எம்பெருமான் ஏழுமலையான் வழங்கிய திருநிதி உதவியால் இந்த ஆய்வேடு அச்சு வடிவம் பெற்று உலவுகின்றது.

அடியேன் ஆய்வு செய்வதற்கு இசைவு வழங்கிய சென்னை பல்கலைக் கழகத்திற்கும், ஆய்வு செய்ய இடமளித்த இராணி மேரி கல்லூரி முதல்வருக்கும், அடியேனுக்கு வழிகாட்டியாக (குரு) இருந்த பேராசிரியை டாக்டர் சு. சுனந்தா தேவி அவர்களுக்கும் அடியேனின் நன்றி என்றும் உரியது. திருமழிசையில் அவதரித்த திருமழிசையாழ்வாரையும், அவரது பாசுரங்களையும் ஆய்வு செய்யும்படியான பாக்கியத்தையும் பெற்றேன். இவ்வாய்வுக்கு நெறியாளராக இருந்த பேராசிரியர் வைணவமான இவ்வாய்விற்கு முக மலர்ச்சியோடும், ஒவ்வொரு நிலையிலும் அறிவுரைகளையும் வழங்கி வழி காட்டியதும், செம்மைப்படுத்தியதும், ஆழ்வார் ஏற்றத்

---

[5] திருவரங்கக் கலம்பகம்: காப்பு
[6] திருநெடுந்., பா. 14.

திற்குத் தக்க சான்று பகர்கின்றது என்றால் அது அடியேனும் வைணவ உலகமும் செய்த பெரும் பாக்கியமாகும். அதனால்தான் ஆய்வேடு இவ்வாறு தனிச் சிறப்போடு நன்றாக அமைந்தது என்று கூறுவேன். இங்ஙனம் அமைந்த குருவின் சிறப்பினுக்காக அவருக்கு மீண்டும் ஒரு முறை நன்றி கலந்த நமஸ்காரத்தை இருகரம் கூப்பிப் புலப்படுத்துகின்றேன்.

பேராசிரியர், டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் புருஷகாரத்தினால் திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தார் நிதி உதவி வழங்கினர். ஆகவே, திருமழிசையாழ்வார் அருளிச்செயல்கள் ஆய்வேடு பனுவலாகத் திருமலை — திருப்பதி தேவஸ்தானத்தினரால் வெளிவருவதும் எங்கள் குலதெய்வம் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானின் திருவுள்ளத்துக்குப் பேருவப்பாகும். அந்த உதவி வழங்கியிராவிடில் இந்தப் பனுவல், வாசகர் உலகில் நடைபோட முடியாது. ஆதலின் திருமலை தேவஸ்தானத்தாருக்கும், சிறப்பாக பதிப்பாசிரியர், திரு. கே. சுப்பாராவ் அவர்களுக்கும், துணைப் பதிப்பாசிரியர், திரு. என். எஸ். இராமமூர்த்திக்கும் அடியேனின் நன்றி என்றும் உரியது.

இந்தப் பனுவல் மிகச் சிரத்தையுடன் அழகுற அச்சிட்டு உதவிய சுந்தரம் ஆர்ட் பிரிண்டர்ஸார்க்கும், குறிப்பாக அடியேனின் அருமைத் தகப்பனாரும், அச்சக மேலாளருமான, (Manager) ஸ்ரீமான் மு. பலராம் ரெட்டியார் அவர்களுக்கும், இந்தப் பனுவல் அச்சாகும்போது பதிப்பாசிரியராக இருந்து பார்வைப் படிகளை நோக்கிச் செம்மைப்படுத்தியும் பதிப்புரை வழங்கிய பேராசிரியர், டாக்டர் ஸ்ரீமான் ந. சுப்பு ரெட்டியார் அவர்கட்கும் அடியேனின் பணிவன்புடன் நன்றி கலந்த வணக்கமும் என்றும் உரியது. அடியேனின் தகப்பனாரும், அபிமானத் தந்தையார், பேராசிரியர் ரெட்டியாரும் உதவியிராவிடில் இந்தப் பனுவல் இவ்வளவு சிறப்பாக அமைந்திருக்க முடியாது. மேலும் இந்நூலுக்கு அட்டைப்படம் வரைந்தும், அச்சுக் கட்டைகள் தயாரித்தும், நான்கு வண்ணத்தில் அச்சிட்டும் காப்புறை (Lamination) செய்தும் வழங்கிய ஓவிய மன்னர் திரு. P. N. ஆனந்தன் அவர்கட்கும் அடியேனின் நன்றி என்றும் உரியது.

நிறைய பனுவல்களுக்கும், கம்பராமாயணத்திற்கும் உரைவகுத்த உரையாசிரியச் சக்கரவாத்தி ஸ்ரீமான் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி அவர்களின் அபிமான தலை மாணாக்கர், அடியேனுடைய பேராசிரியப் பெருந்தகை ஸ்ரீமான் உ. வே. C. ஜெகந்நாதாசார்யர் ஸ்வாமியாவார். இப்பெருந்தகை தம்மை உருவாக்கிய ஸ்வாமி வை. மு. கோ.-வை

இன்றளவும் இருகரம் கூப்பித்துதிப்பது மெய் சிலிர்க்க வைக்கின்றது. ''தொண்டை நன்னாட்டின் சான்றோர்'', விவேகாநந்தர் கல்லூரியின் முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர்; ஆயகலைகள் அறுபத்து நான்கினுக்கும் அருஞ் செல்வர்; சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணியில் ஆழங்கால்படுபவர்; இவரின் அகத்தில் பொலிவுற்றிருப்பன வில்லிபாரதம், அஷ்ட பிரபந்தம், நாலாயிர திவ்ய பிரபந்தம், திருக்குறள், பரிமேழலகர் உரையாசிரியரிடம் அதிக ஈடுபாடு கொண்டவர்: கம்பராமாயணத்திற்கு என்றே தம்மை அர்ப்பணித்துக் கொண்டு வருபவர். கம்பராமாயணத்தின் கற்பக தரு; இவ்வண்ணத்திற்குக் காரணம், ''கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ'', மற்றும் என்றவிடத்தால் 'கண்ணனையும் கற்பாராயிற்றே'!

முத்தமிழ் வித்தகர்; இனிமையுடன் எளிமையுடன் பழகுவதற்கு நல்லாசிரியர், ''அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர் அவரவர் விதிவழி அடைய நின்றனரே'' என்ற திருவாக்கின்படி சொற்பொழிவாற்றும் தருவாயில் அந்தந்தக் கடவுளருக்கு ஏற்றம் தரும் பேச்சாற்றல் மிக்கவர்; இவர் எடுத்துக்காட்டும் உண்மைகள் நடுநிலைமையோடு இருக்கும். எங்குப் பிரசங்கம் செய்தாலும் இவருடைய பேச்சாற்றலைத் திருச்செவியேற்ற பெருமாளே நேரே எழுந்தருளி வருவது பலவிடத்தில் கண்கூடாகக் கண்டுள்ளேன். சதாபிஷேகத் தோற்றத்துடன் எழுந்தருளியிருப்பவர்; சுருங்கக் கூறின், இவர் சொரூபம் இவ்வளவு என்று அறுதியிட முடியாது. இத்தகைய பேராசிரியப் பெருந்தகையின் திருவடி நிழலில் ஒதுங்கும் பேறு பெற்றேன்.

ஆசாரியர் தமது வயதையும் பொருட்படுத்தாது அடியேனுக்குத் திருமழிசையாழ்வார் அருளிச்செயல்களுக்கு ஒல்லும் வகையில் எல்லாம் விளக்கி உதவி செய்தவர். ஆய்வேடு பனுவலாக வெளிவரும் வரை பல்லாற்றானும் படிகளைப் பார்த்துத் திருத்தம் செய்து செம்மைப்படுத்திக் கொடுத்த அடியேனுடைய ஸ்வாமியான ஆசாரியருக்குத் தீர்க்க தண்டன் சமர்ப்பித்துக் கொள்கின்றேன். தற்சமயம் பி.எச்டி. பட்டத்திற்காக, திருமங்கையாழ்வார் பாசுரங்களில், குறிப்பாக திருநெடுந்தாண்டகத்தில் ஆழங்கால்பட்டு வருகின்றோம். பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்களைத் தெளிவாகவும், நயத்துடனும் நன்கு மனதில் படியும்படி விளக்குவது குறிப்பிடத்தக்கது. இவரிடம் பாடம் கேட்கும் தருவாயில் சில பாசுரங்களுக்கும் அரிய பதங்களுக்கும் ஆழ்வார்—ஆசாரியர்கள் மனோபாவத்தை யறிந்து அவர்களுக்கு ஒரு குற்றம் நேராத

படியும், பெருமை சேர்க்கும்படியும், அசைக்க வொண்ணாதபடியும் ஆழ்பொருளுடனும் கூறும் உரை C. J. விபாக்கியானம் என்று போற்றுமாறு தனிமுத்திரையுடன் விளங்குமிறே. மேலும் பொருளல்லாத அடியேனையும் ஒரு பொருளாக்கி, இகத்திற்கும் பரத்திற்கும் ஒளிவிளக்கேற்றி வைத்தவர். இத்தகைய பல மகிமைகளையுடைய ஆசாரியரை அடைந்தது என் பெற்றோர் செய்த புண்ணியமும், அடியேனின் பூர்வஜென்ம புண்ணியமுமேயாகும். இத்தகைய ஆசாரியருக்கு நன்றி கூறுவதுடன் தலையல்லால் கைம்மாறு இலனே. இனி செவிக்கு இனிய உணவு தரும் பேராசிரியரிடம் பாடம் கேட்க இடம் அளித்தும் பாசத்துடன் வயிற்றுக்கும் விருந்திடுவோர் ஸ்வாமி குடும்பத்தினர். ஆகவே அவர் குடும்பத்தினர் அனைவருக்கும் நன்றி கலந்த நமஸ்காரம் தெரிவிப்பதில் கடமையுடையவளாவேன். பாடம் படிக்கும்போது நிறைய தெரிந்து கொள்ள ஆர்வமூட்டிய ஸ்வாமியின் திருமகளார் திருமதி அர்விந்தவல்லி அம்மாளுக்கும் நன்றி கூறி நமஸ்கரிக்கின்றேன்.

இனி, இத் திருமழிசையாழ்வார் பனுவலுக்கு ஆணித்தரமான அழகிய ஆழ் பொருளையுடைய அணிந்துரையுடன் நல்லாசியும் வழங்கியவர் பேராசிரியர். இத்தகைய பேராசிரியப் பெருந்தகைக்கு மீண்டும் மீண்டும் நன்றி கூறுமிடத்து அவருக்கு அடியேன் என்ன கைம்மாறு செய்ய முடியும் என்று எண்ணியபோது,

ஆரிய னவனை நோக்கி யாருயிருதவி யாதும்
காரிய மில்லான் போனான் கருணையோர் கடன்மை யீதால்
பேரிய லாளர் செய்கை யூதியம் பிடித்து மென்னார்
மாரியை நோக்கிக் கைம்மாறு இயற்றுமோ வைய மென்றான் [7]

என்ற வேதபுருஷன் வாக்கிற்கு மூலமாய் நிற்பவரிறே. அடியேனுக்கு எழுத்தறிவித்த இறைவனாகிய ஸ்வாமி அவர்களை எம்பெருமானாரைப்போல நூற்றிருபது பிராயத்திற்கு மேலும், இந்த லீலா விபூதியில் எழுந்தருளச் செய்ய வேண்டுமென ஸ்ரீராமபிரானை வணங்கிப் பிரார்த்தனை செய்கின்றேன். கம்பராமாயண காப்பாளரும், அடியேனின் ஸ்வாமியும் ஆகிய C. J. எழுந்தருளியிருக்கும் திக்கை நோக்கி நமஸ்கரித்துத் தீர்க்க தண்டனை சமர்ப்பிப்பதில் என்றும் கடமையுடையவள் ஆவேன்.

தக்க சமயத்தில் திருமழிசையாழ்வார் பனுவலுக்கு நல்லதோர் மங்களாசாசனம் வழங்கிய ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீவரத எதிராஜ ஜீயர் ஸ்வாமிக்கும் அங்குக் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீஎம்பெரு

---

7 கம்ப. ராம. யுத்தகாண்டம்—271

மானாருக்கும் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் உ. வே. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி திருவடிகளுக்கும் அநேக கோடி தண்டன் சமர்ப்பித்து, எம்.ஃபில் ஆய்வின்போது பல அரிய கருத்துக் களையும், ஆசியையும் வழங்கிய அமரர் நா. வேணுகோபால் நாயகர், B.A., B.L. வழக்குரைஞருக்கும் இந்நேரத்தில் மானசீக மாக நன்றி கூறி நமஸ்கரிப்பதில் கடமையுடையேன்.

''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமாகப்'' போற்றி வரும் அடியேன் பெற்றோர், பேதை குழவியாக இருந்த நாள் முதல் இந்நாள் ஆய்வு செய்கின்ற அளவுக்கு உயர்ந்த நிலைக்கு வளர்த்து ஆளாக்கியவர்கள். மேலும் இப்பனுவல் வெளிவரப் பல கருத்துக் களை வழங்கிய என் தாயார் திருமதி ராஜலக்ஷ்மி அம்மாளுக்கும் அவையத்தில் முந்தியிருப்பச் செய்த என் தகப்பனார் மு. பலராம் ரெட்டியாருக்கும் யாங்ஙனம் நன்றி கூறுவேன். மேலும் பனுவல் அச்சுக்குக் கொடுத்த நாள் முதற்கொண்டு முழுமைபெறும் நாள் ஈறாக நித்தம் ஊக்கமளித்தும், உற்சாக மூட்டியும் ஒத்துழைப்பும் நல்கிய பெற்றோர் திருவடிகளில் சிரந்தாழ்த்தி நமஸ்கரிப்பதில் கடமைப்பட்டவள் ஆவேன்.

இங்கு ஒன்று சொல்ல விழைகிறேன், 10-நாள் குழவியாக இருந்த அடியேனுக்கு லக்ஷ்மி என்ற நாமத்தைச் சூட்டி மகிழ்ந்தவர் என் அருமை பாட்டனார் வீ. துரைசாமி நாயகர் (அன்னை வழி பாட்டனார்) ஆவார்கள். அவர் பரமபதித்துவிட்டார். ஆகவே இந்தப் பனுவலை அவர் பொன்னார் திருவடிகளில் சமர்ப்பணம் செய்து மகிழ்கின்றேன். அவர் ஆசியால் மேலும் வைணவத்தில் ஆழங் கால் படுவேன் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை. இப்பனுவல் வெளிவரும் இந்நாளில் பாட்டனார் உடனில்லை, அக்குறை தீர்க்கவே அடியேனின் அன்பு பாட்டியும், பாட்டனாரின் பாரியாளுமான திருமதி மாணிக்கமாள் அவர்கள் இன்று எழுந் தருளியிருக்கிறார்கள். பாட்டனாரின் கனவையும், விருப்பத்தையும் நிறைவேற்றும் பேறுபெற்ற அடியேனின் பாட்டியின் திருக்கரங்களில் இப்பனுவலைச் சமர்ப்பித்து, அவர் அகம் மகிழும் வண்ணம் திருவடிகளில் சிரந்தாழ்த்தி நமஸ்கரிப்பதில் என்றென்றும் கடமையுடையவள் ஆவேன்.

இப் பனுவலுக்குப் பல்லாற்றானும் உதவி செய்த அடியேனின் உடன் பிறந்த சகோதர-சகோதரிக்கும், குடும்பத்தாருக்கும் நன்றி யுரியது. அடியளின் உளக் குறிப்பையறிந்து சிறப்பாக வரைபடம் வரைந்து கொடுத்த என் அன்பு தம்பி M. B. சுந்தரராஜனுக்கு என் இதயம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

கடைசியாக, இப்பனுவலில் நேரிட்ட நிறைகள், புகழ்கள் எல்லாம் அடியேனை உருவாக்கிய பேராசிரியப் பெருந்தகை C. ஜெகந்நாதாசார்யர் ஸ்வாமி அவர்களுக்குச் சாரும்; குறைகள் இருப்பின் அடியேனைச் சாரும். குறைகள் நீக்கி நிறைவு கொள வேண்டுகின்றேன்.

"நெல்லுக்கு உமியுண்டு நீருக்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கு முண்டு" என்ற கணக்கிலே அச்சில் ஏற்பட்ட பிழைகளைப் பொருத்தருளுமாறு வேண்டுகிறேன்.

அனைத்துக்கும் மேலாக, இந்த ஆய்வு நூலை வெளியிடுவதற்குத் தோன்றாத் துணையாய் நின்று உதவிய கருணைத் திறத்திலீடுபட்டுத் திருமழிசையாழ்வாரை வணங்குகின்றேன். மற்றும் அடியேன் இதயத்தில் நிரந்தரமாக அந்தர்யாமியாக எழுந்தருள்யிருக்கும் "பொன்னி சூழ் அரங்கம் மேய பூவை வண்ணனின்" திருப்பொலிந்த சேவடியை வணங்கி வாழ்த்தி அடியேனுக்கு மேலும் மேலும் கைங்கரியங்கள் செய்யத் திருவுள்ளம் அளிக்குமாறு விண்ணப்பித்துச் சரண் செய்து அனவரதமும் அப்பரமனை வழுத்துகின்றேன்.

கங்கையிற் புனித மாய காவிரி நடுவு பாட்டு
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கந்தன்னுள்
எங்கள்மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்? ஏழையேன் ஏழையேனே. [8]

— தொண்டரடிப்பொடியாழ்வார்

9, ஏகப்ப நாயகர் தெரு,
கொருக்குப்பேட்டை,
சென்னை-600 021.
30-11-1992.

இங்ஙனம்,

மு. ப. சியாமளா.

8 திருமாலை. 23

ஸ்ரீ :

# திருமழிசையாழ்வார்

## தனியன்

"மகாயாம் மகரேமாஸே சக்ராம்ஸம் பார்க்க வோத்பவம்!
மஹீஸாரபுராதீஸம் பக்திஸாரமஹம்பஜே !! "

## வாழித்திருநாமம்

அன்புடனந்தாதி தொண்ணூற்றாறுரைத்தான் வாழியே !
அழகாருந் திருமழிசை யமர்ந்தபிரான் வாழியே !

இன்பமிகு தையில்மகத் திங்குதித்தான் வாழியே !
எழிற்சந்த விருத்தம் நூற்றிருப தீந்தான் வாழியே !

முன்புகத்தில் வந்துதித்த முனிவர்கோன் வாழியே !
முழுப்பொன்னிப் பெருக்கெதிர்செல் முதிர்கவியோன் வாழியே !

நன்புவி நாலாயிரத்தெழுநூ றிருந்தான் வாழியே !
நங்கள்பக்தி சாரனிரு நற்பதங்கள் வாழியே !

— அப்பிள்ளை அருளியது

# இறைவன் கழலிணை என் தலைமேல்

ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப,
ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து
எண்மதியும் கடந்தண்ட மீது போகி
இருவிசும்பி னூடுபோய் எழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித்
தாரகையின் புறந்தடவி, அப்பால் மிக்கு
மண் முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே[9]

—திருமங்கையாழ்வார்.

---

9 திருநெடுந். 5

# ஆய்வு மூலம்

## திருமழிசையாழ்வாரின் அருளிச்செயல்கள்

| | | | |
|---|---|---|---|
| நான்முகன் திருவந்தாதி | ... | 96 | பாசுரங்கள் |
| திருச்சந்த விருத்தம் | ... | 120 | பாசுரங்கள் |
| மொத்தம் | ... | 216 | பாசுரங்கள் |

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத் | ... | அகத்திணையியல். |
| இரண். திருவந். | ... | இரண்டாம் திருவந்தாதி. |
| கம்ப. ராம. | ... | கம்ப ராமாயணம். |
| கீதை | ... | பகவத்கீதை. |
| குறள் | ... | திருக்குறள். |
| செய். | ... | செய்யுளியல். |
| திருச். விரு. | ... | திருச்சந்த விருத்தம். |
| திருவாய். | ... | திருவாய்மொழி. |
| திருப். | ... | திருப்பாவை. |
| திருவரங். கலம். | ... | திருவரங்கக் கலம்பகம். |
| திருவேங். அந். | ... | திருவேங்கடத்தந்தாதி. |
| தொல். பொருள் | ... | தொல்காப்பியம் பொருளாதிகாரம். |
| நா. தி. பி. | ... | நாலாயிர திவ்ய பிரபந்தம். |
| நான். திரு.<br>நான். திருவந். | } | நான்முகன் திருவந்தாதி. |
| நாச். திரு. | | நாச்சியார் திருமொழி. |
| புறத். | ... | புறத்திணையியல். |
| பெரிய. திரு. | ... | பெரிய திருமொழி. |
| பெரியாழ். திரு. | ... | பெரியாழ்வார் திருமொழி. |
| பெருமாள் திரு. | ... | பெருமாள் திருமொழி. |
| முதல். திருவந். | ... | முதல் திருவந்தாதி. |
| மூன். திருவந். | ... | மூன்றாம் திருவந்தாதி. |
| வைணவ. தத். ஞான. அடி. | } | வைணவத் தத்துவ ஞான அடிப்படைகள் |
| நூ. | ... | நூற்பா. |
| ப. | — | பக்கம். |
| பக். | ... | பக்கங்கள். |
| ஷை. | ... | மேற்கண்டவாறு. |

# பொருளடக்கம்



## பின்னிணைப்புகள்

## மழிசைப்பிரான் பற்றி அமுதனார்

இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்
இறைவன் இணையடிப்போது
அடங்கும் இதயத் திராமா நுசன்
அம்பொற் பாதமென்றும்
கடங்கொண் டிறைஞ்சும் திருமுனி
வர்க்கன்றிக் காதல் செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க் கேஅடி
யேன் அன்பு செய்வதுவே[10]

திருவரங்கத்தமுதனார்.

---

10 இராமா. நூற். 12

இயல் ஒன்று

# நுழைவாயில்

## நீயும் நானும்

இன்றாக நாளையே யாக இனிச்சிறிது
நன்றாக நின்னருள்என் பாலதே—நன்றாக
நான்உன்னையன்றியிலேன் கண்டாய் —நாரணனே!
நீஎன்னை யன்றி இலை.

—நான். திருவந். 7

# நுழைவாயில்

**தமிழ்கூறு** நல்லுலகத்தில் சமயமானது மக்களுடன் தொடர்பு கொண்டு உயிர்நாடியாக விளங்குகிறது. மக்களின் அகவுணர்வின் பிரதிபலிப்பே சமயமாகும். வாழ்வியலை வளப்படுத்தும் துறைகளுள் சமயம் ஒன்றாகும். சமயங்கள் பல. அவற்றுள் ஒன்று வைணவ சமயமாகும். இச்சமயத்தின் சிறப்புத் தன்மையை விளக்குவன புராண இதிகாசக் கதைகள், பகவத்கீதை, பாகவதம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் போன்றவை வைணவ பக்தி இலக்கியங்களாக விளங்குகின்றன. அவற்றுள் நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் சிறப்புடையதாகப் போற்றப்பட்டு வருகின்றது.

நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்ற பக்தி இலக்கியம் இசைப்பா, இயற்பா என்ற முறையில் பகுத்து வகை தொகை செய்யப்பட்டுள்ளது. இப்பிரபந்தத்தில் இசைப்பா, இயற்பா என்ற இரு துறைகளிலும் பாசுரங்களை அருளிச் செய்ததோடு, வைணவ மறுமலர்ச்சிக்கு ஆக்கம்அளித்தவர்திருமழிசையாழ்வார் ஆவர். இவர் நாலாயிரத்து எழுநூறு ஆண்டுகள் இப்பூவுலகில் வாழ்ந்ததாகக் கருதும் மரபும் உண்டு. இவரது அருளிச் செயல்கள் பக்தி நெறியில் சிறந்து புத்துணர்ச்சி பெறும் வகையில் அமைந்துள்ளன.

திருமழிசையாழ்வார் திருமாலின் வலது திருக்கரத்திலுள்ள சுதர்சனத்தின் (சக்கரம்) அம்சமாக அவதரித்ததாகக் கருதுவர் வைணவப் பெருமக்கள். குழவிப் பருவத்திலேயே இறையருள் நிரம்பப் பெற்றவர். இவர் பல சமயங்களில் புகுந்து ஆராய்ந்து இறுதியாக வைணவ சமயத்தில் பரம்பொருளைக் கண்டறிந்தவர். தேவன் ஒருவன் என்று தமது ஆராய்ச்சியின் முடிவில் நிலை நிறுத்தியவர். பாசுரங்களில் அதிகமாகப் பரம்பொருளின் சிறப்பைப் போற்றியுள்ளார். பக்தி, பிரபத்தி நெறிகளைப் பின்பற்றி இறைவன்பால் இடைவிடா அன்பு செலுத்தினால் அவனை அடையலாம் என்பதை அனைவரும் அறியும்படி செய்ததால் பக்திசாரர் என்ற திருநாமத்தாலும் வழங்கப்பெற்றார்.

இவரது அருளிச் செயல்களின் கருத்துகள் எக்காலத்திற்கும் பொருந்தக் கூடியவையாக அமைந்துள்ளன. இங்ஙனம் சிந்தனைக்குத் தூண்டுகோலாக அமைந்த இவருடைய பாசுரங்களில் ஆழ்பொருளை நன்கு அறியும் வகையில் இந்த ஆய்வு அமைந்துள்ளது.

**ஆய்வு நோக்கம் :** ஆழ்வார்கள் வரிசையில் திருமழிசையாழ்வார் பற்றியும், அவரது அருளிச் செயல்களைப் பற்றியும் இதுவரை எவரும் ஆய்வு மேற்கொள்ளாத காரணத்தினாலும், எம் பாட்டனார் சிறந்த சொத்தாக விட்டுச் சென்ற நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை இடைவிடாமல் கற்றதின் பயனாலும், இந்த ஆழ்வாரின் பாசுரங்கள்பற்றி முழுமையாக அறிந்து கொள்ளவும் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகின்றது. குறிப்பாக ஆழ்வாரின் தத்துவம், பக்தித் திறன், சிந்தனை ஆகியவற்றை ஆராய்வதும் இந்த ஆய்வின் நோக்கமாகும். இஃது ஒரு பொதுநிலை ஆய்வாக மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு எல்லை :** திருமழிசையாழ்வார் அருளிச்செய்த நான்முகன் திருவந்தாதியிலுள்ள தொண்ணூற்றுஆறு பாசுரங்களும், திருச்சந்த விருத்தத்திலுள்ள நூற்று இருபது பாசுரங்களும் இங்கு ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஆழ்வாரின் பக்திச் சிறப்பினை அறிவதற்கு இவ்வாய்வு நல்ல வாய்ப்பினைத் தரும் என்ற நோக்கமும் உண்டு.

**ஆய்வு அடிப்படைகள் :** நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் ஆகிய இரண்டும் இவ்வாய்வின் முதன்மை நூலாகவும் அடிப்படை ஆதாரமாகவும் விளங்குகின்றன. இவ்வாழ்வாரைப்பற்றி முழுமையாக அறியவும், பாசுரங்களின் உட்பொருள்களை அறியவும் குருபரம்பராப்ரபாவம் (ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி), திருமழிசைப்பிரான் வைபவம் என்ற நூல்களும், பிற நூல்கள், கட்டுரைகள், இதழ்கள் ஆகியவையும் இவ்வாய்வுக்குத் துணை ஆதார நூல்களாக அமைகின்றன.

**அணுகு முறைகள் :** திருமழிசையாழ்வாரின் அவதாரம் வரலாற்று நோக்கிலும், பகுப்பாய்வுச் சமுதாய நோக்கிலும் ஆராயப்பட்டுள்ளது. ஆழ்வார் மனக்குறிப்பைக் கொண்டு பாசுரங்களில் வெளியிட்ட உளவியல் பாங்கு எடுத்துக்காட்டி ஆராயப்படுகின்றது. மற்றும் தசாவதாரங்களை எடுத்துக் கூறுவதில் பகுப்பாய்வும் மேற்கொள்ளப்படுகிறது.

**இயல் பாகுபாடு :** நுழைவாயிலுடனும் முடிவுரையுடனும் சேர்த்து ஏழு இயல்களாக இவ்வாய்வு ஏடு பகுக்கப்பட்டுள்ளது.

**முதல் இயல் :** நுழைவாயிலாக அமைகின்றது.

**இரண்டாம் இயல் :** 'திருமழிசையாழ்வார் அவதாரமும் அருளிச்செயல்களும்' என்பது. இதில் இந்து-வைணவ சமயம்பற்றி ஓர் அறிமுகம், ஆழ்வார்கள் பற்றிய குறிப்புகள், திருமழிசைத் தலச் சிறப்பு, திருமழிசையாழ்வார் அவதாரம், பாதுகாப்பு, வளர்ப்பு, திருநாமங்கள், பின்பற்றிய சமயங்கள், தத்துவ வாதங்களுக்குப் பின் பேயாழ்வாரிடம் சரண் அடைதல், ஆழ்வாரின்-தனிநிலை, போதித்த கருத்துக்கள், கண்ணனுக்கும்-திருமழிசையாழ்வாருக்கும் உள்ள ஒற்றுமைகள், அருளிச்செயல்கள் ஆகியன அறிமுகம் செய்யப்படுகின்றன.

**மூன்றாம் இயல் :** 'திருமழிசையாழ்வாரின் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள்-ஏற்றங்கள்' என்பது. இவ்வியலில் ஆழ்வாரின் அக-புற நிலைகளில் நிகழ்த்திய அற்புதங்களும், இவற்றின் மூலம் பெற்ற ஏற்றங்களும் எடுத்துக்காட்டப்பெற்றுச் சிறப்பு நிலையில் ஆராயப்படுகின்றது. பின்னிணைப்பில் வரைப்படம் மூலமும் விளக்கப்படுகின்றது.

**நான்காம் இயல் :** 'பரத்துவ நிர்ணயமும் திருவேங்கடமுடையான் சிறப்பும்' என்பது. இதில் திருமழிசையாழ்வாரின் பாசுரங்களில் எங்ஙனம் பரத்துவ நிர்ணயம் காணப்படுகின்றது என்பதும் சமுதாய நோக்கில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. திருவேங்கடமுடையான் சிறப்பும், திருமலையின் சீர்மையும் பாசுரங்களில் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன என்பதும் பொது நிலையில் ஆராயப்பட்டுள்ளது.

**ஐந்தாம் இயல் :** 'புராண இதிகாசக் கதைகள்—தசாவதாரங்கள்' என்பது. இவ்வியலில் புராணக் கதைகளைப் பொது நிலையிலும் சிறப்பு நிலையிலும், தசாவதாரங்களைப்பற்றித் தத்துவ நோக்கிலும் அறிவியல் முறையிலும் எடுத்துக்காட்டி அன்று முதல் இன்றுவரை நிலவி வரும் சமுதாய வாழ்க்கையின் சிறப்பினைச் சுட்டிக் காட்டியும் விளக்குகிறது.

**ஆறாம் இயல் :** 'திருமழிசையாழ்வாரின் வைணவத் தத்துவங்கள்' என்பது. இதில் பாசுரங்களில் தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற வைணவ தத்துவங்கள் எப்படி நுட்பமாகக்

காட்டப் பெற்றுள்ளன என்பது பற்றிச் சிறப்பு நிலையிலும், திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்ற வைணவ இரகசியங்கள் பாசுரங்களில் வரும் இடங்களை எடுத்துக் காட்டியும், ஆராயப்பட்டுள்ளன.

**ஏழாம் இயல் :** முடிவுரையாக அமைகின்றது. திருமழிசை யாழ்வார் பாசுரங்களில் ஒரு பொது நிலை ஆய்வு முடிவாகப் பெறப் பட்ட உண்மை கருத்துகள் தொகுத்துக் கூறப்படுகின்றன. 'ஆய்வு சிந்தனையாக' வருங்கால ஆய்வாளர்கள் மேற்கொள்ள வேண்டிய நெறி முறைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள் :** பாசுரங்களில் சிறப்புப் பெற்ற அடிகள் முதலாக, திருமழிசை திருத்தலம் பற்றிய செய்திகள் ஈறாகப் பல பிரிவுகள் காணப்படுகின்றன. உள்ளுறையின் அடிப்படையிலும், அட்டவணைப்பட்டியலும், வகைப்பாடும் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

இயல்—இரண்டு

# திருமழிசையாழ்வார் அவதாரமும் அருளிச் செயல்களும்

## வாழ்த்து

"நாராயணன் படைத்தான் நான்முகனை, நான்முகனுக்
கேரார்சிவன் பிறந்தா னென்னுஞ்சொல்—சீரார்
மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே! மொய்பூ
மழிசைப் பரனடியே வாழ்த்து".

—தனியன், சீராமப் பிள்ளை அருளியது.

## திருமழிசையாழ்வார் அவதாரமும், அருளிச் செயல்களும்.

**1. சமயம் :** உலகம் தோன்றிய காலத்திலிருந்தே மக்களைப் பண்படுத்தப் பல்வேறு சமயங்கள் தோன்றி வளர்ந்து வருகின்றன. 'எங்ஙனம் பகலவனையும் கதிர்களையும் வெவ்வேறாகப் பிரித்தற்கியலாதோ, அங்ஙனமே சமயத்தையும் மக்களையும் தனித்தனியே பிரித்தற்கியலாது. சமயம் அவர்கள் உயிரோடும் உடலோடும் ஒன்றி நிற்கின்றது'. சமயம் என்பதற்கு நெறி, கொள்கை என்னும் சில பொருள்கள் உள்ளன. ஒருவர் நாடோறும் தம் வாழ்க்கையை ஒழுங்குபெற நடத்துவதற்குச் சில நன்னெறி அல்லது நற்கொள்கைகளை வகுத்துக்கொண்டு, வாழ்க்கையை முறையோடு நடத்தும் நன்னெறிகளின் கூட்டமே சமயம் எனச் செப்பப்படுகிறது.[1]

இங்ஙனம் மக்கள் வாழ்க்கையோடும் பின்னிப் பிணைந்திருக்கும் சமயங்கள் பலவாகும். அவற்றுள் 'இந்து சமயமும்' ஒன்று. இந்து சமயம் வேதங்களை அடிப்படையாகக் கொண்டிருப்பதால் 'வைதிக நெறி' என்றும் வழங்கப்பட்டு வருகிறது. சிந்துவெளி நாகரிகத்துக்கு முன்னே தோன்றி, பல மாற்றங்களை அடைந்து வளர்ச்சி பெற்று விளங்குவது இந்து சமயம்.

**'இந்து'—சொல் விளக்கம் :** 'பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால், அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் இந்து' என்பது பொருள். இம் - இம்சையில், து - துக்கிப்பவன் என்பது பதவுரை.

வடமொழியில் 'சப்த கல்பதரு' என்ற இலக்கண நூல் ஒன்று உள்ளது. அதில், 'ஏயம் நிந்தாதி இதம் இந்து' என ஒரு தொடர் காணப்படுகிறது. 'மனம், மொழி, மெய் என்ற முக்கரணங்களாலும் குற்றம் நேராமல் கவனமாக ஒழுகுபவன் இந்து. அவன் சமயம் இந்து சமயம்' என்பது 'சப்த கல்பதரு' என்ற தொடரின் பொருளாகும்.[2]

---

1 செம்பொருள். ப. 1

2 [illegible] தத். குளை... அடி... ப. 10

**மேலைநாட்டார் கருத்து :** இந்து சமயத்தின் சிறப்பைப் பற்றி பல மேலை நாட்டவர் தமது கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். அவர்களில் ஒரு மேலை நாட்டவர் கூறும் கருத்து :

> 'இந்து சமயம், சமயங்கள் அனைத்திலும் உள்ள நல்ல கொள்கைகளை எல்லாம் ஏற்கின்றது. அது எந்தச் சமயத்தையும் இகழ்ந்து ஒதுக்குவதில்லை. ஏற்புடைய கொள்கைகளை உடன்பட்டுத் தழுவிக்கொள்கின்றது. மனித குலம் அனைத்துக்கும் ஏற்ற சமயம் அது. இயற்கைக்குப் பொருந்தியதுவும் அது. உலகத்துக்கே இனியது இந்து சமயம். பிற சமயங்களின் வளர்ச்சியைத் தடுக்க எண்ணும் குறுகிய கண்ணோட்டம் இந்து மதத்தில் இல்லை.[3]

என்பது சர் மானியர் வில்லியம்ஸ் என்பாரின் கூற்றாகும்.

உலகத்திலுள்ள பிற சமயங்கள் என்று தோன்றியது என்பதைக் காலத்தைக் கொண்டு அறுதியிட்டு கூறலாம். ஆனால் அங்ஙனம் காலத்தை அறுதியிட்டுக் கூறமுடியாத தொன்மை நிலையை உடையது இந்து சமயம்.

'இதன் பழைமை கருதியே இந்து வேதம் நமக்குக் காட்டும் வழி 'தர்மவழி' எனப்படுகிறது. இந்த மறை 'வேதம்' எனப்படும் நூல். இந்த உலகமும் மனிதனும் எப்பொழுது தோன்றினரோ அப்பொழுதிலிருந்து இவை பிரசாரத்தில் இருந்து வருகின்றமையால் இது 'சநாதன தர்ம வழி' எனப்படுகின்றது.'[4]

**வைணவ சமயத்தின் சிறப்பு :** இந்து சமயம் எவ்வளவு தொன்மையாக அமைகின்றதோ அதேபோல் அதன் உட்பிரிவாகிய 'வைணவ சமயமும்' தொன்மைச் சிறப்பை பெற்று விளங்குகிறது. இச்சமயம் பல உயரிய கொள்கைகளைத் தன்னகத்தே பெற்ற ஒரு விரிந்த சமயமாகும். இருக்கு வேதத்தில் பல இடங்களில் வழங்கப்படும் 'விஷ்ணு' என்ற புராதனமான சொல்லிலிருந்து தோன்றியது தான் 'வைணவம்'.

புராதனமிக்க வைணவ சமயத்தைபற்றி உபநிடதம், வேதங்கள், பாகவத நூல்கள், கல்வெட்டுகள், கிரேக்கக் கருடத்தூண், பழங்கால நாணயங்கள் இவற்றிலும் காணலாம். பழங்கால அரசர்களின் ஆட்சியிலும் திருமால் (விஷ்ணு) வழிபாடு பற்றிய குறிப்புகள் பரவலாகக் காணப்படுகின்றன.

3 வைணவ தத், ஞான... அடி... பக், 11-12

4 ஸ்ரீக்ருஷ்ணப்ரியா மாத இதழ். (1988-ஆடி) - ப, 54

**சங்க நூல்களில் வைணவம் :** எட்டுத்தொகை நூலான பரிபாடலும், திருமால் வழிபாடு பரவியிருந்ததைக் காட்டுகிறது. பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, திருமுருகாற்றுப்படை என்ற நூல்களிலும் திருமால்பற்றிய குறிப்புகள் வருகின்றன.

சிலப்பதிகாரத்தில் 'ஆய்ச்சியர் குரவை' திருமாலுக்கே உரியது. தொல்காப்பியத்தில்,

> '' மாயோன் மேய காடுறை உலகமும் '' [5]

என்ற நூற்பாவிலும்,

> '' மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
> தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்'' [6]

என்ற புறத்திணையியல் நூற்பாவிலும் மன்னர் திருமாலுடன் ஒப்பிட்டுக் கூறப்பெற்றிருப்பதைக் காணலாம்.

திருவள்ளுவரும் தமது திருக்குறளில், 'அடியளந்தான்' (610) என்பதில் வாமனாவதாரத்தையும், 'ஆதிபகவன்' (1) என்பதில் திருமாலையும், 'தாமரைக் கண்ணான் உலகு' (91) என்பதில் பரமபதத்தையும், 'செய்யவள்' (167) 'தாளுளாள் தாமரையினாள்' (617) என்பவற்றில் திருமகளையும், சுட்டிக்காட்டியிருப்பதனால் வைணவத்தைப்பற்றிய குறிப்புகள் அறியக்கிடக்கின்றன.

சங்க நூல்களிலும், சங்க மருவிய நூல்களிலும், திருக்குறளிலும், திருமால்பற்றிச் சிறப்பாக இடம் பெற்றுள்ளமையால் வைணவத்தின் பிறப்பிடம் தமிழகம் என்று நிறுவ இடம் தருகின்றது.

**வைணவத்தின் முதன்மைக் கடவுள் :** திருமால் வழிபாடுதான் 'விஷ்ணு' வழிபாடாக வைணவ சமயத்தில் திகழ்ந்தது. இச்சமயத்தில் திருமால் பரத்துவத்தையே அதிகம் மொழிவது தெளிவு. எனவே, திருமாலை முதன்மை இறையாகக் கொண்டனர். திருமாலை முதற் கடவுளாகக் கொண்ட சமயமே திருமால் திருநெறி என்பது. இஃது இன்றைய வழக்கில் வைணவம் என்ற பெயரால் வழங்கி வருகின்றது. 'விஷ்ணு' என்பதற்கு எங்கும் நிறைந்தது என்பது பொருள். எனவே, ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் நிறைந்து அதனைக் காத்துக்கொண்டுள்ள பொருளுக்கே 'விஷ்ணு' என்கின்ற திருநாமம் இட்டு வழங்கினர்.

---

5 தொல், பொருள்... அகத்... நூ. 4
6 ,, ... புறத்... நூ. 66

'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்ற வாக்கும் நினைக்கத்தக்கது. நம் பண்டையோர், விஷ்ணுவை முதற் கடவுளாகக்கொண்டவர்கள். வைணவர்களின் சமய குரவர்கள் 'ஆழ்வார்கள்' என வழங்கப் பெறுவர்; இவர்கள் பன்னிருவர்.[7]

**2 ஆழ்வார்கள் பற்றிய குறிப்புகள் :** 'உலகத்தில் தருமம் குன்றி அதர்மம் மேலோங்கி நிற்கும் சமயங்களில், தருமத்தை நிலை பெறச்செய்யவும், நல்லாரைக் காப்ப தற்கும், அல்லாரைத் தொலைப்பதற்கும் அறத்தை நிலை நாட்டுவதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்'[8] என்பது கண்ணபிரானின் திருவாக்கு. வைகுந்தப் பதியான எம்பெருமான் பரமபதவாசன் நித்தியசூரிகளைப் போலத் தம்மைச் சேதநர்களும் அநுபவிக்க வேண்டுமெனத் திருவுள்ளம்பற்றி தம் அருளாலே அவர்களுக்கு சாஸ்திரங்களைக் கொடுத்து வழிகாட்டியும் அவர்கள் திருந்தாமை கண்டார். தர்ப்பை தறிக்கக் கொடுத்த கத்தியைக் கொண்டு பசுவின் வாலைத் தறிப்பாரைப் போலவும், களையெடுக்கக் கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கிளறிக் கொள்வாரைப் போலவும், ஆறு நீந்தக் கொடுத்த தெப்பத்தைக் கொண்டு கரை யேறுவதைவிட்டு, நீர் வாய்க்காலே யொழுகிக் கடலில் புகுவாரைப் போலவும், தம் உடலை ஆறு தீய குணங்களுக்கு உறுப்பாக்கிப் பிறவியென்னும் கடலில் புகுந்து பாவம் படுகிற படியைக் கண்டு...... தம் கிருபையாலே ..... ... சீட்டுக்கு இசையாதாரைச் சேனையைத் திரட்டி வெல்லும் இராஜாக்களைப் போலவே சர்வேசுவரன் 'நாமே போய் இவர்களை வாரிப் பிடித்துக்கொண்டு வரவேண்டும்' என்று இராமகிருஷ்ணா அவதாரமாக அவதரித்து, சாஸ்திர மரியாதை களைத் தான் அநுட்டித்தும் படாதனபட்டுத் திருத்தப் பார்த்த விடத்திலும், அசுரப் ப்ரக்ருதிகளாய்த் தன்னை வந்து கிட்டாதே எதிரிட்டு அதமமான கதிகளில் விழுகிறபடியைப் பார்த்து, 'விஜாதீயரான நமக்கு இது சாத்தியமன்று' என்று இவர்களை இணங்குப் பார்வையிட்டு மிருகம் பிடிப்பாரைப் போலே மனித சாதியான ஆழ்வார்களைக் கொண்டே காரியங் கொள்ளவேணும்'[9] என்று அறுதியிட்டார்.

தருமத்தை நிலை நாட்டவும், மக்களை நல்வழிப்படுத்தவும் (திருமால்) திருவுள்ளம் கொண்டு, ஸ்ரீவத்ச, கௌத்துப, வைஜயந்தி, வநமாலைகளையும், திரு பூமி நீளைகளையும், திருபஞ்சாயுத ஆழ்வார்களையும், அனந்தன், கருடன், விசுவக்சேனர்

---

7 சில நோக்கில் நாலாயிரம், ப. 91

8 பகவத்கீதை, 4 ; 8

9 நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் (கோபால நாயகர் பதிப்பு)பக், 1-2

பிரகிருதிகளையும் நோக்கி, 'நீங்கள் போய் லீலாவிபூதியில் (மண்ணுலகம்) நானா வர்ணங்களிலும் அவதரித்து எல்லா ஆன்மாக் களையும் கடைத்தேற்றுங்கள்' என்று நியமித்தருளினார். அவர் களும் தாமிரபரணி, காவேரி முதலான நதிகளில் அருகிலான தமிழ் நிலங்களில் அவதரித்தனர் என்று குருபரம்பரை தெரிவிக்கிறது.

'ஆழ்வார்கள்' ஈசுவரனால் அனுப்பப்படும் மனித தூதர்கள் ஆவர். அவர்கள்] உயிர் அழியுந் தன்மையுள்ள உடலைப் பெற்ற மனிதர்களிடம் அன்பு செய்தற்பொருட்டும், அருள் வழிகாட்டி இறைவன்பால் நெறிப்படுத்தற்பொருட்டும் இந்த இருள் தருமா ஞாலத்தில் வந்து மனிதர்களாகத் திருவவதாரம் செய்தனர்.

ஆழ்வார்களில் எழுவர் மனிதயோனியில் அவதரித்தனர்; ஐவர் அவ்வாறு அவதரிக்கவில்லை. (அயோநிஜர்) அவர்கள் மக்க ளிடையே பக்தியைப் பரப்பினர். சாதி மதம் பேதமில்லை என்று பறை சாற்றினர். 'ஒன்றே குலம்' அது 'தொண்டர் குலம்' என்பதை நிலைநிறுத்த வாழ்ந்து காட்டினர். "வேறொன்றில் கண் வையாதே பகவத் குணங்களிலேயே ஆழங்காற்பட்டிருந்தமையால் இவர்களுக்கு 'ஆழ்வார்கள்' என்று பெயராயிற்று."[10]

"ஆழ்வார்கள் இறை பக்தியால், அவன் தாமத்தைச் சொல்லுவதால், அவனையே தஞ்சமென அடைவதால், இறைவ னிட்ட பிறவிக் கடமையை ஆற்றுவதால், அவன் அருளைப் பெற்று இம்மையில் இன்பத்தையும், மறுமையில் வீடுபேற்றையும், அடைய முடியும் என்பதை தம் வாழ்க்கையால் நிலை நாட்டினர்."[11]

"ஆள்வார், என்ற பதத்திற்கு 'நம்மை ஆள்பவர்' என்று பொருள் கொள்ளலாம்." 'ஆழ்வார்கள்' என்பதற்கு பகவானுடைய குணங்களில் ஆழங்கால்படுபவர்கள் என்று பொருள் கொள்ளலாம். இவர்கள் எம்பெருமானின் திருக்கல்யாண குணங்களிலேயே ஈடு பட்டும் திருமால் உறைந்துள்ள திவ்ய தேசங்களையே சேவித்தும் பக்தி செய்வதன் மூலம் முக்தி அடையும் வழிகளைக் கூறியவர்கள். இப்பெயர் வழக்கிற்குத் திவ்ய பிரபந்தங்களிற் பிரமாணம் காணப் பட்டிலதேனும், பண்டைச் சாசனங்களிலும் பெரிதும் பயின்றுள்ளது என்று சோழர் கல் வெட்டுகளிலிருந்து எடுத்துக்காட்டுவர் மு. இராகவையங்கார்.[12] வேதத்தில் உள்ள கருத்துக்களைத் தெய்வத் தமிழ்க்கு மொழி பெயர்த்துத் தந்த பெருமை இவர்களுக்கு உண்டு.

10 நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் (கோபால் நாயகர் பதிப்பு) ப.2
11 திருமாலடியார்கள், ப. 9
12 ஆழ்வார்கள் காலநிலை, ப. 22

'ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் வடமொழிச் சொற்கள் விரவிக்கிடக்கின்றன. அதனால் தமிழின் இனிமை கெட்டுப்போய் விடவில்லை. தமிழின் தன்மை தேய்ந்து விடவில்லை. தமிழிலே புகுந்த வடசொற்கள் தமிழ் மயமாகவே ஆகிவிட்டன. தமிழோடு கலந்து இனிமையைப் பெற்றுவிட்டன.[13] உலகிலுள்ள 'அனைத்துச் சமயங்களையும் பற்றிய ஆய்வு ஒன்றை நடத்தினால் இறை யநுபவம் அல்லது இறைவனோடு ஒன்றுதல் என்ற கருத்தை முதன் முதலில் அறிமுகப்படுத்திய பெருமை வைணவத்திற்கே உண்டு' [14]

ஆழ்வார்கள் அருளியது நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம். இது 'தமிழ் மறை' என்றும் போற்றப்படுகிறது. இவர்கள் தமது பாசுரங்களில் இடையிடையே வேதத்தின் சாரத்தையும், கீதையின் கருத்துக்களையும், இராமாயண, பாரதம் போன்ற இதிகாசங் களையும், புராணக் கதைகளையும், தசாவதார நிகழ்ச்சிகளையும், திருக்குறளின் கருத்துகளையும் எடுத்துக் காட்டியுள்ளனர். வைண வத் தத்துவங்களையும், பக்தி ஒழுக்கத்தினையும், கடைப்பிடிக்கும் நெறிமுறைகளையும் அருளியுள்ளனர். அன்பு, பக்தி, சரணாகதி என்பவற்றைப் பல பாசுரங்களிலேயே விரிவாக எடுத்துக்காட்டி யுள்ளனர். "திருமாலை முழுமுதற் கடவுளாக எண்ணித் துதிக்கும் வைணவத்தில் ஈடுபாடு கொண்டவர்கள். திருமாலின் பெருமை களையும், பக்தி நெறியின் சிறப்பினையும் தாம் உணர்ந்து, பிறர்க்கும் உணர்த்த முற்பட்ட ஆழ்வார்களின் அன்பு நெஞ்சத் தோட்டத்தில் பூத்த அருட் பூக்களே திவ்யப் பிரபந்தமாகும்."[15]

**ஆழ்வார்கள் பன்னிருவர்:** ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர், அவர்களின் திருநாமங்களாவன :

| | |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 7. ஆண்டாள் |
| 2. பூதத்தாழ்வார் | 8. குலசேகராழ்வார் |
| 3. பேயாழ்வார் | 9. மதுரகவியாழ்வார் |
| 4. திருமழிசையாழ்வார் | 10. தொண்டரடிப்பொடியாழ்வார் |
| 5. நம்மாழ்வார் | 11. திருப்பாணாழ்வார் |
| 6. பெரியாழ்வார் | 12. திருமங்கையாழ்வார் |

13 ஆழ்வார்கள் அருள்மொழி, ப. 7

14 Religion and Philosophy of Nalayira Divya Prabandam with Special Reference to Nammalwar (Ph.D. Thesis S. V. University, Tirupati-2 P. 198

15 திவ்வியப்பிரபந்தத்தில் மனம், ப. 7

"திருமால் திருவருளால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருள் மிக்குப் பாடிய இன்தமிழ்ப் பாக்களே நாலாயிரத் திவ்யப்பிரபந்தம். இதனுள் திகழும் செய்யுட்கள் ஒவ்வொன்றும் செவிக்கினிய செஞ்சொல்லாலாயது; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; பிறவித் துயரறுத்து அந்தமில் பேரின்பத்தையளிக்க வல்லது. இவ்வாற்றான் ஒவ்வொரு பாவும் ஒவ்வொரு நூலென்னத்தக்க மாட்சிமையுற்று, நாலாயிரத் திவ்விய பிரபந்தமென்று வழங்கலாயிற்று. இவ்வரிய நூல் ஆழ்வார் அருளிச் செயல், 'திவ்வியப்பிரபந்தம்', 'ஸ்ரீகோசம்' என்றும் வழங்கப்படும்" என்பது சுந்தரராமானுச சுவாமிகள் கூற்று.[16]

'வட இந்தியா வேதாந்தத்தின் பிறப்பிடம்; தென் இந்தியா அதனைக் கலையாக்கியும், உரை கண்டும் துணை புரிந்த வளர்ப்புப் பண்ணை. வேதாந்தத்தை கலைகளாக்கியவர்கள் ஆழ்வார் பெருமக்களே'.[17]. ஆழ்வார்கள் காலத்தில் வைணவ சமயம் மறுமலர்ச்சி அடைந்தது. காஞ்சியில் தொடங்கிக் குமரி முதல் இமயம் வரை பரவிச் செழித்தோங்கியது. கி.பி. 5-9 நூற்றாண்டு வரையிலுள்ள இடைக்கால கட்டமே 'வைணவத்தின் சிறந்த பொற்காலமாக விளங்கியது. அவ்வரிய பொற்காலத்தில் அவதரித்த பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர் திருமழிசையாழ்வார். இவர் மிக நீண்ட காலம் வாழ்ந்தவர். யோக நெறியில் சிறந்து விளங்கியவர். பல சமயங்களை ஆராய்ந்து, இறுதியில் வைணவ சமயத்தின் மூலம் பரம்பொருளைக் கண்டவர். தீவிர ஞான பக்தி வைராக்கியத்தை உடையவர். தன் அன்பின் பக்தி ஆற்றலால் 'பைந்தமிழ்' பாசுரம் அருளி, தம்பின்னே 'பச்சை பசுங்கொண்டலை' வரவழைத்தவருமான திருமழிசையாழ்வார் அவதாரமும், இவர்தம் அருளிச் செயல்களும் (இரு பிரபந்தங்கள்) இவ்வியலில் ஆராயப் படுகின்றன.

### 3. திருமழிசை—தலச்சிறப்பு :

தெண்ணீர் வயல் தொண்டை
நன்னாடு சான்றோருடைத்து

— ஔவையார்

என்று ஔவைப்பாட்டி கூறியவாறு சிறப்புடைய தொண்டை நன்நாட்டில் அமைந்துள்ளது. திருமழிசை என்ற திருத்தலம். இத்தலம் 'மகிசாரப் பதி' என்றும் வழங்கப்பெறும்.

16 ஸ்ரீவைஷ்ணவம், ப. 145

17 சில நோக்கில் நாலாயிரம், ப. 347

**தொண்டை நாட்டில் திருமழிசை :** பாரதம் ஆன்மிகச் செல்வத்தில் பழைமை நிறைந்த பூமி. இவ் ஆன்மிகத்தைச் செம்மைப்படுத்தும் பணியில் திருக்கோவில்கள், திருத்தலங்கள் செவ்வனே செய்து வருகின்றன. எண்ணற்ற திருத்தலங்கள் நிறைந்ததும், பல சிறந்த மகான்களும், ஞானிகளும் தோன்றியதுமான பெருமை உடையது தொண்டைநாடு. இது தெய்வத் தன்மையிலும் சிறப்புக்குரியது. 'காசி', 'காஞ்சி'. 'அவந்தி', 'அயோத்தி', 'மாயா', 'வடமதுரை', 'துவாரகை', என்ற ஏழு நகரங்களுள் 'கற்றோர் மெச்சும் கச்சியம்பதியே' எனச் சிறப்பிக்கப் பெறும் 'காஞ்சி' என்றநகரம் தொண்டை நாட்டில் உள்ளது. இந் நாட்டில் கடலுக்கு மேற்கில் காஞ்சிக்குக் கீழ்புறத்தில் அமையப் பெற்றுத் தெய்வ மறையவர்கள் நிறைந்து வாழும் சிறந்த தலமாகவும், தெய்வ மணம் பரப்பும் அரிய தலமாகவும் திகழும். 'மகிசாரம்' என்று போற்றப்படும் திருமழிசையென்றொரு திருத் தலம் சிறப்புடனும், பொலிவுடனும் திகழ்கின்றது.

**பொருளாதார நிலை :** 'தெண்ணீர் வயல் தொண்டை' என்று சிறப்பித்துக் கூறப்படுவதற்கேற்ப இந்நாட்டில் மேகமானது திருமகள் நாதன் கையில் உள்ள வெள்ளையான சங்கின்,[18] தன்மை போல் வெண்ணிறமாகத் திகழ்கிறது. பின்,

> ஆழியுட்புக்கு முகந்து கோடார்த் தேறி
> ஊழி முதல்வ னுருவம்போல் மெய்க ருத்துப்
> பாழியந் தோளுடையப் பற்பநாபன் கையில்
> ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
> தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
> வாழவுலகினிற் பெய்திட்ட [19]

மழைநீரால் வெள்ளம் பெருகியதை வயல்களில் பாயச் செய்தனர் உழவர்கள். நீர்ப்பாய்ந்த நிலத்தை உழுது, பவளம் போன்ற நெல் விதைகளை விதைத்து, பின் களையெடுத்து, நெற்பயிர்கள் பொன் மயமாகக் கதிர்களைச் சாய்ந்து நிற்க, அதனை அடித்து, உழவர்கள் ஒரு பகுதியைத் திறை கொடுத்தும் மற்ற விளைவு நெல் பகுதியைத் தெய்வம், தென்புலத்தார், விருந்தினர், சுற்றத்தார்கள் என்று அறம் செய்து, மீதிப் பகுதியைச் செல்வமாகப் பெற்று மகிழ்ந்து

18 திருப். 6

19 ஷை 4

இருப்பர். மேலும் கைத்தொழில் மூலம் பல பொருட்கள் செய்யப் பட்டுப் பல நாடுகளுக்குக் கலங்களில் ஏற்றுமதி செய்யும் செல்வ மிகுதியை உடையவர். இச் செல்வ நிதியை வானுலகிலுள்ள குபேரன் செல்வ நிதிக்குப் புலவர்கள் உவமையாக்கிக் கூறுவர். 'தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்பதற்கேற்ப, இங்கு மக்கள் கல்வி, கேள்வி, நல்லொழுக்கங்களில் சிறந்து விளங்கு கிறார்கள்.

**பூர்வீக உறைவிடம்:** செல்வ வளம், இயற்கை வளம், கலை வளமுள்ள தொண்டை நாட்டிலுள்ள செங்கற்பட்டு மாவட் டத்தில் உள்ள காஞ்சியின் கிழக்கிலும் ஸ்ரீபெரும்புதூர் வட்டத் திலும், தமிழகத்தின் தலைநகரான சென்னை மாநகர் அண்மையிலுமுள்ள பூவிருந்தவல்லி என்ற இடத்தின் அருகிலும், திருவள்ளுவர்-சென்னை நெடுஞ்சாலை வழியில் அமைந்த பூர்வீக உறைவிடமே 'திருமழிசை திருத்தலம்'. 'இத்தலம் சென்னை- பெங்களூர் பேருந்து சாலையில் பூவிருந்தவல்லிக்கு மேற்கே 3 கி.மீ. தொலைவிலும், சென்னை - திருப்பதி பேருந்து சாலையிலும் அமைந்துள்ளது.[20]

**திருமழிசையின் தலமகிமை:** பல அம்சங்களைக் கொண்ட வளம்மிக்க திருமழிசையைப்பற்றி பார்க்கவர் முதலான முனிவர்கள் நான்முகன் மூலம் கேட்டறிந்து தவம் புரிந்த திருத் தலம். பெருமை பொருந்திய சந்தனம், கல்பதரு முதலிய மரங்களால் சூழப்பட்டு அழகிய சோலைகளுடைய பூமி. அதில் வசிப்பவர் துயர் தீரும்படியாக 'திருச்சந்த விருத்தம்' என்னும் பிரபந்தத்தைச் செய் தருளும் திருமழிசைப்பிரான் அவதரித்த திருமழிசை என்ற திவ்விய தலமாகும். இவ்வூரில் பெருமை தாங்கிய சந்தனம், கறுத்த அகிற் கட்டைகள், கோங்கு மரங்கள் பரிமளத்தை வீசுகின்றன. இவ்வாறு ஆழ்வார் அவதரிக்கப்போவதைக் காட்டிலும், அவர் அவதரிக்கப்போகும் திருத்தலத்தின் மகிமையை எடுத்தியம்புகிறார் திருக்கச்சி நம்பிகள்.

> தருச்சந்துப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீரத்
> திருச்சந்த விருத்தஞ்செய் திருமழிசைப் பரன்வருமூர்
> கருச்சந்துங் காரகிலுங் கமழ்கோங்கு மணநாறுந்
> திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே [21]

---

20 திருமழிசையின் தலச் சிறப்பும் முக்கியத்துவமும், ப. 5. (அடிக்கடி பேருந்து வசதிகள் உண்டு)

21 நா.தி.பி. (கோபால் நாயகர் பதிப்பு) பு. 158

என்று தனியன் அமைத்துக் காட்டியுள்ளார். இத்திருத்தலத்தில் தான் திருமழிசையாழ்வார் அவதரித்தார். 'இங்கு திருமழிசை யாழ்வாருக்கும், திருமாலுக்கும் கோயிலிருக்கிறது. சோழர் காலக் கட்டடமான சிவன் கோயிலொன்றும் உள்ளது. திருமழிசையில் நெல் வாணிகம் சிறப்புற நடைபெறுகிறது. நெல் குற்றும் எந்திரங்கள் பல உள்ளன. நெசவுத் தொழிலும் மிகுதியாக நடைபெறுகிறது'.[22] திருமழிசைத் தலச் சிறப்பை நுட்பமாக ஆராய்ந் தால் அதன் சிறப்பை அறியலாம்.

திருமழிசை - மகிசாரம் : திருமழிசை என்று தமிழிலும், மகிசாரம் என்று வடமொழியிலும் பெயர் பெறுகின்றது. இத் திருத்தலம். இப்பெயரைத் தனித்தனி எழுத்துகளாக பிரித்தால் ஐந்து எழுத்துகள் அமையும். இவ் ஐந்து எழுத்துகளும் திருமாலின் ஐந்து நிலைகளை விளக்குவதுபோல் ஒப்புமையுடன் விளங்குவதைக் கண்டு மகிழலாம்.

திருமழிசையின் ஐந்து நிலை :

(1) பரம் (ம) - வைகுந்த நித்திய வாசத்தைத் தரும் திருத்தலம்.

(2) வியூகம் (கி) - திருமழிசையில் நித்திய வாசம் செய்பவருக்குத் திருப்பாற்கடல் போன்ற நித்திய வாசத்தைப் பெறுவர்.

(3) விபவம் (சா) - உயிர்களைத் தீய வழியில் செல்லாமல் காக்க திருஆழியே வைகுந்தம் விட்டு பூலோகம் வந்து திருமழிசையாழ்வாராக அவதாரம் செய்த திருத்தலம்.

(4) அந்தர்யாமித்துவம் (ர) - எங்கும் திருமழிசையின் சிறப்பு பரந்து உறைந்து கரந்து உடலோடு உயிரென இருக்கும் சிறப்புடைய திருத்தலம்.

(5) அர்ச்சை (ம்) - இத்தலத்தில் திருவுருவம் கொண்ட நிலை, விபவ நிலை காணமுடியாதவர்க்கு திருமழிசை யாழ்வார் என்ற இந்த அர்ச்சை நிலை ஒரு வரப் பிரசாதம்.

22 கலைக்களஞ்சியம், தொகுதி 6, ப. 26

மேலும் அர்ச்சை நிலைகளில் திருமால் திருத்தலந்தோறும் பன்னிரு ஆழ்வார்கள் வரிசையில் திருமழிசையாழ்வாரும் திருமேனி உருவத்தில் இடம் பெற்று இருக்கின்றார்.

'திருமகளும், மண்மகளும், ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்' (முதல் திருவந். 42) என்னும் பாசுரத்திற்கேற்ப திருமகள், இத்தலத்தில் 'திருமங்கைவல்லி' என்னும் திருநாமத்துடன் திகழ்கிறாள். எனவே, திருமகள் பொருந்தி உறையும் தலம் என்னும் பொருளில் 'திரு' அடைமொழி சேர்க்கப்பட்டுத் 'திருமழிசை' ஆயிற்று என்பர் பெரியோர். இங்கு அவதரித்த திருமழிசை ஆழ்வார், ஆழ்வார்களாகிய சான்றோரில் சிறந்தவராகக் கருதப்படுகிறார். இத்திருமழிசை பல்லவர்கள் காலத்தில் புகழ் பெற்று விளங்கியது.[3]

'திருமழிசை என்பதற்குத் திருமகளே மகிழ்ச்சிக்கு இசைந்தத் திருந்தலம்' (ஆழ்வார் சிறு குழவியாய் இருந்தபோது ஞானத் திருமுலைப்பாலைத் தாமே இசைந்து கொடுத்த தலம்). 'திருமழிசை' என்ற தொனியின் இறுதியில் 'இசை' என்ற பதம் வருவதால் என்றும் 'திருச்சந்த விருத்தம்' இசையுடன் ஒலித்துக்கொண்டு 'மருவும திருமழிசை வளம்பதி' என்று பொருள் கொள்வதும் பொருந்தும். திருமழிசைத் தலத்தில் பூசைகள் நியமனப்படி நடைபெற்று வருகின்றன. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள 'திருமழிசை ஆழ்வார்' என்ற திருநாமத்தில் எட்டெழுத்தும் இணைந்து எம்பெருமானின் திருமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்ற திருவெட்டெழுத்து மந்திரத்தை என்றும் (உணர்த்தி) ஒலித்துக் கொண்டிருக்கும் சிறப்புடைய திருத்தலமாகும்.

4 **வரலாற்றுப் பின்புலம்** : ஒரு சமயம், 'பார்க்கவ, வாமதேவ, பிருகு, அத்ரி, வசிட்டர் முதலான முனிநாயகர்கள் புருடோத்தமனாகிய வடக்கு ஜகந்நாதனைக் கண்ணாரக் கண்டு சேவிக்க வேண்டுமென்று திருமாலைக் குறித்துத் தவம் செய்தனர். புருடோத்தமனும் தெய்வக்குரலாக (அசரீரி) "முனிவர்களே! நீங்கள் இவ்விடம் ஓர் உள்ளை மூடி அதற்குப் புறத்தே இருந்து பன்னிரு வருடங்கள் தவம் செய்தால் உங்களுக்குச் சேவை புரிகின்றேன்" என்று அருளினார். அவர்களும் திருமால் அருளியபடி உள்ளை மூடித் தவம் செய்தனர். திருமாலின் சேவையைக் காண அதிக விருப்பம் உடையவர்களாய் (6-வது) வருடத்தில் அந்த உள்ளைத்

28 திருமழிசையின் தலச் சிறப்பும், முக்கியத்துவமும், ப. 4

திறந்து பார்த்தனர். அப்பொழுது பன்னிரு வருடங்கள் நிறைவு பெறாமையால் ஜகந்நாதனும் நிறைவு ஆகாமல் அர்த்த சரீரத்துடன் (பாதி உடல்) சேவை புரிந்தார். பெருமானின் இவ்வுருவத்தைக் கண்ட முனிவர்கள் துன்பம் உடையவர்களாய், அப்பெருமானின் முன் கீழே விழுந்து வணங்கி "எங்களுக்குப் பூரண சேவை கொடுத்து எம்முடைய துன்பத்தைப் போக்கி அருள வேண்டும்" என்று விண்ணப்பித்து நின்றனர். ஜகந்நாதனும் பரம கருணையுடன் "முனிவர்களே! நீங்கள் மகிசாரத் தலத்திற்குச் சென்று அங்குத் தவம் புரிந்தால் உங்களுக்குப் பூரண சேவை கொடுக்கின்றேன்" என்று கட்டளையிட்டதாகத் திருமழிசை வைபவம் சுட்டுகிறது. முனிவர்கள் மகிழ்ச்சியுற்றனர். பின் அத்திருத்தலம் இருக்குமிடம் தெரியாமல் நான்முகனிடம் வந்து அவர் திருவடியைத் தொழுது எழுந்து எங்களுக்குத் தவம் செய்ய மகிசாரத் தலத்தை உறுதி செய்து மொழிய வேண்டும் என்று வேண்டினர். நான்முகனும் தேவசிற்பியான விசுவகர்மாவை அழைத்து, இம்முனிவர்கள் காணுமாறு துலாக்கோல் கொண்டு ஒரு தட்டில் பூமியையும், மற்றொரு தட்டில் 'திருமழிசை' என்னும் தலத்தையும் வைத்து நிறுக்கச் செய்தார்.

விசுவகர்மாவும் அங்ஙனம் செய்தபோது பூமி வைக்கப்பட்ட தட்டு சிறிது மேலோங்கி நின்றது. திருமழிசை வைக்கப்பட்ட தட்டு கனம் பெற்றிருந்ததால் தாழ்ந்து நின்றது. இவ்வேறுபாட்டை அவர்களுக்கு 'நான்முகன்' சுட்டிக்காட்டி திருமழிசைக்கு 'மகிசார தலம்' என்ற காரணப் பெயரைக் வைத்து உறுதி செய்து தந்து, அங்குச் சென்று தவம் புரியவும் அனுமதி தந்து வழிகாட்டி அனுப்பினார். இந்த வரலாற்றை நினைவுபடுத்தும் வகையில்,

> உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து தம்மில்
> புலவர் புகழ்க்கோலால் தூக்க—உலகுதன்னை
> வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே
> வைத்தெடுத்த பக்கம் வலிது

என்று திருக்கச்சி நம்பிகள் தனியனில் அமைத்துக் காட்டியுள்ளார்.[24] இங்குக் காஞ்சிபுராண ஆசிரியர் கச்சிநகரின் அழகை அறுதியிட நான்முகனும் இத்தகைய முறையை (துலாக்கோல்) கையாண்டான் என்பதை சிவஞான முனிவர் குறிப்பிடுவது ஒப்புநோக்கத்தக்கது.[25]

24 நா.தி.பி. (கோபால் நாயகர் பதிப்பு) ப. 158

25 காஞ்சிபுராணம், திருநகரப் படலம், செய்; 1 காண்க

**பார்க்கவர் - கனகாங்கி :** 'பார்க்கவர், வாமதேவர், வசிட்டர்' முதலான முனிவர்கள் நான்முகன்பால் கேட்டறிந்தபடி மகிமையுடைய திருமழிசையை (மகிசாரம்) அடைந்து அருந்தவம் புரியலானார்கள். இவர்களுள் 'பார்க்கவர்' முனிமட்டும் அத் தலத்தின் மேற்றிசையில் 'விநோகாவனத்தில்' திருமகள் கேள்வனை நோக்கி 'தீர்க்க சத்திரம்' என்ற பெருவேள்வி புரியலானார். இதனைக் கண்ட இந்திரனும், தேவர்களும் பொறாமை மிகுகின்றனர். இவரது வேள்வியைத் தடுக்க பல தேவ மாதர்களை ஏவுகின்றனர். அவர்களில் ஒருவராலும் வேள்வியைத் தடுக்க முயன்றும் முடியாமல் வாளா திரும்புகின்றனர். ஆனால் 'கனகாங்கி' என்ற தேவமாது என்பவள் மட்டும் முனிவர் முன்னிலையில் வந்து, ஆடல் பாடல்களுடன் பல விநோதங்களைச் செய்கிறாள். இதனால் முனிவரின் தியானம் கலைகின்றது. எதிரில் நின்ற தேவமாதுவால் கவரப்பட்டு அவளுடன் இணங்க, அத்தேவ மாதுவும் கருவுறுகிறாள்.

**திருமழிசையாழ்வார் அவதார நோக்கம் :** திருமால் பணித்தபடி சேதநர்களைத் திருத்தி உய்விக்கத் திருவுள்ளம் பற்றியபடி பாஞ்சாயுதாழ்வார்கள் என்றுஅழைக்கப்படும் திருமாலின் திருப்படைக் கருவிகளே இப்பூவுலகில் ஆழ்வார்களாக முதலில் அவதாரம் செய்தன. முதலாழ்வார்களை அடுத்துத் திருமாலின் வலது திருக்கரத்திலுள்ள திருவாழி (சுதர்சனம்) என்ற சக்கர அம்சமே திருமழிசையாழ்வாராக அவதரிக்கச் செய்ய, 'பிரபந்த ஜனகூடஸ்தரான நம்மாழ்வாரை அவதரிக்கச் செய்யும் முன்பே நம்மாழ்வாருக்கு அங்கபூதர்களில் காண்டிய சதானரான திருமழிசை ஆழ்வாரை முன்னம் அவதரிப்பிக்கத் திருவுள்ளம் பற்றினார்.[26] 'பெரிது - பக்தி; பெரியதன்று குலம்' என்றும், 'ஒன்றே குலம்' என்பதும், அது "குலம் தரும்'[27] என்று புணர்ந்த இடத்து, 'குலம்' என்பது 'தொண்டர் குலமே' என்பதை உணர்த்த, சாதி பேதத்திற்கு இடமில்லை என்றபடி, நல்லாசிரியரான, 'பொலிக பொலிக, பொலிக'[28] செய்யுமாறு, சுதர்சனம் (திருமழிசை ஆழ்வார்) அவதாரம் செய்யவே கனகாங்கி திருவயிற்றில் கருவாக வந்து அமைந்தது.

**5 அவதரித்த திருநாள் :** கனகாங்கி கர்ப்பவதியாய்த் திருவாழி அம்சத்துடன் கூடிய கருவைச் சுமந்து, பன்னிரு திங்கள் கழிந்த பிறகு சென்ற 'துவாபரயுகத்தில்' எட்டு இலட்சத்து

26 *திருமழிசைப்பிரான் வைபவம்*, பக். 4-5

27 பெரி· திரு. 1-1:9

28 *திருவாய்*, 5-2:1

இருபத்தாராயிரத்துத் தொள்ளாயிரம் கணக்குள்ள வருடம் அடைந்த திரளானது (8,26,900) சென்றளவில் 'சித்தார்த்தி' வருடம் 'தை' மாதம் பௌர்ணமிக்கு (கிருஷ்ணபட்சம்) மறுதினம் 'பிரதமை' திதி'யில் 'பாநு வாரத்தில்' (ஞாயிறு) சூரியனானவன் மகர ராசியை அடைந்த அளவில் இருபத்தேழாவது திதியுங் கழிந்தபின் 'மகம்' என்னும் பெயர் பெற்ற நட்சத்திர சுபதினத்தில் திருமழிசையில் சுதர்சன அம்சமாக, 'பக்திசாரர்', என்னும் திருநாமத்தை அடையப் போகிறவரும், ஞான வைராக்கியங்களை உடையவராய், முனி சிரேட்டருமான திருமழிசை ஆழ்வாரானவர் லோகங்கட்கு உபகாரம் செய்யும் பொருட்டு, பார்க்கவ மகா முனிவருக்கு திருக்குமாரராக அவதாரம் செய்தருளினார் என்பதை 'ஜயந்திமாலை' அறுதியிடுகிறது.[29]

**மான் வாயிற்றில் இரிஷ்யசிருங்கரும்,**

**முயல் வயிற்றில் கௌதமரும்,**

**புற்றிலிருந்து வான்மீகியும்,**

**மண்குடத்திலிருந்து வசிட்டரும் அவதரித்ததுபோல**

கனகாங்கிக்கு சுதர்சன அம்சமாக ஒன்றும் மெய்ப்பிக்க முடியாத உருவமின்றி 'பிண்ட உறுப்பாக' திருமழிசை ஆழ்வார் அவதரித்தார். இப்படி தமக்கு அவதரித்த பிண்டத்தைக் கண்டு கனகாங்கி விசனித்து அதனை அருகிலுள்ள ஒரு பிரம்புத் தூற்றின் கீழ் வைத்துவிட்டுத் தன்னுலகம் சென்றுவிட்டாள். பின் பார்க்கவர் அப்பிண்டத்தைப் பார்த்து முன்பு தாம் மற்றவர்களுடன் தவத்தில் பூர்த்தியாகாமல் இருந்த உள்ளைத் திறந்து பார்த்தபோது அர்த்த சரீரத்துடன் திருமால் சேவை காட்டியதன் எதிரொலிப்பே தமக்குப் பிண்டமாக இங்கு இக்குழவி அவதரித்துள்ளது என்று குறிப்பால் திருமால் தமக்கு உணர்த்தியதாக நினைத்துக் கொண்டார் என்று கொள்ளலாம். பிறகு செய்வது ஒன்றும் விளங் காமல், இக்குழவியை 'இறைவன் காப்பானாக!' என்று கூறிவிட்டு மீண்டும் தவம்புரியச் சென்று விட்டார். இங்ஙனம் திருமழிசையில் பார்க்கவருக்குச் சுதர்சன அம்சமாக ஆழ்வார் அவதாரம் செய்ததை[30] இவரது வைபவம் காட்டுகிறது.

29 திருமழிசைப்பிரான் வைபவம். ப. 7

30 ''மகாயாம் மகரே மாஸே சக்ராம்ஸம் பார்க்க வோத்பவம் !
மஹீஸார புராதீஸம் பக்திஸார மஹம் பஜே !!''

திருமழிசை ஆழ்வார் அவதார காலம் பற்றி பல ஆராய்ச்சி அறிஞர்கள் ஆராய்ந்து பல கோணங்களில் காலத்தை நிறுவி யுள்ளனர். அதன் விவரம் :

| அறிஞர்கள் | காலம் |
|---|---|
| 1. டி. கோபால் நாயகர் | துவாபரயுகம் எட்டு லட்சத்துத் தொண்ணூற்று இரண்டாயிரத்து தொள்ளாயிரத்து ஒன்று (8,92,901) சித்தார்த்தி வருடம். |
| 2. டாக்டர். மா. இராச மாணிக்கனார் | கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதி. |
| 3. மு. இராகவையங்கார் | கி. பி. ஆறாம் நூற்றாண்டு. |
| 4. சாமி. சிதம்பரனார் அரு. ராமநாதன் | கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி. |
| 5. பூர்ணலிங்கம் பிள்ளை | கி. பி. ஏழாம் நூற்றாண்டு. |
| 6. கலைக்களஞ்சியம் | கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதி. |

**ஆழ்வார் அவதரித்த மாதம் - நாளின் சிறப்பு :**

> **தையில் மகமின்று தாரணியீர் ! ஏற்றமிந்தத்**
> **தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன்—துய்யமதி**
> **பெற்ற மழிசைப்பிரான் பிறந்த நாளென்று**
> **நற்றவர்கள் கொண்டாடும் நாள்.** [31]

என சிறப்பித்துப் போற்றுகின்றார் மணவாளமாமுனிகள்.

6. **பிராட்டியார் பாதுகாத்தல்** : திருவாழியின் அம்சமாகத் திருமழிசையில் அவதரித்து, ஆதரவற்று இருந்த (அக்குழந்தை) 'முட்டைபோல் திரண்ட அப்பிண்டத்தை' அகில ஜகன்மாதாவான பெரிய பிராட்டியாருடைய அருளினால் பூமிப் பிராட்டி காப்பாற்றிவர,

31 உபதேசரத்தினமாலை, 12

**சிக்கென்று சென்னிக்கால் சீரிடைப்பின் கண்ணுயிராய்**
**ஒக்கஉருப்பாய்ந்தறிவா ருண்ணிறைந்தான்**

என்றபடியே எல்லா அவயங்களும் பரிபூர்ணமாய் அதிலே சீவன் பெற்றுத் தோற்ற, சிசுவான ஆழ்வார் மிகவும் பசிதாகத்தால் துன்புற்று முலைப்பால் வேண்டி, மக்களில்லாத காட்டில் பிரம்பின் தூற்றின் அழுது கொண்டிருந்தார்.[32]

பிண்டமானது பூமிப்பிராட்டியின் அருளால் பூர்ணமாக வளர்ச்சி பெற்று அழகிய 'பேதைக்குழவி'[33] அழுதளவில், அவ்விடத்துக்கருகே திருமழிசையில் எழுந்தருளியிருக்கும் ஜகந்நாதப் பெருமாளும் திருமங்கைவல்லி பிராட்டியுடன் பிரம்பம் புதரினருகே எழுந்தருளினர். பெரிய பிராட்டியார் தாமே மகிழ்ந்து,

**வந்தவண் மழிசை வாழுமான் மகிசார நாதன்**
**அந்த மைந்தனைச் செய்கையாலணைத் தணியாகஞ் [சேர்த்திக்**
**கந்த வாரிசப் பொன்கைக்கே கொடுத்தலு ஞானக்காட்சி**
**தந்தருண் முலைப்பால் சாலவருத்தினள் கமலைதானும்**

—அரிசமய தீபம் 24

என்று 'திருமழிசைப்பிரான் வைபவம்'[34] நுவலுகிறது. இங்ஙனம் குழவியைச் சிவந்த திருக்கையாலணைத்து அழகிய திருமேனியில் சேர்த்து, வாசனையுடைய தாமரையில் எழுந்தருளிய பெரிய பிராட்டியார் திருக்கையால் திருமுலைப்பாலுடன் ஞானத்தையும் சேர்த்து ஊட்டினார்.

மேலும் பிராட்டியார் பாலைப் புகட்டியப்பின் சூரியனுக்குச் சமமான அக்குழவியினது சிவந்த கையிலுள்ள பெருவிரலில் பால் சுரக்கும்படி அருள்புரிந்தார். அடியார்க்கு அளிக்கும் பல வரங்களும் நீண்ட ஆயுளுங் கொடுத்தனர். பின், பெருமானும் பிராட்டியும் அப்புதல்வனை வாழ்த்திச் சென்றனர். இதனை,

32 கா.தி.பி. (கோபால் நாயகர் பதிப்பு) ப. 471

33 பெரியாழ். திரு: 1-2:1

34 திருமழிசைப்பிரான் வைபவம், ப. 8

திருமகள் முலையிற்றீம்பால் பரிதிநேர் சிறுவன்செங்கைப்
பெருவிரலுதவும் வண்ண மருளினன் பெருமான்றானும்
அருள்பல வரமுமீயா வாயுவு மளித்தான் பின்னும்
இருவரும் புதல்வன் றன்னை வாழ்த்திவைத்தேகினாரால்

—அரிசமய தீபம் 25

என்ற பாடலால் அறிகின்றோம்.[35]

**பரிதிநேர் - சிறுவன் - சூரியனுக்குச் சமமானவன் :** பெருமாளும் பிராட்டியும் குழவியைச் சூரியனுக்குச் சமமானவன் என்று திருப்பாலை வழங்கி வாழ்த்தியதால், சூரியன் பல ஒளிக் கதிர்களை விட்டுப் பிரகாசித்து ஒளி தருவது போன்று திருவாழியின் அவதாரமாகிய இவர் சக்கரம் எப்படி ஒளிப்பொருந்திப் பிரகாசிக்கிறதோ அதுபோல் இவரது அவதாரமும் வையகத்துக்கு நன்மை தரும் ஒளியாகத் திகழ்ந்து புகழ் பெறுவார் என்பதைக் குறிப்பால் உணரலாம். பின்னர் அத்தெய்வீகக் குழவி பெருமாள்-பிராட்டி அருள் மறைந்ததும் பிரிவை ஆற்றாமல் மீண்டும் அழத் தொடங்கியது.

**ஒப்புநோக்கு :** திருமழிசையில் அவதரித்த திருமழிசையார் குழவி பசி தாகத்தால் அழுதபோது பெருமாளும் - பிராட்டியும் அங்கு எழுந்தருளி திருஞான முலைப்பாலைப் புகட்டி, வாழ்த்தி மறைந்தனர். இதுபோல், சீர்காழியில் திரிபுரசுந்தரியும்-தோணியப்பருடன் திருஞானசம்பந்தர் ஐந்து வயது குழவியாக இருந்தபோது பசியால் அழுத நேரத்தில் அங்கு எழுந்தருளி, ஞானப்பாலை ஊட்டி வாழ்த்தி மறைந்தனர். இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்றுபட்டு இருப்பது காணத்தக்கது.

**வளர்ப்பு ;**

பாழியந் தோளுடைப் பாவை வேந்தும்
ஆழிதன மிசமாய் வந்தவக் குழவி
ஆழிய னகன்றிட வவ்வுரு வெண்ணிப்
பூமிவெங் கானிடை யழுத வப்போழ்தே.[36]

அப்போது திருமழிசையில் வசிக்கும் 'திருவாளன்' என்ற பிரம்புத் தொழில் செய்பவன் பிரம்பு அறுக்க வருகிறான். பிரம்புப்புதர் அருகே வர, குழந்தையின் அழுகுரலைக் கேட்டுச் சுற்றிலும் பார்த்து யாருமில்லாமல், சூரிய ஒளியுடன் இருக்கும் அக்குழவியை வாரி எடுக்கின்றான்.

---

35 திருமழிசையாழ்வார் வைபவம் ப, 8

36 ஆழ்வார்கள் வரலாறு, ப. 38

தம்முடைய மகப்பேறு இல்லாத குறையைப் போக்கவே இத் தெய்வக் குழவியைத் தனக்கு இறைவன் அருளினார் என்று மகிழ்ந்து, தான் முற்பிறவியில் செய்த தவப்பயனே என்று இதனைக் கொண்டாடி ஆர்வத்துடன் குழவியைத் தூக்கி உச்சி மோந்து மார்பிலே அணைத்துக் கொள்கிறான். குழவியுடன் தம் இல்லத் திற்குப் புறப்படுகிறான்.

**பங்கயச் செல்வியிடம் கொடுத்தல்:** திருவாளன், பிறவிக் குருடன் கண் ஒன்று பெற்றது போன்று மகிழ்ச்சியுடன் "வசுதேவர் ரேபல்லெயிலிருக்கும் (ஆயர்பாடி) நந்தன் திருமாளிகைக்குக் கண்ணனைக் கொண்டு போய் எப்படிக் கொடுத்தாரோ, அப்படி இந்த அரிதாசனும் எடுத்துக்கொண்டு வந்து தன்னுடைய மனைவியான பங்கயச் செல்வியார் கையில் கொடுக்க,[37] அவளும் அக்குழவியை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டதை,

> மலமறு மனத்தினள் மகிழ்வுட னிதனை
> மலடுறு தனமனைச் செல்வியள் வளர்ந்திட
> நிலவிடு மோகைய லுய்த்திட நிதியெனக்
> குலவியக் குழவியைத தனைத்தனக் கொண்டாள்.[38]

அவள் தனக்குக் குழந்தை இல்லாததால் அதிக விருப்பம் உடன் 'உத்தானஞ் செய்து'[39] என்றபடி புதல்வனை ஸ்வீகாரம் பண்ணிய அளவிலே 'வன முலைகள் சோர்ந்துபாய'[40] என்றபடி (தமது முலைப்பாலை கொடுக்க) "தந்துக் கொண்டால் கொல்லோ? தானே பெற்றால் கொலோ?"[41] என்று பாராட்டியும் "நந்தகோபன் சிறுவா! நான் சுரந்த முலையுண்ணாயோ" [42] என்று பங்கயச் செல்வி யால் வளர்க்கப்பட்டார்.

அவளும் தம் பாலைக் குழவிக்குப் புகட்ட முயலும்போது அத்தெய்வக்குழவி அதை அங்கீகரிக்க மறுக்கின்றது. உணவில் ஆசையற்றவராய், பகவத் குணாநுபவத்தையே தாரகமாகக் கொண்டு, பசி தாகமின்றி, அழுகை, அரற்றுதல், கூவுதல் போன்றவை இன்றி, இளஞாயிறு போல எல்லாத் திருமேனி உறுப்புகளும் பரிபூரணமாக வளர்ந்து வருகின்றன. இப்படி வாட்டமின்றி பொலிவுடன் விளங்கும் குழவியைக் கண்டு அவ்வூரில்

37. திருமழிசைப்பிரான் வைபவம், ப. 9
38. ஆழ்வார்கள் வரலாறு, ப. 29
39. பெரியாழ். திரு. 1-1:8
40. ஷை 2-2:1
41. ஷை 2-2:7
42. ஷை 2-2:3

உள்ள பலரும் அதிசயமாகக் காண்கின்றனர். இது 'ஓர் தெய்வக் குழவி' என்று போற்றியும், வாழ்த்தியும் செல்கிறார்கள். இங்ஙனம் **'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனே.'**[43] என்ற நினைவின்படி நாளொரு மேனியாக குழவியானது வளர்ந்து வருகின்றது. 'திருவல்லிக்கேணி செல்லும் யாத்திரிகளுடன் பழகி திருமால் பக்தர்களாவும் இருந்த திருவாளன் தம்பதிகளால் வளர்க்கப்பட்ட குழந்தைதான் திருமழிசைப் பிரானாக வளர்ந்தது என்பர்.[44]

**திருநாமமிடுதல் :** திருமழிசையில் அவதரித்த காரணத்தாலும், எம்பிரானே தமக்குக் குழவி பாக்கியத்தைத் தந்தமையால் 'பிரான்' (தலைவன்) என்ற சிறப்பும் சேர்த்தும், திருமகள் அருளால் பாதுகாக்கப்பட்டு வளர்ந்தருளினமையால் 'திரு' என்ற அடைமொழி சேர்த்து' 'திருமழிசைப்பிரான' என்று திருநாமமிட்டனர். பல மகிமைகள் பொருந்திய தலத்தில் அவதரித்தமையால், எம்பெருமானின் பரிபூரண அருள்பெற்ற இவர் பின்னால் பல மகிமைகள்செய்பவர் என்றும், திருமகளே இசைந்து ஞானப்பாலைப் புகட்டியமையால் **'மழிசை'** என்றும், திருமகள் அருள் என்றும் தமக்கு உண்டென்பதை **'திரு'** என்ற அடைமொழி சேர்த்து, திருவாளனுக்கு இறைவன் தலைவனாக விளங்கியது போல, இவரும் திருமழிசையிலுள்ள அனைவருக்கும் பிரானாக (தலைவனாக) விளங்கப் போகிறார் என்றும் பொருள்படத் 'திருமழிசைப்பிரான' என்ற திருநாமம் அமைந்தமை பொருந்தும்.

**கிழத்தம்பதியினர் வருதல் :** நாலாம் வகுப்பில் அவதரித்த பிராக்ஞனும் ஒருவன் ஆழ்வாருடைய பெருமைகளைக் கேள்வியுறுகின்றான். இவ்வரிய குழவியைச் சேவிக்க எண்ணங்கொண்டு, பாங்காகப் பாலைக் காய்ச்சிக்கொண்டு, தம் மனைவியுடன் விரைவாக வருகிறான். குழவியின் கிளரொளி இளமை அழகைக் கண்டு வியப்புற்றுத் தான் கொண்டு வந்த பாலமுதைச் சமர்ப்பித்து அமுது செய்தருளுமாறு வேண்டி நிற்கின்றனர். இவர்களுடைய பக்தி மிகுதியைக் கண்டு, திருவுள்ளம் பற்றிப் பாலை அமுது செய்தார் திருமழிசையார்.[45]

தமக்குப் பிள்ளையில்லா மனக்குறையைப் போக்க கிழத் தம்பதியினர் நாடோறும் வழக்கமாகப் பாலமுதைக் கொண்டு வந்து ஊட்டினர். ஒருநாள் இவரது பக்தியைக் கண்டும், மனக்கருத்தை

43 திருவாய். 6-7:1
44 தொண்டர் குலமே தொழுகுலம், ப. 28
45 திருமழிசைப்பிரான் வைபவம் ,ப. 10

அறிந்தும் அன்று தாம் பருகி எஞ்சிய பாலைக் கொடுத்து அவர்களை அருந்துமாறு திருவாய் மலர்ந்தருளினார். தம்பதிகள் மகிழ்ச்சியுடன் அதனைப் பருகிய அளவில் தம் கிழஉருவம் நீங்கி இளமை உருவம் பெற்றனர். பின்பு சிலநாள் கழித்து கருவுற்று ஓர் ஆண் மகவைப் பெற்றனர். பெற்றோர்கள் அக்குழவிக்குக் "கணிகண்ணன்" என்று திருநாமமிட்டனர்.

ஒப்பீடு : கண்ணன் - அரசரான வாசுதேவர் - தேவகிக்கு அவதரித்து, ஆயர்பாடி தலைவனான நந்தகோபர் - யசோதையிடம் வளர்ந்தது (ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்) போல, திருமழிசைப் பிரானும் மகாமுனி பார்க்கவர்-கனகாங்கிக்கு அவதரித்து, பிரப்பங் குடி திருவாளன்-பங்கயச் செல்வியால் வளர்க்கப்பட்டது ஒப்பிட்டு மகிழத்தக்கது.

வளர்ப்பு - குலத்தொழில் : திருமழிசையார் பகவத் அருளையே உணவாகக்கொண்டு பசி அற்றவராய், பிரம்பறுப்பான் குடியில் வளர்ந்து வந்தார். மகா அறிவுள்ள இவர் யோகத்தில் ஈடுபட்டு எல்லோரையும் மயக்கும்படி, தாம் வளர்த்த குலத்துக்குத் தகுந்த தொழில் பற்றுடையவராய், புண்ணியத்தலமான அந்த மகிசாரத்தில் கூடைகளைப் பின்னிக் காலங்கழித்தார். இங்ஙனம் வளர்ந்து வந்தாலும் பல சூரிய ஒளி பிரகாசிப்பதுபோல், எல்லோருக்கும் அறிவையூட்டுகின்ற தமது அழகிய தோற்றத் துடன் விளங்கினார் என்பதை இவரது வரலாறு நுவலுகிறது. அவதாரத்திலே முனியின் மகனாக இருப்பதாலும், பகவத் அநுபவம் கொண்டுள்ளதால், தாமே சகல வித்தைகளையும் அறிந்து கொண்டார். ஏழு வயது அளவும் பிரம்பங் குடியிலிருந்தார்.

இவர் உலகப் பொருளை அறிய விழைந்து, ஏழு வயதில் தலத்தைவிட்டுப் புறப்பட்டதை,

> புருட னிர்ணயஞ் செய்து புந்தியுள்
> மருடி ரிந்துயர் மதிவு தித்தெழ[46]

என்றும்,

> என்றேன் அடிமை, இழிந்தேன் பிறப்பிடும்பை
> ஆன்றேன் கடனாடும் மண்ணாடும் கைவிட்டு
>
> (நான். திரு. 95)

46 ஆழ்வார்கள் வரலாறு, ப. 42

என்று திருத்தலப்பயணமாகப் புறப்பட்டதை அறிய முடிகின்றது. அபிதான சிந்தாமணி திருவாளன் வேடன் என்றும், எட்டாம் வயதில் திருமழிசையார் வேடச்சேரி விட்டு அகன்றார் என்று சுட்டுகிறது.[47] இங்கு குருபரம்பரா பிரபாவம் முதல் நூலாகக் கொண்டு பல நூல்களும், திருவாளன் பிரப்பங்குடியைச் சேர்ந்தவன் என்றும் ஆழ்வார் பிரப்பங்குடியை விட்டு அகன்றார் என்று குறிப்பிடும் கருத்தே ஏற்புடையதாக அமைகிறது. அபிதான சிந்தாமணி கூறும் கருத்து பொருந்தி வராமையால் மேலும் இவ் ஆசிரியரின் கூற்று ஆராயத்தக்கதாக உள்ளது.

7. **ஆழ்வார் பாசுரத்தில் தன்-வரலாறு** : திருமழிசையார் தமது அகவாழ்க்கையின் நிகழ்ச்சிகளைத் தாமே பாசுரங்களில் சுட்டிக்காட்டித் தன்-வரலாறு படைக்கிறார். இங்கு ஓரிரு சான்றுகள் மட்டும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

**குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்**
**—(திருச். விரு. 90)**

என்று தாம் நாலு வர்ணங்களிலும் பிறக்கவில்லை என்று அருளியபின்,

**நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவின்றிலேன்**
**புலங்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்**
**—(திருச். விரு. 90)**

என்பதைச் சுட்டி, பல கலைகள் அறிந்தும், புலன்களை அடக்கிச் செயல்படுவது போன்ற செயல்களைத் தாம் செய்யவில்லையே என்று தம்மைத் தாழ்த்திக் கூறுகின்றார். பல சமயங்களில் சென்று ஆராய்ந்து பேயாழ்வாரால் திருத்திப்பணி கொண்டபின்,

**அன்றுநான் பிறந்திலேன், பிறந்த பின் மறந்திலேன்**
**—(திருச். விரு. 64)**

என்று தாம் மனம் மாறியதையும் குறிப்பிடுகிறார். இறைவனை அடைய, தம்மை மாற்றிக் கொண்டதை,

**அடக்கரும் புலன்கள் ஐந்து அடக்கி ஆசையாமவை**
**துடக்கறுத்து வந்து நின்தொழிற் கணின்றவென்ற நீ**
**—(திருச். விரு. 95)**

47 அபிதான சிந்தாமணி, ப, 846

என்று குறிப்பிட்டுக்காட்டி, இறைவன் தமக்கு கரு இருந்த நாள் முதல் இன்றுவரை காப்பாக இருப்பதை,

கருவிருந்த நாள் முதலாகக் காப்பு —(நான். திருவந். 92)

என்பதைச் சுட்டிக்காட்டித் தமது செய்ந்நன்றி மறவாத் தன்மையை எடுத்துக் காட்டுகிறார்.

இவரது அவதாரம் பற்றி ஓர் ஆசு கவிதையில்,

அரங்கத் தம்மான் துயிலெழப் பாடிய
திருத்துழாய் தொண்டர் தொண்ட ரடியார்
ஆகிய பாடல் அரும் இசை மூவரும்
உயர்ந்த சாதி ஒருநிலை யாளர்கள் !
இவர்கள் தம்மில் இழிகுலம் எனினும்
ஒருகுலம் தனனில் உதித்த பக்தன்
.........................................
.........................................
சாதித் தாழ்ச்சிகள் பக்தி முன் நில்லா
நிலையார் பாடலின் நெடும்புகழ் நிற்கும்
.........................................
பிறந்தோரிடம் ! பிரப்பன் குடியில்
வளர்ந்தோரிடம் ! வாழ்க்கை அமைப்பில்
ஆரிய பக்தியால் பெருமையுற்றனார் ![48]

என்று போற்றப்படுகிறது. இவர்,

தொண்டக் குலத்தி லுள்ளீர் ! வந்தடி தொழுது
ஆயிரம் நாமம் சொல்லி
பண்டைக் குலத்தைத் தவிர்த்துபல்
லாண்டுபல் லாயிரந் தாண்டென் மினே[49]

என்ற பாசுரத்தின்படி அவதாரம் செய்து, ''பண்டைக் குலத்தைத் தவிர்த்து, தொண்டக் குலத்தில் நின்று வந்தடி தொழுது ஆயிரம் நாமம் சொல்லிப்'' பரவுகிறார்.

வேதத்தில் சாதி தர்மத்தை அடிப்படையாகக் கொண்டாலும், இதற்கு விதிவிலக்கு உண்டு என்பதையும், திருமாலே எல்லாம் என்று நினைத்துப் பக்தி செய்யும் பாகவதர்களின் கருத்தில் சாதி

48 வானத்திற்கு ஏது வரப்பு, பக். 4-6
49 பெரியாழ், திரு. திருப்பல்லாண்டு, 5

வேறுபாடு அகன்று, 'தொண்டர் குலமே' மேலோங்கி இருக்கத் திருமழிசைப்பிரான் முதல் வித்தாக அமைகிறார்.

**8. திருநாமங்கள் :** திருமழிசைப்பிரானுக்கு வளர்ப்பு இடத்திலும், சிவன் திருவாக்காலும், எம்பிரான் திருவாக்காலும், இன்னும் பல கோணங்களில் எண்ணற்ற திருநாமங்கள் வழங்கப் பெறுகின்றன. அவை 'திருமழிசைப்பிரான்', 'திருமழிசையார்', 'சிவ வாக்கியர்', 'சக்கரத்தாழ்வார்', 'பக்திசாரர்', 'உறையிலிடாதார்', 'குடமூக்கிற் பகவர்', 'கும்பகோணத்துப் பாகவதர்' 'கணித மேதை', 'பன்மொழி தத்துவ வித்தகர்', 'திருமழிசையாழ்வார்' என்ற சிறப்பு நாமங்களும் பெற்றவர். மகாயோகி, சித்தர், தத்துவமேதை, பார்க்கவ முனிவரின் அருந்தவச் செல்வர், மெய்ஞ்ஞானச் செல்வர், மகாநுபாவர், அருட்குணப் பெரியார் என்ற பல விருது திருநாமங்களையும் கொண்டவர்.

**(1) திருமழிசைப்பிரான் :** இத்திருநாமம் இரண்டு கோணங்களில் அமைகிறது. முதல் கோணத்தில் வளர்ப்புத் தந்தையினால் குழவியாயிருந்தபோது 'திருமழிசைப்பிரான்' என்று திருநாமம் சூட்டப்பட்டதாகும்.

> திருமழிசைப்பிரான்—திருமழிசை + பிரான் என்று பிரித்து,
> திருமழிசை — திருமழிசையில் அவதரித்த,
> பிரான் — அனைவருக்கும் தலைவனாக விளங்குபவர்

என்று பொருள் கொண்டு, திருமழிசையில் உள்ள அனைவருக்கும் மற்றவர்களுக்கும் தலைவன் என்பதையே 'திருமழிசைப்பிரான்' ஆக அமைகிறது.

**உட்பொருள் :** திரு + மழிசை + பிரான் என்று பிரித்துப் பொருள் கொள்வதால், திரு — திருமகள் அருள் என்றும் தன்னிடம் நிரம்பப் பெற்றவர் ; மழிசை — பெரிய பிராட்டியாலே இசைவுடன் மகிழ்ந்து ஆழ்வார் குழவியாக இருந்தபோது திருஞான முலைப் பாலைத் தாமே உவந்து புகட்டியதால் திருமகளின் மகிழ்ச்சிக்கு உகந்தவர் ; பிரான் — தலைவன். இங்ஙனம் திருமகள் அருள் நிரம்பப் பெற்று, திருமகளுக்கே மகிழ்ச்சி தரும் ஆழ்வார்களின் தலைவனாக விளங்கியவர் 'திருமழிசைப் பிரான்' ஆவர்.

**இரண்டாவது கோணத்தில் :** பிரான்—தலைவன், சுவாமி என்று பொருள். இவர் பக்தியில் மாறாத அன்பு கொண்ட தலைவர்;

''எனக்குத் தலைவன் இறைவன் ! நான் (சீவான்மா) அவனது தொண்டன் ! இறைவனுக்கு அடிமை செய்வதே (புகழ்பாடி) என் வாழ்க்கையில் முதலும் இறுதியுமான கொள்கை என்ற மனநிலையை உடையவராக வேண்டும்'' என்பதே. 'திருமழிசைப்பிரானாக' வழங்கப்பட்டு மற்ற ஆழ்வாருக்கு இல்லாத தனிச் சிறப்புப் பெறுகிறார்.

**ஆராவமுதன் மூலம் திருநாமம் பெறுதல் :** திருமழிசையார் திருக்குடந்தையில் எம்பெருமானை நோக்கி '**கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழி! கேசவனே!**, (திரு. விரு. 61) என்ற நிகழ்ச்சியின் மூலம், ஆழ்வாரின் அன்பு, பக்திக் கயிற்றினால் கட்டுண்ட பெருமாள் எழுந்திருக்க முற்பட்டார். இச்செயலைக் கண்ட ஆழ்வார் '**வாழி**' என்று வாழ்த்தி மங்களாசாசனம் செய்தார். இவருடைய பேருதவியை நினைத்து மகிழ்ந்தார் ஆராவமுதன். இந்த நிகழ்ச்சியை நாடு புகழும்படி எல்லோரும் அறிய தமது திருநாமத்தில் கடைசியில் உள்ள '**பிரான்**' என்ற சிறப்புப் பகுதியை '**ஆராவமுதபிரான்**' ஆழ்வாருக்கு விருதாக வழங்கி '**திருமழிசைசப்பிரானாக**' சிறப்புப் பெறும்படி செய்தார்.

ஆழ்வாரும் கைமாறாக, தமது திருநாமத்தில் உள்ள (திருமழிசையாழ்வார்) '**ஆழ்வார்**' என்ற சிறப்புப் பகுதியை ஆராவமுதனுக்கு பேரன்போடு வழங்கி '**ஆராவமுதாழ்வான்**' என்ற சிறப்புத் திருநாமத்தைச் சூட்டி மகிழ்ந்தார். இங்ஙனம் ஒருவருக்கொருவர் திருநாமத்தை மாற்றிக் கொண்டதால், எந்த ஆழ்வாருக்கும் இல்லாத தனிச்சிறப்பு இவருக்கு உண்டு.

**(2) திருமழிசையார் :** திருமழிசை+யார் என்று பிரித்துப் பொருள் கொண்டால் திருமழிசையில் அவதரித்தவர் 'திருமழிசையார்' என்றும், திருமழிசையார் என்று உச்சரிப்பின் 'இசை' என்ற தொனி வரும் இதனால் இவர் இசைத்துறையில் சிறந்து விளங்குபவர் என்பதை உறுதிப்படுத்தும். மேலும் இவர் அருளிய 'திருச்சந்த விருத்தம்' என்ற பிரபந்தம் தாளத்தோடு கூடிய இசையுடன் அமைந்தது என்றும், திருச்சந்தத்துடன் மருவி மணம் கமழும் தன்மை அமையும்படி செய்தவர் '**திருமழிசையார்**' ஆவர். இத்தல மண்ணை எடுத்து நுகர்ந்தாலும் திருச்சந்த விருத்தம் மணம் நாறும் தன்மையுடையது என்பதால் இன்றும் திருமால் பக்தர்கள் இத்தல மண்ணை எடுத்து நுகர்ந்து திருச்சந்த விருத்தம் மணம் நாறுகிறதா என்று அநுபவிப்பது உண்டு என்பது என் பேராசிரியர் C. **ஜகந்நாதாச்சார்யரின்** திடமான அநுபவக் கருத்தாகும்.

(3) **சக்கரத்தாழ்வார் :** திருமழிசையார் யார் ? என்ற வினாவிற்குத் திருமாலின் படைக்கருவிகளில் ஒன்றான வலக் கரத்திலுள்ள சுதர்சனம் என்று வழங்கப்படும் திருஆழியின் அம்சமே 'சக்கரத் தாழ்வாராக' அவதரித்தார். எனவே 'திருமழிசையாரை' 'சக்கரத்தாழ்வார்' என்று சிறப்பித்துப் போற்றுகின்றனர்.

(4) **சிவவாக்கியர் :** முழுமுதற் கடவுளை அறியப் பல சமயங்களில் புகுந்து ஆராய்ந்து வரும்போது, அந்தச் சமயங்கள் பின்பற்றும்போது அந்தந்தச் சமயத்தவரால் அவ்வச் சமயங்களிலுள்ள நூல்களை செய்தும், அம்மதத்தின் திருநாமத்தோடும் விளங்கினார். இவ்வாறு சைவ சமயத்தில் ஈடுப்பட்டபோது 'சிவவாக்கியர்' என்ற திருநாமம் பூண்டு, சிவசமயத்தைக் குறிக்கும் சிவபரமாக உள்ள 'சிவ வாக்கியம்' என்ற நூலையும் செய்தவர் திருமழிசையார் என்று வழங்கி வருகின்றனர்.

(5) **பக்திசாரர் :** திருமழிசையாழ்வார் முக்கோண நோக்கில் பக்திசாரர் என்ற ஒப்பற்ற விருதுப்பெற்று சிறப்புடன் விளங்குகின்றார்.




5. (I) **பக்திசாரர் :** திருமால்மீது பக்தி தழைத்தமைக்கு மயிலை பேயாழ்வார் (குரு) மூலம் பெற்றது - சிறந்த சன்மானம் - 'பக்திசாரர்'.

(II) எம்பெருமானை 'பக்தி' கயிற்றால் கட்டியதால் திருமாலே அறிந்து வியந்து கொடுத்த - மிக சிறந்த சன்மானம் - பக்திசாரர்.

(iii) திருமகள் நாதனைக் கருத்திற்கொண்டு அசையாது பகவத் பக்தியில் ஊன்றி இருந்தமைக்கு சிவன் அளித்த சிறப்புடைய சன்மானம், 'பக்திசாரர்'.

(6) **உறையிலிடாதார்:** திருமிசையாழ்வார் திருமாலிடம் அன்பு கனிந்து, பாசுரங்கள் மூலம் வேத விழுப்பொருளை நிறைத்தவர். நடையில் மிடுக்கும், கம்பீரமும், இசைநயமும் கலந்த இன்பமும் பொருந்தியவர். இவர் நாராயண பரத்து வத்தையே எடுத்துக் காட்டுவதில் கண்ணுடையவர். இக் காரணத்தால் இவர் 'உருவிய வாளை உறையிலிடாதார்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

'பகைவர்களை அழித்து ஸ்ரீமந் நாராயணனுக்கு எப்போதும் கைங்கரியம் செய்து வருபவர் சக்கரத்தாழ்வார். இவரே திருமழிசை யாழ்வாராக அவதரித்தார். இவர் உபதேசங்களால் பிற சமய வாதங்களை முறியடித்துத் தத்துவப் பொருளை உணர்த்தி வந்தார். இக்காரணம் பற்றியே இவ்வாழ்வாரை 'உருவிய வாளை உறையி லிடாதார்' என்று கூறி ஆசாரியர்கள் புகழ்ந்தார்கள்.[50]

(7) **குடமூக்கிற் பகவர்:** திருமழிசையாரைக் 'குடமூக்கிற் பகவர்' என்றும் பொருத்தத்துடன் வழங்கி வருகின்றனர். 'குட மூக்கிற் பகவர்' என்பது குடமூக்கில் என்ற தலத்து வாழ்ந்த முனிவ ராகிய திருமாலடியார் என்று பொருள். குடமூக்கு - கும்பகோணம். (கும்பம் - குடம்; கோணம் - மூக்கு). கும்பகோணம் - வடசொல்; இதற்கு நேரான தமிழ்ச்சொல் குடமூக்கு என்பது. பாம்பணைமேற் சேர்த்திய 'குடமூக்கில் கோயிலாகக் கொண்டு (இரண். திருவந். 97) என்பது முதலாழ்வார்களை ஒருசேர வைத்து அவ் விருத்திகாரர் குடமூக்கிற் பகவரைச்' சிறப்பித்தலால் அவர்களோ டொத்த பெருமானுடைய பகவர், 'திருமழிசைப்பிரான்' என்று கருதுகிறார். இவர் தம் வாழ்நாளின் பிற்பகுதியில் திருக்குடந்தை சென்று தங்கி அங்கே நெடுங்காலம் யோகத்தில் எழுந்தருளியிருந்து பின் வீடு பெற்றனர். அந்நகரில் இவர் தமது இரு பிரபந்தங்களை யும் செய்தார். ஆகவே குடமூக்கில் வாழ்ந்த பாகவதரான குடமூக்கிற் பகவரும் திருமழிசையாரும் ஒருவரே என்று திருமழிசை யாரைக் குடமூக்கிற் பகவர் என்று கூறுவதே பொருத்தம். இப் பகவர் செய்த 'வாசுதேவனார் சித்தம்' என்ற நூல் திருமாலின் மீது பாடப்பட்டது. இந்நூலின் பெயரை நோக்குமிடத்துத் திருமழிசையார் அருளிய திருச்சந்த விருத்தமும் வேறாகக் கொள் வதற்கு இல்லை. 'சந்தம்' என்பது சிந்தம் என்று பிற்காலத்தில்

50 திருமழிசைப்பிரான் வைபவம், பக். 24-25

திரிந்து விட்டது என்று எடுத்துக்காட்டி திருமழிசையாரைக் 'குடமூக்கிற் பகவர்' என்று நிறுவுகிறார்.[51]

(8) **கும்பகோணத்துப் பாகவதர்:** திருமழிசைப்பிரானைக் 'கும்பகோணத்துப் பாகவதர்' என்றும் புகழ்ந்து போற்றுகின்றனர். கும்பகோணம் என்ற திருக்குடந்தையில் இந்த ஆழ்வார் இறுதிக் காலம் வரை வாழ்நாளைக் கழித்தார். 'பாகவதர்' என்று வழங்கப் படக் காரணம் திருமழிசைப்பிரான் குடந்தையிலே எழுந்தருளி யிருக்கும் ஆராவமுதனிடம் அதிக ஈடுபாடு உடையவர். எனவே, வைணவத்தில் பாகவதர் என்ற சொல்லுக்கு எம்பெருமானுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொள்பவர் என்பது பொருள். இவ்வாழ் வாரும் பலசேவைகள் செய்து எம்பெருமானுக்கே தம்மை முழுவதும் அர்ப்பணித்தவர் என்ற சிறப்பால் கும்பகோணத்துப் பாகவதர்' என்று சிறப்பிக்கப்படுகிறார்.

(9) **யோகவிநோதர்:** திருமழிசையாழ்வார் தமது நாட்களை யோகங்களில் ஈடுபட்டுக் கழித்தவர்

> வாசித்தும், கேட்டும், வணங்கி வழிபட்டும்
> பூசித்தும் போக்கினேன் பொழுது (நான். திரு. 63)

என்பது ஆழ்வார் மேற்கொண்ட யோக வித்தையின் சாரம். இதன்படி ஒழுகி, யோகம் செய்வதில் வல்லவராகத் திகழ்ந்தார். ' கசடறக் கற்பதையும் ஒரு பொழுது போக்காகக் கொண்டு விளங்கு வோரை 'அருங்கலை விநோதர்' என்று குறிப்பிடுகிறோம். இறைவனது ஆராதனத்தையும் பொழுது போக்காக கொண்ட இப்பெரியோரைப் பக்திச்சாரர் என்று கூறுவது போல் 'யோக விநோதர்' என்று குறிப்பிடலாம்.[52]

(10) **கணிதமேதை:** திருமழிசையாழ்வார் தத்துவ வாதத்தில் சிறந்து விளங்குவது போல கணக்கியல் அடிப்படையில் வைணவ தத்துவத்தைக் கலந்து பாடுவதில் வல்லவர். இவ்வாழ் வார்தான் முதன் முதலில் கணக்கியல் முறையில் பாசுரத்தைஅருளிய மேதையாவர். இவருடைய 'திருச்சந்த விருத்தம்' என்ற பிரபந்தத்தில் வைணவ தத்துவத்தின் சித்தாந்தத்தை மக்களுக்குப் புரியும் வண்ணம், மனத்தில் நினைவில் வைத்துக் கொள்ளவும், எளிமையான முறையான கணித முறையில் நுணுக்கமான உயர் தத்துவத்துப் பொருள்களைப் புகுத்தி அருளியுள்ளார். திருச்சந்த

51 ஆழ்வார்கள் கால நிலை, பக். 67-68
52 தொண்டர் குலமே தொழுகுலம், ப. 107

விருத்தப் பாசுரங்களில் கணக்கியல் அடிப்படையில் (ஒன்று முதல் ஏழு பாசுரங்கள் வரை —1, 2, 3, 4, 7, 77, 99) அருளி உள்ளதால் இவரை 'கணித மேதை' என்றும் அறிந்தவர்கள் போற்றுகின்றனர்.

(11) **பன்மொழி சமய-தத்துவ வித்தகர்:** திருமழிசை யாழ்வார் இயல், இசை, இலக்கணம், இலக்கியம், தமிழ், வட மொழி போன்ற மொழிகளில் சிறந்த தேர்ச்சி உடையவர். சைவம், பௌத்தம், சைனம், வைணவம் போன்ற சமயங்களைப் பின்பற்றியதால், சமய தத்துவத்தில் பிறரிடம் வாதம் புரிவதில் வல்லவராகத் திகழ்ந்தார். மேலும் தத்துவ அடிப்படையில் வினா-விடைகளை எழுப்பித் திகைக்க வைக்கும் ஆற்றலும் இவரிடம் காணலாம். தத்துவ வாதத்தில் இவருக்கு எதிர் நின்றவர் ஒருவரும் இலர். முடிவில் பேயாழ்வாரால் திருத்திப் பணிகொண்டபின் வைணவத்தில் முழு தத்துவ வித்தகராக விளங்கினார். இவ்வாறு 'பன்மொழி சமய தத்துவ வித்தகராக' இவர் திகழ்கிறார்.

(12) **திருமழிசையாழ்வார்:** இவ்வாழ்வார் சமயக் காழ்ப்பு இருந்த காலத்தில் முதலாழ்வார்களைவிட துணிவாக முன்நின்று திருமாலின் பரத்துவத்தை நிலைநாட்டி, வைணவத்தில் பிற தெய்வங்கள் பற்றிப் பேசக்கூடாது, ஒரே தெய்வம்தான் பேச வேண்டும், அத்தெய்வம் திருமாலே என்று எதிர்த்துப் பேசிக் காட்டியதோடு, தமது பாசுரங்களிலும், பிற தெய்வங்களைக் கண்டித்தும் திருமாலைப் புகழ்ந்தும் பாடியுள்ளார். இவ்வாறு வைணவப் பண்ணையைச் செழிக்கச் செய்த முதல்வராகத் திகழ் கின்றார்.

இவர் முதலாழ்வார்கள் வரிசைக்கு அடுத்து நான்காவ தாகக் கருதப்படுகின்றார். திருமாலிடமே இவர் மனம் ஆழங்கால் பட்டிருந்தமையால் 'ஆழ்வார்' என்ற தலைச்சிறந்த நாமத்தோடு சேர்த்துத் 'திருமழிசையாழ்வார்' என்று ஆழ்வார்கள் வரிசையில் இடம்பெறச் செய்கின்றனர்.

9. **அகவாழ்வில் தத்துவம்:** திருமழிசையார் அகவாழ்வும் வைணவத் தத்துவப்படி அமைந்திருப்பது தெளிவு. 'திருமந்திரம்' 'துவயம்', 'சரம சுலோகம்' என்ற வைணவ மந்திரங்கள் மூன்று என்பதை அறிவோம். இவர் குழவியாய் இருந்தபோது 'துவயம்', முறைப்படி பெரிய பிராட்டியே திருஞான முலைப்பாலை அருந்தச் செய்து பேர்பெற்றவர். எம்பெருமானை (திருமந்திரத்தை) முதலில் அறிந்து கொண்டபோதும், பேயாழ்வாரால் (குரு)

'**திருமந்திரம்**' முழுமையும் உபதேசிக்கப் பெற்ற பேறு பெற்றவர். இறுதியில் தமது பிரபந்தங்களில் திருமாலிடம் சரண்புகுந்து அருளிச்செயல்களில் '**சரம சுலோகத்தை**' கடைப்பிடித்து இறைவனை அடைந்தவர். இவரது அகவாழ்வு மட்டும் ஏனைய ஆழ்வார்களிடமிருந்து மாறுபட்டு வைணவ தத்துவத்தின்படி அமைந்திருப்பது சிறப்புடையதாகத் திகழ்கிறது.

10. **புகுந்து நோக்கிய சமயங்கள் :** திருமழிசை யாழ்வார் தம் தந்தையின் ஆசியும், எம்பெருமான் - பிராட்டி அருள் இருந்தமையால் '**கூற்றனைத்தூறும் அறிவு**' என்ற திருவாக்கின்படி அறிவில் சிறந்து விளங்கினார்.' பல பயிற்சி கள் கைவரப் பெற்றுக் கலையறிவு நிரம்பப் பெற்றவர் இவர். 'கலை நிரம்பிய முழுமதி' யெனப் பொலிவு பெற்று விளங்கினர்.

> கற்க கசடறக் கற்பவை கற்றபின்
> நிற்க அதற்குத் தக (391)

வள்ளுவர் கூறிய வாக்கு, கல்வி அறிவு மூலம் ஞானத்தினாலும் சிறப்புப் பெற்று, அறிவானது 'கடல்மடை திறந்தாற் போல' விளங்கியது. இங்ஙனம் தக்க அறிவுப் பயிற்சியும், கைவரப் பெற்றதோடு அதன்படி ஐம்புலன்களை அடக்கி யோகப் பயிற்சி புரிந்தார். பின் அஷ்டாங்க யோகத்தை மேற்கொள்ள வேண்டு மென்று தீர்மானித்தார். அத்தியயனத்திற்குரிய பரம்பொருளை அடையக் கருதி, எல்லாப் பொருள்களிலும் தலைமையான பரத்துவம் உடைய பொருள் எதுவோ ? என ஆராய விரும்பி,

> அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு (1)

என்றவாறு, அகரத்திற்கு முதல்வனான ஆதிப் பரம்பொருள் யார்? என்பதை நன்கு அறிந்துகொண்ட பிறகே, அப்பொருளை யோகத்தின் மூலம் தியானிக்க முடியும் என்று எண்ணினார். அதற்குரிய வழி அப்பொருளை ஆராய்வதே என்று முனைந்தார். "**பிணங்குஞ் சமயம் பல பல**" வாயிருக்கக் கண்டு சமயந் தோறும் நுழைந்து பரம்பொருளைத் தீர ஆராய்ந்தார்.

ஒவ்வொரு மதத்திலும் நுழைந்து அம்மத நூல்களை ஆராய்ந்து தேர்ந்து, பின்பு அக்கொள்கையில் சில வேறுபாடுகளைக் கண்டு அதனை விட்டு வேறு ஒரு மதத்தில் இறங்குவார். இவ்வாறு ஆராயப்பட்ட சமயங்களாவன ;

(1) **சமணம்** (ஜைனம்), (2) **சாக்கியம்** (பௌத்தம்), (3) **மாயாவாதம்**, (4) **சைவம்**.[53]

பல சமயங்களைப் பின்பற்றி இறுதியில் சைவ சமயத்தில் நுழைந்து 'சிவவாக்கியராக' இருந்து 'சிவவாக்கியம்' என்ற நூலையும் செய்தார். இவ்வாறு சுமார் ஆயிரம் ஆண்டுகள் பல சமயங்களைப் பரிசோதித்தார்.

(5) **வைணவம்** - மயிலையில் பேயாழ்வாரால் திருத்திப்பணிக் கொண்ட பிறகு, உலகப் பரம்பொருளை அறிந்துக் கொண்டு, வைணவர் ஆனார். இறுதிவரை தீவிர ஸ்ரீ வைணவராகவே திகழ்ந்தார்.

**மயிலையில் சித்தர்** திருமழிசை ஆழ்வார் கல்வித் தேர்ச்சியாலும், சமயத் தேர்ச்சியாலும், தருக்க வாதங்கள் செய்து தமது அறிவைக் கூர்மையாகத் தீட்டி வைத்திருந்தார். 'உறையிலிடாத கத்திபோல்' தமது வாதங்களைப் பலரிடம் கூறி தருக்கவாதிகளை வென்று வந்தார். இங்ஙனம் திக்கு விஜயம் செய்து கொண்டு வரும்போது, திருமயிலை அருகில் வந்தார். இம்மயிலையானது தனதானியங்கள், மலர்கள், மற்றும் கனிகளால் வளமை பெற்று, அந் நாளில் மாடமாளிகைகள், கூடகோபுரங்களுடன் விளங்கியது. இந் நகரம் பல்வேறு சமயங்களுக்கு உறைவிடமாகவும், தமிழ் நாகரிகத் தின் வளர்ச்சிப் பண்ணையாகவும் திகழ்ந்தன. பல்வேறு அறிஞர்கள் குழுமி வாதப்போர்கள் நடத்தும் ஒரு சமய நிலைக்களமாகவும் இருந்தது. இம்மயிலையே வாதம் புரிய ஏற்ற இடம் என்று திருமழிசையாழ்வார் அங்கு சில நாட்கள் தங்கினார். அப்பொழுது சிவனை நினைத்துத் தியானம் செய்துகொண்டு நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தார்.

**11. பேயாழ்வார் தொடர்பு :** சித்தராகிய திருமழிசையார் திருமயிலையில் மௌனவிரதம் மேற்கொண்டிருந்தார். இவரைப் பற்றி, ஒரு மகாயோகி, சித்தர், தத்துவமேதை என்றெல்லாம் கேள்விப்பட்ட பேயாழ்வார் 'இப்படிப்பட்டவரைத்தான் திருமால் பக்தராகச் செய்ய வேண்டுமென்று' திருவுள்ளம் கொண்டார் என்று குருபரம்பரா பிரபாவம் நுவலுகிறது. திருமழிசையாருக்கு உண்மைப் பரம்பொருள் யார்? என்பதை உணர்த்தவும்,

---

53 சமணம், பௌத்தம் - புறச்சமயங்கள்; (பாஹ்ய மதம்) மாயாவாதம், அத்வைதம்; சைவம் - வைதிகச் சமயம் வேதத்தை அடிப்படையகாக் கொண்டது (குத்ருஷ்டி மதம்)

அப்பொருளோடு இரண்டறக் கலக்கும் ஆன்ம அநுபவத்தைப் போதிக்கவும் எண்ணம் கொண்டார். திருமழிசையார் மௌனவிரதம் மேற்கொண்டிருந்ததால் நேரிடையாகச் சென்று பேச முடியாது எனவே அவருடைய பார்வை தம் பக்கம் திருப்ப அங்கு ஓர் குடிலை அமைத்து, 'திருநந்தவன கைங்கரியத்தின்' மூலம் தம்முடன் அவர் தொடர்புகொள்ளும்படியான செயலில் ஈடுபட்டார்.

**தத்துவ நந்தவன அருளியல் செய்கை :** பேயாழ்வார் தமது திருநெற்றியில் திருமண்காப்பும் இரு புயங்களில் சங்கு சக்கரக் குறிகளையும் அணிந்துக்கொண்டு, மார்பில் துளசி, தாமரை மாலைகளை அணிந்துக்கொண்டு 'இன்றே கழல் கண்டேன்' (மூன். திருவந். 2) என்ற பாசுரத்தைப் பாடியபடி, நந்தவனக் கைங்கரியத்தில் ஈடுபட்டார். முன்பே திருமழிசையாருக்கு வரும் வழியில் ஒரு பாகவதரை அனுப்பி, அவர் வாக்கால் 'ஒருவனை நோக்கும் உணர்வு' (முதல் திருவந். 67) பரம்பொருளை உணர்த்தியும் உணராதவரைக் கண்டு, தானே இவரைத் திருத்த வேண்டும் என்று நினைத்தார். உலகப் பரம்பொருளை யார் என்று சுட்டிக்காட்டி வைணவ பக்தராக மாற்றிடவும், அவர் இதுவரை செய்த செய்கையை எடுத்துக் காட்டவும் விபரீதச் செயல்களில் ஈடுபட்டார் பேயாழ்வார்.

திருமழிசையாழ்வார் தம்மிடம் வரும்படி, அவர் பார்வை படும்படியாக தத்துவ உட்பொருள் அமைய நந்தவனத்திலுள்ள பல செடிகளையும், திருத்துழாய்ச் செடிகளையும் பிடுங்கித் தலைகீழாக நட்டும், பல நூறு துவாரங்களையுடைய ஒரு மண் குடத்தையும் அறுந்த தாம்பையும் கொண்டு செடிகளுக்கு நீர் வார்க்கத் தலைப்பட்டார். அப்போது திருமழிசையார் அவ்வழியாக வந்தபோது 'காந்தமானது இரும்பைக் கவர்வது போல' பேயாழ்வார் திருமுகமும், செய்கையும் திருமழிசையாரை ஈர்த்தன. கண்டவர் நகையாடுவதற்குறிய இச்செயலைக்கண்டு சித்தர் கைகொட்டி நகைத்தார். பேயாழ்வார் இருக்கும் இடத்திற்குத் தாமே சென்று, "தாங்கள் செய்யும் செயலால் செடிகளுக்கு நீர் சென்று சேரவில்லையே ? இப்படி செடிகளைத் தலைகீழாக நட்டும், இல்லிக் குடத்தைக் கொண்டும் நீர் வார்க்கின்றீர் ; நீர் பித்தரோ ? பேயரோ ?" என்று வினாவுகிறார். தம்முடன் வந்த சீடருக்கும் இச்செயலைச் சுட்டிக் காட்டுகிறார்.

சித்தர் சிரித்தபடி அவர் செய்யும் விபரீதச் செய்கையைச் சுட்டிக்காட்டவும், பேயாழ்வார் 'இதன் உட்பொருளை உனக்கு உணர்த்துகிறேன்' என்று முற்பட்டார்.

**தத்துவ நந்தவனக் கைங்கரியத்தின் உட்பொருள்:**

**வேர்நி கர்த்ததால் மேல தாம்பொருள்**
**வேர்நி லைத்தலாற் செடிகள் மேலெழும்**
**வேர்நி லைத்திடு மிடத்து வேறெவை**
**நேர்நி னைத்தலும் நேர்த லாகுமோ ?**[54]

என்றபடி அருளிச்செய்து விளக்க முற்பட்டார்.

(1) அறுந்து முடியிட்ட கயிறு, நீர் மதம் விட்டு மதம் மாறும் நிலையினைக் குறித்தது.

(2) இல்லிக் குடத்துப் பல துளைகள் இட்டது, நீர் பல மதங்களில் சென்று பிரவேசித்து, நிலையில்லாமல் இருப்பதைக் குறிக்கும்.

(3) குடத்தில் இட்ட நீர் தங்காது கழிதலைப்போல நீரும் எம்மதத்திலும், எக்கொள்கையிலும் நிலையில்லாமல் நீங்குதலைக் குறித்து நின்றது

(4) செடிகளைத் தலைகீழாக நட்டமையால் எது உலகத்துக்கு முதற்பொருளோ அதனை அறிந்து கொள்ளாமல் முதற்பொருள் அல்லாதவற்றை யெல்லாம் முதற்பொருள் என்று எண்ணி மயங்கி வாதிடும் உம்முடைய அஞ்ஞான நிலையைக் குறிப்பதாகும்.

(5) "செடிகளைத் தலைகீழாக நட்டமையின் உள்தத்துவம் **உலகிற்கு** ஆதிப் பொருளாக, அடி வேராக இருப்பது **ஸ்ரீமந் நாராயணனே!** என்று காட்டவே வேரை மேலாக வைத்துக் **காட்டினேன்.** இம்மூல தத்துவத்தை மறந்து நீர், கிளைகளும் இலைகளுமாக இருக்கும் தத்துவமற்ற மற்ற பிற மதங்களை வணங்குதலை அடியில் வைத்துச் சுட்டினேன்" என்று தத்துவப் பொருள் பொதிந்த நந்தவனச் செயலை எடுத்தியம்பினார்.

**தத்துவ வாதங்களின் மோதல்:** "சமயங்கள்தோறும் நுழைந்து நுழைந்து ஒன்றிலும் நிலை கொள்ளாத நெஞ்சு உடையவராய், நம்பிக்கையின்றி, உம்மைச் சேர்ந்தவர்கட்கெல்லாம் இரட்சகர் என்று விருது கூறிப் பொழுது போக்காகக் கொண்டும், பலரிடம் வாதிட்டும் எத்தனையோ நெஞ்சங்களைப் புண்படும்படி செய்தும் உலகத்தைச் சுற்றி வாணாளை

54 ஆழ்வார்கள் வரலாறு, ப. 43

வீணாளாகப் போக்கி வருகின்றீரே! நீரே உன்மத்தர்" என்று கூறி அவருடைய செயலை எடுத்துக்காட்டவே தாம் இப்படிச் செய்ததாக மறுமொழி பகர்கின்றார்.

பின்னர் திருமழிசையாரும் பேயாழ்வாரும் தருக்க வரதத்தில் இறங்கினார்கள். திருமழிசையார் சிவப்பெருமானைக் காட்டிலும் பரத்துவமுடைய தேவன் வேறு இல்லை என்று சில பாடல்களைக் எடுத்துக் காட்டினார். பதிலுக்குப் பேயாழ்வாரும் சில பாசுரங்களை எடுத்துக் காட்டிப் பரம்பொருளை விளக்கினார். மேலும், சத்துவ குணத்தை உடையவர் - திருமால் என்றும், இராசச குணத்தை உடையவர் - நான்முகன் என்றும், தாமச குணத்தை உடையவர் - சிவன் என்றும் மூன்று குணங்களையுடைய பொருள்களை எடுத்துக் காட்டி, இம்மூவரில் சத்துவ குணம் உடைய பரம்பொருளே சிறந்தது என விளக்கி, அப்பரம்பொருள் திருவிக்கிரமாவதாரத்தில் மேலுலகத்தை அளந்தபோது அவருடைய திருவடிகளை நான்முகன் தன் கமண்டல தீர்த்தத்தால் விளக்கியதும், பெருக்காறாய் இழிந்து வடிந்த அந்தத் திருப்பாத தீர்த்தத்தைச் சிவன் தன் சடைமுடியில் தாங்கிக் கொண்டதையும் எடுத்துக்காட்டி, " இப்படிச் சாத்திரங் களில் அறுதியிட்டிருப்பதைப் பார்த்தும், தெரியாமல் இப்படி வாய் விட்டுப் பேசவந்த உமக்குப் பரத்துவ நிலையிலுள்ள பொருளை விளக்குவேன் " என்று சிவனுக்கும், திருமாலுக்கும் உள்ள பல வேறுபாடுகளைச் சுட்டியும், திருமாலின் சிறப்புத் தன்மையை எடுத் தியம்பியும், " திருமாலே பரத்துவ நிலையில் இருப்பவன், அவன் ஒருவனே ஆதிபூதனாக இருப்பவன், அவனே பரத்துவம் கொடுப்பவன் " என்று விளக்கி முடித்து " இதனை நீரே உமது யோக வலிமையால் கண்டு அறுதியிட்டு உண்மை பொருள் யார் என்பதை உணர்ந்து கொள்வீர் " என்று கூறி வாதத்தை முடித்தார். திருமழிசையார் இதுவரை பலரை வாதில் வென்று வந்தவர். ஆனால் பேயாழ்வாரை வாதில் வெல்ல முடியவில்லை. மாறாக மனமாற்றம் பெற்றார். தமது ஆராய்ச்சியின் விளை வாகப் நற்பயனையும், முடிவையும் இவரிடம் அடையப் பெற்றோமே அன்று அகமகிழ்ந்து மனத்தெளிவு பெற்றார்.

**பேயாழ்வாரிடம் சரண் அடைதல் :** வைராக்கியமுடைய பேயாழ்வாரின் முக ஒளியும் கண்களும் சித்தரை ஈர்த்தன. தாம் இதுவரை செய்துவந்த வாதங்களும் அவர் விபரீதமான நந்தவனக் கைங்கரியம் போல் அல்லவா அமைந்துவிட்டது? மேலும் பேயாழ்வாரின் வாதக் கருத்துகளால் தம் மனக்குழப்பமும் ஒருவாறு தெளிகின்றது. சித்தர் மனம் மாறி அழுதார்; தொழுதார்.

இங்குத் திருமால் நரசிங்க வடிவெடுத்துத் தூணைப் பிளந்து அதன் நடுவில் அவதரித்து, பிரசன்னமாய்ச் சிரித்தது கண்டு, பிரகலாதன் ஆனந்தத்தால் ஆடிப் பாடித் தொழுதான் என்பதை குறிப்பிக்கும்.

நாடிநான் தருவனென்ற நல்லறி வாளன் நாளும்
தேடிநான் முகனும் காணாச் சேயவன் சிரித்த லோடும்
ஆடினான் அழுதான் பாடிஅரற்றினான் சிரத்திற் செங்கை
சூடினான் தொழுதான்ஓடி யுலகெல்லாம் துகைத்தான் துள்ளி[55]

என்ற கம்பர் கூற்று ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

**12. சிவ வாக்கியர் திருமழிசையாழ்வார் ஆதல் :** பேயாழ்வார் 'பரம்பொருளை யார் ? என்று யோக வலிமையால் நீர் அறிந்துகொள்ளும்' என்று கூறியதும், சிவவாக்கியரும், தமது யோக வலிமையினால் திருமால் உருவமே பரம்பொருளாக இருப்பதைக் கண்டு மனநிறைவு பெற்றதாகக் குருபரம்பரைச் செய்தி அறுதியிடுகிறது.

சிவவாக்கியார் அழுது தொழுது எழுந்த பின்னர், தமது சடை முடியையும், சணப்பனாரால் ஆன அரைஞாணையும், கழுத்திற் பூட்டியிருந்த இலிங்கத்தையும், கையில் வைத்திருந்த செப மாலையையும் விரைவாக நீக்கி மாற்றுச் சீருடை உடுத்திக்கொண்டு பேயாழ்வார் திருவடிகளில் சரண் அடைந்து தம்மைத் திருத்திப் பணிகொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். திருமழிசையார் தம்மைத் திருத்திப்பணிகொள்ளுமாறு வேண்டி நின்றதும் பேயாழ்வார் தமது பாசுரம் ஒன்றை[56] அவருக்கு அருளிச் செய்து ஐயமின்றித் திருமால் பக்கம் திருப்பினார்.

**உலகப் பரம்பொருளைச் சுட்டிக் காட்டல் :** திருமழிசையார் திருந்தித் தம்மை வணங்கியதும் பேயாழ்வார் அவருக்குப் உலகப் பரம்பொருளைச் சுட்டிக்காட்டினார். 'உலகம் முற்றிலும் இறைவனை நாடும், நிலம், நீர், காற்று, தீ, மண் யாவும் நாராயணனின் உடைமை. நாராயணன் எல்லாவற்றிற்கும் அயனமாகத் திகழ்பவன்' என்று கூறினார். மேலும் பரம்பொருளை உணரும் நிலையை,

55 கம்பராம. இரணியவதை, 128
56 மூன். திருவந். 88

உணர்ந்துஉணர்ந்து இழிந்துஅகன்று
உயர்ந்துஉரு வியந்தஇந்நிலைமை
உணர்ந்துஉணர்ந்து உணரிலும் இறைநிலை
உணர்வரிது.[57]

என்று கூறி, 'அவன் அருளாலே அவன் தாள் வணங்க வேண்டும்' என்று எடுத்தியம்பினார். மேலும் அவன் உருவ, அருவப் பொருளாகவும், எங்கும் நிறைந்து இருப்பதால் ''நான் அவனை என்னுள்ளே பக்தி ஞான 'உய்த்துணர்வு' என்ற ஒளி விளக்கேற்றி வைத்து நாடி நாடி அவனை வலைப்படுத்தினேன்.''

(மூன். திருவந். 94)

அப்படி அவன் வலையில் அகப்பட்டதைக் கண்டேன் என்பதைக் ''திருக்கண்டேன், அவனுடைய மேனியும் கண்டேன்; செழுமையுடைய ஒளியுள்ள ஆழியையும் கண்டேன்; புரிசங்கும் கண்டேன்'' (மூன். திருவந். 1) என்று தான் அன்று கண்டுகொண்ட பரம்பொருள் காட்சியைத் திருமழிசையாருக்கு எடுத்தியம்பினார். ''முதற் பொருளை உணர்ந்து உய்வு பெற்று வீடுபெறுதலே ஞானத்தின் பயனாகும். உமக்கு இன்னும் அதிகம் கூற வேண்டியது இல்லை'' என்று முடித்தார்.

இனி தாம் அஞ்சாதிருக்க அருள்புரிய வேண்டும் என்று திருமழிசையார் பேயாழ்வாரிடம் வணங்கி நிற்க, அவருக்கு அஞ்சாதிருக்க அருள் செய்து ''நீர் நாடி வந்த பொருள் கைகூடும்; அப்பரம்பொருளை விரைவில் அடைவீர்'' என்று ஆசி வழங்கினார்.

13. **முதல் குரு - சீடர் பரம்பரை :** திருமழிசையார் தம்மைச் சீடனாக்கிக் கொள்ளுமாறு பேயாரிடம் வணங்கி விண்ணப்பிக்க, அவரும் ஆழ்வார்கள் வரலாற்றில் முதல் குரு-சீடர் பரம்பரை தோற்றுவிக்க இயைந்து திருமழிசையாரைத் தமது சீடராக ஏற்றுக்கொண்டார்.

பேயாழ்வார் தமது சீடனுக்கு, பரம்பொருளைகாணக் வேறு எங்கும் தேடிப்போக வேண்டாம். ஆன்மாநுபவமாக 'உள்ளத்தின் உள்ளே உளன்' என்று தாம் உணர்ந்துகொண்ட வழியை எடுத்துக் கூறி, பரம்பொருளை வணங்கும் முறையையும், அன்பு, பரஞானம், பரபக்தி இவற்றால் மனத்தில் பரம்பொருளைக் காணவும் உணரவும் முடியும் என்று எடுத்தியம்பினார். '' என் இருளைப் போக்கி ஞான

57 திருவாய், 1-3 : 6

பக்தியை ஊட்டி ஆட்கொண்டீர். நீரே எமக்கு ஆசாரியர் ஆனீர்'' என்று வணங்கி நின்றார். இவ்வாறு பரம்பொருளை அடைய வழிகளை அருளியதை 'இவரது சிந்தையே இருளாத சிந்தை' என்று தீர்மானித்த பேயாழ்வாரையே தமக்குக் குருவாகக் கொண்டார்.[58]

**திருமழிசை-பக்திசாரர் விருது பெறுதல்:** திருமழிசையார் தாம் சீடனாகியவுடன் குருவிடம் பணிவிடை செய்தும், இடை யிடையே உரையாடியும் தீராத ஐயப்பாடுகளை எல்லாம் தீர்த்துக் கொண்டார். இவரது பக்தியின் திறம் பட்டமரம் துளிர்த்தது போன்று தழைத்தது. இடைவிடாது திருமாலிடமே பக்தி செய்ய யோகத்தில் அமர்ந்தார். இவரது பக்தி நிலையினைக் கண்டு மகிழ்ந்த பேயாழ் வார் திருமழிசையாருக்கு 'பக்திசாரர்' என்ற புதிய திருநாமம் சூட்டினார்.

**திருமழிசைப்பிரான் வைணவன் ஆதல்:** இவர் பிறவியிலே வைணவனாக இருந்தும், இடையே பல முறைகளைப் பின்பற்றிப் பேயாழ்வாரால் திருத்திப் பணிகொள்ளப் பெற்றார். ''தாங்களே என்னை வலியவந்து ஆட்கொண்டீர், ஞான குருவாக வும் அமைந்தீர்கள்; தாங்களே எமக்குப் 'பஞ்ச சமஸ்காரமும்' செய் தருளவேண்டும்'' என்று வேண்டிட, பேயாழ்வரும் தம் சீடனுக்கு முறைப்படி திருமகள் கேள்வன் அருளால் 'பஞ்ச சமஸ்காரம்'[59] செய்து, துவயம், சரமசுலோகம் போன்ற இரகசியங்களையும் உபதேசித்தருளினர்.

**திருமழிசையார் உள்ளத்தில் இறைவனை காணல்:** 'வேதப்பொருளை மேலிருந்த விளக்காக' இவர் அறிந்துகொண்டது பேயாழ்வாரின் அருளால் 'உள்ளத்தில் உள்ளே உளன்' என்று குரு மொழிந்து காட்டிய பரம்பொருளை இடைவிடா அன்பு ஞான பக்தியால் தமது நெஞ்சத்துள் கண்டு பூரித்துப்போனார். 'வாழும் வகையறிந்தேன் எங்கள் பெருமாள் அடிச் சேரப்பெற்று' (மூன். திருவந். 59) என்ற பேயாழ்வார் பாசுரத்தின்படியும் 'ஆசாரியர் அபிமானமே உத்தாரகம்' என்ற ஸ்ரீவசனபூஷணத்தின்படியும் பேயாழ்வாராகிய குருவின் நிழலில் ஒதுங்கிப் பேறு பெற்றதனால் விரைவில் திருமாலை உள்ளத்தில் கண்டுகொண்டதை, 'வாழும் வகையறிந்தேன்'[60] என்று தெளிந்தார். பின்னர் உள்ளமும்

58. தொண்டர் குலமே தொழுகுலம், ப: 24

59. பஞ்ச சமஸ்காரம் : தாபம், புண்ட்ரம், நாமம், மந்திரம், யாகம் என்ற ஐந்தும் புறச் சுத்தியாக ஆசாரியன் மூலமாகப் பெறுதல்

60. மூன். திருவந். 59

கோல்தேடி யோடும் கொழுந்தேபோல் மால்தேடி ஓடி[61] மகிழ்வு எய்தி நின்றார்.

**யோக நிலையில் அமர்தல் :** திருமழிசையார் உள்ளத்தில் இறைவனைக் கண்ட பின்னர், பரம்பொருளை நேரில் கண்டு தரிசிக்க வேண்டும் என்று யோகநிலையில் அமர முற்பட்டார்.

> சாக்கியம் கற்றோம் சமண் கற்றோம் ; சங்கரனார்
> ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம் — பாக்கியத்தால்
> செங்கட் கரியானைச் சேர்ந்தோம் தீதிலமே
> எங்கட் கரிய தொன்றில்[62]

என்றபடியும்,

> அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்
> சிறியார் சிவப்பட்டார் செப்பில்—வெறியாய
> மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார்
> ஈனவரே யாதலால் இன்று (நான். திருவந். 6)

என்றும் நினைத்துத் தாம் இதர சித்தாந்தங்களைக் கைவிட்டு, ஆதிப்பரம்பொருளைக் காண விழைந்தார். பேயாழ்வார் கூறிய யோக இரகசியங்களைத் தம் மனத்தில் கொண்டு 'இனி யறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குந் தெய்வம்' என்று தாம் நான்முகன் திருவந்தாதிப் (96) பாசுரத்தில் அறுதியிட்டபடி திருவல்லிக்கேணியில் யோகத்தில் அமர்ந்தார்.

திருவல்லிக்கேணி வைணவ பக்தியின் பண்ணையாக அமைகிறது. துளசி காடுகள் நிறைந்து இருந்தமையால் திருவல்லிக்கேணியைப் 'பிருந்தாரண்யம்' என்றும் வழங்குவர். இத் திருவல்லிக்கேணியில் 'கைரவிணிசரசு' என்ற தீர்த்தக்கரையில்

> 'குரவமே கமழும் குளிர்பொழிலூடு
> குயிலொடு மயில்கள்நின் றால
> இரவியின் கதிர்கள் நுழைதல்செய் தறியாத்
> திருவல்லிக் கேணி' [63]

என்ற தலமாகத் திகழ்ந்தது. அந்தக் குளிர்ந்த சோலைகளும், பூக்களும், குயில்களோடு மயில்கள் நின்றாடும் இயற்கை அழகும்,

61 இரண். திருவந். 27
62 தனிப்பாடல்.
63 பெரி. திரு. 2-3:7

கடற்கரையில் அமையப்பெற்றதுமான சூரியனின் கதிர்கள் புகவொண்ணாத அடர்ந்த சோலைகளையுடைய இடத்தில் திருமழிசையார் மனத்தை அடக்கி,

> புன்புல வழியடைத்து அரக்கிலச்சினை செய்து
> நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ
> என்பிலெள்கி நெஞ்சுருகி உள்கனிந் தெழுந்ததோர்
> அன்பில் ... ... ... (திருச். விரு 76)

என்றபடி, யோகத்தில் அமர்ந்தார். இவரது இடைவிடாப் பக்தி நற்பயனை அளித்தது.

14. திருமால் ஆட்கொண்டது : திருமழிசையாரின் பக்திக்குக் கட்டுப்பட்டுத் திருமால் தமது பிராட்டியுடன், புன்முறுவல் செய்தபடி சேவை தந்தார்! இப்படித் தமது அருள் தந்தமையைக் கண்டு உவகை கொண்டு அன்று பேயாழ்வார் கூறிய பரம்பொருளை நேரில் தான் கண்டு கொண்டதைத் தமது பாசுரத்தில் அருளியுள்ளார்.

> பொன்னிசூழ் அரங்கமேய பூவைவண்ண ! மாய!கேள்
> என்னதாவி என்னும்வல்லி வினையினுட் கொழுந்தெழுந்து
> உன்னபாத மென்னநின்ற ஒண்சுடர்க் கொழுமலர்
> மன்னவந்து பூண்டுவாட்ட மின்றிஎங்கும் நின்றதே
> —திருச். விரு. 119

என்று திருமால் காட்சியைக் கண்டு மகிழ்ந்து போற்றுகிறார். மேலும் திருமகள் திருமாலுடன் தமக்கு அருள் செய்தமையைத் தமது பாசுரங்களில் விரிவாக அநுசந்தித்துப் பரவசப்படுகிறார். தமது பக்திக்குக் கட்டுப்பட்டுத் திருமால் என்றும் தமது நெஞ்சில் எழுந்தருளியிருப்பதை,

> தோன்றுசோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்கமாய்
> என்றெனாவி யுள்புகுந்தது என்கொலோ ?எம் ஈசனே !
> —திருச். விரு. 4

என்ற பாசுரத்தால் உள்ளம் உருகிப்பாடி மகிழ்கின்றார். இங்ஙனம் திருவல்லிக்கேணியில் யோக நிலையில் திருமாலைக் கண்டு கொண்டதோடு என்றும் தம் மனத்தில் எழுந்தருளியிருக்கும்படிச் செய்கிறார் திருமழிசையாழ்வார்.

திருமழிசையாழ்வார், 'தம் கையில் வெண்ணெய் வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவது போல' என்ற முதுமொழிப்படி, பார்க்கவர் திருமாலைத் தியானம் செய்து திருமாலை நேரிலே கண்டவர். அப்படிப்பட்டவருக்குத் திருக்குமாரனாக அவதரித்து இயற்கையிலே திருமாலைப்பற்றித் தெரிந்து இருந்தும், பல இடங்களுக்குச் சென்று பரம்பொருளை ஆராய்ந்து பின் பேயாழ்வாரால் பரம்பொருளை அறிந்துக்கொண்டதால் தம் கையிலுள்ள வெண்ணையே (தம் உள்ளத்தில் திருமாலைக் கண்டது) நெய்யாகும் என்று அறிந்துக்கொண்டார்.

**15. பக்தியின் நிலைக்களன்கள்** : பல முரண்பட்ட சமயக் கொள்கையுடன் தாம் சுற்றி வந்து களைத்துப்போன உள்ளத்தை உடைய திருமழிசையார், பேயாழ்வாரின் அருளால் விடாய் தீர்க்கப்பட்டார். பரம்பொருளை நேரில் கண்டுகொண்ட போது முழுவிடாயும் தீர்த்த பெருமை திருவல்லிக்கேணியே என்று மகிழ்ந்து பரவசப்படுகிறார். தமது பக்தியின் நிலைக்களனாக விளங்கிய இத்தலத்தையும் பெருமானையும் மறவாமல் தமது பாசுரத்தில் நினைவு கூர்கின்றார்.

(1) நாராயணன் நான்முகனைப் படைக்க, இவர் சிவனைப் படைக்க, சிவன் நான்முகன் படைப்பால் முதலில் தோன்றிய 'சனகர்' சனந்தர், சனத்குமரர் சனத்சுஜாதர்' என்ற முனிவர் களுக்கு திருமாலே பரம்பொருள் என்பதை உள்ளடக்கியே சின்முத்திரை காட்டி உபதேசம் செய்த '**கல்லாலமரம்**' நிலைக்களன் போன்றும்,

(2) முருகன் பிரணவ மந்திரத்திற்குச் சிவனுக்குப் பொருள் கூறி ஞான உபதேசம் செய்த சுவாமி மலை போன்றும்,

(3) கௌதம புத்தர் ஞானம்பெற்ற '**போதி மரத்தடி**' யைப் போன்றும்,

(4) இராமகிருஷ்ண பரமஹம்சர்-நரேந்திரன் என்ற சுவாமி விவேகானந்தரைக் '**கங்கைக் கரையில்**' மனமாற்றம் அடையச் செய்தது போலவும்,

(5) ஆதிசங்கரர் தமது தாயை மனமாற்றம் செய்ய 'குளத்தில்' தாம் காலைவிட்ட சமயம் முதலை கவ்வியபொழுது ஏற்பட்ட '**குளக்கரை நிலை**' காணுவது போலவும்,

(6) கண்ணன் பாரதப்போரில் அருச்சுனன் போர் செய்ய மறுத்தபோது, அருச்சுனனுக்குக் கீதை உபதேசித்ததைப்போலவும்.

(7) குருட்சேத்திரத்தில் கீதை உபதேசித்த நிலையை நினைவுறுத்தும் பாங்கில் பார்த்தசாரதி எழுந்தருளியிருக்கும் திருவல்லிக்கேணியில் பேயாழ்வார் திருமழிசையாழ்வாரை மன மாற்றம் செய்ததைப் போன்றும்.

(8) ஆழ்வார் தாம் பரம்பொருளை நேரில் கண்டுகொண்ட பக்தியின் நிலைக்களனும் 'திருவல்லிக்கேணியே' ஆகும்.

**16. திருமழிசையாழ்வாரின் தனி - நிலை :** பன்னிரு ஆழ்வார்களில் திருமழிசை ஆழ்வார் தனி நிலையில் நின்று சிறப்புப் பெற்றார்.

(1) திருமழிசை யென்னும் புண்ணியத்தலமே மண்ணுலகில் தனித்த புகழுடன் பல மகிமைகள் பொருந்திய தலம் என்று எம்பெருமானே சுட்டிக் காட்டி அருளும் தனித்தன்மை பொருந்தியது.

(2) நான்முகன் விசுவகர்மாவின் நுணைகொண்டு நிறுத்துக் காட்டிய சிறப்புடைய திருத்தலம்.

(3) பல முனிவர்கள் தவம் செய்த புண்ணியத்தலம் திருமழிசை. இது பார்க்கவருக்குச் சுதர்சனமே புதல்வராக அவதரித்த மகிமை உடையது.

(4) இவ்வாழ்வார் அவதாரம் ஒரு பிறவியிலே இரு பிறவியாக அமைவது.

(5) எந்த ஆழ்வாருக்கும் கிட்டாத அரிய பேறு இவருக்குக் கிடைக்கப்பெற்றது. (குழவிப் பருவத்தில் பெரிய பிராட்டியே உவந்து தம் திருக்கரத்தால் ஞானப்பாலை வழங்கியது.)

(6) பெருமாளும் பிராட்டியும் வாழ்த்தி வரம் தந்தமையால் இவ்வாழ்வார் திருமகளுக்கு இசைந்த பிரானாக இருப்பது தனித்தன்மை.

(7) குழவிப் பருவத்திலே தமக்குப் பாலமுது கொடுத்த கிழத் தம்பதியர்களுக்கு இளமைப் பருவம் அளித்ததோடு அவர்களுக்கு 'மானிடம் பாடாத கணிகண்ணனை' அவதரிக்கச் செய்தது.

(8) இவரது அகவாழ்வில் ஆழ்வார்கள் வரிசையில் முதல் ஆசாரியார் - சீடர் பரம்பரை அமைவது. பேயாழ்வார் - திருமழிசை யாழ்வார், பின்னர் நம்மாழ்வார் - மதுரகவி.

(9) தொண்டர் குலத்துக்கெல்லாம் இவரே முதல்வராகத் திகழ்வது.

(10) திருமாலைத் தவிர மறந்தும் புறந்தொழா மாந்தராக விளங்குவதோடு, திருமால் ஒருவரே என்று ஒரே தெய்வத்தைப் பேசி வீர வைணவராக விளங்கியது.

(11) இவர் பக்தி அநுபவத்தால் உலகமெல்லாவற்றை ஒரு தட்டிலும் தன்னை ஒரு தட்டிலுமாகக் கொண்டு தம் நெஞ்சில் என்றும் பேரன்புடன் பெருமாள் எழுந்தருளியிருப்பது தனிநிலை.

(12) முதலாழ்வார்களைப்போல ஓடித்திரியவில்லை. இருந்த இடத்தில் இறைவனே வலியவந்து இவரை ஆட்கொண்டது.

(13) ஆழ்வார்கள் எல்லோரும் உருகி பாடி இறைவனை வணங்கிய பின்னர்தான், அவர் அருள் தந்துவிட்டு மறைந்து விடுவார். ஆனால் இவர் இடத்தில் என்றும் நித்தியமாக அகத்திலும், புறத்திலும், குடிகொண்டு எழுந்தருளியிருப்பது தனிநிலை.

(14) திருமழிசையார் இறைவனை என்றும் தமது நெஞ்சில் 'துளக்கமில்லா விளக்காய்' ஏற்றி வைத்திருத்தல்.

(15) முதல் மூவரும் புறத்திலே ஒளி விளக்கேற்றிய பின்னரே பரமனைக் கண்டனர்; இவர் தமது அகத்தில் விளக்கேற்றி வைத்து பரமனை நித்தியம் காணுதல்.

(16) ஆழ்வார்கள் இறைவனை வேண்டி உருகிப் பாடிய பின்னரே அவர் ஏதாவது ஓர் உருவத்தில் காட்சியளிப்பார். ஆனால் இவ்வாழ்வார் தம் இதயத்தில் என்றும் 'நின்றும், இருந்தும், கிடந்தும்' ஆகிய திருக்கோலங்களில் இறைவன் இருப்பதைப் பாசுரங்களிலே எடுத்துக் காட்டிப் பேசுதல்.

(17) ஆசாரியர் அபிமான நிழலில் ஒதுங்கி அவர் அருளால் உலகநாதனைக் கண் எதிரே விரைவில் கண்டமை.

(18) ஆழ்வார்கள் அனைவரும் இறைவனிடம் பணிந்து வேண்டிப் பாடி அருளுவார்கள். ஆனால் இவர் பாசுரங்களில் தாமே மார்தட்டிப் பேசுவது போலவும், அலர வைப்பது போலவும், இறைவனிடமே வினா எழுப்பி விடையளிப்பது போலவும், சினந்து கூறுவது போலவும், ஆறுதல் அடைவது போலவும், விண்ணப்பிப்பது போலவும், வேண்டி நிற்பது போலவும், சரணாகதி அடைவது போலவும் பல நிலைகளில் பாடி அருள்கிறார்.

(19) அர்ச்சாவதார சயன கோலப் பெருமான்களிடம் அதிக ஈடுபாடு உடையவர். எனவே சயனக் கோல பெருமான்கள் பலரைச் சேவித்தும் தமது பாசுரங்களில் மங்களாசாசனம் செய்தல்.

(20) இயக்க சக்தியுடைய அர்ச்சாவதார பெருமான்களிடமே வேண்டுகோள் விடுத்து இயங்கும் சக்தியாக மாற்றி தம் பின்னே வரச்செய்வது (காஞ்சி—சொன்ன வண்ணம் செய்த பெருமாள் ; திருக்குடந்தையில்-ஆராவமுதன்) தனி நிலையாகும்.

(21) இவர் பல அற்புதங்கள் செய்து செயல் புரிந்து ஏற்றம் பெறுவது.

(22) இவர் அகவாழ்வில் தாமே சீடராகவும், பின் ஆசாரியராகவும், அமைதல். (பேயாழ்வார்-திருமழிசையாழ்வார் ; திருமழிசையாழ்வார்-கணிகண்ணர்.)

(23) இவர் பௌத்தம், சமணம், சாக்கியம், மாயாவாதம், சித்தர், சைவம், வைணவம் என்ற சமயங்களுக்கு உறைவிடமாகத் திகழ்தல்.

(24) பன்மொழிப் புலவர். சித்து வேலைகளில் வல்லவர். வாதிட்டு எதிரில் இருப்பவரை வெல்லுவதில் முதன்மையுடையவர். தருக்க நிபுணர் ; தத்துவ சாத்திரி ; யோக நிபுணர் ; கணித அடிப்படையில் தத்துவத்தைப் புகுத்துவதில் வல்லவர். எட்டுவித யோகங்களைச் செய்வதில் சிறப்புற்றவர்.

(25) சமய ஆராய்ச்சியில் ஆயிரம் ஆண்டுகள் பயிற்சி பெற்றவர். தாமே பல மதங்களை ஆராய்ந்து 'வைணவ மதமே சிறந்தது, பரம்பொருள் நாராயணனே' என்ற முடிவினை நிறுவியவர்.

(26) தமது காலத்தில் சமயக் காழ்ப்பு இருந்தபோதிலும் அஞ்சா நெஞ்சத்துடன் வைணவத்தில் பரத்துவத்தை எடுத்துக் காட்டி நிலை நிறுத்தியவர்.

(27) இவர் பாசுரங்களில் வெளிப்படையாகப் பிற சமய தெய்வங்களைக் குறைத்துக் கூறுவதும், அலட்சியப்படுத்துவதும் காணலாம்.

(28) ஆராய்ச்சி இன்று தோன்றியது அல்ல ; திருமழிசையார் தமது காலத்திலே தானே முதலில் ஆராய்ச்சியில் ஈடுபட்டு ஆராய்ச்சியின் நிலைக்களனாக இருத்தல்.

(29) இவரது பக்தியைக் கண்டு எம்பெருமானே உவந்து 'பக்திசாரர்' என்ற திருநாமத்தைச் சூட்டியது ; பதிலுக்குத் தாமும் பெருமானுக்குத் திருநாமத்தைச் சூட்டியது இவர் வாழ்வில் மட்டும் காணப்படுகிறது.

(30) பிற தெய்வமான சிவனே இவருடைய அசையா பக்தியைக் கண்டு 'பக்திசாரர்' என்ற விருதை வழங்கியது; குருவின் மூலமும் 'பக்திசாரர்' என்ற திருநாமத்தை பெறுவதும் சிறப்புடையது.

(31) இவர் நாராயண பரத்துவத்தில் அதிகம் கண்ணுடையவர். எனவே, முதல் ஆழ்வார்கள் வரிசையில் வைணவ மகிமையைப் பாசுரங்களில் விரிவாக எடுத்துக் காட்டுவதில் முதல்வராகத் திகழ்தல்.

(32) பகவானையே தமது அன்பு - பக்திக் கயிற்றால் கட்டிய சிறப்புடையவர்.

(33) இவர் ஸ்ரீகிருஷ்ணா அவதார நிகழ்ச்சிகள் பலவற்றை எடுத்துக் காட்டியிருந்தாலும் இராமவதாரத்தில் அதிக ஈடுபாடு உடையவர் ; எனவே பல இராமாயணக் குறிப்புகள் இவர் பாசுரங்களில் காணப்படுகின்றன. ஆழ்வார்களிடம் காணவியலாத 'கிட்கிந்தா காண்டச் செய்தி' இவர் பாசுரங்களில் தான் முதலில் எதிரொலிக்கிறது.

(34) வால்மீகி கூறாத, கூனி முதுகின்மீது உண்டை எய்த இராமனின் செயலை இவர்தாம் முதலில் குறிப்பிடுகிறார். சேது கட்டிய செய்தியையும் அழகாகக் கோடிட்டுக் கூறுகிறார்.

(35) தசாவதாரங்களைச் சில இடங்களில் வெளிப்படையாகவும் சில இடங்களில் உட்பொருளாகவும் கூறுதல்.

(36) இவர் புராண இதிகாசச்செய்திகளைப் பல பாசுரங்களில் குறிப்பிடுகின்றார். (எ.-டு.) மார்க்கண்டேயன் கதை, கல்லால மரத்தடியில் சிவன் நால்வர்க்கு உபதேசித்தது, சந்திரனின் இடரைத் தீர்த்தது, பாணாசூரன் வரலாறு, நான்முகன் திருமால் திருவடியை விளக்கியது போன்ற நிகழ்ச்சிகள்.

(37) 'சந்த விருத்தம்' என்ற இலக்கியத்திற்கு வித்திட்டவர்.

(38) தமது அகவாழ்வு வைணவ இரகசியப்படி அமைதல்.

(39) கீதையின் சரமசுலோகத்தைத் தமது பாசுரங்களில் எடுத்துக்காட்டி வலியுறுத்துதல்.

(40) இறைவனிடம் பக்தி செய்ய அன்பும் மற்றும் பல வழி முறைகளையும் (வாசிப்பது, கேட்பது, பூசிப்பது, வணங்குவது) எடுத்துக்காட்டுதல்.

(41) தமது பாசுரங்களில் அருளிய அரிய பதங்களைப் அடுத்து வந்த வைணவ ஆசாரியார்கள் தமது நூல்களில் மேற்கோளாக எடுத்தாண்டிருத்தல்.

(42) காஞ்சியில் வயோதிகப் பெண்ணிற்கு இளமை வழங்கியமை ; பல்லவ அரசனைத் திருத்தி ஆட்கொண்டமை.

(43) திருக்குடந்தையின் அருகில் பெரும்புலியூரில் அருள் செய்தல்.

(44) பெரும்புலியூர் கிராமத்திற்கு ஆழ்வார் சென்றபோது இவரது பக்தியின் திறத்தைக் கண்டு இவர் போகும் திசை தோறும் ஊரிலுள்ள அர்ச்சாவதார பெருமான்களும் சந்நிதியிலிருந்தபடியே அத்திசை நோக்கி இவரைப் பார்த்தல்.

(45) யாக சாலையில் சடங்கர்களை அடக்கி, அவர்களுக்குத் தன் மார்பைத் தட்டி இதயத்தில் உள்ள பள்ளிக்கொண்ட பெருமானைப் புறம் பொசியுமாறு காட்டிய திறம் இவரிடம் காணலாம்.

(46) தமக்கு வைகுந்தம் கேட்டும், மற்ற உயிர்களுக்கும் வைகுந்தம் தர வேண்டுதல்.

(47) ஆழ்வார் உண்டு எஞ்சிய அமுதினையே ஆராவமுதன் ஏற்று அருந்தியது இவ்வாழ்வாரிடம் காணலாம்.

(48) தமது பிரபந்தங்கள் (இரு) சதுர்வேதமாக வையகத்திற்கு வழங்கிய பெருமை உடையவர்.

(49) இவர் காலத்தில் தானே முதலாழ்வார்களைச் சந்தித்து மகிழ்ந்து, ஒரே கால கட்டத்தில் முதல் நான்கு ஆழ்வார்கள் பரம்பரை ஒன்று கூடுவது. (திருமாலின் திருப்படைக் கருவிகள் நான்கும் ஒன்றுடன் ஒன்று சந்திப்பது).

(50) எந்த ஆழ்வாரும் செய்யாத புது முறையைக் கையாண்டவர் ; தமது இரு பிரபந்தங்களையும் தானே முன் நின்று 'புனல்வாதம்' செய்து வென்று உலகிற்கு வழங்கியமை.

(51) இவர் நாலாயிரத்து எழுநூறு வருடங்கள் வாழ்ந்ததாக குருபரம்புரை நவில்கிறது.

இவ்வாறு பல நிலைகளில் இவரது அவதாரத்தில் தனி நிலைகள் அமைந்துள்ளன.

**17. போதித்த கருத்துக்கள் :** திருமழிசையாழ்வாருக்கு இளங்குழவிப் பருவத்திலேயே எம்பெருமானும் பிராட்டியும் 'உயர்வற மதிநலம்' என்று ஆசி வழங்கியதால், பின்னால் தமது 'மயர்வற மதிநலத்தாலும்', பல சமயங்களில் நுழைந்து வந்த அநுபவத்தாலும், குருவின் அருளால் பெற்ற ஆன்ம இரகசியங்களையும் கொண்டு தாம் பரம்பொருளை எளிதில் அடைந்ததுபோல் தமக்குப் பின்னால் வருபவர்களும் தம்முடைய அநுபவமும், அருளையும் பெறவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடனும் தம்முடைய கருத்துக்களை மக்களுக்குப் போதிக்கிறார்.

(1) தேவன் ஒருவனே என்று உரைக்கின்றார்.

(2) உண்மைப் பரம்பொருளோடு இரண்டற கலக்கும் அநுபவத்தையே முதலில் போதிக்கிறார்.

(3) நாராயணனே பரம்பொருள் என்று தமது ஆராய்ச்சி மூலம் அறுதியிடுகிறார்.

(4) குருவுக்குத் தொண்டு புரிவது மிக அவசியம் என்பதை வலியுறுத்துகின்றார்.

(5) குருவின் அருள் பெற்றால் விரைவில் பரம்பொருளை அடையலாம்; எனவே ஆசாரியார் அபிமானத்தில் ஒதுங்கி வாழ வேண்டும் என்புதை உணர்த்துதல்.

(6) மனம் ஒன்றுதல் பக்தியின் முதல் நிலை; எளிய அன்பு பக்தியே மேற்கொள்ள வேண்டுமென்கிறார்.

(7) இடைவிடாத எளிய அன்பு பக்தி செய்தால் இறைவன் தாமே தம்மிடம் வலிய வந்து ஆட்கொள்வார் என்பது.

(8) 'அது நன்று! இது தீது!' என்று ஐயப்படாமல் தேன் நிறைந்த துழாய் மாலையணிந்த, இறைவனின் பொன் கழலைத் தொழுதல்; தொழுதால் முழு வினைகள் கழலும் என்கிறார்.

(9) 'உய்த்துணர்வு விளக்கேற்றி' வைத்து இறைவனை நாடி நாடி வலைப்படுத்த வேண்டும் என்புதை போதிக்கிறார்.

(10) வைணவ பாகவதர்களை இறைவனுக்கு மேலாகக் கருதி அவர்களிடம் மதித்து நடக்க வேண்டும் என்பதை உணர்த்துதல்.

(11) பக்தனுக்கும் இறைவனுக்கும் வேறுபாடில்லை. எனவே பக்தனைத் தொழுதால் இறைவன் நம்மை எளிதில் ஆட்கொள்வார்.

(12) பிறருடைய குற்றங்களை அகற்றி நற்குணங்களையே பாராட்ட வேண்டும் என்பது.

(13) ஒருவர் தமக்குத் துன்பம் செய்தாலும், இழிந்து ஒதுக்கினாலும் அவர்களுக்கு உதவி புரியவேண்டும் என்கிறார்.

(14) "நாம் இவ்வுலகில் உள்ள ஒரு மனிதன் என்பதைவிட ஓர் உயிர் இனமாக இருக்கப் பெருமைப்படுங்கள். ஓர் உயிரினம்

என்பதைவிட இவ்வுலகில் உள்ள ஒரு பொருள் என்பதில் பெருமை படுங்கள்'' அப்பொருள் இறைவனுக்கே உடைமை என்று (தமது அநுபவத்தை வைத்து) கூறுவார்.

(15) 'எல்லாத் துன்பங்களையும், இன்பங்களையும் இறைவனிடமே விட்டுவிடுங்கள்' என்பது.

(16) மனதைப் பரிசுத்தமாக வைத்திருந்தால் மெய்ம்மையைக் காணலாம் என்று அறிவுறுத்துவது.

(17) பரம்பொருள் ஒன்றே! அப்பொருளிலிருந்து மற்ற தெய்வங்கள், பிற பொருள்கள் தோன்றி அவனுள்ளே ஒடுங்குகின்றன என்பதைக் காட்டுதல்.

(18) இறைவன் ஒரு பொருளாக எங்கும் நிறைந்து நாரணனாகி விளங்குகிறான் என்பதைக் கூறுதல்.

(19) தொண்டர் குலத்துக்கு மதிப்பு அளிக்குமாறுவேண்டுதல்; அவர்களைப்பற்றி இழிசொல் வேண்டா எனல்.

(20) பரம்பொருளை அடைய எளிய வழி சரணாகதியே என்று கூறி அவன் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றுமாறு ஆற்றுப்படுத்துதல்.

(21) எத்தொழிலைச்செய்துக்கொண்டிருந்தாலும், மனத்தால் அவனை நினைத்து வணங்குவதும், எந்த நேரத்திலும் இறைவனை வணங்குவதிலும் தவறாதிருத்தலை வலுவுறுத்தல்.

(22) ''பரம்பொருளை நினைத்து இருப்பவருக்கு யமபயம் ஏற்படாது. உயிர் போகும் நேரத்தில் யம தூதுவர்கள் வந்தாலும் நீங்கள் செய்த இறை பக்தி அவர்களை விரட்டிவிட்டு உங்கள் ஆன்மாவைப் பரம்பொருளிடம் கொண்டு சேர்த்து விடும்'' என்பது.

(23) எதிலும் ஊக்கமும், துணிவும், உறுதியும், முயற்சியும் வேண்டும் எனல்.

(24) 'உங்களால் முடிந்தவரை மற்றவர்களுக்கு உதவி புரியுங்கள்' என்று போதிக்கின்றார்.

(25) 'திருமந்திரத்தில் உள்ள இறைவனின் எட்டெழுத்தை (ஸ்ரீமந் நாராயணாய) இடைவிடாது உச்சரியுங்கள்' என்கிறார்.

(26) முதலில் துவய நெறியைக் கடைப்பிடித்தால், திருமந்திரம், சரமசுலோகம் என்ற மற்ற இரண்டும் தானே தேடி வந்து ஆட்கொள்ளும் என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

(27) மாதா, பிதா, குரு இவர்களின் சொற்களை கேட்டு அவர்களுக்கு தொண்டு செய்யுங்கள். இதனால் இறைவன் நம்மை எளிதில் ஆட்கொள்வான் என்பதை வலியுறுத்துகிறார்.

(28) 'பக்தி பரப்பும் கூட்டத்தையோ, வைணவத் தொண்டர்களையோ அவமதிக்காதீர்கள். அவர்களுடன் சேர முடியாவிட்டாலும் முடிந்தளவு உதவி புரிந்து ஒழுகுமாறு' கூறல்.

(29) சமூகத்தில் உள்ள சாதி செருக்கை அடியோடு களைந்தெறியுமாறு அறிவுறுத்துதல்.

(30) இளமைப் பருவத்திலேயே பக்தியில் ஈடுபடவேண்டும்.

(31) பரம்பொருளை வழிபட எளிய முறைகளைக் கூறுகிறார்.

| | | | |
|---|---|---|---|
| இறை நாமத்தை | — | வாசிப்பது | (பாசுரம், பாடல் வாயால் பாடி) |
| ,, | — | கேட்பது | (இறை சரித்திரத்தைக் காதால் கேட்பது) |
| இறைவனை | — | வணங்குவது | (தலையால் அவனை வணங்குவது) |
| ,, | — | வழிப்படுவது | (இடைவிடாது பூசிப்பது) |
| ,, | — | பூசிப்பது | (கையால் பூக்கொண்டு அர்ச்சிப்பது) |
| இறை நாமத்தை | — | அநுசந்திப்பது | (ஒழுக்கம் கடைப்பிடித்து) |
| ,, | — | எழுதுதல் | (இறை நாமத்தை எழுதுதல்) |

இவைபோன்ற வகையில் நற்பொழுதைப் போக்குமாறு நல்ல வழிகளை எடுத்துக் காட்டுதல்.

(32) மனதைச் சிதற விடாமல், மனச் சஞ்சலமின்றி ஒருமுகத் தியானம் அவசியம் எனல்.

(33) பரம்பொருளின் திருவடிகளையே (நாராயணனே) அன்றி மற்றொன்றைப் பற்றாதீர்கள் என்று அறுதியிடுகிறார்.

(34) ''இறைவன் உங்களுக்கு வரம்தரக் குறிப்புக்கொண்டால் நீங்கள் இறைவரிடம் 'நின் பாத பங்கயம் நிரந்தரம் நினைப்பதாக' —அருள் செய்யுமாறு பணிந்து நில்லுங்கள்'' என்று வழிகாட்டுவது.

(35) பரம்பொருளை வணங்கினால் ஞானமும், செல்வமும் பெருகித் தீவினைகள் அறும். (மன்னுமாலை வாழ்த்தினால் ஞானமொடு, செல்வமும் சிறந்திடும், பறித்தெழுந்த தீவினைகள் பற்றுதல் பான்மையே).

(36) இறைவனிடம் பக்தி செய்ய, புன்புல வழி அடைத்து (இலச்சினை செய்து) நன்புல வழிதிறந்து, ஞானச்சுடரை என்புறுகு நெஞ்சில் ஏற்றி நின்றால் அதனால் ஏற்படும் உள்ளெழுந்த கனிந்த ஓர் அன்பில் இறைவனைக் காணலாம் என ஆற்றுப்படுத்துதல்.

(37) பக்தியைவிடப் பிரபத்தியே 'சரணாகதி), சிறந்தது எனல்.

(38) கல்விச் செருக்கு, சாதிச் செருக்கு, ஞானச் செருக்கு கூடாது என்பதை எடுத்துக்காட்டுதல்.

(39) இறைவனை நினைத்தால் பிறப்பு—இறப்பு நீங்கித் தூய பதமான பரமபதம் அருள்வான் என்பது.

(40) சர்வேசுவரனுடைய திருநாமத்தை மறந்துவிட்டாலும், வணங்காவிட்டாலும் கவலையில்லை. ஆனால் பிற தெய்வங்களைப் பூசிக்காத மனிதர்களைக் கண்டால் வணங்கி அவர்களை மதித்து நடத்துங்கள். இதனால் இவர்கள் பரம்பொருளை எளிதில் அடைவார்கள் என்பதை தெளிவுப்படுத்தல்.

(41) 'இறைவனின்றி நாம் இல்லை என்றும், நம்மையன்றி இறைவன் இல்லை' என்று கருதுங்கள்.

**நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாராயணனே !**
**நீ என்னை அன்றி இலை. (நான். திருவந். 7)**

என்று இறுதியில் இறைவனுடன் ஒன்றும் நிலையை எடுத்துக் காட்டி சேதநர்களுக்குப் பல கருத்துகளைப் பாசுரங்களின் மூலம் போதிக்கிறார் ஆழ்வார்.

**18. ஸ்ரீகிருஷ்ணனுக்கும் — திருமழிசையாழ்வாருக்கும் அவதாரத்தில் உள்ள ஒற்றுமைகள் :** யது குலத்தில் **தேவகி-வசுதேவருக்குக்** கண்ணபெருமான் அவதரித்தார். கம்சன் கொடுமையிலிருந்து கண்ணனைக் காப்பாற்ற வசுதேவரே குழந்தையை ஆயர்பாடியில் **நந்தகோபர்-யசோதை** மாளிகையில் விட்டுவிட அவர்கள் கண்ணனை வளர்ப்பு மகனாக வளர்த்து வந்தார்கள். இங்ஙனம் 'ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒளித்து வளர' என்றபடி இவரது அவதாரம் அமைவதுபோல, திருமழிசையாழ்வார் அவதாரமும் ஒரு பிறவியிலே இரு பிறவிகளாக அமைந்தது. இவ்வாறு கிருஷ்ணனுக்கும்-திருமழிசையாழ்வாருக்கும் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. அவற்றை விவரிப்போம்.

| ஸ்ரீகிருஷ்ணன் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| (1) தேவகி - வசுதேவருக்கு அரச குலத்தில் அவதரித்தது. | கனகாங்கி - பார்க்கவருக்கு அந்தணர் குலத்திலுள்ள மக முனிவருக்கு அவதரித்தது. |
| (2) நந்தகோபர் - யசோதையிடம் இடைக்குலத்தில் வளர்வது. | திருவாளன் - பங்கயச் செல்வியரிடம் தொண்டர் குலத்தில் வளர்வது. |
| (3) பல அருள் செயல்கள் தெய்விகத் தன்மையால் செய்தது. | பல அற்புதங்களைத் தம் தெய்விக பக்தி தன்மையால் செய்தது. |
| (4) துவாபரயுகத்தில் அவதரித்தார், | துவாபரயுகத்தின் கடைசியில் அவதரித்தார். |

| ஸ்ரீகிருஷ்ணன் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| (5) திருமகளை என்றும் தம் திருமார்பில் எழுந்தருளியிருக்கச்செய்து அவளது அருள் பார்வையும், மகிழ்ச்சியும் கொண்டவர். | சிறு குழவியிலே திருமகள் அருள் பார்வையும், மகிழ்ச்சியும் தன்னை ஆட்கொண்டதால் என்றும் திருமகளின் அருள் பார்வையும் மகிழ்ச்சியும் கொண்டவர். |
| (6) நாரதர் துலாக்கோல் கொண்டு கண்ணனை ஒரு தட்டிலும், சத்தியபாமையினுடைய செல்வங்களை ஒரு தட்டிலும் வைத்து நிறுக்க கண்ணன் இருந்த தட்டே தாழ்ந்து ஏற்றம் கண்டது. | நான்முகன் ஞானத் துலாக்கோலால் விசுவகர்மாவைக் கொண்டு திருமழிசையை ஒரு தட்டிலும், பரந்த பூமியை ஒரு தட்டிலும் வைத்து நிறுக்க திருமழிசை இருந்த தட்டே தாழ்ந்து ஏற்றம் பெற்றது. |
| (7) பாண்டவர்கள் வனவாச காலத்தில் துர்வாசர் முதலிய முனிவர்களுடன் திரௌபதியிடம் விருந்துக்கு வர, அப்பொழுது கண்ணன் அவளிடம் இருந்த அட்சய பாத்திரத்தில் எஞ்சியிருந்த ஒரு சோற்றுப் பருக்கையை எடுத்து அமுது செய்து திருப்தி அடைந்தும், துர்வாசர் முதலிய முனிவர்களும் விருந்து உண்டது போன்று திருப்தி அடைந்தனர். | ஆராவமுதனே தனக்கு நிவேத்தனமாகிப் படைத்த திருஅமுதினை ஏற்காமல் தானே அந்தணர்கள் மூலம் திருமழிசையாருக்கு முதலில் அமுது செய்ய வைத்து பெருமாள் திருப்தி அடைந்தார். ஆழ்வார் வைத்து மிஞ்சிய அமுதினைத் தாம் உட்கொண்டு திருப்தி அடைந்தார். |

## இருவர் செயல்களிலும் ஒற்றுமைகள் :

| ஸ்ரீகிருஷ்ணன் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| (1) ஓ அருச்சுனா ! இந்தச் செய்தியில் விருப்பமுடைய உனக்குநல்லது செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் பரோத்க்கிருட்டமான எந்த வாக்கியத்தை நான் சொல்லப் போகிறேனோ அதைக் கேட்பாயா என்று அருள் செய்தார். (கீதை. 10:1) | பக்திசாரர் தன் சீடன் கனிகண்ணனுக்குக் கருணை அருள் செய்தது. |

| ஸ்ரீ கிருஷ்ணன் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| (2) பாணாசூர யுத்தத்தில் சிவனையும், அவருடைய குமாரர்களையும், பிற சிவ கணங்களையும் முதுகு காட்டி ஓடும்படி செய்து, வென்றபின் சிவனால் போற்றப் பெற்றார். | தம்மைச் சோதிக்க வந்த சிவனிடம் தம் கால் கட்டவிரலிலிருந்து கண்ணைத்திறந்து அதிலிருந்து கிளம்பிய தீயைக் கொண்டு சிவனையும், அவரது மனைவியையும் (பார்வதி) வென்று போற்றும்படி செய்தார். |
| (3) தமக்குச் சந்தனம் கொடுத்து சேவை செய்த கூனியின் முதுகை நிமிர்த்தி அதிக அழகுடைய பெண்ணாக மாறும்படிச் செய்தவர். | தமக்குப் பணிவிடை செய்து வந்த கிழ தாசியை இளம் பருவமுடைய அழகுடைய பெண்ணாக மாறும்படி செய்தவர். |
| (4) துரியோதனனைப் பார்த்து, ''பாண்டவர்கள் என் பிராண நண்பர்கள்; அவர்களுக்கு எதிரியான நீ எனக்கு எதிரி. ஆகையால் உன் வீட்டில் சாப்பிடக் கூடாது. உனக்கும் சாப்பாடு வைக்க கூடாது'' என்றார். (பாரதம், உத்தியோக பருவம் — 90, சுலோகம் 92). | தம் பிராணசமரான கணிகண்ணனுக்கு அபராதம் செய்த பல்லவராயனுடைய அரசாங்கத்தில் இருக்கக்கூடாதென்று எண்ணி, உமக்கு அபராதம் செய்தவன் எனக்கும் அபராதம் செய்தவனே என்று கணிகண்ணருடன் தானும் வருவதாய்ச் சொல்லி தன்னை சேர்ந்த பெருமானையும் சேர்த்துக்கொண்டு போனார். |
| (5) மாலாகாரருக்கு அருள் புரிந்து அக்ரூரருக்குக் கருணை செய்தது (விஷ்ணு புராணம்). | தமக்குப் பாலமுது கொடுத்த கிழத்தம்பதிகளுக்கு தான் அமுது செய்து மிஞ்சிய பாலமுதை அவர்களுக்குக் கொடுத்து, அதை அருந்திய உடனே கிழ உருவம் நீங்கி இளமைப் பருவமடைந்து, 'மானிடரை நாக்கொண்டு பாடாத பகவத் கவியான கணிகண்ணனைப்' பிறக்கும்படி அருள் செய்தார். |

| ஸ்ரீ கிருஷ்ணன் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| (6) இராஜசூய யாகத்தில் வீடுமர் முன்னிலையில் தருமர் கண்ணனுக்கு அக்ரபூசை சமர்ப்பித்தார். அதற்குச் சிசுபாலன் எதிர்த்துப்பேசி, கண்ணனை தூஷித்ததால் கண்ணன் அவனுடைய தலையைச் சக்கராயுதத்தினால் சேதித்தார். | அரிபாத தீட்சிதர் தம்முடைய யாகத்தில் ஆழ்வாருக்கு அக்ர பூசை செய்து சமர்ப்பித்தார், அப்பொழுது யாக சாலையில் உள்ள சடங்கர்கள் இதனை எதிர்த்துப் பலவிதமாகப் பேச தீட்சிதர் ஆழ்வாரிடம் வணங்க, சடங்கர்கள் வாய் அடங்கிட தம் இதயத்திலுள்ள எம்பெருமானின் திருமங்கள உருவமான சயனகோலக் காட்சியை உட்கிடந்தவண்ணம் புறம்பொசிந்து காட்டி அவர்களது கர்வத்தை அடக்கினார். |
| (7) பாரத யுத்தத்தில் அருச்சுனனுக்குத் தன்னுடைய விஸ்வருபத்தைச் சேவிக்க அருள் செய்தார். | தன்னுடைய யோகபிரபாவதிசயத்தால் திருக்குடந்தை எம்பெருமானுடைய திவ்யமங்கள உருவத்தைப் பக்தர்களுக்குக் காட்டி சேவிக்க செய்தார். |
| (8) கீதையில் விஞ்ஞான யோகத்தில் 'அருச்சுனா! என்னைக் காட்டிலும் வேறு பொருள் கிடையாது. இந்த உலகம் கயிற்றில் கோத்த முத்துப்போல என்னிடத்தில் கோர்க்கப் பட்டிருக்கிறது' என்று பரத்துவ நிர்ணயம் செய்தார். | 'நான்முகனை நாராயணன் படைத்தான் ' நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைதான் படைத்தான்' என்று நான்முகன் திருவந்தாதியில் பரதுத்வ நிர்ணயம் செய்தார். |
| (9) யோக சாத்திரத்தில் (கீதையில்) சாரமான சரம சுலோகத்தை எல்லோரும் அறிந்து உய்விக்கும்படி கர்ம, ஞான, பக்தி யோகங்களை எடுத்துக் கூறி, ''இறுதியில் தர்மங்களை எல்லாம் அறவே ஒதுக்கிவிட்டு என்னையே சரணடைக; பாவங்கள்அனைத்திலும் இருந்து உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே !'' என்று அருளினார். | சந்தோருபமான திருச்சந்த விருத்தம் கீதையில் கர்ம, ஞான, பக்தி யோகங்களை எல்லாம் எடுத்துக்கூறி, கடைசியில் (115-ல்) 'அர்த்தனாகி யன்னை யாகி' என்ற பாசுரத்தில் சரம சுலோகத்திற்கு அர்த்தமாக சாதித்து ஞானோபதேசம் செய்தார். |

இங்ஙனம் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் - திருமழிசையாழ்வாருக்கும் பதினாறு ஒற்றுமைகள் இருப்பதை அநுபவித்து மகிழத்தக்கது.

**19. திருமழிசையாழ்வார் அருளிச் செயல்கள்:** வைணவ சமயத்தை வளர்த்தருளிய மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களை 'அருளிச் செயல்கள்' என்று போற்றுகின்றோம்.

இஃது ஆழ்வார்கள் அகவாழ்க்கையில் அமைவதால் 'அகம் தரும் அருளிச் செயல்கள்' என்றும் கூறலாம். இவை மூன்று பொருள்களைத் தரும்:

1. ஆழ்வார்களில் பாசுரங்களான 'அருளிச் செயல்கள் 'தமது நெஞ்சில்' (அகத்தின் - மனம்) நடுநாயகமாக வைத்து நமக்கு அருளும் கருத்துகள்.

2. நம்முடைய அகத்தில் ஊன்றியுள்ள ஆசைகளைப் பக்தி யின் திறத்தால் வெளியிடும் அருளிச் செயல்கள்.

3, ஸ்ரீவைணவர்கள் இல்லறத்தில் மேற்கொள்ள வேண்டிய னவும், கடைப்பிடிக்க வேண்டியனவுமான கொள்கைகளைத் தமது அருளிச் செயல்களில் எடுத்து இயம்புதல்.

**அருளிச் செயலில் பிரபந்தங்கள்:** திருமழிசையாழ் வார் தம் இறுதிக் காலத்தில் திருக்குடந்தைக்குச் சென்று அங்கு ஆராவமுதனைச் சேவித்துப் பல நாட்கள் அத்தலத்திலேயே இருந் தமையால் பல பாசுரங்களை இயற்றியருளினார். திருக்குடந்தை யில் எழுந்தருளியிருந்தபோதே 'நான்முகன் திருவந்தாதி', '**திருச்சந்த விருத்தம்**' என்ற பிரபந்தங்களை இயற்றினார் என்பது வரலாற்றுச் செய்தி.

ஒரு நாள் காவிரிக் கரையில் (திருக்குடந்தையில்) புதுவெள்ளம் கரை புரண்டு ஓடியபோது அதன் அழகை ரசித்தவராய்த் தானே தம்முடன் கொண்டு வந்துள்ள (இதுவரை செய்துள்ள) நூறு சம்புடங்களைக் (ஏடு) காவிரி வெள்ளத்தில் தூக்கி எறிந்தார். அவை பல வெள்ளத்தில் அடித்துச் சென்றன. இரண்டு ஏடுகள் மட்டும் வெள்ளத்தில் எதிர்த்து கரையில் நின்று இருந்த இவர் திருவடிகளில் சேர்ப்பது போலச் சேர்ந்தன.

கரையில் வந்தவற்றை ஆழ்வார் நீரோட்டத்துடன் ஓடி மறைந்து விடாமல் எதிர்த்து வந்த ஏடுகளை இளநகை அரும்பிய வண்ணம் திருக்கரத்தால் எடுத்துப் பார்த்தார். அவை புனல் வாதத்தில் வென்ற ' திருச்சந்த விருத்தம் ' (120), ' நான்முகன் திருவந்தாதி ' (96) என்ற இரு பிரபந்தங்களாக இருக்கக் கண்டு அப்படியே ஆராவமுதனிடம் எடுத்துச் சென்று, ' நடந்த கால்கள் நொந்தவோ ' என்று பணிந்து கேட்க, பெருமான் தலை நிமிர ' வாழி கேசனே !' என்று மங்களாசாசனம் செய்து அவரிடம் காட்டியபடி உலகத்தவருக்கு உய்யும்படி திவ்ய கொடையாக அப் பிரபந்தங்களை அருளினார். (இது முதலாயிரத்தில் சேர்க்கப் பெற்றுள்ளது.)

இதனால் இவரை வைணவ உலகம்,

**முழுப் பெருக்கில் பொன்னி யெதிர் மிதந்த**
**சொல்லோன் வாழியே ! புனல் வாதத்தில்**
**வென்றோன் வாழியே !**

என்றென்றும் வாழ்த்திக் கொண்டிருக்கிறது. (இந்த வரலாறு ஞானசம்பந்தர் வரலாற்றையொட்டி அமைக்கப்பெற்றது போலும்).

1. **நான்முகன் திருவந்தாதி :** இது தொண்ணூற்று ஆறு (96) வெண்பாக்களால் ஆன பாசுரங்களைக் கொண்டது. ' இயற்பா ' தொகுதியில் ' முதலாழ்வார்கள் பிரபந்தங்களை யடுத்து ' இடம் பெற்றுள்ளது. இதில் திருமாலை அடைய 'பரத் துவம் ' பற்றியும், வழி முறைகள் பற்றியும் ஆழ்ந்து பேசப்படு கின்றன. பரத்துவம்பற்றி உறுதியாகக் கூறுவதால், பரத்துவம் என்பது கடைசியாக பரமபதம் அருளுவதைபோல், குறிப்பால் நாலாயிர திவ்யபிரபந்தத்தில் ' முக்தி ' என்ற கடைசி நிலை அருளுவதை இப்பிரபந்தம் சேர்க்கப்பட்டுள்ளது. இதனைப் பயில்வோர் ஆழ்ந்த பொருள் ஓசை, இனிமை உணர்வும், கம்பீரமும், அழகும் அமைந்து கற்போர் மனத்தை திளைக்கும்படி செய்துவிடும்.

**திருச்சந்த விருத்தம் :** இது நூற்று இருபது பாசுரங் களைக் (120) கொண்டது. இனிய சந்தப் பாக்களால் ஆனது. இது முதலாயிரத்தில் ' பெருமாள் திருமொழிக்கு ' அடுத்து இடம் பெற்றுள்ளது. இசைப்பா தொகுதியைச் சார்ந்தது. இது ஓது வோர் உள்ளத்தில் உணர்ச்சியைக் கிளர்ந்து எழச்செய்யும் தன் மையது. இதில் திருமாலின் பெருமையும், 'வைணவ தத்துவமும்

பரக்க பரக்கப் பேசப்படுகின்றன. எனவே இப்பிரபந்தம் நாலாயிரத்தில் முதலிடம் பெறுகிறது. கீதையின் சரம சுலோகப் படி இது அமைவதால் 'திருச்சந்த விருத்தம் கீதை' என்று சிறப் பிக்கப் பெறுகிறது. இனிய ஓசை, நடை, அழகு, வடச்சொற்கள் கலந்த தமிழின் குழைவு, கம்பீரம், முதலியன பெற்று சந்த ஓசையுடன் பாடினால் பாசுரங்களுடன் ஒன்றும் உணர்ச்சி ஏற்படுத்தும் சிறப்புடையது.

**இறுவாய் :** இவ்வியலில் இந்து சமயம், முதலாக வைணவ சமயம் ஓர் அறிமுகம், ஆழ்வார்கள் பற்றி குறிப்புகள், திருமழிசை தலச்சிறப்பு, வரலாற்றுப் பின்புலம், ஆழ்வார்கள் அவதாரம், அவதரித்த திருநாள், காலம்பற்றிய ஆய்வு, பிராட்டியார் பாதுகாப்பு, வளர்ப்பு, திருநாமமிடுதல், தன் - வரலாறு, திருநாமங்கள், அகவாழ்வில் தத்துவம், பின்பற்றிய சமயங்கள், மயிலையில் சித்தர், திருமழிசையாருடன் பேயாழ்வார் தொடர்பு, தத்துவ நந்தவன அருளிச் செயலும் அதன் உட்பொருளும், தத்துவ வாதங்கள், பேயாழ்வாரிடம் சரண் அடைதல், திருமழிசை யாழ்வாராதல், உலகப் பரம்பொருளைச் சுட்டிக்காட்டல், குரு - சீடர் பரம்பரை அமைதல், பக்திசாரர் என்ற விருது பெறுதல், வைணவராதல், யோகத்தின் மூலம் உள்ளத்தில் இறைவனைக் கண்டு கொண்டது, பக்தியின் நிலைக்களன்கள், ஆழ்வாரின் தனி-நிலை, போதித்த கருத்துக்கள், ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் - திருமழிசையாழ்வாருக்கும் உள்ள ஒற்றுமைகள், அருளிச் செயல்கள் ஈறாக ஆராயப்பட்டன.

இயல்—மூன்று

# திருமழிசையாழ்வார் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள் - ஏற்றங்கள்

சௌலப்பியத்திற்கு மங்களாசாசனம்

"நடந்தகால்கள் நொந்தவோ நடுங்கஞால மேனமாய
இடந்தமெய் குலுங்கவோ விலங்குமால்வரைச் சுரம்
கடந்தகால் பரந்தகா விரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவா றெழுந்திருந்து பேசு வாழிகேசனே!"

—(திருச்சந்தவிருத்தம் 61)

# திருமழிசையாழ்வார் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள் - ஏற்றங்கள்

**திருமழிசை ஆழ்வார்** சிறு குழவிப் பருவத்தில் பெரிய பிராட்டி - எம்பெருமானுமாகிய இருவரின் அருளையும், பல வரங்களையும் நிரம்பப் பெற்றதாலும், குருவின் கருணையாலும் ஞான வைராக்கியம் பெற்று, இடைவிடாத பக்தியின் மூலம் அரங்கநாதனைத் தம் நெஞ்சில் என்றும் எழுந்தருளியிருக்கும்படி செய்தவர். இங்ஙனம் திருமழிசையாழ்வார் திருமால் அருள்திறம் தம் அகத்தில் நிரம்பப் பெற்றதால், தம் அக வாழ்க்கையில் ஏற்பட்ட அநுபவங்களில் பக்தியின் திறனை வெளிப்படுத்தி அற்புதச் சாதனைகள் பல செய்து காட்டியவர்.

கணிகண்ணன், சிவன், சித்தன், இரசவாதி, முதலாழ்வார்களை சந்தித்தல், காஞ்சியில் நிகழ்த்திய அற்புதங்கள், சாதிச் செருக்கைப் போக்குதல், அத்வாயு செருக்கை அடக்குதல், திருக்குடந்தையில் புனல்வாதம், ஆராவமுதனை இயக்குதல் எனப் பல அற்புதங்கள் நிகழ்த்தியுள்ளார். இவை திருமழிசை முதல் திருவல்லிக்கேணி, காஞ்சி, திருக்குடந்தை ஈறாகத் தமது ஆற்றலை வெளிப்படுத்திய அற்புதங்களாகும். ஒவ்வொரு அற்புதம் நிகழ்த்தும்போதும் ஒவ்வொரு ஏற்றம் பெற்றுத் திகழ்கிறார்.

**1. முதல் அற்புதம் - கணிகண்ணனின் தோற்றம் :** இரண்டாம் இயலில் ஆழ்வார் சிறு குழவியாக இருந்தபோது, தமது மகிமையால் கிழத் தம்பதிகளுக்கு இளமை அளித்து கணிகண்ணனை பிறக்கச் செய்த கருணைத்திறம் விரிவாக எடுத்து இயம்பப்பட்டது. ஆகவே கணிகண்ணன் தோற்றம் இங்கு சுருக்கமாக சுட்டிக் காட்டப்பட்டு அவனுக்குக் கருணை செய்யும் திறன் விரிவாக எடுத்துக் காட்டப்படுகிறது.

'பார்க்கவர் - கனகாங்கிக்கு' அவதரித்த திருமழிசையார் இளமையில் 'திருவாளன் - பங்கயச்செல்வி'யால் பிரப்பங்குடியில் வளர்க்கப்பட்டவர். குழவியாயிருந்தபோது தமக்குப் பாலமுதைக் கொண்டு வந்து தந்த கிழத் தம்பதியர்களுக்கு இளமை அளித்து 'கணிகண்ணன்' பிறக்கச் செய்த அற்புத ஆற்றலைப் பெற்றார்.

**கணிகண்ணன் வளர்ப்பு :** விதுரரைப்போல் பிரகாசிக்கிற அப்புத்திரனுக்குப் பன்னிரண்டாவது நாளில் 'கணி கிருஷ்ணனென்று' திருநாமம் சாத்தி அனைத்து வித்தைகளையும் பக்திசாரருடைய கருணையினால் அடைந்து அவருடைய பாத சேவை செய்து கொண்டு எம்பெருமானிடத்தில் பக்தியுடையவ ரானார்[1].

இவ்வாறு கணிகண்ணன், ஈன்றவர் மகிழ, கதிரவனுக்கு ஒப்பான திருமழிசைப்பிரானிடம் நாளும் பக்திகொண்டு ஒழுகி வரும்போது மாலிடமும் பக்தி வளர்ந்தது. இதனை,

மாலிடை யன்பே வளருமிவ் விருவர்
 மகன் கணிகண் கண்ணனும் விண்ணின்
மேலெழுங் கதிலே வாய்தரு பார்க்க
 வன்மகன் றன்னடி மேவி
மேலெழு நசையிற் பரவினன் மேலா
 மறிவொரு நெறியது மோங்கி
மாலிடைப் பக்தி மல்கிட நாளும்
 வளர்ந்தனன் ஈன்றவர் மகிழ[2]

என்ற பாடலால் அறிய முடிகின்றது.

கணிகண்ணன் ஆழ்வார் அடி சேரப்பெற்று, அவருடைய அருளால் கசடறக் கற்றுத் தேர்ந்து 'மானிடம் பாடாத கவியாக' விளங்கினான். இருவரும் பிரிவின்றி வாழ்ந்து வந்தனர். ''கணிகண்ணன் அறிவிலும், ஒழுக்கத்திலும், பக்தியிலும் சிறந்தவ னாக வளர்ந்ததாகவும், திருமழிசைப்பிரான் அவனுக்கு ஆசி அருளியதாகவும், அவன் இவருடன் பிரிவின்றி வாழ்ந்து வந்த தாகவும், இருவரும் பல தலங்களுக்குச் சென்று, பல்வேறு சமயங் களை ஆராய்ந்து பார்த்ததாகவும் கதைகள் வழங்குகின்றன.''[3]

1 திருமழிசைப்பிரான் வைபவம், பக். 10-11
2 ஆழ்வார்கள் வரலாறு, ப. 41
3 தொண்டர் குலமே தொழுகுலம், பக். 29

**குரு – சீடர் பரம்பரை அமைதல்** : ஆழ்வார் தம்மைப் பேயாழ்வார் திருத்திப் பணிகொண்டபின் திருவெஃகாவில் எம்பெருமானைத் தரிசித்துவிட்டுச் சில காலம் அங்குத் தங்கியிருந்தார். அப்பொழுது தம் இளம் பருவத்தில் தம் அற்புதச் செயலால் தோன்றச் செய்த கணிகண்ணன் இவரிடம் வந்து அடைந்தார். திருமழிசையாரிடம் தம்மைச் சீடராக்கிக் கொள்ளுமாறு வேண்டி நின்றான். ஆழ்வாரும் கருணைக் கொண்டு கணிகண்ணனைத் தம் அன்புச் சீடனாக ஏற்றுக் கொண்டார்.[4] சீடனும் முன்பைவிட அதிக பக்தியுடன் குருவுக்குத் தொண்டுகள் செய்து, அவருடன் எம்பெருமானையும் வழிபட்டு வந்தான். திருமழிசையார் திருவெஃகாவை தரிசித்த பின் "அக்கோயிலுள்ளே சிலகாலம் யோகத்தில் இருக்கவேண்டும்" என்று அவருக்குத் தோன்றியது. எனவே அவ்வூரிலேயே அவர் தங்கியிருக்கலானார்.

இங்கு ஆழ்வார் முதல்படி நிலையில் தாம் பேயாழ்வாருக்குச் சீடனாகி அமைந்தபின் (மனமாற்றம் பெற்றுக் கணிகண்ணனுக்குத் தானே குருவாக அமைந்து) பரம்பொருளை வழிபாடு செய்கிறார்.

| குரு | சீடர் |
|---|---|
| 1. திருமழிசையாழ்வார் | 1. கணிகண்ணன் |
| 2. பேயாழ்வார் | 2. திருமழிசையாழ்வார் |

ஒரே பரம்பரையில் இரு குருகுல சீடர் பரம்பரை அமைவது இவ்வாழ்வாரது அவதார அற்புதச் செயலில்தான் அமைகிறது. இவர் தம் அக வாழ்க்கையில் தாமே குருவாகவும், சீடனாகவும் அமைந்து பின்னர்த் தாம் செய்யப்போகும் அற்புதச் செயல்களுக்கு ஏற்றம் பெற்றுச் சிறப்பு நிலையாக திகழ்கிறது. முதல் அற்புதச் செயல் மூலம் கணிகண்ணனைத் தோன்றச் செய்து, தானே குருவாகவும் இருந்து ஏற்றம் பெறுகிறார். ஆழ்வாரின் கணிகண்ணன் தோற்றச் செயலே பின்னர் ஆழ்வார் செய்யப் போகும் ஆற்புதச் செயல்களுக்கு எல்லாம் அஸ்திவாரமாக அமைகிறது.

**2. சிவனே ஆழ்வாரின் அற்புதத்தைப் போற்றி வாழ்த்துதல் :** திருமழிசை ஆழ்வார் ஆசாரியாரின் திருவருளால் மனக்குழப்பம் நீங்கித் தெளிவுபெற்றுத் திருமகள் நாதனைத் தியானம் செய்து கொண்டு எழுநூறு வருடங்கள் கைரவணிக்

4 புன்னிருவர் ஆழ்வார் வரலாறு, ப, 27

கரையில் (திருவல்லிக்கேணி) யோகத்தில் எழுந்தருளியிருந்தார். அவ்வமயம் இவரது பரமபக்தியைச் சோதிப்பது போல் சிவன் தம் தேவியாருடன் இவருக்குக் காட்சி நல்கினார்.

**சிவன் நிழல் தம்மேல் படாதவாறு ஒதுங்குதல் :** ஒரு நாள் நிரந்தரமாகத் திருமால் அநுபவத்தில் திளைத்து, தியானித்துக் கொண்டும், திருமழிசை திவ்ய தேசத்து எம்பெருமானுடைய வாகன ஆடைகளில் கிழிந்திருக்குமவற்றைத் தைத்துக் கொண்டு இருக்கும்போது சிவன் பார்வதியுடன் இடப வாகனமேறித் திரிசூலபாணியாய், ஆகாய மார்க்கத்தில் செல்லா நிற்க, ஆழ்வார் இதனைக் கண்டு அவர் நிழல் தம்மேல் படாதவாறு ஒதுங்கியிருந்தார்.[5] ஆழ்வார் சிவன் நிழல் தம்மீது படாது ஒதுங்கியதற்குத் காரணம் தாம் முன்பு பரம்பொருள் யார்? என்று தெரியாமல் சிவனைத் துதித்து இருந்ததே. குருவின் அருளால் வைணவ சமயத்துக்கு மாற்றப்பட்டதும், பிற தெய்வத்தின் மேல் நாட்டமின்மையால் தீவிர வைணவபற்று உடையவராக "மறந்தும் புறந்தொழா மாந்தராக" விளங்கிப் பரம்பொருளையே தியானம் செய்து கொண்டிருந்த சமயம். சிவன் வந்தபோது அவர்கள் நிழல் தம்மேல் படாதவாறு ஒதுங்கினார் என்பது புலப்படும்.

**சிவன் பார்வதி உரையாடல் :** பார்வதி, ஆழ்வாரின் இச்செயலைக் கண்டும், இவரது தவ ஒழுக்கத்தையும் கண்டு அதிசயிக்கிறாள். தன் கணவனை நோக்கி, 'இவர் யாரோ?' என்று வினவ, சிவனும் 'இவர் நாராயணன் என்ற பரம்பொருளுக்கே அடிமைப்பட்டவர்' அவர் திருவருள் அன்றி வேறொன்றையும் விரும்பாதவர். மேலும் இவர் மகாநுபவராயிற்றே நம்மை மதியாரே. இவர்பால் நாம் செல்வதால் ஒரு பயனில்லை' என்று கூறினார். உடனே பார்வதி "நாமும் இவரைப் பார்த்து காட்சி நல்கி ஏதேனும் வரமளித்துப் போனால் ஏற்றதாக அமையும்" என்று கூறுகின்றாள். சிவனும் அதற்கு ஒருப்படுகின்றார்.

**சிவனுக்கும் ஆழ்வாருக்கும் உரையாடல் :** சிவன் அவர் எதிரில் தோன்றி நிற்கின்றார். சிவனைப் பார்த்தும் பாராதவருமாக திருமாலை மனதில் தியானித்துக்கொண்டே ஆழ்வார் கந்தைத் துணியைத் தைப்பதிலே கவனம் கொண்டு அலட்சியமாக இருக்கின்றார். "உனக்கு வரம் அருளிச்செய்ய வந்த எம்மை நீ உதாசீனம் செய்வது பொருந்துமோ?" என்று சிவபெருமான் கேட்க, "உம்மாலாக வேண்டியது ஒன்றுமில்லை,

5 திருமழிசைப்பிரான் வைபவம், ப. 17

எனவே அசட்டையாக இருந்தேன் " என்று பதில் மொழிகிறார். பின்னர் சிவபெருமான் "நம் வரவு வீணாகாதபடி உனக்கு விருப்பமான வரம் கேளும் " என்று கூறுகின்றார்.

**இருவருக்குமிடையே வாக்குவாதம்:** ஆழ்வார் புன்முறுவல் செய்து பரமபதம் (மோட்சம்) தர வல்லவராக இருப்பின் அதைத் தந்தருளும்படி கேட்க, சிவன் அஃது என்னால் தரக் கடவதன்று; பரந்தாமனிடத்திலே அது பெறத்தக்கது காண்" [6] என்று கூறுகிறார். இதனை,

> இதனை மேலை விண்ணினை நல்குதல் நம்பர மன்றே
> வேலை வண்ணனை மேவுதி எனச் சிவன் பகரச்
> சால நன்றெனக் கூறினன் தவத்தினன் [7]

என்று தனிப்பாடலும் சுட்டுவதைக் காணலாம். 'வேறு வரம் வேண்டுதி' என்று சிவன் கூறுகின்றார். ஆழ்வார் புன்முறுவல் செய்து, முக்தி பெறத் தவங்கள் புரிய நீண்ட ஆயுள் வேண்டும் என்பதற்காக " இன்று சாவாரை நாளைக்குச் சாகும்படிச் செய்ய வல்லாயோ ?" என்று கேட்க "அதுவும் கர்மாநு குணமாய் (வினையின்படி) நடந்தேறுவது" என்று சிவன் காரணம் சொல்ல, ஆழ்வார் கடைசியாக " என் ஊசியின் பின்னே நூல் வரும்படி வரப்பிரதானம் பண்ணீர் " [8] என்று தாம் தைத்துக்கொண்டிருந்த ஊசியைக் காண்பித்துக் கேட்கிறார்.

**சிவன் நெற்றிக் கண்ணைத் திறப்பது:** ஆழ்வார் தம்மை ஏளனமாகக் கூறியதைக் கேட்ட சிவன் சினம்கொண்டு, " இவரையும் அனங்கனை அழித்ததுபோல் அழித்து விடுகிறேன் " என்று தன்னுடைய நெற்றிக்கண்ணைத் திறக்கிறார். அதினின்றும் சுட்டெரிக்கத் தக்கதோர் அற்புத நெருப்பு ஒளியானது திரை திரையாய் வடமுகாக்கினிபோல் (ஊழித்தீ) கிளர்ந்து எழலாயிற்று. ஆழ்வாரும் அதனைக் கண்டு சிறிதும் அஞ்சவில்லை. சிவனுடைய நெற்றிக் கண் தீயானது ஆழ்வாரை நோக்கி வர " எவ்வளவு நெருப்பு வரினும் அஞ்சேன்" என்று கூறித் தமது வலத் திருவடியின் பெருவிரலை நிமிர்த்த, அந்த நகக் கண்ணினின்றும் பிரளயக் காலாக்கினியைப் போலும், வைசுவானராக்கினியைப் போலும் பயங்கரமாயிருப்பதொரு தீ கிளம்பி சிவனின் அக்னியை எதிர்த்து, சிவனின் பேரிலும் தாவிக்கொண்டு கிளம்பியது."

---

6 குருபரம்பராப்ரபாவம், ப. 33
7 ஆழ்வார்கள் வரலாறு, பக். 46-47
8 குருபரம்பராப்ரபாவம், ப. 33

**புட்கலா வர்த்தகம் ஏவியது :** காலத்தீ போன்ற பொங்கி எழுந்த அத்தீயானது மூவுலகத்தில் உள்ளவர்களையும் தகிக்கச் செய்தது. சிவன் இதனைத் தகிக்க முடியாமல் "புட்கலா வர்த்தக" மென்கிற மேகங்களைப் பொழியும்படி ஏவுகின்றார். அம்மேகங்கள் ஆகாசப் பரப்பில் நிறைந்து மின்னி முழங்கி வில்லிட்டு அகிலதாபங்களும் நீங்க எரிகிற தணலையும் அகற்றி பெருவெள்ளமாக்கின. ஆழ்வார் சிறிதும் நிலைகுலையாமல் பர்வத அரசனைப்போல் பகவத் பக்தியிலே சலியாமல் ஊன்றி இருக்கின்றார். "சிவன் இவருடைய திட விரதத்தைக் கண்டு அதிசயித்து வியந்து 'பக்திசாரர்' என்கிற திருநாமத்தைச் சாத்தி, இவரது வைபவத்தைக் கொண்டாடி, சிரக் கம்பம் பண்ணித் தம் பத்னியைப் பார்த்து "பாகவதர்களை எந்தவிதத்திலும் எவராலும் வெல்ல முடியாதென்று பூர்வம் அம்பரீஷரால் துர்வாசன் அவமானப்பட்டதுபோல் நான் இப்பொழுது இந்தப் பக்திசாரரால் அவமானப்பட்டேன்" என்று உரைத்துக்கொண்டு தம் இருப்பிடம் சென்றார். ஆழ்வாரின் இந்த அற்புத நிகழ்ச்சியால் இத்தலத்துச் சிவபெருமான் 'ஒத்தாண்டேசுவரர்' (ஒத்து-ஆண்ட-ஈசுவரர்) என்றும், அம்பாள் 'சீதளாம்பிகா (குளிர்ந்த நாயகி) எனவும், அழைக்கப்படுகின்றனர்.[9] இவ்வரலாற்று நிகழ்ச்சியைக் குறிப்பாக,

> **காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்**
> **பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை**
> **ஆணமென்றடைந்து வாழும் ஆதர்காளெம் மாதிபால்**
> **பேணிநும் பிறப்பெனும் பிணக்கறுக்க கிற்றிரே[10]**

என்ற பாசுரத்தால் அருளிச் செய்கின்றார்.

சிவபிரான் தாமே வலிய வந்து வரம் தருவதாகக் கூறி, தாம் கேட்ட வரத்தைத் தர முடியாத நிலையில் இருக்கும் சிவனைக் குறித்து ஆழ்வார் 'கண்டாலும் விகாரமான உருவத்தை உடையவராயும், காதுக்குக் கடூரமான சரித்திரங்களை உடையவராயும் உள்ளவரை வணங்கி, விரும்பிய வரத்தைக் கேட்டாலும் கொடுக்கச் சக்தி அற்றவராக இருக்கும் தேவதைகள் என்பதைப் 'பேணிலும் வரந்தர மிடுக்கில்லாத தேவரை' என்று நுட்பமாகச் சுட்டிக் காட்டுவது கருதத் தக்கது. அன்று சிவனுக்குத் தமது கட்டைவிரலில் உள்ள கண்ணைத் திறந்து ஆழ்வார் காண்பித்த வரலாற்று நிகழ்ச்சியை உறுதிப்படுத்த

9 திருமழிசைப்பிரான் வைபவம், பக். 18-19

10 திருச். விரு., 99

இன்றும் திருமழிசையில் எழுந்தருளியிருக்குக்கும் ஆழ்வார் (மூலவர்) கற்சிலை உருவத்தில் வலது கால் பெருவிரலில் கண் இருப்பதைக் காணலாம். நாம் ஆழ்வாரைத் தரிசிக்கச் செல்லும்போது அர்ச்சகரைக் கேட்டால் ஆழ்வார் பாதத்திலுள்ள கண்ணைத் திறந்து காட்டுவதை நேரில் கண்டு அநுபவிக்கலாம்.

இரண்டாவது கோணத்தில் சிவனிடம் அற்புதச் செயலைச் செய்து காட்டிய ஆழ்வாருக்கு, சிவனே பக்திசாரர் என்ற விருது சூட்டிட ஏற்றம் பெறுகிறார்.

3. **சுக்திகார சித்தன் வணங்குதல்:** திருமழிசை ஆழ்வார் மீண்டும் யோகத்தில் அமர்ந்தார். ஒருநாள் சுக்திகார சித்தன் (கேசரன்) என்பான் ஒருவன் தன் சித்தினால் புலியொன்றினை அடக்கி அதையே தன் ஊர்தியாகக் கொண்டு அதன் மீதேறி ஆகாய மார்க்கத்திலே செல்லா நிற்க, இவரது யோக மகிமையினால் அப்புலி மேலே செல்லாமல் நிமிர்ந்து நின்றது. இதற்குரிய காரணத்தை ஆராயும் போக்கில் சுற்றும் முற்றும் பார்க்கையில் கீழே மௌனமாய் யோகத்தில் எழுந்தருளியிருக்கும் யோகியைக் கண்டு வியப்புற்று, அப்போதே ஆகாயத்தினின்றும் இறங்கி இவர் அருகில் வந்ததை[11] இவரது வரலாறு குறிக்கின்றது. சித்தன் இவரது ஆற்றலைச் சோதிக்கக் கருதி, ''ஓய் பார்க்கவ முனீந்திரரே! நீர் தைத்துக் கொண்டிருக்கிற கந்தையை எறிந்து விட்டு, நான் தருகிற பீதாம்பரத்தாலாகிய இந்த உடையை உடுத்திக்கொள்ளுவீர்'' என்று சிறந்ததோர் ஆடையை உண்டாக்கிக் கொடுக்கின்றான். இதனை,

> தங்க ளரைவரு சீரைகி ழிந்துள தாகலின் யான்
> இங்கு பொன்மலி கஞ்சுக மமைத்துளன் ஏற்றருள்வீர்[12]

என்ற தனிப்பாடல் சுட்டுகின்றது. ஆழ்வார் அதனைப் புறக்கணித்து, தமது சித்த வேலையைக் காட்டுகின்றார். தம் சங்கற்பத்தாலே மாணிக்கமயமான ஆடையொன்றை உருவாக்கி, சித்தனுக்குக் காட்டியதை,

> முக்தி னோடுயர் மணிபல சமைந்தநிம் மெய்யுறையைச்
> சித்து வல்லவ! ஏற்புதி சீர்த்தது வையமிதில்
> அத்த! ஒன்றிலை என்றொரு கஞ்சுக மளித்தனனே.

என்ற பாடல் குறிப்பிடுகின்றது. பகலவன்போல் ஒளிவிடுகின்ற அந்த ஆடையைக் கண்டு சித்தன் வியப்புற்று, வெட்கித் தன்

11 திருமழிசைப்பிரான் வைபவம், ப. 18

12 ஆழ்வார்கள் வரலாறு, ப. 50

கழுத்திலிருந்த இரத்தினாரத்தைக் கழற்றி ' இதனைச் செபமாலை யாகத் தரித்துக்கொள்ளும் ' என்று அளிக்க வருகின்றான். ஆழ்வார் தமது கழுத்தில்அணிந்துள்ள துளசிமணி மாலையையும், தாமரை மணிமாலையையும் கழற்றிக் காட்டுகின்றார். அவை யிரண்டும் சிறந்த நவரத்தின மாலைகளாய் விளங்கக் கண்டு நாணமுறுகின்றான் சித்தன். அவரை ' மகாநுபாவரென்றும் ', ' பரிபூர்ணரென்றும் ' துதித்து வணங்கி. 'உம்மினும் சிறப் புடையதொரு சித்தர் உலகம் எங்கும் இல்லை !' என்று போற்றி மகிழ்ந்து தன் இருப்பிடம் சென்றான். இங்கு ஆழ்வார் துளசி, தாமரை மாலையை அவனுக்குக் காட்டியதும், நவரத்னமாக இருக்க, இதை என் கண்கள் இவற்றைச் சரியாகப் பார்க்கவில்லை என்று சித்தர் நினைக்க, ஆழ்வார் முறுவலித்து, இப்போதுதான் உன் கண்கள் சரியாகப் பார்க்கவில்லை என்று காட்ட, அவை உண்மையில் துளசி, தாமரை மாலைகளாக தோற்றம் தந்ததை சித்தன் தெளிந்தான் என்பது ஆழ்வாரின் சித்தின் சிறப்பினைக் காட்டுகிறது. மூன்றாவது சாதனையில் சுக்திகாரன் அறிவை தெளியவைத்து கருணை செய்து, அவன் வாயார இவர் புகழைப் போற்றி ஏற்றம்பெறச் செய்கிறான்.

**4. இரசவாதிக்குத் தத்துவத்தை உணர்த்துதல் :** மீண்டும் பழையபடி யோக தியானத்தில் அமர்ந்ததும், கொங்கண சித்தனென்கிற ஓர் இரசவாதி வந்து இவருடைய பெருமையைக் கண்டு, ' காணிகோடியைப்' பரிசாகக் கொடுத்தருள[13] (விரைவாக சக்தியை உடையதொரு இரசகுளிகை) ஆழ்வார் ''எதற்காக இதைத் தருகிறாய் ''? என்று கேட்க, அவன் ''இரும்பைப் பொன் னாக்க வல்லது ; இதனைப் பெற்றுச் செல்வத்தைப் பெருக்கி மகிழ்வீராக !'' என்று கூறுகின்றான். ஆழ்வார் அதனை வேண்டா என்று நிராகரித்து விடுகிறார். உடனே, ' தம்முடைய பொன்னொத்தமேனியில் புழுதியோடே காதிற் குறும்பியை எடுத்துத் திரட்டி '' இது காணி கோடி கோடியாகப் பெருகுவதைப் பாராய் ''என்று கொடுத்தருளினர் என்பது குருபரம்பரைச் செய்தி.

ஆழ்வார் இரச குளிகையைக் கொடுத்து ' இதனைக்கொண்டு நீ பிழைத்துக் கொள் ', என்று மறுமொழி பகர்ந்ததும் சித்தன் உடனே சோதிக்க அதன் ஆற்றல் அவ்வாறே இருப்பதை கண்டு,

பொன்னி னொளிர்ந்தய னிற்பன பொன்னெனப் பொலிதரவே
சென்னி வணங்கியக் கொங்கணன் செப்பெருஞ்செய
[லென்றான்[14]

ஆழ்வார் கொடுத்த புழுதியும் பொன்னாக மாறியது.

13 குருபரம்பராப்ரபாவம், பக். 34-35

14 ஆழ்வார்கள் வரலாறு, ப. 51

சித்தன் வியப்பு மேலிட்டு "அடிகாள்! உங்கள் அருந் தவத்தின் மேன்மைக்குமுன் என் வித்தையின் தன்மை, பரிதியின்முன் மின்மினியின் ஒளி போன்றதேயாகும். தேவரீருடைய மேன்மையை நன்கு உணராமல், யான் கூறிய மிகை மொழியின் குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்"[15] என்று தண்டனிட்டு நின்றான். சித்தன் திருந்தியமை கண்டு "பக்தி செல்வத்தின்முன் உம்மைப் போன்றவரின் பொருள் செல்வம் ஈடாகாது. அவை புழுதிக்குச் சமமாகும்" என்ற தத்துவத்தை விளக்கினார். கொங்கணன் உண்மையை உணர்ந்து, ஆழ்வாரின் தூய பக்தி ஆற்றலின் அருளைப் புற வெளியீட்டிலும் அற்புதமாக அமைந்து கருணை செய்தார் என்று போற்றிச் செல்கிறான். நான்காவது நிலையில் இரசவாதிக்கு ஏமாற்றும் மனப்போக்கை நீக்கித் தத்துவத்துடன் பக்தி-பாகவத பெருமையை விளக்கி ஏற்றம் பெறுகிறார்.

**5. யோக விநோதரிடம் முதலாழ்வார்கள் சந்திப்பு :** ஆழ்வார் தம்முடைய யோகத்திற்குத் தடை ஏற்படாமலிருக்க வேண்டுமென்று நினைத்தார். எனவே மலைக்குகையொன்றில் தங்கி பத்மாசனமிட்டு யோகம் செய்து கொண்டிருந்தார். முதலாழ்வார்கள் மூவரும் பாகவத தருமத்தைப் பரப்ப திருவரங்கம் தொடங்கித் திருத்தலப் பயணம் மேற்கொண்டு இவர் இடத்திற்கு எழுந்தருளுகின்றனர். அவர்கள் ஆழ்வாரின் திவ்விய ஒளியைக் கண்டு வியந்து இவரது அடக்கத்தையும் அக ஆன்மாவிலிருந்து பொங்கும் ஆனந்தப் பக்திப்பெருக்கையும் இவர் முகத்தில் வழிவதை நோக்குகின்றனர். "இம்மகாநுபவர் நீரா?" என்று தம் அகக் கண்ணால் அறிந்து கொள்கின்றனர். அப்பொழுது சீடர் குருவை விரைவில் தெரிந்துகொண்டு வணங்கி நிற்கிறார். தமது உபதேசம் இவ்வாறு சிறந்த பலனை அளித்தமையை தெரிந்துகொண்ட பேயாழ்வார் ஆனந்தக் கண்ணீர் வழிய, 'அருமை பக்திசாரரே!' என்று தம் சீடனை ஓடிப்போய் ஆரத் தழுவிக் கொள்ளுகின்றார்.

**சீடரை அறிமுகம் செய்து நால்வரும் கூடல் :** பேயார் தம் சீடனின் அன்பு பக்தி ஆற்றலைக் கண்டு வியப்புற்றார். "பக்திசாரரே! பாங்காகயிருக்கிறீரோ?" என்று நலத்தை விசாரித்து விட்டு, பேயாழ்வார் தம் அருமை சீடரைப் பொய்கையாருக்கும், பூதத்தாருக்கும் அறிமுகப்படுத்தினார். உடனே இவர் ஆனந்தக் கண்ணீர் ததும்ப, அவர்களுக்கு வணக்கம் செலுத்தினார். "இதுவரை மேற்கொண்டிருந்த யோகத்திற்குப் பலனாக

15 ஆழ்வார்கள் வரலாறு (இரண்டாம்), ப. 39

இத்திருமாலடியார்களில் முதன்மை பெற்ற மூவரையும் ஒருங்கே தரிசித்துப் பேறு பெற்றேன் "[16] என்று ஆனந்தம் கொண்டார் திருமழிசையாழ்வார். பின் நான்கு ஆழ்வார்களும் ஒன்று கூடினார்கள்.

**நால்வரும் மகிழ்ந்து உரையாடுவது :** திருமழிசையார் மூவரை நோக்கி " தாங்களும் பாங்காக இருக்கின்றீரோ ? பத்ம, மாதவீ, குசும, கைர வோத்பவ முனிகாள் ! பாங்காயிருக்கின்றீர் களோ ?" என்று வினவியருளி,

(1) பகவானையும் அவனடியார்களையும் தரிசிப்பதே '**கண் பெற்றதற்குப்**' பலனாகவும்

(2) நாம சங்கீர்த்தனமே '**நாவுக்குப்**' பலனாகவும்.

(3) வந்தனஞ் செய்கையே '**தலை**' (சிரசு)க்குப் பலனாகவும்.

(4) ஆராதிக்கையே 'கைகளுக்கு'ப் பலனாகவும் கொண்டு ஆனந்தக் கண்ணீர் ததும்ப மகிழ்ச்சியுடையவராய் ஒருவரை யொருவர் ஆலிங்கனஞ் செய்து கொண்டு மிகவும் விருப்பமுடன் பாலுடன் பாலும், தேனுடன் தேனும் கூடினாற்போல இந்நால்வரும் கூடி, பரவசமுற்றுச் சிலகாலம் அந்த இடத்தில் பகவத் அநுபவம் செய்து கொண்டிருந்ததை,[17]

> **தேனொடு தீம்பாலுங் கன்னல் நெய்யும்**
> **தம்முள்ளே கலந்ததென அன்பே சேரத்**
> **தேனூறுந் துளவத்தான் தானே நாடித்**
> **தேங்குதவஞ் செயலுற்றார் நெடுநாட் சேர்ந்தே**[18]

என்ற பாடலால் அறிந்துகொள்ள முடிகின்றது.

**கைரவ கரையில் எழுந்தருளியிருப்பது :** நால்வரும் பரம்பொருளை நினைந்து ஆனந்தம் கொண்ட திருவுள்ளத்தை உடையவராய், கைரவ தீர்த்தக் கரையை விருப்பத்துடன் தரிசித்துக் கொண்டு, அங்கே சிலகாலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தனர்[19].

[கைரவக்(தடம்) கரை—திருவல்லிக்கேணியின்கண் உள்ள புட்கரிணி]

16 தொண்டர் குலமே தொழுகுலம், ப. 42
17 குருபரம்பராப்ரபாவம், பக். 35-36
18 ஆழ்வார்கள் வரலாறு, ப. 52
19 குருபரம்பராப்ரபாவம். ப. 36

இங்கு நால்வரும் கூடித் தரிசித்து ஆனந்தப்படுவது, திருமாலின் பஞ்சாயுத, படைக்கருவிகளில் நான்கும் ஒருவருடன் ஒருவர் சந்தித்து மகிழ்வதும் நோக்கத்தக்கது.

(1) பொய்கையார் — திருச்சங்கு — (பாஞ்ச சன்னியம்)
(2) பூதத்தார் — திருக்கதை — (கௌமோதகி)
(3) பேயார் — திருவாள் — நாந்தகம்)
(4) திருமழிசையார் — திருஆழி — (சுதர்சனம்)

இதில் நான்காவதாக இருக்கும் திருஆழியின் ஒளியினால்தான் (ஆழ்வார் யோக ஒளியில் மற்றவர் தேடி வந்தது) மற்ற படைக் கருவிகள் (சங்கு, கதை, வாள்) தாமே வந்து ஒன்று சேர்ந்து மகிழ்ந்தன எனலாம். இச்சந்திப்பு இவ்வாழ்வார் அவதாரத்தில் மட்டுமே காணத்தக்கது. திருமாலிடம் திருப்படைக் கருவிகளாக அவருக்கு அணிசெய்து கூடியிருந்தவர்கள், அவதார நோக்கால் பிரிந்தாலும், சக்கரத்தாழ்வார் அவதாரத்தில் பண்டிருந்ததுபோல நால்வரும் சந்தித்துக் கொண்டனர். நால்வரும் ஒன்றுகூடிப் பல நாட்கள் கழிந்தபின் ஓடித்திரியும் யோகிகளான முதலாழ்வார்கள் யோக விநோதரிடம் வணங்கி, பிரியாவிடை பெற்றுக் கொண்டு முன்போலவே விறுவிறுப்பாக பூவுலக சஞ்சாரம் செய்யப் புறப்பட்டு விட்டனர். முதலாழ்வார்கள் விடைபெற்றுச் சென்றதும் திருமழிசை யாழ்வார் இவர்களோடு பழகிக் கூடியிருந்தபோது 'நவில்தொறும் நூல்நயம்' போன்ற பேரின்பம் உண்டானதே! பகவத் அநுபவமும் தேனூறித் தித்தித்தது போல் இன்பம் கொள்ளச் செய்ததே! இவர்கள் பிரிவால் யான் அவ் இன்பத்தை இழந்தேன். "திருமாலே! மீண்டும் இவர்களோடு ஒன்றுகூடி மகிழும் இன்பத்தைத் தந்து அருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டு தம் அவதார தலத் திற்குப் பயணமானார். யோக விநோதர் நமது யோகத்தின் அற்புத ஆற்றலினால் முதலாழ்வார்களைத் தம்மிடம் வரச் செய்து கூடி மகிழ்ந்து ஏற்றம் பெறுகிறார்.

6. **திருமண் கண்டு எடுத்தல் :** முதலாழ்வார்கள் பிரிவை மறக்க தம் தலமாகிய திருமழிசைக்கு வருகின்றார். திருமழிசையார் திருமண் தரித்துக்கொள்ள எண்ணி, திருமண் வேண்டிச் சில இடங் களில் சோதித்தபோது கிடைக்கவில்லை. இதனால் மனம் குழம்பி நின்ற ஆழ்வார் கனவில் திருவேங்கடத்தெந்தை சேவை சாதித்து, " ஆழ்வீர், '**கச்சி வெஃகாவின் தென்பால்; ஐங்கெழிலார் பூந்தடம் விரைக' வென ஓதி** " [20] அருளிச் செல்கின்றார். பொய்கையார்

20 ஆழ்வார்கள் வரலாறு, ப- 53

அவதரித்த இடத்தை இவர் சேவிக்க வேண்டும் என்று 'வேங்கட நாதனே வழிகாட்டினான் போலும்' என்று மகிழ்ந்து, காஞ்சி சென்று திருமால் குறிப்பிட்ட இடத்தில் திருமண் கண்டெடுத்து வந்து தம் திருமேனியில் 'துவாதச ஊர்த்துவ புண்டரங்களை'[21] (நெற்றி முதல் பன்னிரெண்டு இடங்களில் தரிப்பது) தரித்துக் கொண்டு, அதிக விருப்பத்துடன் திருவெஃகாவில் கண்வளரும் பெருமானைச் சேவித்துக்கொண்டும், அப்பிரானையே தியானித்துக் கொண்டும் பல ஆண்டுகள் (700 வருடங்கள்) அங்கேயே தங்கி யிருந்தார்.

ஊர்த்துவ புண்டரங்கள்—நெற்றியில் நாசிமுதல் கேசம் வரை மேல்நோக்கி மூன்று இரேகைகளாய் இடப்படுவது. இது ஊர்த்துவ லோகமாகிய திருவைகுந்தத்தைச் சேர்ப்பதைக் குறிக்கும்.

**7. காஞ்சியில் அற்புத நிகழ்ச்சிகள்:** காஞ்சியில் திருவெஃகா என்ற தலம் அமைந்துள்ளது. இது புண்ணியத் தலங் களிலே மிக்க சிறப்புடையது. எல்லாப் பாவங்களையும் போக்கும் 'சத்யவ்ரத' தலமென்கிற பெயரையுடையது. இத்திருத்தலத்திற்கு எழுந்தருளினார் திருமழிசையார். இங்கு எழுநூறு வருடங்கள் எம்பெருமானைத் தியானித்து யோகத்தில் அமர்ந்தார் என்பது வரலாறு. இக்காலத்தில் திருமழிசையில் தமக்கு நண்பனும்,

---

21 துவாதச ஊர்த்துவ புண்டரங்கள் தரிக்கும் இடங்களும், கூறவேண்டிய திரு நாமங்களும்:

1. நெற்றியில் — (கேசவாய நம :)
2. வயிற்றில் (நாபிக்குமேல்) — (நாராயணாய நம :)
3. மார்பில் — (மாதவாய நம :)
4. உட்கழுத்தில் — (கோவிந்தாய நம :)
5. வயிற்றின் வலப்பக்கத்தில் — (விஷ்ணுவே நம :)
6. வலக்கையின் மேல்பாகத்தில். (மதுசூதனாய நம :)
7. வலக்கழுத்தில் — (திரிவிக்ரமாய நம :)
8. வயிற்றின் இடப்பாகத்தில் — (வாமநாய நம :)
9. இடக்கை மேல்பாகத்தில் — (ஸ்ரீதராய நம :)
10. இடக் கழுத்தில் — (ரிஷிகேசாய நம :)
11. முதுகின் அடிப்பாகத்தில் — (பத்மநாபாய நம :)
12. பிடரியில் — (தாமோதராய நம :)

கடைசியில் 'வாசுதேவாய நம :' என்று கூறி **சிரசில் தரித்துக்** கொள்வர்.

சீடனுமான கணிகண்ணனும் காஞ்சிக்கு வந்து இவருக்குத் தொண்டுகள் செய்து வருகின்றான்.

**கிழவியொருத்திக்கு இளமை அளித்தல்:** ஆழ்வாருடன் கணிகண்ணனும் எழுந்தருளியிருந்தபோது கிழத்தாசி வந்து ஆழ்வாருடைய திருவடிகளில் பரம பக்தி கொள்கின்றாள். **''கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே!''** [22] என்ற நம்மாழ்வாரின் வாக்கிற்கு இணங்க, திருமழிசை ஆழ்வார் தங்கியிருந்த இடத்தை மெழுகுதல், திருவலகிடுதல், கோலமிடுதல் போன்ற கைங்கரியங்களை நாள்தோறும் செய்துகொண்டு வருகின்றாள். யோகத்தில் இருந்த ஆழ்வார் ஒரு நாள் அவளை நோக்கித் திருக்கண் மலர்ந்தருளிய சமயத்தில் அவள் செய்கிற கைங்கர்யத்துக்கு மிகவும் உகந்த திருவுள்ளத்தராய் ''நின் விருப் பத்தைச் சொல்வாய்'' என்று கேட்கின்றார். அவள் அவரைச் சரணமடைந்து ''இந்தக் கிழ உருவம் போய் இளம் பருவம் வரும்படி அருள் தர வேண்டும் என்று வேண்டினாள். ஆழ்வாரும் தம் அற்புத ஆற்றலால் அவளுக்கு அருள் செய்ய,'' அவள் அழகிய மங்கையாகி விடுகிறாள்.

**பல்லவ மன்னனை மணத்தல்:** அக்காலத்தில் காஞ்சியை ஆண்டு வந்த பல்லவ மன்னன் இவளது வடிவழகைக் கண்டு அவள்மீது காதலுறுகின்றான். பல விலையுயர்ந்த அணிகலன்கள், அழகிய பட்டாடைகள் அவளுக்குக் கொடுத்து அவளையும் மணந்துகொண்டு அவள் மூலம் இன்பம் துய்த்து வருகிறான். ஒரு நாள் அரசன் தமக்கு நாளுக்கு நாள் இளமை குறைவதையும், தன் மனைவியின் இளமை மாறாமல் இருப்பதையும் கவனித்து வியந்து நிற்கின்றான். அவளை நோக்கி, ''நின்னுடைய மங்கைப் பருவம் இப்படி மாறாமல் இருப்பதற்குக் காரணம் யாது?' என வினவ, அவள் அது ''ஆழ்வாரின் கருணையினால் உண்டாயிற்று'' என்று கூறுகின்றாள். மன்னனும் தமக்கும் ''அக்கருணை பெற அதற்குரிய வழியைத் தெரிவிப்பாய்'' என்று அவளைக் கேட் கின்றான். அவளும் ''நம் அரண்மனைக்கு நாடோறும் உபாதனம் பண்ண வருகிற கணிகண்ணன் என்பவர் ஆழ்வாருக்குச் சீடராக இருப்பவர். அவரைத் துணைகொண்டு, ஆழ்வாரை அணுகினால் நும் விருப்பம் நிறைவேறும்'' என்று இயம்புகிறாள்.

**கணிகண்ணன் வருகை:** அங்ஙனமே மறுநாள் கணிகண்ணன் உபாதனம் பெற வந்தபோது அவனை அழைத்துச்

22 திருவாய்., 10-2:7

சென்று உபசரித்து, ''உமது ஆசிரியரை நான் சேவிக்க விரும்பு கின்றேன். ஆகையால், நீர் அவரை இங்கு அழைத்து வருதல் வேண்டும்'' என்று விண்ணப்பிக்கின்றான். கணிகண்ணன், ''நம் ஆசிரியர் ஓரிடத்திற்கும் எழுந்தருள மாட்டார்; அரசராயிருப்பினும் கணிசித்துப் பார்க்கமாட்டார். அவர் சங்கரவரையும் வென்றவர். ஆசையற்றவர்''[23] என்று மறுமொழி பகர்கின்றான். அரசன் விடவில்லை. ''எம்மை அவரிடம் அழைத்துச் சென்று அவரது திருவருளால் என்னை மாறாத இளைஞனாக்க வேண்டும்'' என்று வற்புறுத்த, கணிகண்ணன், ''இவ்வுலக ஆசை உடையவர்களைக் கண்ணெடுத்தும் எம் ஆசிரியர் பார்க்க மாட்டார்'' என்று உறுதி யாகக் கூறுகின்றான்.

பிறகு அமைச்சர்கள் வந்து அரசனைத் தேற்றுகின்றனர். அமைச்சர்களின் ஆலோசனைப்படி அடுத்த நாள் கணிகண்ணன் வந்தபோது, ''நீரே உம் அற்புத ஆற்றலால் உம் திருவாக்கின் மூலம் ஒரு கவி பாடி எமக்கு அழியாத இளமை பெறச் செய்ய வேண்டும்'' என்று வேண்டி நின்றான். கணிகண்ணன் உடனே புன்னகை புரிந்து, ''நாக்கொண்டு மானிடம் பாடேன்''[24] என்றும், ''வாய்க்கொண்டு மானிடம் பாட வந்த கவியேனல்லேன்''[25] என்றும், ''நான் எப்போதும் நாராயணனைத் தவிர வேறு ஒரு நரனைத் துதியேன்'' என்றும் மறுமொழி பகர்கின்றான். பிறகு அரசன் கடுஞ்சினம் கொண்டு ''அரசனும் தெய்வமும் ஒன்று அல்லவா! அதன்படி நீர் எம்மீது கவிபாடுவது தெய்வத்திற்குச் சமமாகும்'' என்று நிர்ப்பந்திக்கின்றான். அப்படியானால் பாடு கின்றேன் என்று,

> ஆடவர்கள் எங்ஙன் அகன்றுஒழிவார் வெஃகாவும்
> பாடகமும் ஊரகமும் பஞ்சரமா—நீடியமால்
> நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
> மன்றார் பொழில் கச்சி மாண்பு[26]

என்ற ஒரு வெண்பா பாடுகின்றான். அரசன் சினந்து ''நம்மைப் பாடு என்றால் நகரத்தைப் பாடுகின்றாயோ?'' என்று கேட்க, ''நீர்தாமே ''அரசனும் தெய்வமும் ஒன்று'' என்று கூறினீர்கள். அதனால் உம் நகரத்தில் இருக்கும் திருமாலைப் பாடினால் அது

23 திருமழிசைப்பிரான் வைபவம், ப. 23
24 நான். திரு., 75
25 திருவாய்., 3.9:9
26 நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் (கோபால் நாயகர் பதிப்பு), ப. 472

உம்மைப் பற்றிப் பாடியதாக அமையும் என்றே கவி பாடினேன்'' என்கிறான். இங்ஙனம் தம்மை நிந்தித்த கணிகண்ணனை நோக்கி, இனி ''நீ இவ்வூரில் இருக்கக்கூடாது, நகரத்தைவிட்டு அகன்றுபோ'' என்று கட்டளையிடுகின்றான். கணிகண்ணன் உடனே ஆழ்வாரிடம் சென்று நடந்தவற்றை நவின்று, தனக்கு விடை தந்தருள வேண்டுமாறு வணங்கி நிற்கின்றான்.

**ஆழ்வாரும் கணிகண்ணனுடன் தொடர்தல்:** ஆழ்வார் புன்னகை புரிந்து, அன்று ''கண்ணன் துரியோதனனைப் பார்த்துப் பாண்டவர்கள் என் பிராண பூதர்கள். அவர்களுக்கு எதிரியான நீ எனக்கும் எதிரி. ஆகையால் உன் வீட்டில் உணவு உண்ணமாட்டேன், உமக்கும் உணவு வைக்கக்கூடாது'' என்று மொழிந்தது போல, ''எமக்குப் பிராண சீடனான உமக்கு அரசன் செய்த அபராதம் எமக்கும் செய்த அபராதம் ஆகும். எனவே நீர் போவீராகில் நாமிங்கிருக்கப் போவதில்லை; நாம் புறப்பட்ட பிறகு எம்பெருமானும் இங்குக் கண்வளர்ந்தருளப் போகிறதில்லை; அவனில்லாதபோது தத்பரிகரபூதரான பிரம்மாதிகளு மிருக்கப் போகிறதில்லை'' என்று திருவாய் மலர்ந்து வெஃகாவில் யோகத் துயில் அமருவமனையும் எழுப்பிக்கொண்டு வருவதாய்க் கூறி திருவெஃகா நாயனார் திருமுன்பெழுந்தருளி,

> **கணிகண்ணன் போகின்றான் காமரு பூங் கச்சி**
> **மணிவண்ணா ! நீ கிடக்க வேண்டா—துணிவுடைய**
> **செங்நாப் புலவனும் போகின்றேன் நீயும் உன்றன்**
> **பைங்நாகப் பாய்சுருட்டிக் கொள்** [27]

என்ற வெண்பாவால் விண்ணப்பம் செய்கின்றார். எம்பெருமானும் ஆழ்வார் சொன்ன வண்ணமே ''பாம்பணையைச் சுருட்டிக் கொண்டு'' பின்னே தொடரலானார்.

**காஞ்சி பொலிவுத்தன்மை இழத்தல்:** ஆழ்வார் வேண்டு கோளின்படி தம் அறிதுயில் நிலை கலைந்து எம்பெருமானும் எழுந்து வர, முன்னே ஆழ்வாரும் அதன்பின் கணிகண்ணனும் இவர்களுக்குப் பின் எம்பெருமானும் தொடர் சங்கிலியாக நகரை விட்டு அகன்றனர். இதனால் கச்சியம்பதியிலுள்ள மற்ற எம்பெரு மான்களும் (அத்திகிரி, வேளுக்கை, பவளவண்ணம், கார்வானம், அட்டபுயகரம், தண்கா, நீரகம், ஊரகம், காரகம், கள்வனூர், பரமேச்சுரம், நிலாத்திங்கள் துண்டம், பாடகம் முதலிய அனைவரும்

27 திருமழிசைப்பிரான் வைபவம், ப. 24

அவ்வூரை விட்டு வெளியேறுகின்றனர்; இதனால் கச்சி ஒளி யிழந்து போகின்றது. சிறு தேவதைகளின் சாந்நித்யமும் இல்லை யாய் விடுகின்றது. கதிரவனும் எழுந்திருக்கவில்லை. ஊர் இருண்டு போகிறது. அன்று இராமனைப் பிரிந்த அயோத்தி மாநகரம் பட்ட நிலைபோலே ஆழ்வார் கணிகண்ணன் பிரிவால் காஞ்சிநகரம் துன்ப நிலைப்பட்டது.

**ஓரிரவிருக்கை திருத்தலம் அமைத்தல் :** ஆழ்வாரும் கணிகண்ணனும், பெருமாளும், பிறதெய்வங்களும் காஞ்சியைவிட்டு அகன்று அருகிலுள்ள ஓரிடத்தில் ஓர் இரவு இவர்கள், தங்கியதால் அந்த ஊருக்கு ' ஓரிரவிருக்கை ' எனப் பெயர் பெற்று வழங்க லாயிற்று. அப்பெயர் ' ஓரிக்கை ' என்று இன்று மருவி வழங்கு கின்றது. இதனை,

> **அன்ன மாயோ னோரிரவு**
> **கச்சிக் கப்பாலிருந்தவிடம்**
> **மன்னோ ரிரவிருக்கை யெனமக்கள்**
> **இன்றும் புகன்றிடுவர்** [28]

என்ற பாடலால் அறிகின்றோம்.

**அரசன் மனம் திருந்திச் சரண் அடைதல் :** காஞ்சி நகரம் இருளால் சூழப்பட்டதும் இதனைக் கண்டு மன்னன் மிகவும் மனம் குழம்பி அமைச்சர்களுடன் அவர்கள் இருக்குமிடத் தைத் தேடி ' ஓரிரவிருக்கை ' வந்தடைத்து கணிகண்ணன் திருவடிகளில் விழுந்து தனது அபசாரத்தைப் பொறுத்து அருளுமாறு மன்றாடி நின்றான். கணிகண்ணன் மன்னன் மனம் மாறியதை ஆழ்வாரிடம் கூறி வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் கருணை புரிந்து சொன்னவண்ணம் செய்த பெருமாளை நோக்கி,

> **கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி**
> **மணிவண்ணா நீகிடக்க வேண்டும்—துணிவுடைய**
> **செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்**
> **பைந்நாகப் பாய் விரித்துக் கொள்** [29]

என்று முன்பு பாடிய பாட்டையே சற்று மாற்றிப் பாடி அன்புடன் விண்ணப்பித்ததும் அதற்கு எம்பெருமானும் உடன்பட்டு

28 ஆழ்வார்கள் வரலாறு, ப. 65
29 நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் (கோபால் நாயகர் பதிப்பு) ப. 473

வருகின்றார். எப்படிச் சென்றாரோ அப்படி, ஆழ்வார், கணி கண்ணன், எம்பெருமான் என்ற முறையில் திரும்பி வந்து பழையபடி திருவெஃகாவை அடைந்து அங்கு எழுந்தருளுகின்றார். காஞ்சி நகர் புதுப்பொலிவு பெறுகிறது. அரசனும் அன்று முதல் ஆழ்வாருக்குத் தொண்டு செய்து பயனைப் பெறுகின்றான்.

**நிகழ்காலத்திலும் அருள்திறம் வெளியிடுவது :** ஆழ்வாரின் பக்திக்குப் பணிந்து, அவர் கட்டளைப்படி அன்று சொன்னவண்ணம் செய்த பெருமாள், "பின்புள்ளவர்களுக்கும், தெரியவேண்டும் என்று முன்போல வலத்திருக்கை கீழாகவன்றி, இப்பொழுது இடத்திருக்கைக் கீழ்ப்படக் கண் வளர்ந்தருள்வதைக்" கண்கூடாகச் சேவிக்கலாம். இங்ஙனம் பக்தர் சொன்னபடி செயல் பட்ட அப்பெருமானுக்கு 'யதோக்தகாரி' என்று வடமொழியிலும் 'சொன்னவண்ணஞ் செய்த பெருமாள்' என்று தென்மொழியிலும் திருநாமம் வழங்கி வருகின்றது.

**பைந்தமிழ் பின்சென்ற பச்சைப்பசுங் கொண்டல் :** ஆழ்வாரின் பக்தியின் அற்புத ஆற்றலாலும், அவர் பாடிய செந் தமிழின் வசீகரத்தாலும் சொன்னவண்ணம் செய்த பெருமாள் பின் தொடர்ந்து சென்ற நிகழ்ச்சி வைணவர் உள்ளங்களை வசீகரித்தத்தோடு மட்டுமன்றி, தமிழ்ச் சான்றோர்களின் இதயத் தையே கொள்ளை கொண்டு விடுகின்றது. பிற்காலத்தில் 'குமர குருபர அடிகள்' என்ற சிவநேசச் செல்வரே திருமழிசையாரின் இந்த அற்புத செயலில் ஈடுபட்டு,[30]

> பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
> பச்சைப் பசுங் கொண்டலே.[31]

என்று தமது பனுவலில் பாடியிருப்பது நோக்கத்தக்கது.

**இவ் அற்புதச் செயலுக்கு அகச்சான்று :** திருமழிசை ஆழ்வார் அற்புதச் செயலுக்குப்—'பைந்தமிழ்ப் பின்சென்ற பரமனின்' செயலுக்கு—இவரது பாசுரங்களில் சில அகச் சான்றுகள் கிடைக் கின்றன.

> நற்றமிழை வித்தி, என்உள்ளத்தை நீவிளைத்தாய்
> கற்ற மொழியாகிக் கலந்து [32]

என்றும்,

30 தொண்டர்குலமே தொழுகுலம், ப: 56
31 மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்- காப்பு 1
32 நான். திரு., 81

தாம் சொன்னவண்ணம் செய்த பெருமானின் சௌலப்பிய குணத்தை அநுசந்தித்து ஆழ்வார்,

**வெஃகணைக் கிடந்த தென்ன நீர்மையே** [33]

என்றும் வருதலைக் காணலாம். ஆழ்வார் காஞ்சியில் கிழவிக்கு இளமை அளித்து, பல்லவனைத் திருத்திப் பைந்தமிழ் மூலம் எம்பெருமானை வசீகரம் செய்தும் சைவ நூலிலும் ஏற்றம் பெறுகிறார்.

**8. மறையவர்களுக்கு வேதத்தின் உட்பொருளை விளக்குதல் :** திருமழிசையார் கணிகண்ணனுடன் காஞ்சியில் அற்புதச் செயல்களைச் செய்தபின், சில காலம் அத்தலத்திலே கழித்தார். பின் அரைநிமிடம் வசித்தாலும் வைகுந்த மாநகரில் வாழ்ந்த பேற்றைத் தரத்தக்க பெருமையுடைய 'கும்பகோணம்' என்னும் மாநகரில் எழுந்தருளியுள்ள 'ஆராவமுதனின்' ஏரார் கோலத்தைச் சேவித்து அங்கே நித்தியவாசம் செய்யத் திருவுள்ளம் கொண்டு, காஞ்சியைவிட்டுத் திருக்குடந்தை சென்றடைகின்றார் என்பது வரலாறு.

ஆழ்வார் அங்ஙனம் செல்லும்போது 'பெரும்புலியூர்' என்ற ஊரில் ஒரு வீட்டின்திண்ணையில் இளைப்பாறுகின்றார். அவ்விடத்து வேதம் ஓதிக்கொண்டிருந்தனர் சில பார்ப்பனர்கள். ஆழ்வார் இருப்பதைக்கண்டு இழி குலத்தாராகிய இவர் காதில் வேத ஒலி விழலாகாது என்று வேதம் ஓதுவதை நிறுத்திவிடுகின்றனர். இக்குறிப்பையறிந்து ஆழ்வார் அவ்விடத்தை விட்டு வேறோர் அகத்துத் திண்ணையில் வீற்றிருந்தார். ஆனால் வேதம் ஓதுபவர்கட்குப் பாகவத அபசாரத்தினால் மறதி ஏற்பட்டது, இதனை,

**மதியுடை மறையவரும் நிறுத்திய வாக்கியமும்**
**ஓதுவென நினைந்திலரா யேங்கினர் மயங்கினரால்** [34]

அவர்கள் விட்ட இடம் தோன்றாமல் தடுமாறி நின்றனர். மறையவர்கள் தன்னிடம் பாகவத அபசாரம் பட்டபோதும், அவர்கள் விட்ட இடம் தொடங்க முடியாமல் விழித்ததைப் பார்த்துக் கொண்டிருந்த போதும், ஆழ்வார் அவர்களின்மீது கருணை கொண்டு,

33 திருச், விரு. 63

34 ஆழ்வார்கள் வரலாறு, ப. 66

**''அந்த வாக்கியத்தை நினைவுகூரும் பொருட்டுத் தரையில் கிடந்த ஓர் கறுப்பு நெல்லை நகத்தாற் கீறிக் காட்டியருளினார்''**

இங்ஙனம், ஆழ்வார் நெல்லைக்கொண்டு அவர்களுக்கு காட்டியதும்

**'கிருஷ்ணா நாம் வ்ரீஹணாம் நகநிர்ப்பிந்தம்'** [35]

என்ற உடனே விட்ட மகாவாக்கியம் நினைவிற்குவர, அவர்கள் மகிழ்ந்து புண்ணியம் அடைந்தவர்களாய், பகவத் பாகவத அபசாரம் செய்த தவற்றை உணர்ந்து, ஆழ்வாரிடம் வந்து அவரை வணங்கி நின்றனர். ஆழ்வாரும் பெரும்புலியூர் கிராமத்தில் தம்மை இகழ்ந்த வேதியர்களுக்கு கருணைகொண்டு அவர்கள் தவற்றை மன்னித்து கல்விச் செருக்கு சாதிச் செருக்கு கூடாது என்று அறிவுறுத்தி வேத வாக்கியததை எடுத்துக்காட்டி ஏற்றம் பெறுகிறார்.

9. **அத்வர்யுகளின் செருக்கை அடக்குதல் :** ஆழ்வார் அந்த ஊரில் எங்கெங்கே போயினும், அவரை நோக்கியபடி அந்த ஊர்ப் பெருமாளும் சந்நிதிக்குள் இருந்தபடியே அந்தந்த திசைகளை நோக்கித் திரும்பிய வண்ணமாய் இருந்தாராம், இவ் அதிசயத்தை அவ்வூர் பெருமக்கள் அர்ச்சகர் மூலமாக அறிந்தும், நேரில் அவர்கள் தாங்களே கண்ட சிலரும், அவ்வூரில் வேள்வி செய்து கொண்டிருந்த பெரும்புலியூர் தீட்சிதரிடம் ஓடிச் சென்று,

**கண்டோம், கண்டோம் கண்டோம்**
**கண்ணுக்கினியன கண்டோம்** [36]

என்று இந்த அற்புத நிகழ்ச்சியினை தெரிவிக்கின்றனர். தீட்சிதரும், 'அப்படி ஒரு மெய்யடியாரைக் காணக் கூடுமாயின் அதுவே கண்படைத்த பயன்' என்று கூறி, அவரைத் தமது வேள்விச் சாலைக்கு எழுந்தருளச் செய்தால் வேள்விப் பயனை பெறலாம் என்று கருதி தேடிப்பார்த்து ஆழ்வாரை வணங்கி, அவரை யாகசாலைக்கு அழைத்து வருகின்றார்.

**எங்கள் கண்படைத்த பலன் தேவரீர் தரிசனத்தினால்,**
**நாபடைத்த பலன் தேவரீருடைய நாம கீர்த்தனத்தினால்**
**தலைபடைத்த பலன் தேவரீரது வந்தனத்தினால்**
**கைகள் படைத்த பலன் தேவரீருடைய பூசையினால்**

35 திருமழிசைப்பிரான வைபவம், ப. 28
36 திருவாய். 5-2: 2

என்று கூறி, அர்க்கியம் முதலிய உபசாரம் செய்து, தலைமை பீடத்தில் வைத்துப் பூசிக்கின்றார். அப்பொழுது அரிபாதர் முற் காலத்தில் சிசுபாலன் முதலிய அரசர்களின் முன்னர் தருமபுத்திரர் யது குலோத்தமனான கண்ணபிரானுக்கு எவ்விதம் அக்ரபூசை செய்தனரோ அவ்விதமே செய்தனர்.[37]

**அத்வர்யுகள் பழித்துப் பேசியது :** தீட்சிதர் இப்படிச் செய்வதைக் கண்ட அங்குள்ள அத்வர்யுகள் தொடக்கமான சடங் கிகள் இவரைக் கொண்டு யாகத்தைத் தடையாக்கினதாகக் கூறி அன்று சிசுபாலன் தர்மபுத்திரன் இராஜசூய யாகத்தில் கண்ணனுக்கு அக்ரபூசை செய்தபோது சிசுபாலன் பேசிய கடுஞ்சொற்களைப் போல் இவர்களும் கேட்பார் செவி சுடும்படி சொல்லிக் கடுஞ்சொற் களால் பழிக்கின்றனர். சடங்கிகள் எவ்வளவு பழித்துப் பேசிய போதிலும், ஆழ்வார் நீறுபூத்த நெருப்புப்போல அமைதியாக இருந்தார். தீட்சிதருடைய நெஞ்சு கொதிக்கின்றது. ''அன்று சிசு பாலனுக்கு ஏற்பட்ட நிலை உங்களுக்கு இன்று ஏற்படப்போகிறது'' என்று அவர்களை எச்சரித்தும் பயன் இல்லை. அவர் பொறுக்க முடியாத கவலையுடன் ஆழ்வாரை நோக்கி '' இனியும் உங்களைப் பற்றிப் பேசுவதை எம்மால் தாங்கிக்கொள்ள முடியாது. இவர் களுக்கு உண்மையை வெளியிட்டுக் உய்ந்து போகும்படி செய்ய வேண்டும்'' என்று ஆழ்வார் திருவடிகளை வணங்கி விண்ணப்பம் செய்கின்றார்.

**ஆழ்வார் தம் அற்புதத்தை வெளிப்படுத்துதல் :** ஆழ்வாரும் தீட்சிதரின் வேண்டுகோளின்படி, இனி தம்மைப் பற்றி வெளியிடத் திருவுள்ளம் கொண்டு தமக்குள் என்றும் 'அநதர் யாமியாக' எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை நோக்கி,

> **அக்கரங்கள் அக்கரங்கள் என்று மாவ தென்கொலோ**
> **இக்குறும்பை நீக்கி என்னை ஈசனாகக வல்லையேல்**
> **சக்கரங்கொள் கையனே ! சடங்கர்வாய் அடங்கிட**
> **உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே !**[38]

என்ற பாடலை அருளிச் செய்து விண்ணப்பிக்கின்றார். முதலில் ஆழ்வார் தோற்றத்தில் தெய்விக மாற்றம் ஏற்படுகிறது. பின், தம்மை நாளும் வணங்கித் தொழும் பக்தர்களுக்குத் தம்மையே யொக்க அருள் செய்வர். ஆதலால், எம்பெருமான் பாற்கடலோடும் அனந்த சயனத்தோடும், திருவாழி திருசங்குகளோடும்

37 திருமழிசைப்பிரான் வைபவம், பக் 29-30

38 நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் (கோபால் நாயகர் பதிப்பு) ப. 447

திருமகளும், பூமகளும், திருவடி வருட ஆழ்வார் நெஞ்சில் உறைந்திருக்கும் திருவுருவத்தை அப்படியே 'புறம்பொசிந்து' இவர்தம் திருமேனியில் தோற்றுவித்தாராம். சடங்கிகள் உட்பட அனைவரும் அந்தத் திவ்விய மங்கள விக்கிரத்தைச் சேவித்து மகிழ்ந்து, ஆழ்வார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம் பிழையைப் பொறுக்கும்படி வேண்டி நின்றார்கள்.

**உபதேசம் செய்தல் :** ஆழ்வாரும் அவர்களுக்கு ஞான உபதேசம் செய்தும், திருமாலிடம் சரணமடைந்து, அவர் அடியவர்களின் நிழலில் ஒதுங்கி வாழும் முறையை விளக்கியும் சாதிச் செருக்கும், உயர்வு தாழ்வும் கூடாது என்று போதித்தும், பரம் பொருள் படைப்பில் அனைவரும் ஒருவரே! என்று சுட்டிக்காட்டி அவர்களை மன்னித்து வாழ்த்தி அருள் செய்தார்.

இங்கு ஆழ்வார் தோற்றத்தில் திடீரென்று ஏற்பட்ட மாறுதலுக்குக் காரணம், 'அவர் திருமார்பிலே அனற்பிழம்பு வீசிச் சக்கரம் சுழன்றது. பகவானுடைய சுதர்சனம் என்ற சக்கராயுதத்தின் அம்சமாகத் திருமழிசைப்பிரான் அவதரித்திருக்கிறார் என்பதை அக்காட்சி உறுதிப்படுததியது.[39] இக்காட்சி முதலில் தம்மைப் பக்தருக்கு அறிமுகப்படுததிய பிறகே, தம் தோற்றத்தைத் வெளிப்படுத்தித் திருமால் சேவை தந்தருளினார். இந்நிகழ்ச்சியிலிருந்து தம்மைவிடத் தம்மை வழிபடும் பக்தர்களே முதலில் வணங்கத் தக்கவர்கள் என்பதை விளக்கிக் காட்டுவதாக அமைகிறது. இவ் அற்புதச் செயலில் சடங்கரைத் தெளிவுப்படுத்தி, சாதி செருக்கைப் போககி, தம் அகததிலும், புறத்திலும் எப்பொழுதும் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதை வெளிப்படுத்தி ஏற்றம் பெறுகின்றார்.

**10. திருக்குடந்தையில் புனல்வாதம் :** ஆழ்வார் தாம் திருக்குடந்தைக்குச் செல்லும் வழிதோறும் மிகுந்த ஒழுக்கத்தையும் உபதேசங்களையும், பக்திப் பிரசாரம் செய்து கொண்டே திருக்குடந்தை வந்தடைகிறார். இத்திருத்தலம் நூற்றெட்டுத் திவ்ய தேசங்களில் ஒன்று. இத்தலத்தில் காவிரி (பொன்னி) ஆற்றங்கரை பொலிவு பெற்று விளங்குவதோடு, பெருமானின் அடிமலர்களை வருடி, அருள்பெற்று, காவிரி குடந்தையில் எழுந்தருளியிருக்கும் ஆராவமுதனுக்கு சிரம பரிகாரமாய்ச் 'சீதோபசாரம்' செய்ய வேண்டுமென்றே ஓடி வருகிறாளாம். இக்காட்சியை அநுபவித்துக் கொண்டே திருமழிசையார் குடந்தை வந்தடைகின்றார்.

39 தொண்டர் குலமே தொழுகுலம், பக்.68

குடந்தையில் எழுந்தருளியிருக்கும் ஆராவமுதப் பெருமானைக் கண்டு,

**ஆரா அமுதே ! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே**
**நீராய் அலைந்து கரைய உருக்கு கின்ற நெடுமாலே ;**
**சீரார் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த் திருக்குடந்தை**
**ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் ! கண்டேன் எம்மானே !** [40]

என்று வணங்கினார். பிறகு இந்நகரிலேயே நித்தியவாசம் (2,300 வருடங்கள்) செய்தார் என்று குரு பரம்பரை தெரிவிக்கின்றது. இவர் வாழ்க்கையின் பிற்பகுதியை இத்தலத்திலேயே கழித்தமையால் இவ்விடம் திருமழிசைப்பிரானுக்கு உகந்த இடம் என்றும் கூறுவர். இத்தலத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் 'நான்முகன் திருவந் தாதி', 'திருச்சந்த விருத்தம்' என்ற இரு பிரபந்தங்களை இயற்றி னார் என்றும் 'இவர், தமது நீண்ட வாழ்நாளில் வேறு பிரபந்தங்களும் செய்திருந்தார் என்றும் கருதுவோரும் உண்டு.' [41]

திருமழிசையாழ்வார் ஒரு சமயம் காவிரியாற்றங்கரையில் புதுப் புனல் பொங்கி வரும் அழகைக் கண்டு களித்தவராய்ச் சிறிதுநேரம் அப்படியே நின்று கொண்டிருந்தார். 'சீதோபசாரம்' செய்ய வரும் பொன்னிக்கு தனது அன்புக் காணிக்கையாக தம்முடன் கொண்டு வந்திருந்த 'நூறு சம்புடங்களையும் (ஏடு) காவிரி வெள்ளத்தில் போட்டுவிட்டார்.[42]

காவிரியும் அதை ஏற்றதுபோல் சுவடிகள் வெள்ளப் பிரவாகத் தோடு விரைந்து அடித்துச் சென்றன. ஆனால் இரண்டு ஏடுகள் மட்டும் ஆற்றோட்டத்துடன் போய்விடாமல் வெள்ளத்தை திர்த் தும், நீர்ச்சுழிகளில் சிக்கிச் சுழன்றும் கரையோரமாக நின்று இருந்த ஆழ்வாரின் திருவடிகளில் சேர்ப்பதுபோல் அலைகளால் கரையில் கொண்டுவந்து ஒதுக்கப்பட்டன.

**புதுப்புனலில் வென்ற ஏடுகள் :** இவ்வாறு தாமே புதுப் புனலில் போட்டு, காவிரியால், புனல் வாதத்தில் வென்று வந்த அவ்வேடுகளை மகிழ்ச்சியுடன் எடுத்துப் பார்த்தார் ஆழ்வார்

40 திருவாய்., 5-8:1
41 தொண்டர் குலமே தொழுகுலம் ப. 68
42 நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் (கோபால் நாயகர் பதிப்பு), ப. 484

அவை 'நான்முகன் திருவந்தாதி' (96), 'திருச்சந்த விருத்தம்' (120) என்ற இரு பிரபந்தமாக இருப்பதைக் கண்டு பேருவகை எய்தி, அவ்வேடுகளுடன் ஆராவமுதனை தரிசிக்கச் சென்றார்.

**ஆராவமுதனிடம் அருளி, புவனத்திற்கு அளித்தல் :** ஆழ்வார் புதுப்புனலில் காவிரிக்கு சன்மானமாகத் தந்தருளிய ஏடுகள், புனல் வாதத்தில் வென்று, தம்மிடம் வந்த இரு பிரபந்தங்களை ஆராவமுதனிடம்* முன்மொழியாகக் காண்பித்து பின்னர் அவற்றை புவனத்திற்கு கொடுத்து உய்வித்தருளினார். புதுப் புனல் வாதத்தில் வென்ற இவ்வாழ்வாரை வைணவ உலகம்,

> **முழுப்பெருக்கில் பொன்னிஎதிர்**
> **மிதந்தசொல்லோன் வாழியே !** [43]

என்று வாழ்த்திக் கொண்டிருக்கிறது.

இவர் காலத்தில் சமயக் காழ்ப்பால் சைவரும், சமணரும் ஏடுகளை அனல், புனல் வாதம் செய்தனர். இதனால் பல ஏடுகள் அனலுக்கும், புனலுக்கும் இரையாயின. ஆனால் திருமழிசை யாழ்வார் சமயக் காழ்ப்புக்கு இடம் தராமலும், மற்றவர் துணை இல்லாமல் தாமே தம் ஏடுகளைப் புனல் வாதத்தில் வென்று உலகிற்குக் கொடுத்தருளினார்.

இதனால் இவரை,

> **புதுமையுடன் புனல் வாதத்தில் முதல்வோன் வாழியே !**
> **புதுப்புனல் வாதத்தின் வென்றோன் வாழியே !**

என்று கூறினால் பொருத்தமாக அமையும்.

ஒன்பதாவது அற்புதம் அருளிச் செயலில் இரு பிரபந்தங்கள் வழங்கியது; புனல் வாதத்தில் வென்ற முதல்வன் என்ற ஏற்றம் பெறுகிறார்.

**11. தம் பக்தி ஆற்றலால் ஆராவமுதனை இயக்குதல்:** திருமழிசையாழ்வார் புனல்வாதம் செய்து வென்ற 'நான்முகன் திருவந்தாதி', 'திருச்சந்த விருத்தம்' என்ற இரு பிரபந்தங்களை எடுத்துக் கொண்டு ஆராவமுதன் சந்நிதிக்குச் சென்று பெருமானை

* நடந்த கால்கள் நொந்தவோ

43 வாழித்திருநாமம், பாடல் 4

சேவித்து அவரைப் பார்த்துத் தாம் அருளிச் செயல்களுடன் வந்து இருப்பதைக் கூறி, ''எம்முடன் சயன கோலத்திலிருந்து எழுந்திருந்து பேசு'' [44] என்று, தமது பாசுரங்களை அருளிச்செய்து பக்தியுடன் துதித்து நிற்கிறார். இப்படியெல்லாம் பக்தி செய்தும் 'நீ கண் வளர்ந்த வண்ணமாகவே இருக்கிறாய்; என்னை அணைத்து அருளவில்லை; வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லவில்லையே!' என்று நெஞ்சுருகிக் கேட்கிறார்.

**ஆராவமுதனிடமே ஆணையிடுதல்!** : பணிவுடனும், அன்புடனும் வேண்டினால், அசைந்து தம்மிடம் திருவாய் மலர்ந்தருள மாட்டான் என்று அதட்டி ஆவேசத்துடன் கேட்கிறார். காரணம், ''இப்பொழுதுதான் எமக்கு விளங்குகிறது. உமது திருநாமம் 'ஆராவமுதன்' அன்றோ! அன்புடன் கேட்டால் ஒரு வார்த்தையும் பேசமாட்டாய். எனவே ஆர்வத்துடன் கேட்டால்தான் பதிலுரைப்பாயா?'' என்று ஆவேச பக்தி மேலிட்டு, ஆணையிடுவதுபோல அதட்டிக் கேட்கின்றார் இதனை

நடந்தகால்கள் நொந்தவோ? நடுங்குஞாலம் ஏனமாய்
கிடந்தமெய் குலுங்கவோ? இலங்குமால் வரைச்சுரம்
கடந்தகால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்து பேசுவாழி கேசனே !

என்ற பாசுரத்தால் அறியலாம்.

காவிரியின் கரைக்கு அலங்காரமாய் விளங்குகின்ற திருக்குடந்தையில் எழுந்தருளி, நாக சயனத்தின்மீது சயனக்கோலம் கொண்டு திரிலோகங்களையும் இரட்சிப்பதில் இரட்சகரான ஆராவமுதன் என்ற திருநாமத்தை உடைய எம்பெருமானே! நீ உறங்குவதுபோல் பாசாங்கு செய்கிறாய். பெருமானே! ஆரவாரத்துடன் எம்மிடம் பேசு என்று அதட்டிக் கேட்பதுபோல பாசுரமிட்டிருக்கிறார்.

1. **'நடந்தகால்கள் நொந்தவோ?'**: முதல் நிலையிலே வினாவுடன் எதற்காக பள்ளிக்கொண்டிருக்கிறாய்? என்று கேட்கிறார்.

(i) மென்மையான ஆதிசயனத்தில் எதற்காக சயனித்துக் கொண்டு நித்திரை செய்கின்றீர்?

44 திருச். விரு., 61

(ii) சத்துருக்களைக் கொன்றதனாலுண்டான வருத்தத்தினாலோ ?

(iii) கடல் கடைந்ததனாலுண்டான சிரமத்தினாலோ ?

(iv) பூமியை படைப்பதனால் உண்டான சிரமத்தினாலோ ?

(v) மூன்றுலகங்களையும் அளந்தமையால் உண்டான சிரமமோ ?

(vi) தண்டகாரணியத்தில் நடந்தமையினால் உண்டான சிரமமோ ?

(vii) தமக்கு அடிக்கடி தரிசனம் தந்த சிரமத்தினாலோ ? என்று ஆழ்வார் கடைசியாகத் தம்மைப்பற்றிக் கேட்டும் இதனைச் சயனக் கோலத்திலிருந்து எழுந்திருந்து சொல்லவேண்டும் என்கிறார்.

2. **'நடுங்க ஞாலம் ஏனமாய்க் கிடந்த மெய் குலுங்கவோ ?'!** முதல் வினாவில் அதட்டிக் கேட்டும் பதிலுரையாமல் இருக்க, இரண்டாவது முறையிலும் கேட்கிறார். 'வராக மூர்த்தி அவதாரத்தில் பூமிப்பிராட்டிக்காக ஏனமாய் மண்ணைப் பிளந்து இரணியாட்சனிடம் போரிட்டு, பூமிப்பிராட்டியை மீட்டு வந்தபோது, உம் மெய்யில் ஏற்பட்ட சிரமத்திற்காக ஓய்வு கொண்டாயோ ?' என்று கேட்கிறார்.

3. **'விலங்கு மால்வரைச் சுரம் கடந்து கால்பரந்த காவிரி !'** மூன்றாவது முறையும் கேட்கிறார் 'ஆழ்வார்',

(i) காவிரியாறு குடகுமலைப் பிரதேசத்தையும், மைசூர் நாட்டையும், கொங்கு நாட்டையும் கடந்து, சோழ நாட்டிலே அகண்ட காவிரி என்று பரந்த நீர்ப்பரப்பாகிப் பின்பு கிளை நதிகளாய்ச் செல்லும் போக்கை நன்றாய் சுட்டிக்காட்டுகிறார்.[45]

(ii) 'விலங்குமால்' திருமால் மச்ச, வராக, கூர்ம, நரசிம்ம அவதாரங்களில் பாதி விலங்கு உருவமும், பாதி உடலும் கொண்டு அவதாரங்கள் செய்தமையால் (விலங்குமால்) என்ற பதத்தில் உமக்குச் சிரமமோ ?

45 தொண்டர் குலமே தொழுகுலம், ப, 41

(iii) நரசிங்க அவதாரத்தில் 'அகோபிலம்' தன்னில் பிரகலா தனுக்குத் தரிசனம் காட்டி, இரணியனை அழித்த அதே வேகத் துடன் 'திருக்கடிகை' (சோளிங்கபுரம்) யில் வந்து 'கடி' நேரம் முனிவர்களுக்கு தரிசனம் தந்தமையால் ஏற்பட்ட களைப்போ ?

4. 'காவிரிக் கரைக் குடந்தையுள்': பல தலங்களில் பள்ளிக் கொண்டது போதாது என்று இச்சிறப்புடைய காவிரிக் கரையில் உள்ள குடந்தையில் பள்ளிக்கொண்டதால் திருப்பள்ளி எழ முடியவில்லையோ ? துயில் கொண்டது போதும் எழுந் திருந்து பேசு ! என ஆணையிடுகிறார்.

5 'எழுந்திருந்து பேசு'! எந்தச் சிரமத்தினால் இப்படி விடாய்தீர சயனித்திருக்கிறாய் நீ ! இவ்வளவு காரணம் காட்டிப் பதில் கேட்கவும் நீர் எழவில்லை. உடனே எழுந்திருந்து பேசு ! உன் இந்தச் சயனத் திருக்கோல அழகே அழகு ! கேசவனே ! படுத்தது போதும் ! என் அச்சம் தீரும்படி எழுந்து பேசு ; நீ எழுந்து பேசும் அந்த இன்பத்தையும் நான் கண்டு இரசிக்கவேண்டும்."[46]

"எம்பெருமானே ! சயனத்திருப்பதற்கான காரணத்தைச் சயனக் கோலத்திலிருந்தே விளக்கினால் போதாது. எழுந்திருந்து பேசினால்தான் என் உள்ளம் அமைதி பெறும். மேலும் நீ எழுந் திருந்து பேசும்போது ஏற்படும் உம்முடைய திருமேனி அங்க அசைவுகளின் அழகைக் கண்டு நான் மகிழ வேண்டும்" என்றே 'எழுந்திருந்து பேசு' என்று ஆணித்தரமாகக் கட்டளை யிடுகிறார்.

5. கிடந்தவாறு எழுந்திருந்து பேசு: ஆழ்வார் இவ்வாறு பிரார்த்தித்ததும், ஆராவமுதனின் மனம் இரங்கியது. 'அன்பர்கள் உகப்பே தமக்கு இன்பம்' என்று இருப்பவன் பெருமாள். ஆழ்வாரின் வேண்டுகோளுக்குக் கட்டுப்பட்டுச் சயனத் திருக்கோலத்திலிருந்து எழுந்திருக்க முயன்றார்.

இவர் முன்பே தமது அற்புதச் செயலால் சிவனிடமே பெருவிரல் கண்ணைத் திறந்து தீப்பொறி உண்டாக்கியதும், புட்கரலகம் மழைக்கும் அஞ்சாமல் பகவத் பக்தியிலேயே ஊன்றியிருந்ததுபோல் ஏதேனும் அற்புதத்தை தம்மிடமும் செய்வார் என்று எண்ணியே பயந்து எழுந்திருக்க முயன்றார்.

---

46 ஆழ்வார் அமுதமொழி, ப. 29

இவ்வாறு ஆராவமுதன் எழுந்திருக்க முயன்றபோது ஆழ்வார். ஒருபுறம் மகிழ்ந்தார். மறுபுறம் "நான் அர்ச்சாவதார திருக்கோலத்தைக் குலைத்துவிட்டேனே" என்று துடித்தெழு கிறார். மேலும் இத் திருக்கோலத்தை நிலைகுலைந்து விடக் கூடாது என விருப்பம் கொண்டும், எம்பெருமானின் சௌலப்பிய குணத்தைக் கண்டு 'வாழி' என்று வாழ்த்துகின்றார். 'வாழி' என்ற வாக்கியத்தால் "உனது திருக்கோலம் இப்படியே நின்று நிலை பெற்று வாழ்க!" என்று வாழ்த்திப் பல்லாண்டு பாடி, மங்களாசாசனம் செய்கிறார். இங்ஙனம் வாழ்த்தியதும் ஆராவமுதன் அப்படியே உத்தானசாயியாக நின்றுவிட்டாராம். ஆழ்வார் வாழ்த்தியதுபோல் ஆராவமுதன் எழுந்த நிலையிலும் இல்லாமல் சயனக் கோலத்தின் நிலையிலும் இல்லாமல் நடுநாயக மான கோலத்தோடு அப்படியே நின்றுவிட்டார். அன்று ஆழ்வாருக்குக் காட்டிய அதே கோலத்துடன் எல்லோரும் அறிய இன்றும் திருக்குடந்தையில் எழுந்தருளியிருப்பதைக் கண்டு களிக்கலாம்.

கேசவனே!: ஆராவமுதன் எழுந்திருக்க முற்பட்டபோது அவர் சிரசிலுள்ள 'கேசம்' (முடி) சிறிது காற்றினால் அலைந்து நின்ற அழகைக் கண்டு மகிழ்ந்த ஆழ்வார் 'அழகிய கேசத்தை உடையவனே' என்ற பொருளில் 'வாழி கேசவனே!' என்று மன முருகி மங்களாசாசனம் செய்தருள்கிறார். அன்று திருவெஃகாவில் தம் பக்தியின் ஆற்றலுக்குக் கட்டுப்பட்டுச் செயல்படச் சொன்ன வண்ணம் செய்த பெருமாளின் அருள் திறனையும், இன்று திருக்குடந்தையில் கட்டுப்பட்டு எழுந்தருளிய பெருமானின் அருள் தன்மையும் கண்டு, தம்மால் 'இயங்காத சக்தி', 'இயங்கும் சக்தியாக' மாறியதைக் கண்டு மகிழ்ந்து மங்களாசாசனம் செய்கிறார்.

இங்கு ஒன்று நோக்கத்தக்கது. 'சித்து, அசித்து, ஈசுவரன்' என்பது முப்பெரும் வைணவ தத்துவம்.

சித்து — இயங்கும் பொருள் (உயிர் உள்ளவை)

அசித்து — இயங்காப் பொருள் (உயிர் அற்றவை)

ஈசுவரன் — இயங்கும் இயங்காப் பொருள்களை இயக்குபவன்.

கயிறு என்று சொல்லும்போது அசித்து என்பர். பின் அதே கயிற்றை இருண்ட இரவில் பார்க்கும்போது கயிறு என்று

(அசித்தாக) தோன்றுவது இல்லை. உயிர் உள்ள பொருளாகவே பாம்புபோல் தோற்றம் (சித்து) அளிக்க அதைக் கண்டு அலறுவர். அப்போது அசித்து சித்தாக மாறுகிறது.

எனவே அசித்து பொருளுக்கு எப்பொழுது ஒரு பெயர் கொடுத்துவிட்டோமோ அப்பொழுதே அது சித்தாகி மாறி விடுகிறது.[47]

ஆழ்வாரும் இவ் வைணவ தத்துவத்தின்படி செயல்படுகிறார். அர்ச்சை நிலையிலுள்ள (அசித்து) எம்பெருமானை இயங்காப் பொருளை இயங்கும் பொருளாக (சித்து) செய்யவே, ஈசுவரன் அருளைப் பெற்ற இவர் ஈசுவரன் இயக்குவதுபோல தாமே இயங்காப் பொருளை (அசித்து) இயங்கும் பொருளாக (சித்து)வும் எம்பெருமாளை இயக்கி வைக்கிறார் என்பது உற்று நோக்கத் தக்கது.

**திருநாமத்தை மாற்றிக்கொள்வது :** ஆழ்வாரின் அன்புக் கயிற்றால் கட்டுண்ட ஆராவமுதப்பிரான் தம் திருநாமத்தில் கடைசியிலுள்ள 'பிரான்' என்ற சிறப்புப்பகுதியை வழங்கி, ஆழ்வாருக்குப் 'பிரான்' என்ற சிறப்பு திருநாமம் சூட்டியதும் 'திருமழிசைப்பிரான்' ஆனார். இதனை,

> அனைத்துலகு முடையானும் இதுசொல்லும், ஆழ்வீர் ?
> ஏனைத்தளர்வே புற்றனை யென்றீராலும் பரிவால்
> எனக்கினி நீர் பிரானாவிர் இசைத்திடுமே யும்மை
> அனைத்துலகுந் திருமழிசைப் பிரானெனவே யார்த்து [48]

என்ற பாடல் விளக்குகிறது.

ஆழ்வாரும் தமது அன்புக் காணிக்கையாக ஆராவமுதனுக்குத் தமது திருநாமத்தில் ('திருமழிசையாழ்வார்') கடைசியிலுள்ள ஆழ்வார் என்ற சிறப்புப் பகுதியை சூட்டிட 'ஆராவமுதாழ்வார்' என்று வழங்கப்பட்டார். திருக்குடந்தை எம்பெருமான் இன்றும் இந்நாமத்தால் வழங்கப்படுவதைக் காணலாம். இதனை,

> நாகணையான் நலந்தன்னில் ஆழ்ந்தனனால் மெய்யன்
> நாகணையால் இன்னவன்றன் நல்லன் பிலாழ்ந்தான்

47 பேராசிரியர் திரு. C. ஜகந்நாதாசார்யர் (ஓய்வு) விவேகானந்தா கல்லூரி அவர்கள் ஆய்வாளருக்கு விளக்கி கூறியவை.

48 ஆழ்வார்கள் வரலாறு, ப. 71

**ஆகவரும் பத்துடையார் ஆர்த்திடுவர் பரனை**
**ஆகமுறை நம்மாரா வமுதாழ்வா ரென்றே** [49]

எனற பாடலால் அறியலாம்.

பத்தாவது கோண அற்புதச் செயலில், ஆராவமுதனை எழுந் தருளச் செய்ய 'திருப்பள்ளியெழுச்சி' செய்வதும் (எழுந்திருந்து பேசு) பின் எழுந்தருள முற்பட்டபோது 'பல்லாண்டு' (வாழி) பாடி அருள்வதும் இவரே முதல்வராக இருப்பது புலப்படும். இவருக்குப் பின்னர்தான் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச் சியும், பெரியாழ்வார் 'திருப்பல்லாண்டு'ம் பாடி அருள்வது நோக் கத்தக்கது. தமது கடைசி அற்புதச் செயலுக்கு எம்பெருமானே திருநாமத்தை தமக்கு விருதாக சூட்டுவதால் ஏற்றம் பெறுகிறார். திருமழிசையாழ்வார் இதுவரை செய்த அற்புதங்கள் எல்லாவற் றிற்கும் சிகரமாக எம்பெருமானே ஆழ்வாருக்கு அருள் செய்யும் தன்மை, அற்புத நிகழ்ச்சியாக அமைகிறது.

**12. ஆராவமுதன் ஆழ்வாருக்கு அருளுதல்:** ஒரு நாள் காவேரிக் கரையில் யோக தியானத்தில் அமர்ந்தார் ஆழ்வார். பகவத அநுபவத்தினால் அமுது செய்யாமல் பட்டினி யாக இருந்தார். அப்போது சந்நிதியில் அர்ச்சகர்கள் ஆராவமுத னுக்கு அடிசில் அமுது செய்யும்படி வேண்டிப் பிரார்த்தித்தும், எம்பெருமான் அதை ஏற்கவில்லை. "என் பக்தன் பட்டினி கிடக்க, நான் அமுது ஏற்கக் கூடாது" என்று திருவுள்ளமாக இருந்த ஆராவமுதனின் செயலைக் கண்டு வியப்புற்றனர் அர்ச்சகர்கள். உடனே அவர்கள் ஆழ்வாரிடம் சென்று ஆரா வமுதன் நியமனத்தை விண்ணப்பஞ் செய்து, அடிசில் அமுதை ஆழ்வாருக்கு சுவீகரிக்கச் செய்து, அவர் வைத்த மிச்சத்தை பெருமானுக்குக் கொடுத்தனர். அவரும் அதை அதிக விருப்பத் துடன் சுவீகரித்தார்.

இந்த விவரம் எல்லோரும் அறியும்படி தான் 'ஆராவமுதாழ் வானென்றும்' ஆழ்வாருக்குத் 'திருமழிசைப்பிரான்' என்றும் திருநாமத்தை மாற்றிக் கொள்கின்றனர். இவ்வாறு அவ் அற்புதச் செயலைத் திருமழிசைப்பிரான் வைபவம் அறுதியிடுகிறது.[50]

49 ஆழ்வார்கள் வரலாறு ப. 72

50 திருமழிசை ஆழ்வார் பிரபாவ வைபவம், ப, 84

**13. திருமழிசையாழ்வார் அற்புதங்களின் ஏற்றங்கள் :** இவ்வாழ்வார் தம் பக்தியின் ஊற்றத்தால் பல அற்புதங்களை நிகழ்த்தி, ஒவ்வொரு அற்புதங்களிலும் ஏற்றம் பெறுகிறார். காரணம், இவர் சக்கராம்சம், அதன் சுடர் ஒளி பல கோணங்களைப் பெற்றிருப்பதுபோல வட்ட வடிவில் (சக்கரம்) பல அற்புதங்கள் செய்து ஏற்றம் பெறுகிறார். மேலும் சக்கரத்திற்கு அடியில் பீடம் அமைவதுபோல் முதல் அற்புதச் செயலால் (கணிகண்ணன் தோற்றம் அடி பீடமாகி அமைந்து, பிற அற்புதச் செயல்கள் ஒளிவிடுவதுபோல் வட்ட வடிவமாக அமைகிறது. ஆழ்வாரும் எம்பெருமானும் திருநாமத்தை ஒருவருக்கொருவர் மாற்றிக்கொள்வது சக்கர வடிவத்துள் இரு பக்கமாக அமைகிறது. சுதர்சனமே திருமழிசையாராகி அவதரித்தமையால் இவர் அற்புதச் செயல்களும் சக்கர அமைப்பாக விளங்குகிறது.

| | அற்புதங்கள் | ஏற்றங்கள் |
|---|---|---|
| (1) | ஆழ்வார் தாம் அருந்திய பாலமுதை முதிய தம் பதியினர்க்கு அளித்து இளமைபெறச் செய்தது. | நாக்கொண்டு மானிடம் பாடா கணிகண்ணனை தோன்றச் செய்தது. |
| (2) | சிவன் நெற்றிக் கண்ணைத் திறக்க தாமும் விரலிலுள்ள கண்ணைத் திறந்து பகவத் பக்தியிலே திளைத்து இருந்தது. | சிவனே ஆழ்வாரின் பக்தித் திறனைக் கண்டு 'பக்திசாரர்' என்ற விருதை சூட்டுதல். |
| (3) | சுக்திகாரன் செயலுக்கு எதிராகப் பகவத் சித்து செய்து அருளுதல். | சித்தர், மகாநுபாவர், மகா பரிபூரணர் என்று சித்தனால் போற்றப்படுதல். |
| (4) | இரசவாதிக்கு எதிராக தமது புழுதியின் மூலம் பக்தி செல்வத்தின் முன் பொருட்செல்வம் நில்லாது என்ற தத்துவத்தை விளக்குதல். | தத்துவ வித்தகர் என ஆழ்வாரைப் போற்றிச் செல்லுதல். |

| | அற்புதங்கள் | ஏற்றங்கள் |
|---|---|---|
| (5) | தம் யோக ஒளியால் இருந்த இடத்தில் இருந்தே முதலாழ்வார்களைச் சந்தித்தல். | சிலகாலம் முதலாழ்வார்களுடன் சேர்ந்து பகவத் பாகவத இன்பம் அடைந்தது. |
| (6) | i. திருவெஃகாவில் கணிகண்ணனுக்கு குருவாக அமைந்தது. | முதல் குரு—சீடர் பரம்பரை அமைத்தல். |
| | ii. தமக்குப் பணிவிடை செய்த கிழவிக்கு இளமை அளித்தது. | ஆழ்வாரைப் புகழ்ந்து, மன்னரிடம் ஏற்றம் பெறச்செய்தல், |
| | iii. கணிகண்ணனை அவமதித்த பல்லவனுக்கு புத்தி புகட்டி அருள் செய்வது. | தம் பைந்தமிழ் பின் பச்சைப் பசுங் கொண்டலை வரச் செய்வது. |
| (7) | பெரும்புலியூர் மறையவர்களுக்கு வேதத்தின் உட்பொருளை விளக்குதல். | சாதிச் செருக்கு, கல்விச் செருக்கை நீக்கி வேத நாவலராக விளங்குவது. |
| (8) | யாக சாலையில் தம்மை இகழ்ந்த சடங்கிகளின் சாதி செருக்கை போக்குதல். | தமது திருமேனியில் திருமாலை புறம் பொசிந்துக் காட்டுதல். |
| (9) | காவேரியில் புதுப்புனல் வாதம் செய்தது. | நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தத்தை அருளிச் செய்தல், |
| (10) | ஆராவமுதனை இயக்கியது (பாசுரம் அருளிச் செய்தது). | இருவரும் திருநாமத்தை மாற்றிக் கொள்வது. திருப்பள்ளியெழுச்சி, திருப்பல்லாண்டு பாடிய முதல்வர், |

**ஆராவமுதனே ஆழ்வாருக்கு ஏற்றம் பெறசெய்தல் :**

ஆழ்வாருக்கு தமது திரு அமுதை சுவீகரிக்கச் செய்து எஞ்சிய திருஅமுதைத் தான் சுவீகரித்து மகிழ்ந்தது.

எல்லோரும் அறிய இருவரும் திருநாமத்தை மாற்றிக் கொண்டது.

**14.** **ஆழ்வாரின் கடைசிக் காலம் :** திருக்குடந்தையில் ஆராவமுதனிடம் 'கிடந்தவாறு எழுந்திருந்து பேசு' என்ற அற்புத செயலின்போது ஆராவமுதன் எழுந்திருக்க முற்பட்டபோது 'வாழி கேசவனே!' என்று மங்களாசாசனம் செய்து மகிழ்ந்தார். அந்தச் சயனக்கோல உருவத்தைத் தியானம் செய்துகொண்டு இரண்டாயிரத்து முந்நூறு வருடங்கள் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

இப்படித் திருமேனியுடனே அன்ன ஆகாரங்களை விட்டுக் காய் கிழங்குகளைச் சிறிது அமுது செய்து, நாலாயிரத்து எழுநூறு வருடங்கள் பகவத அநுபவம் பண்ணிக்கொண்டு உலகத்தில் உள்ளவர்களை வாழ்வித்து, பழுத்த வயதில் இத்தரணியை விட்டுத் திருநாட்டை அலங்கரித்தார் என்பது வரலாறு.

**குருப்பரம்பரை செய்தி மூலம் :**

மொத்த வயது 4,700 வருடங்கள்.

| | |
|---|---|
| இவர் துவாபரயுகத்தில் பிற மதங்களில் பிரவேசித்தது. | 1000 வருடங்கள் |
| துவாபரயுகத்தில் நின்ற 99-ம், கலியுகத்தில் 3601-ம் சேர்த்து திருமால் தரிசனம் கண்டு வைணவராய்ப் பிரகாசித்தது. | 3700 வருடங்கள் |
| | 4700 வருடங்கள் |

**ஆழ்வார் காலத்தைக் கழித்த விதம் :**

| | | வருடங்கள் |
|---|---|---|
| 1. | பிற சமயங்களில் முழுப் பொருளைக் கண்டறிய ஆராய்ச்சி நடத்தியது. | 1000 |
| 2. | பரம்பொருளை அறிந்த பின் திருவல்லிக்கேணியில் கைரவணிக்கரையில் யோகத்தில் அமர்ந்தது. | 700 |
| 3. | திருவெஃகா பொய்கை தீரத்தில் | 700 |
| 4. | திருக்குடந்தையில் நித்தியவாசம் செய்தது. | 2300 |
| | திருநாட்டை அலங்கரித்தது. | *4700 |

இதுகாறும் திருமழிசையாழ்வாரின் அற்புதச் செயல்களான, கணிகண்ணனை தோன்றச் செய்ததோடு அவனுக்கு குருவாக தாமே இருந்தது, சிவனிடம் பக்திசாரர் விருது பெற்றது, சுக்திகாரன் என்ற சித்தனுக்கு அருள் செய்தது, இரசவாதிக்குத் தத்துவம் உணர்த்துவது, தம் யோக ஒளியால் முதலாழ்வார்களைத் தம்மிடம் வரச் செய்து மகிழ்ந்தது, திருமண் கிடைத்த வரலாறு, திருவெஃகாவில் கிழவி ஒருத்திக்கு இளமை அளித்தது, பல்லவ மன்னனைத் திருத்தி பசுங்கொண்டலைத் தம் பின்னே தொடரச் செய்தமை, பெரும்புலியூரில் மறையவர்களுக்கு வேத உட்பொருளை உணர்த்தியது, யாகசாலையில் சடங்கிகளுக்குத் தம் திருமேனியில் திருமாலைப் புறம் பொசிந்து காட்டியது, தாமே புதுப்புனல் வாதம் செய்து இரு பிரபந்தங்களை வையகத்துக்கு அளித்தது. ஆராவமுதனை இயக்கி அருள் செய்தது, ஆராவமுதன் திரு அமுதைத் தான் சுவீகரித்ததும், இருவரும் திருநாமங்கள் மாற்றிக் கொண்டதுமான நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டப்பட்டது. மேலும் ஒவ்வொரு அற்புதச் செயலிலும் ஒவ்வொரு ஏற்றம் பெற்றுத் திகழ்வதையும் சுட்டிக்காட்டி ஆழ்வார் காலத்தைக் கழித்த விதத்தையும் எடுத்துக்காட்டி ஆராயப் பட்டுள்ளது.

# பரத்துவ நிர்ணயமும் - திருவேங்கடமுடையானின் சிறப்பும்

## அறிவித்தேனாழ் பொருள்

"நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான் —
யான்முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தே னாழ் பொருளை
சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து"

— நான்முகன் திருவந்தாதி - 1

# பரத்துவ நிர்ணயமும் —
# திருவேங்கடமுடையானின் சிறப்பும்

**பரத்துவ நிர்ணயமும் - திருவேங்கடமுடையானின் சிறப்பும் :** இவ்வியலில் முதற்கண், 'நான்முகன் திருவந்தாதி', 'திருச்சந்த விருத்தம்' பெயர்க்காரணம், இயற்பா இசைப்பா வில் இடம்பெறும் தன்மை, தனியன் பெயர்க்காரணம், தனியன் அருளிச் செய்தல் பற்றிய அறிமுகம் எடுத்துக்காட்டப்படுகின்றன. பின்னர் இப்பிரபந்தங்களில் திருமழிசையாழ்வார் எங்ஙனம் பரத்துவ நிர்ணயம் செய்துள்ளார் என்பதும் சுட்டிக்காட்டப்படு கின்றது. அடுத்துப் பரத்துவத்தை அருளக்கூடிய பரதெய்வ மாக விளங்கும் திருவேங்கடமுடையானின் சிறப்பும், திருமலையின் சீர்மையும் ஆராயப்படுகின்றன.

**1. அந்தாதி — இலக்கணம் :** தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் அந்தாதியும் ஒன்று, "'அந்தாதி' அந்தத்தை ஆதியாக உடையது. வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. 'அநத ஆதி' என்று பிரிக்க; வடமொழித் தொடராதலின் அந்தாதி எனத் தீர்க்க சந்தியாகப் புணர்ந்தது என விளக்கம் கூறுவர். எனவே, முன்னின்ற செய்யுளின் ஈற்றடி யின் எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்து வரும் செய்யுளின் முதலாக வந்து முதலும் ஈறும் மண்டலித்து முடியப் பெறுகின்ற அழகுடையது."[1] இவ் அந்தாதி செய்யுளுக்குரிய வனப்பு எட்டனுள் 'விருந்து' என்ற வகையில் அடங்கும்.

> **விருந்தே தானும்**
> **புதுவது புனைந்த யாப்பின் மேற்றே**[2]

1 *அந்தாதி இலக்கியங்கள்*, ப. 16
2 தொல். பொருள் செய்., 540

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தாலும், 'செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே '[3] என்ற தண்டியலங்காரத்தாலும் இலக்கண ஆசிரியர்கள் இலக்கணம் கூறுகின்றனர். அந்தாதி என்பது, வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி என்று பல வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அந்தாதி இலக்கியங் களுள் பல்வேறு சமயங்களும் இடம் பெறுகின்றன. எனினும் சைவமும் வைணவமுமே அவற்றுள் தலை தூக்கி நிற்கின்றன.[4] வைணவத்தில் அந்தாதி பாடுவதில் சிறந்து விளங்கியவர்கள் முதலாழ்வார்கள் ஆவர். இவர்களுக்குப்பின் திருமழிசையாழ்வாரும் ஒருவராகத் திகழ்கிறார்.

**2. நான்முகன் திருவந்தாதி பெயர்க்காரணம் :** திருமழிசையாழ்வார் நேரிசை வெண்பாவால் நான்முகன் திருவந் தாதி என்ற பிரபந்தத்தை அருளிச் செய்துள்ளார். இவரது நான் முகன் திருவந்தாதியில் உள்ள வெண்பாக்களைப் பயிலும்தோறும் அரிய கருத்து, அழகு, ஓசை இன்பம் இவற்றை அறிய முடிகிறது. பாக்கள் சலிப்பு நிலையுணர்வின்றி மேலும், மேலும் படிக்க விருப்பம் தந்து எழுச்சியுணர்வை நல்குகின்றன. இவர் திருமாலைப் பற்றி அருளும் இவ்வந்தாதியானது '**நான்முகனை நாராயணன் படைத்தான**' என்று தொடங்குகின்றது. எனவே இது நான்முகன் என்று 'முதற் குறிப்பாக' இத்தலைப்பைப் பெறுகின்றது. 'அமலனாதிபிரான்' '**கண்ணிநுண் சிறுத்தாம்பு**' என்பவை முதற் குறிப்புப் பெற்று அமைந்தனபோல் இப்பிரபந்தமும் முதற்குறிப்பால் சிறப்புப் பெறுகிறது.

பெயர்க்காரணம் கூறுமிடத்து — ஒரு நூலுக்கு இன்ன இன்ன காரணங்களைக் கொண்டு பெயரிட வேண்டும் என்பதை,

> முதனூல் கருத்த னளவு மிகுதி
> பொருளெய்ய வாதம்தான தனமைமுதல் நிமித்தினும்
> இடுகுறி யானும் நூற்கெய்தும் பெயரே [5]

என்று சுட்டுகிறது. ஆகவே, முதற் குறிப்பினால் இத் திருவந்தாதி 'நான்முகன் திருவந்தாதி' என்று பெயர் பெற்றது. இது தொண் ணூற்று ஆறு வெண்பாக்களால் ஆனது.

---

3 தண்டியலங்காரம்.—பொதுவணியியல், 12

4 அந்தாதி இலக்கியங்கள், ப. 17

5 நன்னூல்—சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம் 3

**3. இயற்பாவில் நான்முகன் திருவந்தாதி இடம் பெறும் தன்மை :** நாலாயிர திவ்வியப் பிரபந்தம் இயற்பா, இசைப்பா என்று இருவகையாக நாதமுனிகளால் தொகுக்கப் பட்டதை அறிவோம். இயற்பா பிரபந்தங்களாவன :

(1) முதல் திருவந்தாதி, (2) இரண்டாம் திருவந்தாதி, (3) மூன்றாம் திருவந்தாதி, (4) நான்முகன் திருவந்தாதி, (5) பெரிய திருவந்தாதி என்கிற ஐந்து அந்தாதிகளும், (1) திருவிருத்தம், (2) திருவாசிரியம், (3) சிறிய திருமடல் (4) பெரிய திருமடல், (5) திருவெழுக் கூற்றிருக்கை என்கிற பத்தும் இயற்பாவிற் சேர்ந்தவையாகும். இராமாநுச நூற்றந்தாதி பின்னர் இயற்பாவில் சேர்க்கப்பட்டது.

**4. இயற்பா-சொற்பொருள் விளக்கம் :** மேலே குறிப் பிட்டவற்றுள் வெண்டளை சிறப்பாக வழங்கப்படுகிற தளையாகவும் ஆசிரியத் தளைகள் விரவி வருவனவாகவும், இவை முக்கியமாக யாப்பிற்குச் சிறந்த தளைகள் ஆயினமையால் இவற்றைக் கொண்டு இயங்கும் செய்யுட்களை 'இயற்றமிழ்' எனக்கொண்டு 'இயற்பா' எனப் பெயர் சூட்டினர். 'இயற்பாவில்' நான்காவதாக 'நான்முகன் திருவந்தாதி' (96) சேர்க்கப்பட்டுள்ளது. இது வெண்பாக்களைக் கொண்டு அந்தாதியாகச் சிறந்த ஆழ் பொருளைக் கொண்டு மிளிர்கின்றது.

**5. தனியன் பெயர்க் காரணம்: அறிமுகம் :** நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதன் முதலாக எந்தப் பிரபந்தத்தைத் தொடங்கினாலும் முதன்முதலில் 'தனியனை'*ச் சொல்லித்தான் தொடங்க வேண்டும் என்பது மரபு. இது 'அன்' விகுதி பெற்று வந்திருப்பது குறிகொள்ளத்தக்கது. 'அன்' என்பது ஆண்பால்

* தற்காலத்துப் பல வைணவ கிரந்த புத்தகங்களில் தனியனை எடுத்துவிட்டுப் பிரபந்தத்தைப் போட்டு இருக்கிறார்கள். இது வருந்தத்தக்க செய்தி. பல்லாண்டுகளாக, பரம்பரையாக, தொன்று தொட்டு வருகின்ற முறை. அநுசந்தான முறையைத் திடீரென்று எடுத்துவிட்டுப் போடுவது சிறந்ததன்று. உதாரணம், 'திருப்பாவை' தொடங்கும்போது, ''நீளாதுங்கஸ்தந...'' என்று பட்டர் அருளிச் செய்த பாசுரத்தையும், ''அன்னவயல் புதுவை ஆண்டாள்'', ''சூடிக்கொடுத்த சுடர்க்கொடியே'' என்று 'உய்யக்கொண்டார்' அருளிய பாசுரங்களையும் சொல்லாமல் திடீரென்று 'மார்கழித் திங்கள்' என்ற பாசுரத்தைத் தொடங்குவது சான்றோர் சென்ற நெறியன்று.

விகுதி. அந்த விகுதியோடு மூலப் பிரபந்தத்திற்குத் 'தனிப்பட்ட' செய்யுளாக அமைந்து அந்தப் பிரபந்தத்தினுடைய பிண்டப் பொருளின் சாரத்தைப் பிழிந்து கொடுப்பதோடு, அதனை இயற்றிய பெருமைகளையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்குந்திறன் உடையது. ஆகையால் 'தனிப்பட்ட' வீறு பெற்று இயங்குகிறது. ஆதலின் இத்தகைய செய்யுட்களுக்குத் 'தனியன்'* என்ற திருநாமம் சூட்டப்பட்டது.

6. **தனியன் செய்தவர்** : இங்ஙனம் நான்முகன் திருவந்தாதிக்குத் தனியன் 'சீராமப்பிள்ளை'[6] என்பவரால் பிண்டப் பொருளாகக் காட்டப்பட்டுள்ளது. அது தொடக்கத்தில் புருடோத்தமன் ஆன சர்வேசுவரனின் திருநாமத்தை மங்களகரமாகக் கொண்டு,

> நாராயணன் படைத்தான் நான்முகனை, நான்முகனுக்
> கேரார் சிவன் பிறந்தானென்னுஞ் சொல்.

என்று பரத்துவத்தை நாராயணனுக்குக் காட்டி, ஏனைய 'பேச நின்ற சிவனுக்கும், பிரமன்தனக்கும் பிறர்க்கும் நாயகன் அவனே' என்பதை வலியுறுத்திக் காட்டி, இந்த விழுமிய பொருளை எப்பொழுதும் 'செப்பி நெஞ்சமே வாழ்' என்று அறுதியிட்டுக் கூறியதோடு நில்லாது, திருமழிசைப்பிரானின் அடிவணங்கி வாழ்த்துங்கள் என்று உபதேசிக்கின்றதை

> ... ... ... ... சீரார்
> மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே! மொய்பூ
> மழிசைப் பரனடியே வாழ்த்து.

---

* தனியன் இயற்றுபவர்கள் சாலச் சிறந்த மேதாவிகளாக இருப்பர் என அறிய வேண்டும். ஆண்பால் சிறப்புப் பெயர், என்பதை 'கோதவரியின் சிறப்பு'ப் பற்றிச் சொல்லுமிடத்துக் கம்பன்,

> ''புவியினுக்கு அணியாய் ... சான்றோர் கவியெனக்கிடந்த
> கோதாவரியினை வீரர் கண்டார்''

எனச் சிறப்புடைய ஆடவர்மேல் வைத்து கூறியமை நோக்குக.

6. பிள்ளை என்பது வைணவர்களுக்கு வழங்கும் திருநாமம், என்பதை உணர்தல் வேண்டும். 'நம்பிள்ளை', 'பெரியவாச்சான் பிள்ளை' 'வடக்குத் திருவீதிப்பிள்ளை என்போர் எல்லோரும் அந்தணர்களே. 'அந்தக் கோடி வீட்டுப் பிள்ளையாண்டான் என்ன பண்ணுகிறான்' என்பதும் வைணவர் பேச்சு வழக்கிலும் காணலாம்.

என சீராமப்பிள்ளையால் அருளப்பட்டது. இங்கு 'பரன்' என்ற திருச்சொல் கவனிக்கத்தக்கது. இது 'பிரான்' என்ற சொல்லின் மரூஉ. 'திருசந்தவிருத்தஞ் செய் திருமழிசைப்பரன் வருமூர்' என்று திருக்கச்சி நம்பிகளின் தனியனில், 'பரன் - பிரான்' ஆனது.

**பிரான் :** பிரான் என்ற சொல்லைச் சீராமப்பிள்ளை 'பரன்' எனப் பயன்படுத்தியிருப்பது சாலச்சிறந்தது. ஆழ்வார் பன்னிரு வருள் 'பிரான்' என்ற சொல் திருமழிசையாழ்வார் ஒருவருக்குத் தான் பொருந்தும். வேறு யாருக்கும் பொருந்தாது. காரணம், திருக் குடந்தையில் உள்ள ஆராவமுதன் தன் திருவாக்கினால் 'பிரான்' என்று உயர்ந்த சிறப்புடைய விருதைத் திருமழிசை யாழ்வாருக்கு வழங்கி அவருடைய 'ஆழ்வார்' என்ற சிறப்பினைத் தான் ஏற்று 'ஆராவமுதாழ்வார்' ஆயினார். எல்லாத் திவ்விய தேச எம்பெருமான்களை விட 'ஆராவமு தாழ்வார்' என்ற திருநாமத்துடன் இயங்குபவர் திருக்குடந்தை எம்பிரானே ஆவார். ஆராவமுதன் திருவாக்கால் 'பிரான்' என்று நாமம் சூட்டியிருப்பதால் 'திருமழிசைப்பிரான்' பெருமை என்னவென்று சொல்வது என்ற கருத்துப்பற்றி அவர் 'பரன்' ஆனார் என்று நுட்பமாக சீராமப்பிள்ளை எடுத்துரைக்கிறார்.

**7. சந்த விருத்தம் - இலக்கணம் :** சந்தவிருத்தம் என்பது யாப்பில் ஒருவகை. தொல்காப்பியர் எட்டுவகை வனப்புகள் கூறும்போது,

> சின்மென் மொழியால் சீர்புனைந்தி யாப்பின்
> அம்மைதானே அடிநிமிர் வின்றே,
>
> செய்யுள் மொழியால், சீர்புனைந்தி யாப்பின்
> அவ்வகைதானே அழகெனப்படுமே [7]

என்று குறிப்பாகக் காட்டுகிறார். இவற்றுள் அம்மை என்பது அழகைக் கொடுப்பது ஆகும். யாப் பருங்கலக் காரிகையில்,

> 'தூங்கேந் தடுக்கல் பிரிதன் மயங்கிசை வைத்துப் பின்னும்;
> பாங்கே அகவ லொழுகல் வலிமெலிப் பாற்படுத்திட்
> டாங்கே குறினெடில் வல்லின மெல்லின மோடிடையைத்
> தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறுந் தலைப்படுமே.[8]

7 தொல் பொருள், செய்யு - 227-228

8 யாப்பருங்கலக் காரிகை, ஒழிபியல். ப, 194

என்று கூறியிருப்பதைத் தொல்காப்பியர் முதலான ஒரு சாரார்,

வண்ணந்தாமே நாலைந்தென்ப [9]

என்று சந்த விருத்தத்திற்கு இலக்கணம் கூறுகின்றனர்.

இச்சந்த விருத்தம் முக்கியமாக ஒலிக் குறிப்பைப் பேசும். ஒவ்வொரு ஒலியிலும் மெய்யெழுத்து, வல்லின எழுத்துடன் குறில், நெடில் வைத்துச் சித்திரக் கவியாகப் புலவர்கள் தம் கற்பனைக்கு ஏற்ப விருத்தமாகப் பாடுவர். இவ்விருத்தத்தில் சிறப்புற்று விளங்கிய கம்பரை 'விருத்தமென்னும் ஒண்பாவிலுயர் கம்பன்' என்று சிறப்பித்துப் போற்றுகின்றனர். இவரும் தமது காவியத்தில் தொண்ணூற்றாறு வண்ணத்தைக் காப்புப் பாயிரத்தில் காட்டுகிறார்.

வண்ணத்தில் சிறந்த கவிகள் அருளுவதில் முதல் அடிப்படையாக அமைந்தவர் திருமழிசையாழ்வார் ஆவார். இவ்விருத்தம் 'வில்லிபுத்தூரார்' 'அருணகிரியார்' காலத்தில் சிறப்பு எய்தியது. பிற்காலத்தில் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் என்ற ஒரு புலவர் திகழ்ந்தார். அதைத் தவிர 'பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்.' வண்ணம் பாடுவதில் வல்லவர். அந்தகக்கவி வீரராகவ முதலியார் இராமாயணத்தை வண்ணத்தில் பாடியுள்ளார். கலிங்கத்துப் பரணியிலும் எந்த நாட்டு அரசர்கள் கப்பம் கட்டினார்கள் என்ற இடத்திலும், சேனை புறப்படும் போது குறிப்பிடும் இடத்திலும் ஒலி அதிர்வுடன் அமைந்திருப்பது சந்தநயத்தைக் காட்டுகிறது.

8. **திருச்சந்த விருத்தம்:** இனிய ஓசையால் அமைந்த விருத்தமே சந்த விருத்தம், எனப்படும். ஆசிரிய விருத்தத்தால் அமையும் மற்ற பாசுரங்களிலும், இத்திவ்வியப் பிரபந்தத்தில் பாசுரங்கள் மிகவும் இனிய ஓசை உடையனவாயிருத்தலாலும், ஒப்புயர்வற்று விளங்குவதாலும் இதனைச் 'சந்த விருத்தம்' என்று கூறுவர். இவ்வாழ்வார் அருளிய இச் சந்தவிருத்தம் போல சீருற்ற சந்த விருத்தம் ஒன்று இல்லை எனலாம். எனவே, இச் சந்த விருத்தத்துடன் 'திரு' என்ற அடைமொழியைச் சேர்த்து 'திருச் சந்தவிருத்தம்' என்று இப்பிரபந்தத்திற்குப் பெயர் சூட்டப்பெற்றது.

---

9 தொல். பொருள் செய்யு., 204

**9. இசைப்பாவில் இடம் பெறும் தன்மை :** நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் 'இசைப்பா' பிரபந்தங்களாவன :

| | |
|---|---|
| திருப்பல்லாண்டு | திருச்சந்தவிருத்தம் |
| பெரியாழ்வார் திருமொழி | திருமாலை |
| திருப்பாவை | திருப்பள்ளியெழுச்சி |
| நாச்சியார் திருமொழி | அமலனாதிபிரான் |
| பெருமாள் திருமொழி | கண்ணிநுண் சிறுந்தாம்பு |

என்கிறவை மேலே குறிப்பிட்ட செய்யுள் இலக்கணச் சிறப்புடன் கொண்டு இயங்கும் செய்யுட்களை 'இசைத்தமிழ்' எனக்கொண்டு 'இசைப்பா' எனப் பெயர் சூட்டினர். இசைப்பாவில் 'திருச்சந்த விருத்தம்' இடம் பெற்றுள்ளது. இஃது இனிய சந்த நயத்துடன் பாடுபவர், கேட்பவர் நெஞ்சங்களை நெகிழ வைக்கும் தன்மை யுடையது. நூற்று இருபது சந்தப்பாக்களைகொண்டு, வைணவ தத்துவத்தையும், ஆழ்பொருளையும் கொண்டு மிளிர்கிறது.

திருச்சந்த விருத்தத்தில் 'மெல்லின எழுத்துக்கள்' ஒலி வைத்து 'சங்குதங்கு முன்கை' என்ற பாசுரத்திலும், நடந்த கால்கள்' என்ற பாசுரத்தில் 'ட' ஒலியும், (வல்லொலி) 'புன்புல வழியடைத்து' என்ற பாசுரத்தில் 'வழலள' என்ற இடையின ஒலியையும் வைத்து இப்படிப் பல பாசுரங்களை அருளியுள்ளார். திருச்சந்தத்தின் ஓசையின் இனிமையை இன்றும் திருவரங்கம் பெரிய கோயிலில் அரையர் சேவையில் தாள வொலியில் வைத்துப்பாடி மகிழ்வதைக் காணலாம்.

**10. தனியன் செய்தவர் :** திருச்சந்த விருத்தத்திற்குத் தனியன் செய்தவர் 'திருக்கச்சி நம்பிகள்' ஆவார். இவர் பிறப்பில் வைசியர் குலத்தைச் சார்ந்தவர். திருமழிசையாழ்வாரோ முனி குமாரராய் அவதரித்தாலும், தாம் வளர்ந்த குடிக்கு ஏற்ப வைசியர் என்றே கூறுவர். எனவே ''திருக்கச்சி நம்பிகள் தம் குலத்தில் தோன்றிய இவ்வாழ்வார் இப்படிச் சிறப்புடன் இருக்கின்றாரே என்றும், திருமழிசையாழ்வார் அவதார தலமும், (திருமழிசை) தம் இருப்பிடமும் (பூவிருந்தவல்லி) மிக அருகில் இருந்தமையால் திருமழிசையாழ்வாரிடம் அதிகப் பற்றுக்கொண்டு தனியன் அருளியுள்ளார்.

மேலும் இவர் பேரருளாளனிடம் ஆலவட்டக் கைங்கரியம் செய்து அவரிடம் ஆறு வார்த்தைகள் கேட்டு, உடையவர்க்குத்

தெரிவித்தார். இவற்றைக்கொண்டு உடையவர் விசிட்டாத் வைதத்தை நிறுவினார். எளிதில் யாருக்கும் திருவாய் மலர்ந்தருள மாட்டார். ஆனால், திருச்சந்த விருத்தத்திற்கு மட்டும் தனியன்மூலம் திருவாய் மலர்ந்தருளியிருப்பதற்குக் காரணம் திருமழிசையாழ்வாரின் பெருமையை எடுத்துக் காட்டுவதற்காகும்.

இங்ஙனம் வைசியர் குலத்தில் அவதரித்த திருக்கச்சி நம்பிகள் தம் குலத்தைச் சேர்ந்த திருமழிசையாழ்வார் பிரபந்தத்திற்கு இரு தனியன்கள் செய்துள்ளார்.[10] இரு தனியன்களிலும் ஆழ்வார் அவதரித்த திருமழிசையின் சிறப்பினையும் ஏற்றத்தையும் குறிப்பிடு கிறார். இவர் திருமழிசையாழ்வாரைத் தாரணியின் துயர் தீரத் திருச்சந்த விருத்தம் அருளப்போகும் திருமழிசைப் பரன் வரும் ஊர் இது எனச் சிறப்பித்துக் கூறுகிறார். மேலும், 'திருச்சந்த விருத்தம் மருவி மணம் கொள்ளும் திருமழிசை வளம்பதியே' என்று போற்றுகிறார். இவன் 'பரன்' என்று குறிப்பிட்டு இருப்பது, ஆராவமுதனால் பிரான் என்ற விருது ஆழ்வார் பெற்றமையைச் சுட்டிக் காட்டுவதற்காகும். நான்முகன் திருவந்தாதியில் சீராம பிள்ளை 'பரன்' என்று சுட்டியிருப்பதும் திருச்சந்த விருத்தத்தில் திருக்கச்சி நம்பிகளும் 'பரன்' என்று கூறியிருப்பதும் ஒப்பிடத்தக்கது.

**11. இருபிரபந்தங்களில் பரத்துவ நிர்ணயம்:** திருமழிசையாழ்வார் தமது நான்முகன் திருவந்தாதி என்ற பிரபந்தத்தில் 'நான்முகனை' என்று முதல் பாசுரத்திலே தொடங்கி இடை இடையே பரந்துவத்தை எடுத்துக்காட்டி, பிரபந்தத்தின் இறுதிப் பாசுரத்தில் 'நான்' எனச் சுட்டி, மண்ட லித்து அந்தாதியாக நின்று பரத்துவத்தை எடுத்துக்காட்டுவதைக் காணலாம். 'நான்முகனை' என்று தொடங்கி 'நன்கறிந்தேன் நான்' (96) என முடிவதும், 'அந்தாதி மேலிட்டு அறிவித்தேன்' என்றும் இந்தத் தொடரை வலிமையுடன் அருளிய ஆழ்வார் இவர் ஒருவரே. ஏனைய ஆழ்வார்கள் அந்தாதி அருளியிருந் தாலும், 'அந்தாதி மேலிட்டு அறிவித்தேன்' என்று துணிவுடன்

---

10. திருக்கச்சி நம்பிகள் யாருக்கும் தனியன் செய்யாது திருமழிசையாழ்வாருக்கு மட்டும் தனியன் செய்து இருப்பதுபோல், நாதமுனிகளும் (ஆசாரியர் பரம்பரையில் முக்கியமானவர்) மதுரகவி யாழ்வார் (அந்தணர் குலம்) அருளிய 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தத்திற்குத் தமிழில் தனியன் செய்துள்ளார். அடுத்து நாலாம் வருணத்தில் அவதரித்த நம்மாழ்வார் அருளிய (வேதம் தமிழ் செய்த மாறன்) திருவாய்மொழிக்கு வடமொழியில் தனியன் செய்துள்ளதை ஒப்பிடலாம்.

அருளவில்லை. இவ்வாழ்வார் அறுதியிட்டு ஆணித்தரமாக அருளக் காரணம், அந்தாதியாக இருப்பதால் எல்லாப் பாசுரங் களையும் ஒன்றுக்கு ஒன்று விடாமல் மனனம் (மனப்பாடம்) செய்து நினைவில் கொள்ள வேண்டும் என்ற கருத்தினாலேயே ஆகும். இனி,

... ... ... யான் முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேனாழ் பொருளைச்
சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து [11]

என்ற பாசுரத்தில் நாராயணனுக்குப் பரத்துவம் அருளுவதனாலே 'அறிவித்தேன் ஆழ்பொருளை' என்று தொடங்கிப் பல பாசுரங் களில் அந்தாதியின் துணைக்கொண்டு, 'உருவின ஞானவாளை உறையிலிடாதவராக' நாராயணனே பரம்பொருள் என்பதைத் தாமே ஆராய்ந்து தேர்ந்தபின் 'சிந்தாமல் கொண்டு வந்து சேர்க்கின்றேன் உளங்கொண்மின்' என்று முதலில் வலிமையுடன் கூறுகின்றார்.

நான்முகன் திருவந்தாதியில் முதல் பாசுரத் தொடக்கத்திலே,

நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான் [12]

என்று இப்பாசுரத்தில், படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும், நான்முகன், திருமால், சிவன் செய்வ தாகக் கூறப்படுகிறது. அவர்கள் 'மும்மூர்த்திகள்' என்றும் வழங் கப்படுகிறார்கள். உண்மையிலேயே படைத்தல், அழித்தலைக் காட்டிலும் காத்தல் தொழில் முக்கியமாதலின் காத்தல் கடவுளாகிய திருமால் முதலில் நான்முகனைத் தனது நாபிக் கமலத்தில் படைத்தான் என்றும், தனது சங்கல்பத்தினால் எல்லா இயங்கு திணைப்பொருள்களோடு நிலைத்திணைப் பொருள்களைக் கூடப் படைத்தார் என்றும், 'நான்முகனும் தான் முகமாய்' என்ற தொடரின் தன்மைக்கேற்பத் தன்னைப்போன்று (முன்பு) ஐந்து முகங்கள் உடைய சிவனையும் படைத்தான் என்றும் கூறப்படு கின்றது.

சங்கல்பம் : சங்கல்பம் என்றால் "எல்லாப் பொருள்களு மாக, எல்லாமாகப் பரிணமிக்கக் கடவேன்" என்று தனது சங்கல்பத்தினால் தீர்மானம் எடுத்தவுடனே இவ்வுலகம் அனைத் தும் மற்றும் எல்லா உலகங்களும் படைக்கப்படுகின்றன என்பது

11 நான், திரு. 1
12 ஷெ 1

தெளியவேண்டும் என்பதைக் குறிக்கும். (இதை 'ஸமஷ்டி ஸ்ருஷ்டி' என்று கூறுவர்) அதாவது 'ஏககாலத்தில் ஒருசேர எல்லாவற்றையும் ஒன்று விடாமல் படைப்பது.' அத்தகைய, நாராயணன் நான்முகனைப் படைத்தற்குக் காரணம் தான் தொகையாகச் செய்த படைப்பைப் பின்னர் வகை செய்து விரிவாக்குவதற்குப் படைத்தார். (இதனை 'வியஷ்டி சிருஷ்டி' என்பர்). நான்முகனையும், சிவனையும் படைக்க மூலவித்தாக அமைபவன் நாராயணனே. இவர்கள் அவனுள் அடக்கம். எனவே, திருமாலுக்குச் 'சரீரம்' போன்றவர்கள். திருமால் 'சரீரி' ஆவான். ஆகவே, இப்பாசுரம் பரத்துவத்தின் சரீர - சரீரி பாவனையைக் காட்டும். 'நாராயணன்' என்ற சொல் மிகுந்த ஆழ்பொருளை உடையது.[18] எனவே சித்தர், முக்தர், பத்தர் மற்றும் காணப் படக்கூடிய அறிவுடைப் பொருள்கள், அறிவில்லாப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் அயநமாக நாராயணன் இருப்பதால் இவரது பரத்துவம் அறியப்படும். மற்றவர்களுடன் சேர்ந்து திருமால் இருப்பதால் 'சௌலப்பிய' குணம் (எளிமை) தெளியப்படும். ஆகவே, நாராயணன் 'சற்குண பிரம்மம்'. எல்லாக் கல்யாண குணங்களோடு கூடியவன் நாராயணன். அதாவது ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் என்ற குணங்களையுடையவன். எப்பொழுதும் சத்துவ குணமுடையவன்தான். ஆனால் 'நிர்க்குண பிரம்மம்' என்று சில இடங்களில் கூறியிருப்பதற்குப் பொருள், வெறுக்கத்தக்க தீய குணங்கள் இல்லாதவன் என்பதேயன்றிச் சத்துவ குணம் இல்லாதவன் என்று பொருள் கொள்ளக் கூடாது என்று தமது முதல் பாசுரத்தில் பரத்துவ நிர்ணயத்தைக் கூறுகின்றார்.

ஆராய்ந்து பார்க்குமிடத்து 'பரதெய்வமாக உள்ளவன் நாராயணனொருவனே!' என்று வியாசர் முதலான முனிவர்களும் கூறுவார்கள். அவனுடைய பெருமையை ஒருவரும் அறிய மாட்டார். ஆராயப்படும் பொருளின் நிர்ணயமும் இவ்வளவே ஆகும். எப்படிப்பட்ட தவம் செய்தவர்களுக்கும் முடிவில் பலனை (மோட்சம்) அளிப்பது திருமாலினிடத்தில் உண்டாகும் கருணையே ஆகும். இப்படிப்பட்ட பெருமை உடையவன் தேவன் ஒருவனே என்பதை,

> தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர்;
> ஆருமறியார் அவன் பெருமை; ஒரும்

18 முமுட்சுப்படி, 95-97 காண்க

பொருளும்முடிவும் இத்தனையே; எத்தவஞ் செய்தார்க்கும்
அருள்முடிவது ஆழியான் பால் [14]

என்பதை அருளி, திருமாலுக்குப் பிற தெய்வங்கள் உடலாகத் திகழ்கின்றன என்று சரீர-சரீரி பாவனையைக் காட்டுகிறார்.

கங்கையைத் தனது சடைமுடியில் மறையச் செய்து தாங்கிக் கொண்டிருக்கின்ற சிவன் தேவாதிதேவனான சர்வேசுவரனோடு ஒப்பாக உடையவன் என்று கூறுபவர்களின் கொள்கை ஏற்றுக் கொள்ளக் கூடியதாக அமைகிறதா என்பதை,

மங்கைபாகன் சடையில்வைத்த கங்கை யார்பதத்துநீர்
வனசமேவு முனிவனுக்கு மைந்தனான தில்லையோ
செங்கையா லிரந்தவன் கபால மாரகற்றினார்
செய்யதாளின்மல ரரன்சிரத்தி லான தில்லையோ
வெங்கண்வேழ மூலமென்ன வந்த துங்கள்தேவனோ
வீறுவாரணமரி லன்று விறலழிந்த தில்லையோ
அங்கண்ஞால முண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ
ஆதலா லரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே

— திவ்விய கவியின் பாசுரம்.

என்ற பாடல் விளக்குவதாக அமைகின்றது. மேலும், "நாரா யணனைப் போலவே சிவனைப் "பரதேவதை" என்று சிலர் கூறி மயங்கிக் கிடப்பது பொருந்தாது. தேவாதி தேவனான எம்பெருமான் பெருமை எங்கே? அப்பெருமானுடைய பாத தீர்த்தத்தைத் தலையில் தாங்கிக் கொள்பவனான சிவன் பெருமை எங்கே? எனவே, வேறொரு தெய்வமும் தனக்கு ஒப்பாக இல்லாத வீறு பெற்றிருப்பவனும், எப்பொருட்களின் ஒலிக்கும் வாசகமாம்படி உள்ளவனுமான எம்பெருமானைப் பற்றிச் சுருங்கச் சொன்னேன்" என்று அருளிச் செய்கின்றார்.[15]

உலகமெல்லாம் எம்பெருமான் ஆட்சியில் அடங்கியுள்ளதால் உலகங்களெல்லாவற்றுக்கும் தலைவன் அவனே (பரம்பொருள்) உலகங்கள் உயிரைப் (சத்தை) பெற்று இருப்பதும் திருமாலின் கருணையே. தேவர்களுக்கும், உலகில் உள்ள எல்லாப் பொருள் களுக்கும் தலைவன் திருமாலே, இவற்றை,

நீயே உலகெல்லாம்; நின்னருளே நிற்பனவும்;
நீயே தவத்தேவ தேவனும்—நீயே

14 நான். திரு. 2
15 ௸ 4

எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்(து)
இருசுடரும் ஆய இவை.[16]

என்ற பாசுரத்தில் எடுத்துக்காட்டி, இப்படிப்பட்ட பரதெய்வத்தை நான்முகனும், சிவனும் எக்காலத்தும் திருமலைக்குச் சென்று (சாமரம், திருமுத்துக்குடை) திருமாலின் திருவடிகளில் தாமரை மலர்களைச் சமர்ப்பித்துத் துதித்துக் கொண்டிருக்கும் சிறப்பை இரண்டு பாசுரத்தில்[17] வெளியிடுகின்றார்.

ஒரு பாசுரத்தில் ''பரம்பொருள் எனக்கு மட்டும் ஒப்பாகி இருக்கிறதே தவிர, மற்ற எவருக்கும் ஒப்பாக அமையமாட்டான். இதனை யார் அறிவார்கள்? என்னைத் தவிர உன்னை யாரும் அறியமாட்டார்கள்: என்பதையும் என்னுடைய மதிக்கு மூவுலகத்தில் உள்ளவர்களும் கூடினாலும் ஒப்பாக மாட்டார்கள்.'' திருமாலுக்கும் ஒப்பு ஒருவரில்லை என்பதை,

... ... ... எம்பெருமான்
தனக்குஆவான் தானேமற்று அல்லால், புனக்காயா
வண்ணனே! உன்னைப் பிறர் அறியார்,[18]

என்ற பாசுரத்தால் அறியலாம். மற்றொரு பாசுரத்தில் இவ்வுலகத்தில் உள்ளவர் நிலையை எடுத்துரைக்கின்றார். ''அறிவு முதலிய பெருமைகள் பொருந்தியவர்களாக நினைத்து இருப்பவர்கள், உயிர் வாழ்வதற்காகப் பிறர்க்கு ஆள்பட்டு (அடிமைப்பட்டு) இருப்பவர்கள், ஒருவன் தலைக்காகத் தம் தலையை அறுப்பதாகச் சொல்லி நரபலியாகத் திரிபவர்கள், பூதனையின் முலைக்காம்பில் உள்ள நஞ்சை உண்ட பெருமானைக் குறிப்பாக துதிக்க மாட்டாதவர்களாய் பாபங்களை அநுபவிப்பவர்களாக இருக்கின்றனர். எனவே, வேறாகி நினைக்கும் பிற தெய்வங்களை வணங்காமல் திருமாலைப் பரதெய்வமாக கருதி வழிபடவேண்டும்'' என்று பரத்துவ நிர்ணயம் செய்வதைக் காணலாம்.[19]

பின், ஒரு பாசுரத்தில் தன்னுடைய நிலையை முதலிரண்டு அடிகளில் எடுத்துக்கூறி, அடுத்து இரண்டு அடிகளில் பிற தேவதாந்தர பக்தியை விலக்கிக் கொள்ளுமாறு உபதேசிக்கிறார். அதாவது '' கீழ்க்கழிந்த காலங்களில் நான் (ஆழ்வார்) பலபல

16 நான். திரு, 20
17 ஷை 42, 43
18 ஷை 51
19 ஷை 52

தெய்வங்களை வழிபட்டு, முடிவில் பிற தேவதாந்தர பக்தியை விட்டொழித்து, கல்லாதவரது இலங்கையை அழித்த இராமபிரானை அல்லது வேறொரு தெய்வத்தைத் தெய்வமாகக் கொள்ள மாட்டேன்'' என்று தம்மைப்பற்றி எடுத்துக்கூறி, பின் மற்றவர்களுடைய செயல்களை விளக்குகிறார். கண்கொண்டு காணக் கூடாத தன்மையான, இடுகாடே இருப்பிடமாகவும், எலும்புகளை மாலையாகக் கட்டியணிந்து கொண்டு இருக்கும் பொல்லாத தேவரை, தெய்வத்தன்மை அற்றவர்களாயிருக்க கருதுங்கள், பிராட்டியின் சம்பந்தம் இல்லாமலே தேவர் என்று பெயர் பெற்றுள்ள சில தெய்வங்களை (திருவில்லாத் தேவரை) நீங்கள் நினைக்கவேண்டா (தேறேல்மின்)''[20] என்றும் எடுத்து அருள்கிறார்.

திருவில்லாத் தேவரை என்று குறிப்பிடுவதால், இங்கு

> காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்
> பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை
> ஆணமனென்று அடைந்துவாழும் ஆதர்காள்! எம்ஆதிபால்
> பேணிநும பிறப்பபுமும பிணககறுகக கிற்றிரே[21]

என்று இவ்வாழ்வார் தமது பிறிதொரு பிரபந்தத்தில் அருளிச் செய்திருபபது ஈண்டு நினைக்கத் தக்கது.

இப்பாசுரத்தின்மூலம் தமது வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றை எடுததுக்காட்டுகிறார் ஆழ்வார். தாம் யோகததில் இருந்தபோது சிவனை தமமிடம் வந்து வரம் தருவதாகக் கூற, தாம கேட்ட வரங்களையும், பரத்துவமும் அளிக்கமுடியாத தன்மை உள்ளவன் நான் என்று சிவனே தனது வாக்கால் கூறித் தமக்குப் 'பக்தி சாரர்' என்ற விருதைச் சூட்டியதைக் குறிப்பிட்டு, பரத்துவ நிலையை உடையவன திருமாலே என்று உரைக்கின்றார். இங்ஙனம் அசைக்க முடியாதபடி பல காரணங்களை எடுததியம்பி, நாராயணன் ஒருவனே பரததுவ தெய்வம்! அவனே பரத்துவததைக் கொடுப்பவன் என்று அறுதியிட்டு மேலும் தொடர்ந்து அருள் கிறார்.

எல்லாத் தெய்வங்களும், எல்லாப் பொருள்களும் நாராயணனின் படைப்பே என்று அறியமாட்டாதவர்கள் எவ்வளவு விரிவாகக் கற்றாலும் அத்தனையும் பயனற்றவை. ''தேவராய் நிற்குமத் தேவும் நெடுமால், 'அத்தேவரில் மூவராய் நிற்கும்

20 நான், திரு. 53

21 திருச். விரு., 69

முதுபுணர்ப்பும் நெடுமால்' 'யாவராய் நிற்கின்றதெல்லாம் நெடுமாலே என்று அறியாதவர்கள்.'' இவர்களின் கல்வி பயன் அற்றது[22] என்றும், பெரும்பாலும் இவ்வுலகத்தவர்கள் தேவதாந்தரங்களைப் பற்றி நின்று, சுவையற்ற அற்ப பலன்களைப் பெற்றுத் துன்பப் படுகின்றனரே அன்றித் திருமாலின் திருவடியை உணர்ந்து வணங்கி எழ யாருமில்லையே என்று தமது பரத்துவ தெய்வத்தின் சிறப்பை எடுத்தியம்புகிறார்.[23]

அடுத்து,

> செவிக்கின்ப மாவதும் செங்கண்மால் நாமம்
> புவிக்கும் புவியதுவே கண்டீர்; கவிக்கு
> நிறைபொருளாய் நின்றானை நேர்பட்டேன்; பார்க்கில்
> மறைப்பொருளும் அத்தனையே தான்.[24]

என்ற இப்பாசுரத்தில் திருமாலின் திருநாமத்தின் சுவையின்பத்தை எடுத்தியம்புகிறார். ''எம்பெருமானின் திருக்குணங்களையும் அவற்றுக்கு வாசகமான செவிக்கு இன்பம் உடைய திருநாமங்களையும் கேட்பதால் பூமியுலுள்ளவர்க்கெல்லாம் ஒதுங்க இடமாக அமையும் பாசுரங்களில் (கவிக்கு) நிறைந்த பொருளாகவும் நின்ற பெருமானை நான் தெய்வாதீனமாக அடையப்பெற்றேன். இங்ஙனம் தற்செயலாக வன்றி ஆராய்ந்து பார்க்கினும் மறைப்பொருள்களில் தேர்ந்த பொருளும் அவ்வளவே'' என்று திருநாமத்தின இனிமை மூலம் பரத்துவத்தை அறுதிசெய்கின்றார்.

மற்றொரு பாசுரத்தில் ''கண்ணபிரான் திருவடிகளை எந்நாளும் தொழுது வணங்கி அநுபவித்து இருப்பதையே நாளும் அநுசரித்துக் கொண்டிருந்த எனக்கு (ஆழ்வார்) சிவனும் ஒப்பாக மாட்டான்.'' என்கின்றார். ஆனால் மாத்ஸ்ய புராணத்தில் சிவனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன் என்று விதித்திருப்பதால் இக்கருத்துக்கு மட்டும் தன்னோடு சிவனை ஒப்புச்சொல்ல முடியும் என்று கூறுகிறார். முன்னடிகளில் சிவன் சத்துவ குணம் தலையெடுத்தபோது மட்டும் ''எம்பெருமானே காப்பவன'' என்பதும், இராசச, தாமச குணங்கள் தலையெடுத்தபோது' நானே ஈசுவரன' என்பதும் அங்ஙனம் மார்பு நெறித்துப் போரும்போது அப் பாவத்தைப் போக்கி அருள் செய்பவன் திருமால் என்றார். எனவே எக்காலத்திலும் பகவத் பக்தியைக் கொண்டிருப்பவர்க்குச் சிவன் ஒப்பாகமாட்டான் என்று தமது கருத்தை நிலைநாட்டுகிறார்.[25]

---

22 நான. திரு. 64
23 டை 55
24 டை 69
25 டை 84

இனி, தமது திருவந்தாதியில் இறுதியாக, ''எம்பெருமானே! சிவனுக்கும், நான்முகனுக்கும், சகல தெய்வங்களுக்கும் நீயே காரணன் என்பதை இப்போது திடமாகத் தெரிந்துகொண்டேன். எல்லா உயிர்களுக்கும் காரணபூதன் நீ; கற்பவை நீ; நல்கிரிசை நீ; நாராயணன் நீ; என்பதை நான் நன்றாகத் தெரிந்துகொண்டேன்'' என்பதை,

இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குந் தெய்வம்;
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை இனியறிந்தேன்;
காரணன் நீ; கற்றவை நீ; கற்பவை நீ; நற்கிரிசை
நாரணன் நீ; நன்கறிந்தேன் நான்.[26]

என்ற பாசுரத்தில் அறுதியிடுகின்றார். இங்ஙனம் நாரயணனே பரதெய்வம் என்றார். அவனே பரத்துவம் அளிப்பவன் என்றும் பல அந்தாதி பாசுரங்களில் எடுத்தியம்பித் தான் பரத்துவத்தை அளிக்கும் பெருமானை நன்கு அறிந்துகொண்டதாக நிலை நாட்டுகிறார். இவ்வாழ்வார் தமது திருச்சந்தவிருத்தத்திலும் பரத்துவ நிர்ணயம் செய்திருப்பது (ஒன்று முதல் பதினெட்டு பாசுரங்கள் வரை) நோக்கத் தக்கது.

இப்பிரபந்தத்தில் பரத்துவ நிலையில் திருமால் சங்கற்பத்தினால் காரண கிளைகளான பரிணாமத்தை உண்டாக்கி, பின் எல்லாம் தன்னிடம் அடக்கம் என்று ஒடுக்க காலத்தைக் கூறிப் பரத்துவநிலை எடுத்துக் காட்டப்படுகிறது. அண்டங்களுக்குக் காரணமாய், ஐம்பூதங்களையும் படைத்து, அந்தர்யாமியாய் நின்று காப்பவன்[27] என்றும், ஐம்புலன்களுக்கும், ஐம்புலன்களால் செய்யப்படும் செயல்களுக்கும், ஆறு இருதுகளுக்கும் தலைவனாய், எட்டுக் குணங்களுக்கும், பல சமயங்களுக்கும், மெய்யினோடு பொய்யுமாக நின்று, ஊறொடு ஓசை ஐந்துமாக நின்ற மாயவன் என்று அருள்கிறார்.[28] பஞ்ச பூதங்கள், ஐம்புலன்கள், பிரகிருதி தொடர்பு, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, ஐந்து தன் மாத்திரையும் படைத்தருள்பவன்[29] என்று பரதெய்வத்தின் செயலை எடுத்தியம்புகிறார்.

முப்பத்து மூன்று மெய்யெழுத்துகளுக்கும், பதினாறு உயிர் எழுத்துக்கும் ஏகாராதி ஐந்து எழுத்துக்கும் இருக்கு, யஜுர், சாமம்

26 நான். திரு. 96
27 திருச். விரு. 1
28 ஷை 2
29 ஷை 3

என்ற மூன்று மறைகளின் சொரூபமாய வேதங்களுக்கும் நிர்வாஹ கனாய், "ஓம் நமோ பகவதே வாசுதேவாய" என்ற பன்னிரண்டு எழுத்துகளாய், மூன்று எழுத்துகளாகிய பிரணவத்திலே அகாரத் துக்கு விளங்கும் சோதியாய் என்றும் அழிவற்ற விளக்காகி,[30] நிலைத்திணை, இயங்குதிணையாய் இருக்கும் பல உயிர்களின் ஆன்மாவாய் உள் கலந்து நின்று ஆதி பூதனாகவும், நான்முகனை உந்தியில் படைத்த முழுமுதற் கடவுள் ஆகவும்[31] எல்லாப் பொருள்களுக்கும் முழுமுதற் கடவுளாகக் கொண்டு அனைத்துக்கும் ஆதாரமாகிறான் என்கிறார்.[32]

முக்கியமான ஒரு மூர்த்தியும், முக்கியமல்லாத இரண்டு மூர்த்தியுமாய், ஞானம் அஞ்ஞானத்திற்கு நியாமகனாய், மூன்று காலம், மூன்று தீ, கடல் சூழ்ந்த பூமி ஆகியவற்றிற்கு நிர்வாஹகனாகிநின்ற மாயனை முக்கண்ணனான சிவனும், துதிக்க வல்லனோ[33] என்கிறார், "ஆதிகாலமாகி, வையகம் படைத்து, வானவர்க்கும், நித்திய விபூதி என்று பெயர் பெற்ற பரமபதத்திலுள்ள நித்தியசூரிகளுக்கும் அதிபதியாக இருந்து நான்முகன் உள்ளிட்ட உம்பர் உலகத்தவர்களுக்கும் முடிவு காலத்தை நீ அருளிச் செய்யா நின்றாய்"[34] என்கிறார். முறைப்படி சிவனும் வணங்கப் பெற்ற திருவடியை உடையவன், நின்மலன், நிரம்பிய குணங் களையுடைய வேத வாணர் - சாமகானம் மிகுந்த யாகங்களை இயற்றுபவரும் வணங்கத்தக்க தன்மையும் உள்ளது எம்பிரான் பக்கமே[35] என்று எடுத்தியம்புகிறார்.

பிறகு, திருமால் படைப்பால் அனைத்தும் படைக்கப்பட்டு பின் அவனுடன் சென்று ஒடுங்குவதை,

> தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
> தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தன்மைபோல்
> நின்னுளே பிறந்திறந்து நிற்பவுந் திரிபவும்
> நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின்க ணின்றதே[36]

என்று எடுத்தியம்பிப் பரத்துவ மகிமையை நிலை நாட்டு கின்றார்.

---

30 திருச். விரு. 4
31 ௸ 5
32 ௸ 6
33 ௸ 7
34 ௸ 8
35 ௸ 9
36 ௸ 10

வேதாந்த சாத்திரங்கள் மூலம் ஏகாங்கிகட்கு உறவை உண்டு பண்ணுபவன் திருமால், சிவபுராணங்களில் சொல்லப்படும் தேவர்கட்கும் அந்தர்யாமியாக இருப்பவன் திருமால், வேதத்தால் பரிச்சேதிக்கப்படாதென்று தோன்றுகிற சோதி திருமால், அந்தத் திருமால் காட்டிக் கொடுத்த வேதத்தில் சொல்லியபடி பிரமதேவன் உலகங்களை உண்டாக்கினான்; அவனும் சப்தங்களைக்கொண்டு சுருக்கமாகத் திருமாலின் கல்யாண குணங்களை எடுத்தியம்ப வல்லனோ?[37], திருமால் உலகத்தைப் படைத்து, மீண்டும் தன் வயிற்றில் ஒடுக்கி வைத்து திரும்பவும் வெளியிடச் செய்வதுமாய் இன்னதென நிர்ணயிக்க முடியாதபடி நின்றார். உலகம் முழுவதும் படைத்தவன் திருமால், அவற்றை திருவயிற்றில் ஒடுக்கி வைத்தவன் திருமால்; இந்த உலகத்தில் வந்து அவதரித்தவனும் திருமால், இவ்வாறு ஓரிடத்தையும் இருப்பிடமாக உடையவன் என்று அறுதியிடமுடியாதவன், திருமால், இங்ஙனம் உலகம் முழுவதும் திருமாலின் சரீரம், அப்படியிருந்தும் தனி விக்கிரகத்தை யுடையவன், இத்தகைய ஆச்சரியமான படிகளையுடையவன்,[38] என்கின்றார்.

இறைவன் இப்படிப்பட்டவன் என்று சொல்லக் கூடியது ஒரு படியுமில்லை[39] என்றும், தூய்மை, போகம் அருள்பவன், திருத்துழாய் மாலை அணிந்தவன், கூர்மமானவன், ஆழ்கடலில் துயில் கொண்ட ஆதிதேவன், அவனது நாமங்களுக்கும், குணங்களுக்கும் இன்னது என்ற நிலையில் இருப்பவன் சாம வேத கீதனாகிய கையில் திருவாழியை அணிந்தவன்[40] என்றும்; ஆறு அங்கங்களும், நான்கு வேதங்களும் ஆகி நின்று அவற்றுள்ளே தங்குகின்ற தன்மையாய் அந்தர்யாமியாய் உடையவன், கடலிலே படங்களை உடைய தலையில் சிவந்த கண்களை உடையவனான திருவனந்தாழ்வானாகிற அணையில் கண் வளர்கின்றவன், நிறைந்த செல்வத்தையும், குணங்களையும் உடையவன், சங்கினுடைய நிறத்தை போன்ற திருமேனியை உடையவன், திரேதாயுகத்தில் கையில் வில்லுமாகி அவதரித்த இராமன்[41] என்றும் எம்பெருமானின் உருவ அமைப்பை எடுத்துக் காட்டுகிறார்.

தலைக்கணங்களான தேவர்களையும், தாவரங்களையும், மனித, விலங்கு சாதிகளில் சோதி தோற்றமாய் அவதரித்தும்

37 திருச், விரு. 11
38 ஷை 12
39 ஷை 13
40 ஷை 14
41 ஷை 15

நிலைத்திணைகளும் அனுபவிக்கும்படி வந்து நின்றும், நித்தியமாய் விரிந்து வேத சாத்திரங்களின் கருத்தினால் நினைக்கவும் மாட்டாமல் மலைக் கூட்டங்கள்போல் அளவிட முடியாத மாட்சிமை யுடையவன் எம்பெருமான்[42] என்று வெளியிடுகின்றார்.

இறுதியில் திருமால், எல்லாவற்றிற்கும் காரணமான ஏகமூர்த்தி யான பரவாசுதேவனாகவும் சங்கர்ஷணன, பிரத்யுமனன், அநிருத்தன் என்ற மூர்த்திகளாகவும், நாலு மூர்த்தியாய், நன்மைசேர் போக மூர்த்தியாய், புண்ணிய வடிவமான மூர்த்தியாய், இப்படி எண்ணிறந்த மூர்த்திகளாய் அமைந்து அதற்கும் மேலே அடியார்கள் உகந்த உருவமாகிய அர்ச்சாவதாரமாய் நின்ற வண்ணம் உடையவர்[43] என்று எம்பெருமான் நிலையை அறுதியிடுகிறார்.

திருமழிசையாரும் மற்ற ஆழ்வார்களும், ஆசாரியர்களும் நாராயணனே முக்தியை (பரத்துவம்) அளிப்பவன் என்று விரிவாகக் கூறியிருப்பதை கண்ணபிரானும்,

> **நான் ஜகத்து முழுதினுயுடைய தோற்றத்துக்கும் ஒடுக்கத்துக்கும் காரணம் !**

என்றும்,

> **தனஞ்ஜயா, எனக்கு மேலானது வேறு எதுவும் இல்லை. நூலிலே மணிகள் போன்று இவை யாவும் என்மீது கோக்கப்பட்டிருக்கின்றன.[44]**

என்று கீதையில் அர்ச்சுனனிடம் தனது பரத்துவ நிலையை நிர்ணயம் செய்தது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

இங்ஙனம் திருமழிசையார் தமது இரு அருளிச் செயல் களின்மூலம் பல பாசுரங்களில் பரதெய்வத்தின் சிறப்பை எடுத்துக் கூறியபின், அவனே முக்தியை அருள்பவன் என்று எடுத்துக் கூறி நாராயணனின் பரத்துவ நிலையை நிர்ணயம் செய்கிறார்.

**12. திருவேங்கடமுடையானின் சிறப்பு :** திருமழிசை யாழ்வார் எம்பெருமானின் பரத்துவத்தைப் பல நிலைகளை எடுத்துக்காட்டிய பின்னர், முக்தியை அருள்பவனாகவும், உயர்ந்த தெய்வமாகவும் விளங்கும் **திருவேங்கடமுடையானின்**

42 திருச், விரு. 116
43 ஷை 17
44 பகவத்கீதை, 7:6; 7:7

சிறப்பையும், திருமலையையும் வருணனை செய்து அதன் சீர்மையை எடுத்துக்காட்டுவது காணத்தக்கது.

குறிப்பெனக்கு நன்மை பயக்க; வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை மெய்வினைநோய் எய்தாமல்
தான்கடத்தும் தன்மையான் தாள்![45]

இப்பாசுரத்தில் ''திருமலையில் நித்தியவாசம் செய்யும் திருவேங்கடமுடையானைத் துதிப்பதற்கு எனக்கு ஆசை. எம் பெருமானிடம் இடைவிடாது பக்தி செய்து அதனால் உண்டாகும் அநுபவம் பெருமையை உண்டாக்கிக் கொள்வதற்கு எனக்குக் குறிப்பாக இருக்கக் காரணம், சரீர சம்பந்தத்துக்கு அடியான கருமங்களும். பிணிகளும் வந்து சேராதபடி தானே அவற்றைப் போக்கி அருளும் கருணையை உடைய அப்பெருமானின் திருவடிகளை வெறுப்பனோ?'' என்று தம் பக்தி நிலையை முதலில் எடுத்துக் கூறி வெளியிடுகிறார்.

''திருவேங்கடமுடையானைக் கண்ணால் சேவிக்க வாய் விட்டுக் கூப்பிடா நின்ற நிலையில் திருக்கூடலையும் இழைக் கின்றேன்'' என்று ஆழ்வார் திருமாலைச் சேவிக்கப் பெறவேணு மென்றும், அங்கே நித்தியவாசம் செய்ய வேண்டும் என்ற ஆவலா யிருக்கின்றேன்[46] என்றும் குறிப்பிட்டுத் திருமலை நாதனின் சிறப்பை வெளிப்படுத்துகிறார்.

ஆழ்வார் தம்மை முதலில் முன்னிலைப் படுத்திக் கூறியபின் பிறரை முன்னிலைப்படுத்தித் திருவேங்கமுடையானின் சிறப்பை உரைக்குமபோது ''மிகவும் ஓங்கின சிகரத்தையுடைய திருமலை யைச் சென்று வணங்குங்கள். அப்படி வணங்கினால் அத்திருமலை யானது நீர்மையால், உங்கள் பாவங்கள் எல்லாம் போய்விடும்'' என்கின்றார். அத்திருமலையில் பரிமளம் மிக்க தாமரையிற் பிறந்த நான்முகனும், முக்கண்ணனான சிவனும் ஏனைய தேவர்களும் தாங்கள் தாங்கள் அதிகாரம் பெறுவதற்காக அத் திருமலைக்குச் சென்று எம்பெருமானின் திருவடிகளிலே தாமரை மலர்களை இட்டிறைஞ்சித் துதித்து கொண்டிருப்பார்கள் என்று கூறுவார். இதனை,

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக்கமல நான்முகனும கண்மூன்றத் தானும்
அடிக்கமல மிட்டேத்தும் அங்கு[47]

45 நான். திரு., 84
46 ,, 80
47 ,, 42

என்ற பாசுரத்தில் காணலாம். இங்ஙனம் திருவேங்கடமுடையானின் ஆதிக்கச் சிறப்பை மற்ற தெய்வங்களும் அறிந்து நாளும் தொழுது இருப்பதை நுவலுகின்றார்.

அடுத்த பாசுரத்திலும், மேக மண்டலத்தளவுஞ் சென்று கிட்டியிருக்கிற சிகரத்ததான வடவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு திருவந்திக் காப்பிடுவதற்காகச் சந்திரனைச் சடையில் ஏறவைத்துக் கொண்டுள்ள சிவனும், தாமரைப் பூவிற் பிறந்தவனாகிய நான்முகனும் திருமுத்துக்குடை முதலான உபகரணங்களைச் சேகரித்துக் கொண்டு காலந்தோறும் திருமலைக்குச் செல்வார்கள்[48] என்று வேங்கடவனின் ஏற்றத்தை வெளிப்படுத்துகிறார்.

ஆழ்வார் பாசுரங்களில் காணப்படாத புராண நிகழ்ச்சியாவது: நான்முகன் மடியில் திருமால் குழவியாக இருந்து கொண்டு, நான்முகனிடம் வரம்பெற வந்த இராவணனின் தலையைத் தமது கால் விரலால் எண்ணிக் காட்டினார் என்ற கதையை எடுத்துக் கூறி இங்ஙனம் குமரன் நிற்கும் இடமான திருமலைக்குச் சென்று உங்கள் கிளரொளியிளமையுடன் இருக்கும்போதே சென்று வணங்குங்கள் என்று எடுத்துரைக்கிறார்.[49]

இதுவரை பரதெய்வமான திருவேங்கடமுடையானின் சிறப்பை அறுதியிட்ட ஆழ்வார் இனி திருவேங்கமுடையான் - எழுந்தருளியிருக்கும் திருமலையை இயற்கையுடன் எடுத்தியம்பி அதன் சீர்மையையும் எடுத்துக்காட்டுவது காணத்தக்கது.

மழைபோல் சொரிகின்ற பெரிய அருவிகளானவை பாய்ந்தோடி வரும்போது, வழியில் இருக்கும் இரத்தினங்களைத் திரட்டிக் கொண்டு வந்து கொட்டுகின்றனவாம். அப்படி வந்து குவியும் இரத்தினங்களின் ஒளியைக் கண்டு தீச்சுவாலைகளாகப் பிரமித்து நிற்பதை யானைகள் கண்டு அஞ்சி நிற்கின்றன; மலைப் பாம்புகள் அந்த இரத்தினங்களை மின்னலென வெருவிப் புற்றிலே சென்று மறைகின்றன. இங்ஙனம் இயற்கை வளம் உடையது திருமலை,[50] என்று உரைக்கிறார்.

---

48 நான். திரு. 43
49 ,, 44
50 ,, 30

ஆழ்வார் திருக்கூடலிழைத்தவுடன், பல மலைகளின் பெயர்களை (பசுமலை, குருவிமலை போன்றவை) சொல்லி வருகிற அடைவிலே திருமலையின் பெயரையும் சொல்லலானார். இப்படி உக்தியாகச் சொன்னவளவில் 'மோட்சம் நமக்கு உறுதி' என்னும்படியாக அமைந்தது. தாம் சொன்ன ஒரு சிறிய சொல்லுக்குப் பெரிய பேறு கிடைத்ததே என்று நினைத்து நிலைத்து அப்படியே நின்று விட்டார். இப்படி நிற்கக் காரணம், எம்பெருமான் ஓதப்படுகின்ற வேதங்களாகிற சாத்திரங்களில் வலையினுள் அகப்பட்டு கொண்டு நிலைபேராமல் நிற்கின்ற தன்மைப்போல, ஆழ்வாரும் இலக்குமி நாதனான எம்பெருமானுடைய திருவடிகளாகின்ற வலையில் அகப்பட்டுத் தரித்து நிற்கின்றார். [51]

**உட்பொருள்** : எம்பெருமான் சகல சாத்திரங்களாலும் பிரதி பாதிக்கப்படுபவனாதலால் அவனுக்கு 'நூலாளன்' என்பது திருநாமம். இந் நாமத்திற்குப் பெண் பால் 'நூலாட்டி' என்பதாகும். அவளுடைய கேள்வனார் எம்பெருமான் இங்கு,

1. எம்பெருமான் சாத்திரமாகிய ஒரு வலையில் அகப்பட்டான்;
2. ஆழ்வார் எம்பெருமான் திருவடி என்ற ஒரு வலையில் அகப்பட்டார், என்பது.

அடுத்து, "ஒலிக்கின்ற அருவிகளின் மூலமாக முத்துக்கள் உதிரப் பெற்றதாய் திருவோணத் திருநாளில் (திருப்பல்லாண்டு பாடுகை, வேத பாராயணம் செய்கை, ஆடுகை, பாடுகை, முதலிய வற்றினால்) உண்டான ஒலி அதிரப்பெற்றதால், பக்தர்கள் விரும்பி வந்து சேரப்பெற்றதான திருவேங்கடமலையை இருப்பிடமாக உடையவன் என் நெஞ்சில் வந்துவிட்டான். எனவே அத்திருமலையில் சென்று சேவிக்க விருப்பம் கொண்டுள்ளேன்" என்று தமது மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறார். [52]

திருவடித் தாமரைகளில் அன்பு பூண்டு மலர்களைப் பணிமாறி மங்களாசாசன பண்ணி, வெட்டி வீழ்த்திய மரங்கள் போலவே கால் பேராமல் நிற்கும்படியாக எல்லாப் பிரதேசங்களிலும் விளங்கும் குணங்களால் பெருமைபெற்று எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய குளிர்ந்த அருவிகளை உடைத்தான திருமலையே நித்திய சூரிகளுக்கும் மண்ணோர்களான நிலத்தேவர்களுக்கும் நிதியாக இருக்கும் [53] என்பதைப் போற்றியுரைக்கிறார்.

---

51 நான், திரு. 40
52 ,, 41
53 ,, 45

அடுத்து, ஆழ்வார் திருமலையில் நடக்கும் ஒரு நிகழ்ச்சியைக் காட்டுவார். " ஒரு யானை சந்திரனைப் பிடிக்கத் தன் துதிக்கையைத் தூக்கி நிற்க, இவ் யானையைப் பிடிக்க நாற்புறமும் வேடர் சூழ்ந்துகொள்ள, குறவர்கள் வில்லெடுத்துப் போகுமிடமான திருமலையை நாமெல்லாரும் வலம்செய்து வந்து, மகிழ்ந்து கூத்தாடுவோமாயின் இதுவே நமக்கு நன்மை "[54] என்று விளக்குவார்.

திருமலையானது நல்மணிவண்ணன் வாழும் ஊர் என்பதை,

**நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும்**
**பொன்மணியும் முத்தமும் பூமரமும் - பன்மணிநீ**
**ரோடுபொரு துருளும் கானமும் வானரமும்**
**வேடுமுடை வேங்கடம்**[55]

என்ற இப்பாசுரத்தில் இயற்கை வருணனையுடன் வெளியிடு கின்றார்.

இறுதியாக, திருமலையின் சீர்மையை எடுத்துரைக்கும்போது, நித்தியசூரிகளால் உண்மையான பக்தியுடனே தொழுவதையும், திருமலையே உயிரின் பாவங்களையும் உடம்பில் பற்றின நோய் களையும் போக்கடிக்க வல்லது; அசுரர்கள் மாளும்படித் தனது திரு ஆழியைப் பிடித்துத் தேவர்களைக் காத்து அருளிய எம்பெருமான் எழுந்தருளியுள்ள இடமும் திருவேங்கடமாகும் ; இதனை,

**வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால் ;**
**வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும் ; - வேங்கடமே**
**தானவரை வீழத் தன்னாழிப் படைதொட்டு**
**வானவரைக் காப்பான் மலை.**[56]

(வேங்கடம் — என்பது வடசொல்; வேம் + கடம் — வேங்கடம் ; வேம் — பாவம் ; கடம் — எரித்தல் என்பது பொருள்)

என்பார். தம்மை வந்தடைந்தவர்களது பாவங்களையும் நோயினை யும் எரித்து ஒழிப்பதனால் " வேங்கடம் " எனப் பெயர் பெற்றது. பாவங்களை எரித்துத் திருவருள் தரும் (செல்வம், பக்தி) என்பதால் 'திரு' என்ற அடைமொழியைச் சேர்த்துத் 'திருவேங்கடம்' என்று வழங்கப்பெறுகிறது. இங்ஙனம் எல்லோரும் சென்று வணங்கும் சீர்மையும் சிறப்புமுடைய திருவேங்கட மலைக்குச் சென்று அங்கு

54 நான். திரு. 46
55 ,, 47
56 ,, 48

எழுந்தருளியுள்ள திருமாலை வணங்கி உய்வு பெறுமாறு ஆற்றுப் படுத்துகின்றார். இங்ஙனம் பரதெய்வம் நித்தியவாசம் செய்யும் திருமலையின் சீர்மையும் திருவேங்கடமுடையானின் சிறப்பையும் எடுத்துரைத்துப் பரத்துவ நிர்ணயத்தைத் தலைக்கட்டுகிறார்.

**முடிவுரை :** இதுகாறும், இரு பிரபந்தங்களின் பெயர்க் காரணம், இயற்பா-இசைப்பாவில் இடம்பெறும் தன்மை, தனியன் பெயர்க்காரணம், தனியன் செய்தவரைப்பற்றிய குறிப்பு, நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்ற இரு பிரபந்தங்களில் பரத்துவ நிர்ணயம் எங்ஙனம் செய்யப்பட்டது ஆகியன விளக்கிக் காட்டப்பட்டன. அடுத்து, பரதெய்வமாக விளங்கும் திருவேங்கட முடையானின் சிறப்பு, திருமலையின் சீர்மை, இயற்கை ஆகியவை வருணனையுடன் எடுத்துக்காட்டி ஆராயப்பட்டுள்ளன.

# புராண-இதிகாசக் கதைகள் — தசாவதாரங்கள்

அவதாரச் சிறப்பு

"அம்புலாவு மீனுமாகி ஆமையாகி யாழியார்
தம்பிரானுமாகி மிக்க தன்புமிக்க தன்றியும்
கொம்பராவு நுண்மருங்குல் ஆயர்மாதர் பிள்ளையாய்
எம்பிரானு மாய வண்ணம் என்கொலோ வெம்மீசனே!"

— திருச். விரு. 38.

# புராண - இதிகாசக் கதைகள் — தசாவதாரங்கள்

**இவ்வியலில்** திருமழிசையார் தமது பாசுரங்களில் தொன்று தொட்டு வழங்கும் புராண இதிகாசக் கதைகளை எங்ஙனம் சுட்டிப் புலப்படுத்துகிறார் என்பது எடுத்துக்காட்டப்படுகின்றது. பின்னர், திருமாலின் தசாவதாரங்களான மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம், இராமன், கிருஷ்ணன் ஆகிய அவதாரங்கள் வெளிப்படையாக எடுத்துக்காட்டப்பெறுகின்றன. பரசுராமன், பலராமன், கல்கி ஆகிய அவதாரங்கள் மிக நுட்பமாகப் புலப்படுவது சுட்டிக்காட்டப்படுகின்றது. இறுதியாக தசாவதார தத்துவத்தின் உட்பொருளும் ஆராயப்படுகின்றது.

**புராண - இதிகாசக் கதைகள் :** திருமாலின் திருக்கல்யாண குணங்களைப் போற்றும் அவதாரங்கள் கணக்கற்றவை. இவ் அவதாரங்கள் பாரத பூமியில் பல இடங்களில் சீவான்மாக்களைக் கடைத்தேற்றும் பொருட்டும் அறத்தை நிலைநாட்டுவதற்காகவும், எம்பெருமான் தாமே இறங்கி வந்து போற்றற்குரிய பல அவதாரங்கள் எடுத்தருளினார். இதனை ஆழ்வார்களும் ஆசார்யார்களும் அறுதியிட்டுக் கூறியுள்ளார்கள்.

> நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், உயிர்களுக்கெல்லாம்
> ஈசன் எனினும் என்பிரகிருதியை வசப்படுத்தி ஆத்ம
> மாயையினால் அவதரிக்கின்றேன்.[1]
>
> பாரதா, எப்பொழுதெல்லாம் அறம் அழிந்துபோய்
> மறம் மேலெழுகிறதோ அப்பொழுதெல்லாம்
> என்னைநான் பிறப்பித்துக் கொள்கிறேன்.[2]

என்பவை கீதையின் வாக்குகள்.

---

1 பகவத்கீதை, 4:6
2 ,, 4:7

இங்ஙனமாகத் திருமால், பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்க தமது அவதாரங்களை எடுத்த செய்திகள் புராண இதிகாசங்களில் கூறப்பெற்றுள்ளன. தமது அவதாரங்களால் பல லீலாவிநோத விளையாட்டுகளையும் மேற்கொண்டு தமது மகிமைகளை நிலைநிறுத்துகிறான். திருமழிசையாழ்வார் தொன்று தொட்டு வழக்கில் வந்த புராண - இதிகாச காலங்களில் காணப் பெறும் திருமாலின் செயல்களையும் புராணக் கதைகளையும், பிறசெய்திகளையும் தமது பாசுரங்களின் மூலம் விளக்கியும், சிறப்பித்தும் காட்டியும் திருமாலின் பெருமையை நிலைநாட்டு வதைக் காணலாம்.

**புராணம் - சொற்பொருள் விளக்கம் :** எந்த ஒரு நிகழ்ச் சியோ, கதையோ, செயலோ தொன்றுதொட்டு இன்று வரை வழங்கி வருகின்றதோ அதுவே புராணம் எனப்படும். புராணம் என்ற சொல்லுக்குப் பழமை என்பது பொருள். புராணங்கள் பதினெட்டு வகைப்படும் என்றும் கூறுவர். அதர்வண வேதகாலத் திலே புராண நூல்கள் சிறந்த இலக்கியங்களாக கருதப்பட் டுள்ளன. புராணம் என்னும் சொல் உபநிடதங்களிலும், சாத் திரங்களிலும் காணப்படுகின்றது. மகாபாரதத்தில் புராணங்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இந்திய நாட்டுப் பண்டை இலக் கியங்களை வேத நூல்கள் என்றும், இதிகாசப்புராண நூல்கள் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம். வேத நூல்கள் ஒரு சாரருக்கே உரிமையுடையனவாக இருந்தன. ஆதலால் சமூக மக்கள் இதிகாச புராண நூல்களையே படித்து வந்தனர். சிற்றூர்களில் அவற்றிற்குப் பொருள் கூறப்பட்டு வந்தது. மக்கள் அவற்றைக் கேட்டு ஒழுக்கமும் கல்வியும் பெற்று வந்தனர். புராணங்களும் இதிகாசங்களும் மக்களுடைய பொதுப் பண்பாட்டுக்குப் பெரிதும் துணை செய்து வந்தன.[3]

**தமிழ்ப் புராணங்கள் :** புராணங்கள் வடமொழியில் வேதம், இதிகாசம் என்ற இவற்றிற்கு அடுத்துத் தோன்றியவை.[4] பழைய இலக்கிய இலக்கண மரபுகளையும், புராணமெனத் தமிழர் வழங்கியதும் உண்டு. நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரி யர்கள் மகாபுராணம் என்ற இலக்கண நூலிலிருந்து வெண்பா வடிவான சில நூற்பாக்களை மேற்கோள் காட்டுவர். ஆதலின் அது பழைய இலக்கண மரபுகளைக் கூறும் ஒரு நூலாதல் வேண்டும்.[5] இவ்வடிப்படையில் திருமாலின் பல அவதாரங்கள்

3 கலைக்களஞ்சியம், ப. 436
4 „ ப. 438
5 „ ப. 440

புராணங்களில் குறிப்பிடப்பெறுகின்றன. திருமாலின் இவ்அவதார நிகழ்ச்சிகளை புராண - இதிகாசங்களில் அன்றுமுதல் இன்றுவரை போற்றி வழங்கி வருகின்றனர். இப்புராண இதிகாசக் கதைகளைத் திருமழிசையாழ்வார் எங்ஙனம் தமது பிரபந்தங்களில் காட்டியுள்ளார் என்பது ஈண்டு ஆராயப்படுகிறது.

## (அ) புராண - இதிகாசக் கதைகள்

1. **கஜேந்திர மோட்சம் :** ஒரு சமயம் திருமாலின் பக்தனான இந்த்ரத்யும்நன் என்னும் அரசன் வழக்கப்படி அதிக பக்தியுடன் திருமால் வழிபாட்டில் ஈடுபட்டு இருந்தான். அப்பொழுது அகத்திய முனிவர் அங்கு வந்தார். முனிவர் வருகையைக் கவனியாத அரசன் தமது முழுக் கவனத்தையும் வழிபாட்டில் செலுத்திக் கொண்டிருந்தான். இதனைக் கண்ட முனிவர் அரசன் தம்மை மதித்திலன் என்று மாறாகக் கருதினார். சினத்தினால் அரசனைப் பார்த்து ' நீ யானைப்போலச் செருக்குற்று இருந்தமையால் யானையாகக் கடவை ' என்று சபித்தார். அரசனும் யானையாகத் தோன்றினாலும் தான் முன்செய்த திருமால் பக்திபலனால் இப்பிறவியிலும் நாடோறும் மலர்கொண்டு, திருமாலுக்கு வழிபாடு செய்து வந்தது. ஒருநாள் வழிபாட்டிற்காகத் தடாகத்தில் தாமரை மலரைப் பறிக்க இறங்கியபோது, யானையின் காலை அங்குள்ள முதலை கவ்விக்கொண்டது. முதலையும் முற்பிறவியில் கந்தர்வனாக இருந்தது. 'தேவலன்' என்ற முனிவர் தவம் செய்து கொண்டிருந்தபோது அவர் காலைப்பற்றி இழுத்தான். அவரும் சினம் கொண்டு, 'நீ மறைந்து வந்து எம்மிடம் அபசாரப்பட்டதால் முதலையாகக் கடவை' என்று சபித்தவுடனே யானை இறங்கிய தடாகத்தில் முதலையாக வந்து பிறந்து இருந்தது.

உடனே கஜேந்திரன் என்ற அவ்யானை முதலையின் பிடியில் அகப்பட்டுப் போராட முடியாமல் இறுதியில் 'ஆதிமூலமே' என்று தன் துதிக்கையைத் தூக்கி அழைத்தவுடனே திருமால் கருடன் - மீதேறி ஓடி வந்து தனது சக்கராயுதத்தால் முதலையின் தலையைத் துணித்துக் கஜேந்திரனைக் காப்பாற்றினார். பின் கஜேந்திரனுக்கும், முதலைக்கும் மோட்சம் அளித்தார் என்பது புராண வரலாறு.

இவ்வரலாற்றைத் திருமழிசையார் தமது பாசுரத்தில்,

> ... ... ... ... மதித்தாய்
> மடுக்கிடந்த மாமுதலை கோள்விடுப்பான் ஆழி
> விடற்கிரண்டும் போயிரண்டின் வீடு,[6]

என்றும்,

6 நான், திரு. 12

ஆனை காத்தொரானை கொன்று [7]

என்றும் எடுத்துக்காட்டுகிறார்.

**இந்த வரலாற்றின் உட்கருத்து :** கஜேந்திரன் முதலில் பல தெய்வங்களையும், திருமாலின் பல திருநாமங்களையும் அழைத்தது. ஆனால் இறைவன் காப்பாற்ற வரவில்லை. தன் சீவன் குன்றிப்போகும் நிலை ஒருபுறம்; மறுபுறம் முதலையுடன் போராட்டம். இந் நிலையில் ஆதிமூலமாக இருப்பவன் யார் ? என்று நினைத்து 'ஆதிமூலமே' என்று விளித்த அளவிலே திருமால் விரைந்து வந்து ஆட்கொண்டார். இதிலிருந்து ஆதிமூலமாக இருப்பவன் 'நாராயணனே !' என்பது விலங்கினமான யானைக்கே தெளிய விளங்கியுள்ளது.*

இங்ஙனம் கஜேந்திரன் வாக்கிலிருந்து ஆதிமூலமாக (உலக காரணபூதன்) இருப்பவன் நாராயணனே ! என்பதையும் அவனே வீடுபேறு (பரத்துவம்) அளிப்பவன் என்பதையும் நிலைநிறுத்துகிறார்.

**தத்துவம் :** இவ் கஜேந்திர மோட்ச வரலாறு 'சரணாகதி' தத்துவத்தை எடுத்துக்காட்டுகிறது. திருமழிசையாழ்வார் அருளும் இவ்வரலாற்று நிகழ்ச்சிக்குக் கீழ்வரும் குறிப்புகள் அரண் சேர்ப்பதைக் காணலாம்.

'வெங்கண் வேழமூலமென்ன வந்ததுங்கள் தேவனோ' [8]
என்று பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும்,

கடுந்த கராம் கதுவு நிமிர்கையெடுத்து மெய்கலங்கி
உடுத்த திசை அனைத்தினுறும மசனறு ஒளிகொள்ள
—உறுதுயரால்
அடுத்த பெருந் தனிமூலத் தரும்பொருளே பரமாவென்று
எடுத்தொரு வாரணமழைபப நீயோ வணறே னெனறாய் [9]

என்று கம்பர் குறிப்பிடுவார்.

அடுத்து திருவேங்கடத்தந்தாதியில்

வேங்கடத் தாரை மீடேற்ற நின்றருள் வித்தகரைத்
தீங்கடத் தாரைப் புனைந்தேத்திலீர் சிறியீர் பிறவி
தாங்கடத் தாரைக் கடத்து மென்றேத்துதிர் தாழ்கயத்து
ளாங்கடத் தாரை விலங்குமன்றோ சொல்லிற்றைய மற்றே [10]

என்று குறிப்பிடுவதைக் காணலாம், நம்மாழ்வாரும்,

---

* அன்று கஜேந்திரனைக் காப்பாற்ற திருமால் பெரிய திருவடி மீதேறி வரும்போது வேகம் பற்றாமல் அதன் கழுத்தை அழுத்த வலப்புறக் கழுத்து சற்று சாய்ந்தது. அப்படியே கருடனை இடுக்கிக்கொண்டு மடுக்கரை வந்த காட்சி, இன்றும் திருவல்லிக்கேணி ஸ்ரீ வரதர் சந்நதியில் சேவித்தால் பெரிய திருவடி கழுத்து சற்று சாய்ந்த நிலையில் வரதர் வீற்றிருப்பது கவனிக்கத்தக்கது

7 திருச். விரு., 40, 8 திவ்வியகவியின் பாசுரம்,
9 கம்பராம, விராதன் வதைப்படலம் செய்யுள் 49, 10 திருவே.அந்., 18

**மழுங்காத வைந்நுதிய சக்கர நல்வலத்தையாய்**
**தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே !** 11

என்று சுட்டிக்காட்டுவார்.

2. **மார்க்கண்டேயர் வரலாறு :** முதலில் பரதெய்வத்தின் மகிமையைக் கஜேந்திரன் என்ற யானையின் மூலம் நிலைநிறுத்தினார். அடுத்து சைவ சமயத்தின் அடியவரான மார்க்கண்டேயன் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி அவர் அறிந்து கொண்ட திருமாலின் பரத்துவத்தைச் சுட்டிக்காட்டுகிறார்.

மிருகண்டு என்னும் முனிவர் மகப்பேறு இன்றி பிரமனை நோக்கித் தவம் புரிந்தார். பிரமன் நேரில் தோன்றி ''முனிவரே அறிவு இன்றியும், உறுப்புக்குறையும், பெரும் பிணியும், தீய குணங்களும் உடைய நூறு வயது வாழும் மகனை விரும்புகின்றீரா ? அறிவுக் கூர்மையும், அழகுத் திருமேனியும், உடல் நலனும், நற்குணமும் உடைய பதினாறு வயதே வாழ்பவனான மகனை விரும்புகின்றீரா ?'' என்று வினவ, முனிவர், ''நற்குணமுள்ள நம்பியையே விரும்புகின்றேன்'' என்று கூற, நான்முகனும் அங்ஙனமே அருளினார். அங்ஙனமே பதினாறு வயது பெற்றுப் பிறந்த மார்க்கண்டேயன், தனது குறைந்த ஆயுளைக் குறித்து வருந்திய தனது பெற்றோரைத் தேற்றினான். தனது விதியைக் கடந்து வருவதாகச் சொல்லிச் சென்றவன் நாடோறும் சிவ வழிபாடு செய்து வருகையில் முன் பிரமன் கொடுத்த வரமான பதினாறு வயது முடியுந்தருணத்தில் யமன் தன் தூதரை அனுப்பினான். அவர்கள் மார்க்கண்டேயனது தவக் கனலால் அவனை அணுக மாட்டாது வாளா திரும்பினர். யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனை அனுப்பினான். அவனும் மார்க்கண்டேயனை அணுகி நயபயங்களால் அழைக்க முயல, மார்க்கண்டேயன் தான் வர முடியாது என்று மறுத்துவிட்டான். யமன் மிகக் கொதித்துத் தானே நேரில் வந்து மார்க்கண்டேயன் மீது காலபாசத்தை வீசினான். முனிக்குமாரன் வெகுண்டோடிச் சிவலிங்கத்தைக் கட்டிக்கொண்டான். யமன் வீசிய பாசக்கயிறு சிவலிங்கம் உட்பட மார்க்கண்டேயனைச் சேர்த்து இழுக்கும்போது சிவபெருமான் ஸ்ரீமந் நாராயணனைச் சிந்தை செய்து அவனது திருவருள் பெற்று அங்கு நின்றும் வெளிப்பட்டு யமனைக் காலால் உதைத்துத் தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு வயதுடையவனாகவே பலகோடியாண்டு இனிது வாழும்படி நீண்ட ஆயுளைக் கொடுத்தருளினன். இந்த மார்க்கண்டேயர் வரலாற்றை,

11 திருவாய் 3.1;9

**....................லராகில்—**
**மார்க்கண்டன் கண்ட வகையே வருங்கண்டீர்**
**நீர்க்கண்டன் கண்ட நிலை**[12]

என்று அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் மார்க்கண்டேயன் பரம சிவனிடத்தில் நீண்ட ஆயுளை விரும்பிப் பணிந்தான். அவனைக் காப்பாற்ற முடியாமல் மார்க்கண்டேயன் கேட்ட ஆயுள் பலனையும், அளிக்கத்திறன் அற்றவனாய் அந்தச் சிவன், சீமந் நாராயணன் பக்கலில் உள்ளது என்று மார்க்கண்டேயனுக்குக் காண்பித்து, திருமாலின் மூலமாக இரட்சித்துக் காக்கப்பட்டான். இவ்வாறு மார்க்கண்டேயனே முன்பு தெரிந்துகொண்ட பரத்துவ நிலையை எடுத்துக்காட்டி விளக்குகிறார் ஆழ்வார்.

1. மார்க்கண்டேயர் சிவனின் மூலமும், தானே நேரில் கண்டதின் மூலமும் திருமாலின் பக்கம் பரத்துவம் இருக்கிறது என்றும், அவனே பரதெய்வம் என்றும் தெரிந்துகொண்டார்.

2. மார்க்கண்டேயன் வரலாறுக்கு மகாபாரதத்தில் இருந்தும், பாகவத நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டப்படுகிறது,[13]

**தத்துவம் :** இவ்வரலாற்றின் மூலம் திருமாலுள் எல்லாம் அடக்கம் என்பதைப் பர- தத்துவமாக எடுத்துக் காட்டப் படுகிறது.

இம் மார்க்கண்டேயன் வரலாற்று நிகழ்ச்சியை மற்ற ஆழ்வார் களும் தமது பாசுரங்களில் குறிப்பிடுவதை,

**புக்கடிமையினால் தன்னைக்கைகண்ட மார்க்கண்டேயவனை**
**நக்க பிரானும அனறு உய்யக் கொண்டது நாராயணனருளே**[14]
**நிழுத்தி நும்முள்ளத்துக் கொள்ளும் தெய்வங்கள்**
**உமமையுய்யக்கொள்**
**மறுத்தும் அவனோடேகண்டீர் மார்க்கண்டேயனும் கரியே,**[14A]

என்றும்,

**கண்டும் தெளிந்தும் கற்றாா கண்ணற் காளன்றியாவரோ ?**
**வண்டுண் மலர்தமதாங்கல் மார்க்கண்டேயனுச்கு வாழுநாள்**
**இண்டைச்சடைமுடி ஈசனுடன் கொண்டு உசாச்செல்ல**
**கொண்டங்குத் தனமொடும கொண்டுஉடன்**
**சென றதுணர்ந்துமே**[14B]

என்பதை நம்மாழ்வார் அருளிய பாசுரங்களில் காணலாம் பொய்கையாழ்வாரும,

12 நான். திரு., 31

13 நான். திரு. திவ்வியார்த்ததீபிகை உரையில் காண்க

14 திருவாய். 4-10:8, 14A திருவாய் 5-2:7, 14B திருவாய் 27-5:7

**செற்றெழுந்து தீவிழித்துச் சென்றவிந்த வேழுலகும்**
**மற்றிவை ஆவென்று வாயங்காந்து — முற்றும்**
**மறையவற்குக் காட்டிய மாயவனை யல்லால்**
**இறையேனும் ஏத்தாது என்நா.[15]**

(மறையவர்—மார்க்கண்டேயர்) என்ற பாசுரத்தால் சுட்டிக்காட்டு வார். திருமங்கையாழ்வாரும்,

**மன்னு நான்மறை மாமுனி பெற்ற**
**மைந்தனை மதியாத வெங்கூற்றத்**
**தன்னையஞ்சி நின்சரணெனச் சரணாய்[16]**

என்றும் அருளிச் செய்துள்ளார்.

இங்ஙனம் திருமழிசையாழ்வார் அருளிய மார்க்கண்டேய வரலாற்று நிகழ்ச்சியை மற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் உறுதிப்படுத்துகின்றன.

**3. பாணாசுரன் வரலாறு:** ஒரு சமயம் சிவனைக் குறித்துப் பாணாசுரன் என்ற அரக்கன் தவம் செய்தான், அப்பொழுது அவனுக்கு முன் சிவபிரான் தோன்றி 'உம்மைக் காப்பாற்றுவேன்' என்று உறுதி அளித்தான். ஒருநாள் தன் மகள் உஷையின் காரணமாகப் பாணாசுரன் போரில் ஈடுபட்டுத் துன்பம் அடைந்தபோது தம்மைக் காப்பாற்ற முயன்று சிவனும் அவனது புதல்வர்களும் மற்றும் வெப்பு, பிடாரி, அங்கிகளும் (அக்நிதேவதை) ஓடிவந்து உதவிசெய்ய முடியாமல், எதிரியிடமே அவனைக் காட்டிக் கொடுத்துத் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளப் புறமுதுகுகாட்டி ஓடிவிட்டனர். சிவபிரான் தன் பக்தன் பாணாசுரனுக்காக கண்ண பிரானை வேண்ட பின் உயிர் பிழைக்க வேண்டியவனான வாணன் மீது கருணைக் காட்டக் கண்ணபிரான் அவனுடைய ஆயிரந்தோள் களில் நான்கு தோள்களை மட்டும் விட்டுவிட்டு மற்ற தோள் களையும் வெட்டி வீழ்த்தியதோடு உயிரையும் கொடுத்துக் காப்பாற்றினார். இவ் நிகழ்ச்சிக்குப் பின் சிவனால் காப்பாற்ற முடியாதபோது திருமால்தானே முன்வந்து பாணாசுரனைக் காப்பாற்றித் தானே இரட்சகன் என்பதை நிலை நாட்டினார். இவ் வரலாற்று நிகழ்ச்சியை ஆழ்வார் தமது பாசுரங்களில் சில இடங்களில் சுட்டிக்காட்டுவதை,

**அவரிவ ரென்றில்லை யணங்கவேல் தாதைக்கு**
**எவரு மெதிரில்லை கண்டீர்—உவரிக்**
**கடல்நஞ்ச முண்டான் கடனென்று வாணற்**
**குடனின்று நோற்றா னொருங்கு.[17]**

15 முதல். திருவந். 94
16 பெரி. திரு. 5-8:6
17 நான் திருவந், 56

என்ற பாசுரத்திலும், பெரியார் சிறியார் என்று ஒருவரும் இல்லை. காமனுக்குத் தந்தையான கண்ணபிரானுக்கு ஒருவரும் எதிர் நிற்கவில்லை என்பதைக் கண்டீர். கடலில் தோன்றின நஞ்சை உட்கொண்டவனான சிவன் பாணாசுரனுக்கு, 'உன்னைக் காப்பாற்ற நான் கடமைப்பட்டவன், என்று கூறிக் காப்பாற்ற முடியாமல் அவனே உடன்நின்று தன் குடும்பத்தோடு ஓடிப் போனதை 'ஒருங்கு தோற்றான்' என்று அழுத்திக் காட்டுகிறார்.

அற்பப் பலன்களைத் தருபவர்களான சிவன் முதலியோர் தாங்களைப் பற்றினவர்களுக்கு ஒரு ஆபத்து வந்த அச்சமயத்திலும் முதுகுகாட்டி ஓடுபவர்களே அன்றி நிலைநின்று காப்பாற்றும் திறமையுடையவர்கள் அல்லர் என்பதைப் புலப்படுத்துகிறார்.

அடுத்து, வெட்கத்தை விளைவிப்பதான சாபத்தையடைந்த சிவன், காளியோடும், தம்முடைய மக்களோடும், திரண்ட சேனை யோடும் பயங்கரமான போர்க்களத்திலிருந்து (வெம்சமத்து) பாணாசுரனைக் காப்பாற்ற முடியாமல் வேகமாக (மண்டி) ஓடிப் போனதை,

மோடியோடு இலச்சையாய சாபமெய்தி முக்கணான்
கூடுசேனை மக்களோடு கொண்டுமண்டி வெஞ்சமத்து
ஓடவாண னாயிரங் கரங்கழித்த ஆதிமால்
பீடுகோயில், கூடுநீர் அரங்கமென்ற பேரதே[18]

என்ற பாசுரத்திலும், அவர்கள் ஓடிச் சென்றளவில் பாணாசுரனது ஆயிரம் கைகளை அறுத்தொழித்த பரமபுருடன் எழுந்தருளியுள்ள இடம் காவேரியோடு கூடின பெருமை தாங்கிய கோயிலான திருவரங்கம என்னும் திருநாமத்தை உடையது என்று போற்றித் துதிக்கின்றார்.

இனிய சந்தநயத்துடன் சொற்கள் அமைந்த இப்பாசுரத்தை சேவிக்கும்போது சிவனும், அவனது மக்களும், சேனையும் ஓடிப் போவது போன்ற உணர்ச்சியை அனுபவிக்கலாம்.

சிவனை வணங்கிய பாணாசுரன் பட்டபாடும், அந்த சிவன் காப்பாற்ற ஓடிவந்து தானும் கண்கலங்கினபோது அத்தெய்வங் களின் பெருமையை அவர்கள்தாமே அறிவர் என்பதை,

---

18 திருச். விரு., 53

குந்தமோடு சூலம்வேல்கள் தோமரங்கள் தண்டுவாள்
பாதமான தேவர்கள் பரந்துவா னகமுற
வந்தவாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்
அந்த அந்தவா ஆகுலமஅமரரே யறிவரே[19]

என்ற பாசுரத்திலும் ஈட்டி, சூலங்கள், வேலாயுதங்கள் கதைகளுடன் கூட்டம் கூட்டமாய்வந்த சிவனும், தேவதைகளும் பல திக்குகளிலும் சிதறிப்போய்த் தங்கள் இருப்பிடமான வானுலகம் சென்றுசேர, எதிர்த்து வந்த பாணாசுரனுடைய ஆயிரந் தோள்களை அறுத்து எறிந்தார் என்று கூறுவார். அதன்,

பின்னர் தாம் பாணாசுரனுடைய ஆயிரம் தோள்களைக் கழித்த போது மொட்டைத் தலையனாய், நீறு பூசியவனான சிவனும் அவனுடைய மக்களும், வெப்பு, பிடாரி, அங்கிகளும் போர்க்களததி லிருந்து அஞ்சி வெட்கத்துடன் ஓடிப்போனதை,

வண்டுலாவு கோதைமாதர் காரணத்தி னால்வெகுண்டு
இண்டவாண னீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்
முண்டனீறன் மக்கள்வெப்பு மோடியங்கி யோடிடக்
கண்டுநாணி வாணனுக் கிரங்கினான்எம மாயனே[19A]

என்ற பாசுரத்தில் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். பாணா சுரன் தன் மகள் உஷையின் காரணமாகப் போரில் இருந்த காலத்தில் அவனுக்கு அருள் செய்து காப்பாற்றியவன் ஆயனாகிய கண்ணபிரான் என்று அறுதியிடுகிறார்.

இவ்வரலாற்றில் திருமாலே இரட்சகன் என்பதையும் அவனே பரதெய்வமாக விளங்கி அருள் செய்பவன் என்பதையும் நிலைநாட்டு கிறார்.

**தத்துவம் :** இந்நிகழ்ச்சி திருமாலின் இரட்சகத்தன்மையையும், வீரத்தையும எடுத்துக்காட்டுகின்றது.

பாணாசுரனின் கதை நிகழ்ச்சியை வலுப்பெறச் செய்கின்றன கீழ்வரும் கருத்துக்கள்.

மாயப் பொருபடை வாணனை ஆயிரந் தோளும்பொழிகுருதி
பாயச் சுழற்றிய ஆழிவல்லானுக்குப் பல்லாண்டு கூறுதுமே[20]

என்று பெரியாழ்வாரும்.

---

19 திருச். விரு., 70
19.A ௸ 71
20 திருப்பல்லாண்டு, 7

பரிவின்றி வாணனைக் காத்தும்என்று அன்று
    படையொடும் வந்து எதிர்ந்த
திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னும்
    அங்கியும் போர்தொலைய[21]

என்று நம்மாழ்வாரும் சுட்டிக்காட்டுவர். இவர்தம் கருத்தைப் பிள்ளைப் பெருமாளையங்காரும்,

வாடியோட வனசமன்ன விருகண்வெள்ள மருவிபோன்
    மருவியோட மதனன்வாளி யுருவியோட வாடையூ(டு)
டாடியோடவற்றிலோசை செவியிலோட வண்டுழா
    யாசையோடுமெங்கள் பேதை யாவியோடனீதியோ
மோடியோடவங்கிவெப்பு மங்கியோடவைங்கரன
    முடுகியோடமுருகனோட முக்கணீசனமக்களைத்
தேடியோடவாணனா யிரம்புயங்கள் குருதிநீர்
    சிந்தியோட நேமிதொட்ட திருவரங்க ராசரே[22]

என்று அறுதியிடுகிறார்.

இங்ஙனம் பாணாசுரன் நேரிடையாகவே பரதெய்வத்தின் சிறப்பை அறிந்துகொண்டதைத் திருமழிசையார் நிர்ணயம் செய்கின்றார்.

4. **கபால மோட்சம் :** ஒரு சமயம் பரமசிவன் தன்னைப் போலவே நான்முகனும் ஐந்து தலையுடையனவாயிருப்பது பார்த்து, எல்லோரும் மயங்குவதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி பிரமனது தலையில் ஒன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக் கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொண்டதும், "இதற்கு என்ன செய்வது?" என்று அவன் கவலைப்பட்டு நிற்க, முனிவர்களும் தேவர்களும் இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்க வேண்டும் என்றும், என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும் என்றும் உரைத்தனர். சிவனும் பல இடங்களில் திரிந்து பிச்சையேற்றும் அக்கபாலம் நீங்காமல் இருக்க, முடிவாக பதரிகாச்சிரமததை அடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரநதபோது, அப்பெருமான் 'அட்சயம்' என்று பிச்சை இட, உடனே கபாலம் நிறைந்து கையைவிட்டு அகன்றது. திருமால் தனது திருமார்பின் வேர்வை நீரையும், குருதியையும் கொண்டு அக்கபாலத்தை நிறைத்து ஒழித்ததாகவும் வரலாறு உண்டு. இப் புராண வரலாற்றைத் திருமழிசையாழ்வார் தமது பாசுரங்களில் சுட்டிக் காட்டுவதைக் காணலாம்.

21 திருவாய்., 3. 10 : 4

22 திருவரங், கலம்., 38

**மேல்நான் முகரனை யிட்ட விடுசாபம்**
**தான்நா ரணனொழித்தான் தாரகையுள் — வானோர்**
**பெருமானை யேத்தாத பேய்காள்! பிறக்கும்**
**கருமாயம் பேசில் கதை**[23]

என்ற பாசுரத்தில் அருளிச்செய்வர். இங்ஙனம் குரு பாதகத்தைப் போக்கிச் சிவனையும் உய்யக் கொள்ளவல்ல பரதேவதையான நாராயணனின் பெருமை நாடு நன்கறிந்ததாய் இருக்கும். அவனை ஏத்தி வணங்கி நின்றால் உய்யலாம் என்று உபதேசம் செய்கின்றார்.

அடுத்துச் சிவன் பிரமகபாலத்தைப் போக்கத் திருமாலிடம் வந்து நின்று இரந்தபோது தம்முடைய திருமேனியில் இருந்து செங்குருதியையும் பிழிந்து கபாலத்தை நிரப்பியதும், கபாலம் அகன்றது. இதனை,

**வேறிசைந்த செக்கர் மேனி நீறணிந்த புன்சடைக்**
**கீறுதிங்கள் வைத்தவன்கை வைத்தவன் கபால்மிசை**
**ஊறுசெங் குருதியால் நிறைத்தகா ரணந்தனை**
**ஏறுசென் றடர்த்தஈச பேசுகூசம் இன்றியே**[24]

என்ற பாசுரத்திலும், அறியலாம். (வன்கபால் - எவ்வளவு பிரயாசைப்பட்டும் அக்கபாலம் கைவிட்டு நீங்காதிருந்தமையால் வன்கபால் எனப்பட்டது), இவ்வாழ்வார் குறிப்பிட்ட இக்கருத்தைப் பூதத்தாழ்வாரும்,

**ஏறுஏழும் வென்றுஅடர்த்த எந்தை எரியுருவத்து**
**ஏறுஏறி பட்ட இடுசாபம்—பாறேறி**
**உண்டதலைவாய் நிறையக் கோட்டங்கை யொண்குருதி**
**கண்டபொருள் சொல்லின், கதை**[25]

என்ற பாசுரத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது நோக்கத்தக்கது. இங்கு, திருமழிசையார் பேசில் கதை என்று பாசுரத்தில் (31) அருளியிருப்பது போல, பொய்கையாரும், சொல்லின கதை என்று முடித்திருப்பது நோக்கத்தக்கது.

23 நான். திரு., 31
24 திருச். விரு., 42
25 இரண் திருவந்.,

கங்கை நீரோடு கூடின சிவந்த சடையை உடையவனும், கறுத்த கழுத்தை உடையவனும், எல்லா இந்திரியங்களும் கலங்குமாறு வெளுத்துப்போன கபாலத்திலே பிச்சை வாங்கியுண்டு ஜீவித்த கோர பாதகனுமான சிவபிரானுடைய வலிதான துக்கம் தீரும்படி திருத்துழாய் மாலையை அணிந்த திருமார்பினின்றும், வாசநீர் (வேர்வை) கொண்டும கபாலத்தை நிரப்பியதை,

சலங்கலந்த செஞ்சடைக் கறுத்தகண்டன் வெண்டலை
புலன்கலங்க வுண்டபாத கத்தன்வன் துயர்கெட
அலங்கல்மார்வில் வாசநீர் கொடுத்தவன் அடுத்தசீர்
நலங்கொல்மாலை நண்ணுவண்ணம் எண்ணு;
[ வாழி நெஞ்சமே[26]

என்ற பாசுரத்தில் இதே ஆழ்வார் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

''என் மனமே!, நீங்காத கல்யாண குணங்களையுடைய நலம் கொள் திருமாலை அணுகும் வழியாகிற அவனது திருவருளையே அநுசந்தித்திருப்பாயாக'' என்று, தம் நெஞ்சுக்கு எடுத்தியம்புகின்றார்.

அநுபவித்தே தீரவேண்டிய மகாபாவத்தை தொலைத்த சத்துவகுணம் நிரம்பிய ஆயனுக்கு தன் அன்பை செலுத்திய ஆழ்வார்,

... ... ... ... என்நெஞ்சம்
மேயானை யில்லா விடையேற்றான் வெவ்வினைதீர்த்(து)
ஆயனுக் காக்கினேன் அன்பு.[27]

என்று குறிக்கின்றார்.

இங்ஙனம் சிவனே தம் அகவாழ்வில் ஏற்பட்ட சாபத்தைப் போக்கி அருள் செய்தவன் திருமாலே என்று எண்ணி, அவனிடம் சரண் அடைந்ததும் தன் சாபம் போனதும் கண்டு, திருமால் ஒருவனே பரதெய்வம் என்று நன்கு அறிந்து கொண்டான் சிவபிரான்.

**தத்துவம் :** திருமால் கபால மோட்சத்தின்மூலம் தனது ஐசுவரிய தத்துவத்தை நிலைநிறுத்தினார். இந்தக் கபால மோட்சத்தை எடுத்துக்காட்ட இன்றும் 'பதரிகாச்சிரமத்தில்' உள்ள பிரமகபாலத்தில் மக்கள் பிண்டம் போடுவதை நேரில் காணலாம். இக்கருத்தை,

26 திருச். விரு., 113
27 நான். திரு., 58

பேசநின்ற சிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே கபாலநன் மோக்கத்துக் கண்டுகொண்மின்[28]

என்று நம்மாழ்வாரும் அறுதியிடுகிறார்.

திருமழிசையாரின் கபால மோட்ச வரலாற்றுக்குக் கீழ்வரும் பாசுரங்களும் அரண் செய்கின்றன.

விற்பெரு விழவும் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழச்
செற்றவன் தன்னை, புரமெரிசெய்த சிவனுறு துயர்களை தேவை [29]

என்று மங்கை மன்னனும்,

செங்கையா லிரந்தவன் கபாலமா ரகற்றினார்[30]

என்று திவ்வியகவியும்

பண்புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற
வெண்புரிநூல் மார்பன் வினைதீர—புண்புரிந்த[31]

என்று பொய்கையாழ்வாரும் அருளியுள்ளனர். கம்பநாடனும்,

வையத்தார் வானத்தார் மழுவாளிக்கு அன்றளித்த
ஐயத்தால் சிறிதையந் தவிர்ந்தாரும் உளரையா[32]

என்று அறுதியிடுகிறார்.

இங்ஙனம் திருமழிசையார் முதலில் சிவனின் அடியார்களான மார்க்கண்டேயன், பாணாசுரன் ஆகிய இருவர்மூலம் பரத்துவத்தையும், பரதெய்வத்தையும் அறிந்துகொண்ட பின் சிவனுக்கே கபால மோட்சம் ஈந்து திருமால் தனது பரத்துவத்தை நிலை நிறுத்திக் கொண்டதைத் திருமழிசையாழ்வார் புராண கதைகள் மூலம் வெளியிட்டருளினார்.

**5. மதுகைடவர் வதை :** முன்னொரு காலத்தில் மதுகைடவர் என்ற அசுரர்கள் நான்முகனிடமிருந்து வேதங்களை அபகரித்துக் கொண்டு கடலில் சூழ்கி மறைந்துவிட்டனர்; ஞானச் சுடராகவும், ஒலியாகவும் இருந்த வேதங்கள் மறைந்ததும்

28 திருவாய்., 4. 10 : 4
29 பெரிய. திரு. 2. 3 : 1
30 திவ்வயக்கவியின் பாசுரம்
31 முதல். திருவந்., 46
32 கம்ப. ஆரணிய, விராதன் வதை., செய். 59

உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, நான்முகன் முதலா னவர் செய்வது என்ன என்று தெரியாமல் வருந்தி நின்றனர். திருமால் திருவுள்ளம் இரங்கி ஹயக்கிரீவனாகிக் கடலினுள் புகுந்து அவ்வசுரர்களைக் கொன்று வேதங்களை மீட்டுக் கொண்டு வந்து, நான்முகனுக்கு அம்சரூபியாக (அன்னம்) இருந்து அவற்றை உபதேசித்தருளினார் என்பது வரலாறு. இவ்வரலாற்று நிகழ்ச்சியைத் திருமழிசையாழ்வார், ஒரு சில இடங் களில் சுட்டிக் காட்டியுள்ளதை,

இகழ்ந்தாயிருவரையும் வீய[33]
[இருவர்—மதுகடைவர்]

என்றும்,

'புள்ளாகி வேதநான்கும் ஓதினாய்'[34]

என்றும் சுட்டிக்காட்டியுள்ளதை அறியலாம்.

**தத்துவம் :** மதுகைடவர்களை அழித்ததின்மூலம் அவர் களின் அகங்காரம் (தன்முனைப்பு) அதருமத்தையும் போக்கி, வீரம், மோட்சம் ஆகிய தத்துவங்களை நிலைநாட்டினார்.

**6. மது அசுரன் வதை :** மதுசூதனன் என்ற மதுவென் னும் அசுரனைக் கொன்று திருமால் தமது பெருமையையும், வீரத்தையும் நிலைநிறுத்திக் கொண்டு வீடுபேற்றையும் அருளி னார். இப் புராணக்கதையைத் தமது பாசுரத்தில் திருமழிசையார்

மதுசூதன் றன்னை[35]

என்று ஒரு சொற்றொடரால் அருளிச்செய்திருப்பதைக் காணலாம்.

**தத்துவம் :** மறம் வீழும், தருமம் வெல்லும் என்பதை நிலை நாட்டினார்.

ஆழ்வார் இதுவரை தொன்றுதொட்டு வழங்கி வருகின்ற புராண இதிகாசக் கதைகளால் போற்றிப் புகழ்ந்த பரத்துவமகிமை அறியப்படுகிறது.

33 நான். திரு., 24
34 திருச். விரு., 19
35 நான். திரு, 61

## (ஆ) தசாவதாரங்கள்

பரம்பொருள் தாம் அவதரித்த காரணங்களையும், அவதார நோக்கத்தையும் அருளும்போது,

> நல்லாரைக் காப்பதற்கும், கெட்டவரைக்
> கரங்கொடுக்குதற்கும், அறத்தை நிலை
> நாட்டுதற்கும் யுகந்தோறும் நான்
> அவதரிக்கிறேன்[36]

என்று கண்ணன் கீதையில் விளக்குகிறார். இதனையே ஸ்ரீராமுலு தேசிகன் என்பார் 'விருப்பு வெறுப்பு போன்ற அழுக்கினை உள்ளத்தில் ஒட்டிக்கொண்டு' உடலே ஆன்மாவென்றும், தான் சுதந்திர னென்றும், மோகத்தில் மூழ்கிக்கொண்டு செயல்படும் மானிட சாதியில் பிறந்த பகவான் தான் விரும்பிய உருவங்களை எடுத்தான் அவதாரக் காலத்திலே; தன் அடியார்களுக்காகத் தன் சீற்றத்தினை முடித்துகொண்டான்; 'பக்த விரோதிகளை அழிக்கும் திறத்திலே இவ்விதமாக ஆச்சர்யமான லீலைகளை நடத்துகிறான் பகவான்' என்கிறார்.[37] நம்மாழ்வாரும்.

> மனப்பரிப்போடு அழுக்குமானிட சாதியில் தான்பிறந்து
> தனக்கு வேண்டுருக் கொண்டு தான்தன சீற்றத்தினை
> [முடிக்கும்[38]

என்று அருளிச் செய்வார். ஜகத் காரணனாயிருக்கும் எம்பெருமான் எடுத்த அவதாரங்கள் பலப்பல. அவற்றுள் தசாவதாரங்கள் சிறப்புடையவை. இத் தசாவதாரங்களில் எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள் வெளிப்படும். இவ் அவதாரங்கள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலும், ஆசார்யர்களின் உபதேசங்களிலும் சிறப்பித்துப் போற்றப்படுகின்றன. ஒப்புயர்வற்ற தசாவதார மகிமையைத் திருமழிசையாழ்வார் எங்ஙனம் தமது பாசுரங்களில் அறுதியிடுகிறார் என்பது ஈண்டு எடுத்துரைக்கப் படுகிறது. தசாவதாரங்களாவன :

| | | | |
|---|---|---|---|
| (1) | மச்சாவதாரம் | (6) | பரசுராமவதாரம் |
| (2) | கூர்மாவதாரம் | (7) | இராமாவதாரம் |
| (3) | வராகாவதாரம் | (8) | பலராமவதாரம் |
| (4) | நரசிம்மாவதாரம் | (9) | கிருஷ்ணாவதாரம் |
| (5) | வாமனாவதாரம் | (10) | கல்கி அவதாரம் |

36 பகவத்கீதை, 4 - 8
37 தசாவதாரத் தத்துவங்கள், ப. 13
38 திருவாய். 6, 4 : 7

என்பவையாகும். திருமாலின் இத் தசாவதாரங்களைத் திருமழிசை யாழ்வார் தமது பாசுரங்களில் இடையிடையே வைத்துப் போற்றி யுள்ளார். இவ்வாழ்வார் திருமாலின் பத்து அவதாரங்களில் மச்சம், கூர்மம், நரசிம்மம், வாமனம், கிருஷ்ணன் என்ற அவதாரங் களைப் பாசுரங்களில் தெள்ளத் தெளிய அருளிச் செய்துள்ளார். பரசுராமன், பலராமம், கல்கி அவதாரங்களை மிக நுட்பமாக, உட்பொருளாக வைத்துப் பாசுரங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

1. **மச்சாவதாரம்** : மந்வந்தர பிரளயத்தில் நான்முகன் உறங்கும்போது 'சோமுகன்' என்ற குதிரை முகங்கொண்ட அரக் கன் ஒருவன் அவனிடம் வந்து அவன் கையில் வைத்திருந்த நான்கு வேதங்களைத் கவர்ந்து சென்று கடலில் மூழ்கி மறைந்துபோனான். வேதங்களால்தான் தேவர்களுக்கு வலிமை ஏற்படுகிறது என்பதை அவன் அறிந்தான். எனவே அவ்வேதங்களைக் கடலினுட்சென்று மறைத்து வைத்தான். கண்விழித்த நான்முகன் தன்னிடம் வேதம் இல்லாமல் இருப்பதைக் கண்டு பல இடங்களில் தேடிய பின்னர் கிடைக்காமையால் தேவர்களுடன் திருமாலிடம் சரண் அடைந்தான். அவரும் 'மச்சப் பெருமானாக' அவதரித்துக் கடலில் சென்று அவ்வரக்கனோடு போரிட்டு வென்று, மீண்டும் நான்முகனிடம் வேதத்தை உபதேசித்து ஒப்படைத்தார் என்பதே மச்சாவதாரமாகும். இவ் அவதாரத்தை,

**பத்தினாய தோற்றமோடு**[39]

என்ற பாசுரத்தில், பத்து அவதாரங்களைக் குறிப்பிடும்போது அதில் மச்சாவதாரம் அடங்கும். அடுத்து,

**மீனாயுயிரளிக்கும் வித்து**[40]

**அம்புலாவு மீனுமாகி**[41]

என்பவற்றால் மச்சாவதாரம் எடுத்ததையும்,

**புள்ளதாகி வேத நான்கும் ஓதினாய்**[42]

என்ற தொடரால் சோமுகனிடமிருந்து வேதத்தைக் கைப்பற்றியதை யும், அன்னமாகி வேதங்களை நான்முகனுக்கு உபதேசித்ததையும், விளக்குவதைக் காணலாம்.

39 திருச். விரு., 79
40 நான். திரு, 22
41 திருச். விரு., 35
42 ஷை 19

இவ்வவதாரத்தில் ஈடுபட்ட குலசேகரப் பெருமாள் மச்சமாக பிறக்க ஆசைப்பட்டதை,

> தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
> மீனாய் பிறக்கும் விதியுடையெனாவேனே[43]

என்று திருவேங்கடமுடையானிடம் வேண்டி நிற்கின்றார். மீனாக இருக்கும்போது குளத்தில் இறங்கவரும் பக்தர்களுடைய திருவடிகளை வணங்குவதாகவும், அவர்கள் திருவடிபட்ட அக்குளத்து நீரையே உணவாகக் கொண்டு மகிழ்வதாகவும் தம் உட்கருத்தில் வெளியிடுகிறார்.

இங்ஙனம் ஆழ்வார்கள் மச்சாவதாரத்தின் பெருமையைக் கூறும் போது ஸ்வாமி தேசிகனும் தன் சங்கல்பத்தாலேயே மீனாக அவதரித்தவன் என்று பொருள்பட 'இச்சாமீன்' என்கிறார்.[44]

**மச்சாவதாரத்தின் தத்துவம் :** (1) திருமால் மீனாக அவதரித்துத் தண்ணீரில் மூழ்கி வேதங்களை மீட்டு வெளி வந்தது, 'மானுட உள்ளம் ஆசையினால் மிதக்கலாம்; மூழ்கி விடக்கூடாது' என்ற தத்துவத்தையும்,

(2) 'மறைகளைக் காத்து நான்முகனுக்கு உபதேசித்ததைப் போல் அடியார்களின் பற்றற்ற உள்ளத்தினைக் காத்து மறையில் மறைந்துள்ள உட்பொருளைத் தெளிவுறுத்திக் காப்பான்.[45] என்பதையும்,

(3) மனிதர்கள் பிறவிக்கடலாகிய நீரில் நீந்திக் கரையேற வேண்டும் என்பதற்காகத்தான் மீனாக நீரில் நீந்திக் கரையேறி வழி காட்டினார் என்பதையும் விளக்குவதாகக் கொள்ளலாம்.

**2. கூர்மாவதாரம் :** தேவேந்திரன் செல்வச் செருக்கால் துருவாசரிடம் சாபம் பெற்றதும், தன்னிடம் உள்ள செல்வங்கள் நீங்கப் பெற்றதும் அசுரர்கள் அவனை வென்றனர். தேவேந்திரன் தான் பழைய நிலையைப் பெறுவதற்காகத் திருமாலிடம் சரண் அடைந்தான். அவரும் கருணைக் கொண்டார், அசுரர்களிடம், "உங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும், நீண்ட ஆயுட்காலத்துடன் இருக்கவும் சாவா மருந்தாகிய அமுதத்தைப் பெறத் திருப்பாற்கடலைக் கடையுங்கள்" என்று அருளினார்.

43 பெரிய திரு., 4:2
44 தசாவதாரத் தத்துவங்கள், ப.13
45 ஷை 18

தேவர்களும் அசுரர்களுடன் இணைந்து, திருப்பாற்கடலில் மந்தர மலையை மத்தாக நாட்டி, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகப் பூட்டி, பாம்பின் வால் பகுதியைத் தேவர்களும், தலைப் பகுதியை அசுரர்களும் பிடித்துக் கொண்டு கடைய முற்பட்ட பொழுது மலையானது கடலில் மூழ்கத் தொடங்கியது. உடனே அவர்கள் திருமாலிடம் சரண் அடைந்து வேண்டி நின்றதும், தாம் ஆமையாக அவதரித்து மந்தர மலையை முதுகின்மேல் தாங்கி நிற்க, அவர்கள் கடைய முற்பட்டனர். அப்பொழுது எட்டுவித திவ்யப் பொருள்கள் தோன்றிட, அவற்றை ஒவ்வொரு வருக்கு ஒவ்வொன்றைக் கொடுத்தனர். பின் அமுதம் தோன்றியதும் இருவர்களிடம் போட்டி ஏற்பட்டது. திருமால் மோகினி வேடம் கொண்டு தேவர்களுக்கு அமுதம் வழங்கினார் என்பது இவ்வர லாறு ஆகும்.

இவ்வவதாரத்தைத் திருமழிசையாழ்வார் பல பாசுரங்களில் அநுபவித்து மகிழ்கின்றார். இதனைத் திருச்சந்த விருத்தத்தில்,

> கூசமொன்று மின்றிமா சுணம்படுத்து, வேலைநீர்
> பேசநின்ற தேவர்வந்து பாடமுன் கிடந்ததும்
> பாசநின்ற நீரில்வாழும் ஆமையான கேசவா!
> ஏசஅன்று நீகிடந்த வாறுகூறு தேறவே[46]

என்றும்,

> அரங்கனே! தரங்கநீர் கலங்கவன்று குன்றுசூழ்!
> மரங்கள்தேய மாநிலங் குலுங்கமா சுணம்சுலாய்
> நெருங்கநீ கடைந்தபோது நின்றசூரர் என்செய்தார்?[47]

என்றும்,

> ஆமையாகி யாழியார்[48]

என்றும்,

> ஆமையாகி யாழ்கடற் றுயின்ற ஆதிதேவ[49]

என்றும்,

> வெற்பெடுத்து வேலைநீர் கலக்கினாய்[50]

என்றும் அநுபவிப்பதைக் காணலாம்.

46 திருச் விரு., 20
47 ஷை 21
48 ஷை 35
49 ஷை 14
50 ஷை 89

தேவர்களும் அசுரர்களும் கடலைக் கடையும் வல்லமையற்ற வராய் நிற்க, அது நோக்கித் திருமால் தான் ஒரு திருமேனி யைத் தரித்து தேவர்கள் பக்கத்திலும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலும் நின்று கடைந்தருளினமையை மற்றொரு பிரபந்தமாகிய நான்முகன் திருவந்தாதியில்,

> மலையாமை மேல்வைத்து வாசுகியைச் சுற்றி
> தலையாமை தானொருகை பற்றி — அலையாமல்
> பீறக் கடைந்த பெருமான் திருநாமம்
> கூறுவதே யாவர்க்கும் கூற்று[51]

என்று குறிப்பிட்டு அநுபவித்து மகிழ்வர். மேலும்,

> வெள்ளைவேலை வெற்புநாட்டி வெள்ளெயிற் றராவளாய்
> அள்ளலாக் கடைந்தவன்று அருவரைக்கொ ராமையாய்
> உள்ளநோய்கள் தீர்மருந்து வானவர்க் களித்தஎம்
> வள்ளலாரை யன்றிமற்றோர் தெய்வநான் மதிப்பனே?[52]

என்று எடுத்துக்காட்டி, இப்படிப்பட்ட வள்ளலாரையன்றி மற் றோரு தெய்வத்தைதான் மதிக்கமாட்டாத நிலையை அநுசந்திக் கின்றார்.

இவ்வவதாரத்தை 'விளையாடல் புரிய ஆமையானவனே!' என்ற பொருளில் 'விஹார கச்சப'[53] என்று ஸ்வாமி தேசிகன் சிறப்பித்து கூறுகிறார்.

**கூர்மாவதாரத்தின் தத்துவம் :**

1. ஆமை தன் அவயங்களை அடக்கிக் கொள்வதுபோல் பொருள்களிலிருந்து பொறிகளை முழுவதும் உள்ளிழுக்க வல்ல வனுக்கு நிறைஞானம் நிலை பெறுகின்றது[54] என்று கூர்மாவ தாரத் தத்துவத்தை விளக்கி நிற்கிறது.

2. பக்திகொண்ட முனிவர்களிடம் மதித்து நடக்கவேண்டும்,

3. பாகவத அபசாரத்திற்குத் தண்டனை உடனே ஏற்படும். ஆணவத்தால் அடிபட்ட உள்ளமானது குற்றம் உணரும் பொழுது அரவணைப்பைக் பெறும் என்பது இவ் அவதாரத்தில் எடுத்துக் காட்டப்படுகிறது.

51 நான். திரு., 49
52 திருச். விரு., 88
53 தசாவதாரத் தத்துவங்கள், ப. 18
54 பகவத்கீதை, 2 : 58

4. மனிதனுக்கு ஆசாரியனாகி இருந்து வாழ வழிகாட்டுவது ஆமை (கூர்மம்). ஆமை தன் குட்டிகளை நினைத்த மாத்திரத்திலே அவற்றிற்கு வளர்ச்சி ஏற்படும். அதுபோல் புலன்களும் மனமும் ஒன்றி நினைக்கும் பொழுது ஆன்மா சேமம் அடைந்து தன் தன்மையினை உணர்ந்து இறையின்பத்தில் நாட்டமுண்டாகும். கூர்மையான அறிவு தியானத்தின் மூலம் கிட்டும் என்பதை அறிவுணர்த்தும் அவதாரம்.[55]

3. **வராகவதாரம்:** காசிபர் - திதி என்பவருக்கு 'இரணியன்', 'இரணியாட்சன்' என்று இருவர் பிறந்தனர். இவர்களில் இரணியாட்சன் ஒரு சமயம் பூமியைக் கவர்ந்து கொண்டு பாதாளத்தில் ஒளிந்து கொண்டான் தேவர்களும், பூதேவியும் திருமாலிடம் முறையிட்டுத் தங்களைக் காப்பாற்றுமாறு வேண்டி நின்றனர்; திருமாலும் வராகாவதாரம் எடுத்துத் தன்னுடைய கூரிய கொம்பினால் அக்கனோடு போரிட்டு வென்று பூமியைக் கைப்பற்றித் தன்னுடைய கோரைரப் பல்லினால் ஒரே கோட்டிலே தாங்கி ஜெவந்து, பழையபடி பூமியை நிலைநிறுத்திப் பூமிதேவியின் துயரைப் போக்கினார். என்பது வராகாவதாரமாகும்.

இவ் வராகாவதாரத்தைத் திருமழிசையார் தமது திருச்சந்த விருத்தத்தில்,

படைத்த பார்இடந்து[56]

என்றும்,

......மண்
ஒன்றுசென்று அது ஒன்றையுண்டு அது
ஒன்று இடந்து பன்றியாய்[57]

என்றும்,

நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய்[58]

என்றும்

55 தசாவதாரத் தத்துவங்கள், ப. 19.
56 திருச். விரு., 28.
57 ஷை 48.
58 ஷை 61.

பள்ளிமாய ! பன்றியாய வென்றிவீர ![59]

என்றும்,

ஞானமாகி ஞாயிறாகி ஞாலமுற்றும் ஒருரயிற்று
ஏனமாய் இடந்தமூர்த்தி யெந்தைபாதம் எண்ணியே[60]

என்றும் அநுசந்தித்து மகிழ்கின்றார். நான்முகன் திருவந்தாதியிலும்,

தானொருவ னாகித் தரணி யிடந்தெடுத்து
ஏன்ஒருவனாய் எயிற்றில் தாங்கியதும்....[61]

என்று அநுசந்தித்து மேலும் அகமகிழ்கின்றார்.

இங்ஙனம் பூமியை ஒரு கோட்டினால் நிறுத்திய எம்பெருமானது திருவடிகளைச் சிந்தித்து வணங்கி வாழ்த்துமாறு உபதேசிக்கின்றார். இவரது அடியெற்றி மற்ற ஆழ்வார்களும் அறுதியிடுவதை,

........ஏனமாய் [62]

என்று பெரியாழ்வாரும்,

பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்[63]

என்று ஆண்டாளும்,

கோல வராகம் ஒன்றாய்
நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்[64]

என்று போற்றித் துதிக்கின்றார், நம்மாழ்வார். கம்பரும்,

ஏனமாய் மண்ணிடந்தாய் [65]

என்று சுட்டுகின்றார்.

மகாபோத்ரின் [66]

என்ற தொடரால் பெரிய பன்றி உருவம் கொண்டவனே ! என்று விளித்து கூறுகிறார் ஸ்வாமி தேசிகன்.

---

59 திருச். விரு., 102.
60 ஷை 114.
61 நான். திருவந், 70.
62 பெரியாழ், திரு- 4.9 : 8
63 நாச். திரு. 11 : 8
64 திருவாய்., 10,10 : 7
65 விராதன் வதை, செய். 60.
66 தசாவதாரத் தத்துவங்கள், ப. 26,

**வராகாவதாரத் தத்துவம்:** (1) உருவால் பெறும் உயர்வு உயர்வல்ல; பண்பினால் ... ... செயற்கரிய செயலினால் பெறும் உயர்வே சிறந்தது என்ற அரிய கருத்தை அறிவுறுத்தும் தத்துவமாகும்.

(2) தனக்கு வேண்டிய கோரைக் கிழங்கைப் பெற நிலத்தைத் தோண்டி எடுக்கும் காட்டுப் பன்றியைப்போல், நூல் அறிவையும் ஒருமுனைப்பட்ட உள்ளமுடன் ஆசாரியனருளால் ஆராய்ந்து தத்துவங்களை உணர வேண்டும்[67] என்ற தத்துவத்தைக் காட்டுகிறது.

(3) வாரக மூர்த்தியின் உருவ அமைப்பு :

| | | |
|---|---|---|
| பாதங்கள் | — | நான்கு வேதங்கள் |
| கண்கள் | — | சூரிய சந்திரர்கள் |
| செவிகள் | — | சுமிருதிகள், புராணங்கள் |
| அங்கங்கள் | — | மந்திரங்கள் |
| கோரைப்பற்கள் | — | யாகங்கள் |
| உரும்பல் (ஒலி) | — | ஓம் என்ற பிரணவம் |

இவ்வாறு சிறப்புடைய தத்துவங்களைத் தன்னிடத்தே கொண்டது வராக அவதாரம்.

(4) **நரசிம்மாவதாரம் :** இரணியன் என்ற அசுரன் நான்முகனிடம் தவம் செய்து, தேவர், மனிதர், விலங்கு முதலிய எவ்வுயிர்களாலும், பகலிலும் - இரவிலும், வானத்திலும் - பூமியிலும், வீட்டின் அகத்திலும் - புறத்திலும், எந்தவித ஆயுதங்களாலும், ஈரமுள்ளவை - ஈரமில்லாதவைகளாலும் தமக்கு மரணம் நேரிடக்கூடாது என்று வரங்களைப் பெற்றான். இப்படிப் பல வரங்களைப் பெற்ற அசுரன் தேவர்களைத் துன்புறுத்தி ஆட்சி புரிந்து வந்தான். அவ்வமயம் தனக்குப் பிரகலாதன் என்ற மகன் பிறந்ததும் அவனைக் கல்வி கேள்விகளில் பயிற்சிபெறச்செய்து தன் மகனிடம் தன்னைப் போற்றிப் புகழுமாறு பணிந்து நின்றான் அசுரன். பிரகலாதனும் திருமாலைப் போற்றி வாழ்த்தி நின்றான். இப்படிப் போற்றி நின்ற மகனைப் பலகொடுமைகள் செய்தும் உறுதியுடன் இருப்பதைப் பார்த்து ''உம்முடைய நாராயணன் எங்குள்ளான்?'' என்று அருகில் இருந்த தூணில் அறைந்து கேட்க, அவனும் ''இததூணிலும உள்ளான், துரும்பிலும உள்ளான்'' என்று கூறியவுடனே அரக்கன் பெருவியப்பு எய்தித் தூணைத் தன் கதாயுதத்தால் பிளக்க அத்தூணிலிருந்து நரசிம்மமாகத திருமால்

67 தசாவதாரத் தத்துவங்கள், பக். 22, 23

தோன்றினார். அசுரன் கேட்டுக்கொண்ட வரம் பொய்யாகாமல் வீட்டின் வாசற்படியின்மேல் அமர்ந்து கொண்டு அந்தி வேளையில் அவனைத் தன் மடிமேல் கிடத்தித் தன் கூரிய நகத்தினால் மார்பைப் பிளந்து குருதியைக் குடித்துக் கொன்றார். பின் பிரகலாதனுக்கு ஆட்சியுரிமையைக் கொடுத்து வாழ்த்தி மறைந்தார் என்பது நரசிம்மாவதாரமாகும். கண்ணன் இவ் அவதாரத்தையும், அதன் சிறப்பையும் கூறும்பொழுது,

> **தைத்தியர்களுள் நான் பிரகலாதனாகவும்,**
> **கணிப்பவர்களுள் காலனாகவும், விலங்குகளில்**
> **சிம்மம், பறவைகளுள் கருடன் ஆகவும் நான்**
> **இருக்கிறேன்**[68]

என்று கீதையில் எடுத்துக்காட்டுகிறார். சிறப்புடைய இந்த நரசிம்மாவதாரத்தைத் திருமழிசையார் தமது பாசுரங்களில் அநுசந்தித்து மகிழ்கின்றார். "அன்று தவம் செய்து நான்முக னிடம் இரணியன் முதலானவர்கள் பெற்றுக்கொண்ட வரங்களைப் பழுத்தாக்கின திருவாழியைக் கையில் உடையவனே!; அன்று பிரகலாதனைக் காப்பாற்றியது போல் உவந்து எம்மையும் காப்பாற்ற வேண்டும். காத்தருள்வது அன்றோ உம்மையுடைய சங்கல்பம்? துன்பம் பல தந்த இரணியனைப் போல் இவ்வுலகில் உள்ளவர்கள் துன்பம் செய்யவில்லை. மாறாக உன்னையே வணங்கி நிற்பதால் எல்லா உயிர்களுக்கும் வைகுந்தப்பேறு அளிப்பவன் நீ அன்றோ?" என்பதை,

> **தவம்செய்து நான்முகனால் பெற்ற வரத்தை**
> **அவம்செய்த ஆழியாய் அன்றே ? — உவந்தெம்மைக்**
> **காப்பாய்நீ காப்பதனை யாவாய்நீ வைகுந்தம்**
> **ஈப்பாயு மெவ்வுயிர்க்கும் நீ:**[69]

என்று முதலில் விண்ணப்பித்து, அடுத்த நிலையில் மற்றவர்களைப் பார்த்து

> **அழகியான் தானே யரியுருவன் தானே**
> **பழகியான் தாளே பணிமின் — குழவியாய்த்**[70]

என்று குறிப்பிடுகிறார். ஆன்மாக்களைக் காக்கின்றவனான எம் பெருமான் தானே நரசிங்கவுருவம் கொண்டான். அழகுக்கு எல்லை நிலமாய் இருப்பவனும் அவனே!. இப்படிப்பட்ட புராணபுருடனின் திருவடிகளை வணங்குமாறு உபதேசம் செய்கின்றார்.

---

68 பகவத்கீதை, 10 : 30.
69 நான். திருவந்., 19,
70 ௸ 22,

நரசிம்ம மூர்த்தியின் உருவ அழகை,

வானிறத்தோர் சீயமாய் வளைந்தவா ளெயிற்றவன்
ஊனிறத் துகிர்த்தலம் அழுத்தினா யுலாயசீர்
நானிறத்த வேதநாவர் நல்லயோகி னால்வணங்கு
பானிறக்க டற்கிடந்த பற்பநாப னல்லையே? [71]

கங்கைநீர் பயந்தபாத பங்கயத்தெம் அண்ணலே!
அங்கையாழி சங்குதண்டு வில்லும்வாளும் ஏந்தினாய்!
சிங்கமாய தேவதேவ! தேனுலாவும் மென்மலர்
மங்கைமன்னி வாழுமார்ப! ஆழிமேனி மாயனே! [72]

என்று வருணிக்கின்றார். வரத்தினால் நம்பிக்கையுடைய இரணியன் மார்பிலே திருக்கைகளை வைத்து நகங்களை அழுத்திக் கொன்றார் திருமால் என்பதை,

வரத்தினிற் சிரத்தைமிக்க வாளெயிற்று மற்றவன்
உரத்தினிற் கரத்தைவைத்து உகிர்த்தலத்தை யூன்றினாய்[73]

என்று சுட்டிக்காட்டி ஒருவனிடத்திலும் தோல்வி அடையா இரணியனுடைய மார்பை இரு பிளவாகப் பிளந்த மாலே என்பதை,

தொகுத்த வரத்தனாய்த் தோலாதான் மார்வம்
வகிர்த்த வளையுகிர்த்தோள் மாலே! [74]

என்றும்,

திரண்டதோள் இரணியன் சினங்கொள்ஆகம் ஒன்றையும்
இரண்டுகூறு செய்துகந்த சிங்கமென்பது உன்னையே[75]

என்று போற்றிய பின்னர்,

மாறாய தானவனை வள்ளுகிரால் மார்விரண்டு
கூறாகக் கீறிய கோளரியை — வேறாக
ஏத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தி இருப்பார் தவம்[76]

என்பதையும் குறிப்பிடுகிறார்.

---

71 திருச். விரு., 23
72 ,, 24
73 ,, 25
74 நான். திரு., 5
75 திருச். விரு., 62
76 நான். திரு. 18

இப்பாசுரத்தில் நரசிங்க மூர்த்தியை வணங்கி ஏத்தியிருப்பவர்களை (தவம்) விட, பாகவத பக்தர்களின் (மற்றவரைச் சாத்திருப்பவர்)* பக்தி வென்றுவிடும் என்பதை உபதேசிக்கின்றார்.

மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்: பகவத் பக்தர்களின் பக்தியை (தவம்) விட பாகவத பக்தர்களின் பக்தி தோற்கடித்து விடும். எனவே, பகவத் பக்தியைக் காட்டிலும் பாகவத பக்தியே சிறந்தது என்பதை விளக்குகிறார். மேலும், இறைவனுக்குப் பல்லாண்டு பாடி அவனுக்குத் தொண்டு செய்து கொண்டிருக்கும் பகவத் பக்தர்களைச் சார்ந்திருந்து உயர்வுபெற்றனர். உதாரணம்:

(1) ஆண்டாள் தம் தந்தையான (பெரியாழ்வார்) பகவத் பக்தரை சார்ந்திருந்தமையால் விரைவில் எம்பெருமானை அடையப் பெற்றாள்.

(2) சத்ருக்நாழ்வான் — பரதனுக்குத் தொண்டு செய்து சார்ந்திருந்தது.

(3) மதுரகவிகள் — நம்மாழ்வார் நிழலில் சார்ந்திருந்து பாசுரம் அருளியது.

(4) வடுக நம்பி — இராமாநுஜருக்குப் சேவை செய்து ஒதுங்கி உயர்வு பெற்றது.

இறுதியாக, இரணியனைக் கொன்று நரசிங்கமாக நின்ற திருமாலின் திருக்கோலத்தை வருணிக்கின்றார்.

> இவையா ! பிலவாய் திறந்தெரி கான்ற
> இவையா ! வெரிவட்டக் கண்கள் — இவையா !
> எரிபொங்கிக் காட்டும் இமையோர் பெருமான்
> அரிபொங்கிக் காட்டும் அழகு[77]

என்று நரசிம்ம மூர்த்தியின் தோற்றத்தையும், சீற்றத்தையும் சுட்டிக்காட்டி, சீற்றமே பக்தர்களுக்குச் சரணம் என்று முடிக்கிறார்.

இவ்வாழ்வார் முன்மொழிந்த நரசிம்ம அவதாரத்தை மற்றைய ஆழ்வார்களும்,

**அந்தியம் போதி லரியுரு வாகி அரியை யழித்தவனை[78]**

* ஸ்ரீவசநபூஷணத்தில் விரிவாக கண்டுகொள்க.

77 நான். திரு., 21

78 திருப்பல்லாண்டு 6

**இடந்திட்டு இரணியன் நெஞ்சை இருபிளவாக முன் கீண்டாய்! 79**

**கூடா இரணியனைக் கூருகிரால் மார்விடந்த ஓடா அடலரியை80 ... ... ... ...**

என்று அருளிச் செய்துள்ளார். ஸ்வாமி தேசிகரும், எதிர்பாராது தோன்றிய நரசிங்கப் பெருமாளை,

**யுத்ருச்சா ஹரே81**

என்று போற்றுகின்றார்.

**நரசிம்மாவதார தத்துவம் :** (1) 'நான்' எனும் ஆணவமும் வஞ்சகமும் இருக்கக்கூடாது என்பதையும், (2) பகவத்-பக்தர்களைவிட பாகவத - பக்தர்களே சிறந்தவர் என்பதையும், (3) பக்தர்களைக் காப்பாற்றுவதற்காக எந்த நேரத்திலும் இறைவன் தோன்றுவான் என்பதையும், (4) 'விகார உருவமில்லாமல் இருக்கும் எம்பெருமான் தன் அடியார்களைக் காப்பாற்றுவதற்காக அடையும் விகார உருவங்களுக்கு எல்லையே இல்லை' என்பதையும், (5) பிறப்பதும் - பிறப்பிப்பதும் நம் வசமில்லை ; இறப்பதும் - இறப்பிப்பதும் நம் வசமில்லை என்பதையும் இவ்வவதாரம் விளக்குகிறது.82

5. **வாமனாவதாரம் :** பிரகலாதனின் பேரனான மகாபலியிடம் ஒரு சமயம் திருமால் வாமனாவதாரம் கொண்டு யாகசாலைக்குச் சென்று மூன்று அடி மண் தா! என்று தானமாகக் கேட்டார். மகாபலியும் இசைய, அப்பொழுது சுக்கிராசாரியார் (குரு)' கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பலாகாது ' என்ற பழமொழியைச் சான்று காட்டி, வந்திருப்பவன் நாராயணன் என்று கூற, அதற்கு மகாபலி 'நாராயணனே! வந்தாலும் சொன்ன வாக்கை மீறமாட்டேன்' என்று கூறி, நீரைத் தாரை வார்த்து கொடுக்கும்போது குரு ஒரு வண்டாக மாறிக், குண்டிகையின் நீர் வரும் வழியில் சென்று அடைத்துக்கொண்டார். திருமால் இச்செயலைக் கண்டு தர்ப்பையால் நீர் வராமல் இருக்கும் துளையில் குத்துவதுபோல் சுக்கிரனின் ஒரு கண்ணைக் குத்தினார். தனது தவற்றை உணர்ந்து வெளிவந்து விட்டார் குரு. பிறகு மகாபலி நீரை தாரை வார்த்துத் திருமாலிடம் கொடுத்ததும், குள்ளமான வடிவில் வந்தவர் திருவிக்கிரமனாக வளர்ந்து தம் திருவடியைக் கொண்டு ஒரு அடியால் இம்மண்ணுலகையும்

79 பெரியாழ். திரு., 2-7:7
80 பெரிய, திரு., 11-7:4
81 தசாவதாரத் தத்துவங்கள். ப. 37
82 ,, ப. 30

இரண்டாவது அடியால் விண்ணுலகையும் அளந்து மற்ற 'ஓர் அடிக்கும் நிலம் எங்கே?' என்று மகாபலியிடம் கேட்டபோது, அவன் தமது சிரஸைக் காட்டத் திருவிக்கிரமனும் தமது திருவடியை அவன் சிரம்மேல் வைத்து அழுத்திப் பாதாளத்திற்கு அனுப்பி விட்டார். விண்ணுலகம் அளந்த ஒரு திருவடிக்கு நான்முகன் தமது கமண்டலத் தீர்த்தத்தால் விளக்கிட அத்திருவடித் தீர்த்தத்தை (கங்கை) சிவன் தன் சடைமுடியில் தாங்கிக் கொண்டார் என்பதை அறுதியிடுவது வாமனாவதாரமாகும்.

திருமழிசையார் இவ்வாமன அவதாரத்தைத் தமது பாசுரங்களில் மிகவும் பரக்க வெளியிட்டுள்ளதைக் காணலாம். மகாபலி தமது உடல் வலிமையால் தனக்கு எதிர் யாருமில்லை என்று அகங்காரம் கொண்டிருந்தான். அப்படிப்பட்டவனிடம் ''உன் மேன்மை நிலையைச் சிறிதும் நினையாமல், யாகசாலைக்குச் சென்று யாசகமாக மூன்றடி மண் கேட்டு, அவனுடைய பகைமையைப் போக்கினாய். இப்படிப்பட்ட செயல்களில் உனக்கு ஒரு பலனும் உண்டோ?'' என்று எம்பெருமான் ஒரு பலனும் எதிர்பார்க்காமல் பிறர் நலனுக்காகச் செய்ததை,

> **வகையால் மதியாது மண்கொண்டாய் மற்றும்**
> **வகையால் வருவதொன் றுண்டே? - வகையால்**
> **வயிரங் குழைத்துண்ணும் மாவலிதா னென்னும்**
> **வயிர வழக்கொழித்தாய் மற்று**[83]

என்ற பாசுரத்திலும், மகாபலியிடம் சென்று மூன்றடி மண் தா.! எனக் கேட்டு மண் அளந்து கொண்டதை,

> **காணிபேணும் மாணியாய்க் கரந்துசென்ற கள்வனே!** [85]

என்ற பாசுரப் பகுதியிலும்,

> **... ... ... ... ... இரந்துசென்று மாணியாய்**
> **மண்கடந்த வண்ணநின்னை யார்மதிக்க வல்லரே?** [85]

என்ற பாசுரப் பகுதியிலும்,

> **படைத்தபா ரிடந்தளந்து**[86]

என்ற பாசுரத்தொடரிலும்,

83 நான். திரு., 25
84 திருச். திரு., 26
85 ,, 27
86 ,, 28

மாய வாமனா! 87

என்ற விளியிலும்,

மண்; ஒன்று சென்ற ... ...,
மண்ணளந்த பாத !88

என்ற பாசுரத் தொடர்களிலும் இந்த அவதாரம் சுட்டப் பெற்றிருப்பதை அறியலாம். இந்த அவதாரத்தின் செயலை,

இரக்கமண் கொடுத்தவற்கு இருக்கவொன்று மின்றியே
பரக்கவைந் தளந்துகொண்ட பற்பபாத னல்லையே? 89

என்று வியப்புடன் வினவுகின்றார். அடுத்து மூவுலகையும் தம் திருவடியால் சுவாதீனப்படுத்திக் கொண்டதை,

... ... ... ... பின் இரந்துகொண்ட வந்ததுமண்
கண்ணுளல்ல தில்லையென்று வென்றகால மாயினாய்! 90

என்று குறிப்பிட்டும்,

... ... ... ... — யானொருவன்
இன்றா வறிகின்றே னல்லேன் இருநிலத்தைச்
சென்றாங் கடிப்படுத்த சேய்91

என்றும் சுட்டிக்காட்டுகின்றார், தொடர்ந்து, "என்னுடைய நெஞ்சிலே நித்தியவாசம் செய்பவனும், என் நெஞ்சிலுள்ள அஞ்ஞான இருளைப் போக்குபவனுமான எம்பிரான் முன்பொரு நாள் மகாபலியிடம் பூமியை அளந்துகொண்டான்; அப்படிப்பட்ட பெருமானுக்கு என் அன்பைச் செலுத்தினேன்" என்று அருளிச் செய்கிறார்92. உலகளந்தபோது திருமாலின் திருவடியை நான்முக னும் தீர்த்தம்கொண்டு விளக்கி, பூசை செய்த93 ஸ்ரீபாததீர்த்தத்தை (கங்கையை) சிவன் தன் சடைமுடியில் தாங்கிக் கொண்டார்

87 திருச். விருத். 37
88 ,, 48, 58.
89 ,, 32
90 ,, 105
91 நான். திரு., 70
92 ,, 58
93 ,, 9

என்ற செய்தியும் காட்டப்பெறுகின்றது. அவ்வெம்பெருமானுடைய திருவடிகளை வணங்குதலாலும், அவனது திருப்புகழ்களை வாயார வாழ்த்துதலாலும் பாவங்கள் (வினைகள்) தொலைந்து நல்ல ஞானபக்தி தழைக்கும் என்பதை,

> **அறிந்தறிந்து வாமனன் அடியினைவ ணங்கினால்**
> **செறிந்தெழுந்த ஞானமோடு செல்வமுஞ் சிறந்திடும்**
> **மறிந்தெழுந்த தெண்திரையுள் மன்னுமாலை வாழ்த்தினால்**
> **பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல் பான்மையே[94]**

என்று, சுட்டிக்காட்டி அத்தகைய திருமாலின் திருவடிகளை அறிந்து வணங்க வேண்டும் என்றும் உபதேசிக்கின்றார். "திருமாலே, சுருங்கச் செய்வதற்கு ஏதுவான கருமம் ஒன்றும் இல்லை என்று வாமனனாகச் சுருங்கினாய்; அப்படி சுருங்கியப் பின்னும் மீண்டும் திரிவிக்கிரமனாகத் திருவளர்த்தி பெற்ற பெருமானே!, அகங்காரத்தால் திரிந்த மகாபலி போல்வாருடைய அகங்கார, மமகாரங்களாகிற தீய குணங்களை தீர்த்த தேவாதி தேவனே! என்று இருக்குவேதம் ஓதும் வாயை உடைய முனிகணங்கள் துதிக்க, அவர்களைப் பார்த்து நானும் துதித்தேன்"[95] என்று வாமன அவதாரத்தைக் குறிப்பிடுகிறார்.

இவ்வாமனாவதாரத்தை மற்ற ஆழ்வார்களும் போற்றுகின்றனர்.

> **மகாவலி வேள்வியில் மாணுரு வாய்ச்சென்று**
> **மூவடி தா வென்று இரந்தஇம் மண்ணினை**
> **ஓரடி யிட்டுஇரண் டாமடி தன்னிலே**
> **தாவடியிட்டானால் இன்று முற்றும்**
> **தரணியளந்தானால் — இன்று முற்றும்[96]**

என்றும்,

> **ஓங்கியுலகளந்த உத்தமன் பேர்பாடி !,**

என்றும்,

> **அன்று இவ்வுலகம் அளந்தாய் ! அடிபோற்றி[97]**

என்றும்,

> **வன்மா வையமளந்தஎம் வாமனா ! [98]**

---

94 திருச். விரு., 74
95 ஷை 109
96 பெரியாழ். திரு 2-10:7
97 திருப்பாவை, 3, 24
98 திருவாய்., 3-2;2

என்றும் இவ்வாழ்வார்கள் போற்றுவதை பிள்ளைப் பெருமாளயங்காரும்[99] சுட்டுகிறார். காப்பதற்கே வாமனனாக உதித்தவனே! என்ற பொருளில் 'ரக்ஷாவாமந' என்று ஸ்வாமி தேசிகனும்[100] போற்றுகிறார்.

**வாமனாவதார தத்துவம் :** (1) அகங்காரம், தீவினைகள் கொண்டவர்களை அடக்கி, மெய்ஞ்ஞானத்தைத் தந்து, சரணாகதி தத்துவத்தையும்,

(2) பகவத்பக்தர் தானம் கொடுக்கும்போது அதைத் தடுப்பவரை இறைவன் தண்டிப்பான் என்ற கருத்தையும்,

(3) தம்மை அண்டினவர்களைக் காப்பாற்றுவது இறைவன் தன்மை என்பதையும்,

(4) ஒருவரிடம் சென்று தானம் கேட்கும்போது உள்ளமும் உடலும் குறுகிவிடும் என்ற உண்மையையும்* இந்த அவதாரம் எடுத்துக்காட்டுகிறது.

6. **பரசுராமாவதாரம் :** ஜமதக்கினிக்கும் - ரேணுகா தேவிக்கும் 'பரசுராமர்' அவதரித்தார். 'பரசு' என்றால் கோடரி என்பது பொருள்: அதனை ஆயுதமாகக் கொண்டமையால் 'பரசுராமர்' என்று வழங்கப்பெற்றார். ஒரு சமயம் கார்த்த வீரியார்ச்சுனன் கானகத்திற்கு வேட்டையாட வந்தவன் ஜமதக்கினியின் ஆசிரமத்திற்கு வந்தான். முனிவர் அரசனை வரவேற்று, காமதேநுவைக் கொண்டு சிறந்த விருந்தளித்தார். அரசன் காமதேநுவைக் கேட்க முனிவர் மறுக்கவும், பலவந்தமாக காமதேனுவைக் கவர்ந்து சென்றான். இச்செய்தியைப் பரசுராமர் தந்தையின் மூலம் அறிந்தார். அரசனைத் தேடிச்சென்று, அவனுடன் இருபத்தொரு நாட்கள் போரிட்டு அவனைக் கொன்று காமதேநுவை மீட்டு வந்தார். தந்தையைப் பறிகொடுத்த அவனது மக்கள் பரசுராமர் இல்லாத சமயத்தில் ஜமதக்கினியைக் கொன்றுவிட்டனர். பரசுராமர் வந்ததும் அவனது தாய் தனது வயிற்றில் இருபத்தொருமுறை அடித்துக்கொண்டு, தந்தையைக் கொன்ற செய்தியைக் கூறினாள். தாயின் துயரையும், இருபத்தொரு முறை அடித்துக்கொண்டதையும் எண்ணிச் சபதம் செய்தார். அதன்படி இருபத்தொரு தலைமுறை க்ஷத்திரியர்களை அழித்துக் கொண்டுவந்தார். தசரதராமனிடம் வந்ததும் தன் வலிமை எல்லாம் இழந்து போரிட முடியாமல்

99 திருவரங்கத்து மாலை, 33 காண்க

100 தசாவதாரத் தத்துவங்கள், ப. 41

* எனது அன்பு தாயாரின் திடமானகருத்து.

தோற்றார். (காசிபருக்கு தாம் வாக்குக் கொடுத்தபடி பூமண்டலத்தைத் தானமாகக் கொடுத்தமையால்) இமயமலைக்குச் சென்று தவம் செய்து, தமது அவதாரத்தை முடித்துக் கொண்டார் என்பது பரசுராமாவதாரமாகும்.

திருமழிசையார் பரசுராம அவதாரத்தைத் தமது பாசுரங்களில் வெளிப்படையாக அருளவில்லை. இவ்வவதாரத்தை உட்குறிப்பாக வைத்துச் சுட்டிக்காட்டியுள்ளது மட்டும் நோக்கத்தக்கது.

பத்தினாய தோற்றமோடு[101]

என்ற பாசுரத்தில் பத்து அவதாரங்களைக் குறிப்பிடும்போது அதில் பரசுராமர் அவதாரமும் அடங்கும். அடுத்து இராமாவதாரத்தைக் குறிப்பிடும்போதும் பரசுராம அவதாரத்தை உட்பொருளாக சுட்டிக் காட்டுகிறார். மேலும்,

... ... ... ஈசனை வென்ற
சிலைகொண்ட செங்கண்மால்[102]

என்ற இப்பாசுரப் பகுதியிலும் சிவனிடமிருந்து வென்ற வில்லைப் பரசுராமனிடத்திடமிருந்து நின்று வாங்கிக் கொண்ட செங்கண்மால் என்று குறிப்பாகக் கூறுகிறார். சிவனிடம் வென்ற திருமால் வில்லை ரிசீக முனிவருக்குத் தந்தருளினர். அவ்வில் பல தலைமுறைகளாக மாறிவந்து கடைசியில் பரசுராமரிடம் வந்து சேர்ந்தது. இவரிடம் இருந்த திருமால் வில்லைத்தான் இராமன் வளைத்துப் பரசுராமனின் கர்வத்தை அடக்கினான். இதனைத் திருமங்கையாழ்வாரும்,

மழுவினால் அவனி யரசைமூ வெழுகால்
மணிமுடிபொடிபடுத்து உதிரக்
குழுவுவார் புனலுள் குளித்துவெங் கோபம்
தவிர்ந்தவன்[103]

என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். ஸ்வாமி தேசிகரும், ரோஷ ராம என்று பரசுராமரை துதிக்கின்றார்.*

**பரசுராமாவதார தத்துவம்:** (1) 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை, 'தாயிற் சிறந்த கோயிலும் இல்லை' என்ற முதுமொழிகட்க்கு இணங்கத் தாமேநின்று ஒழுகி, மற்றவர்களுக்குப்

101 திருச். விரு., 79
102 நான். திரு., 8
103 பெரிய.திரு., 9-1:6
*தசாவதாரத் தோததிரம்.

படிப்பினையாக இருத்தல் ; (2) ஓர் அவதார சக்தி மற்றொரு அவதார சக்தியால் ஈர்க்கப்படுதல் ; (3) அதர்மத்தை ஒழித்துத் தர்மத்தை நிலைநாட்டுதல் என்பது இவ்வவதார தத்துவமாகும்.

7. **இராமாவதாரம்** : இட்சுவாகு குலத்தில் தசரதனுக்குத் திருமாலே இராமனாக வந்து அவதரித்தார். சீதையை மணந்த பின் கைகேயியால் தன் மனைவி, தம்பியுடன் வனத்திற்குச் செல்கிறார். வனத்தில் இருக்கும்போது சீதையைப் பிரிந்து இராவணனால் பல துன்பங்களை அடைந்தார். தன் தம்பியுடன் சீதையைத் தேடி வரும் வழியில் சுக்ரீவனுக்கு அடைக்கலம் அளித்து, வாலியைக் கொன்றார் பலவானரப் படைகளைத் துணைக்கொண்டார். அனுமனால் சீதை இருக்கும் இடம் அறிந்து, கடலில் சேது அணை கட்டி இலங்கை சென்று, இராவணனை அழித்து, வீபீடணனுக்கு அரசு உரிமை அளித்தார். அயோத்திக்குத் திரும்பி அரச பதவி பெற்றுப் பல ஆண்டுகள் ஆட்சி செய்தார். இதுவே இராமாவதார வரலாறு.

திருமழிசையாழ்வார் இராமாவதாரத்தில் அதிகம் ஈடுபட்டுப் பாசுரங்களில் அருளிச் செய்திருப்பதைக் காணலாம். இராமன் திருக்கையில் வில்லுமாய் வந்து அவதரித்தவன் என்பதை,

'சார்ங்கபாணி யல்லையே?' [10]

(**பாலகாண்டம்**) என்றும்,

சிறு குழவியாய் இருந்தபோது இராமன் வில்லில் களிமண் உருண்டைகளைக் வைத்து கூனியின் முதுகு உள்ளே ஒடுங்கும் படியாக அடித்து மகிழ்வார் என்ற நிகழ்ச்சியை,

**தேனகஞ்செய் தண்நறும் மலர்த்துழாய்நன் மாலையாய்!**
**கூனகமபுகத் தெறித்த கொற்றவில்லி யல்லையே?** [105]

என்றும்,

**கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன்**
**உண்டைகொண் டரங்கவோட்டி உள்மகிழ்ந்த நாதனூர்** [106]

என்றும், இராமன் சீதையை மணம் புரிந்து கொண்டு வரும் வழியில் எதிர்த்து நின்ற பரசுராமனிடமிருந்து, சிவனை வென்ற வில்லை வாங்கிக் கொண்ட செங்கண்மால் என்றும் [107] (**அயோத்தியா காண்டம்**) அநுசந்திப்பார்.

---

104 திருச. விரு., 15
105 ,, 30
106 ,, 49
107 நான். திரு., 8

இராமன் வனவாசத்தில் இருந்தபோது கரன், முரன், கவந்தன் போன்ற அரக்கர்கள் தம்மை எதிர்த்து வந்தபோது அவர்கள் யம லோகம் போய்ச் சேரும்படியாக வில்லை வளைத்த அழகிய திருக் கையையுடைய தனி வீரன் என்று குறிப்பிட்டு அவர்களை அழித்ததை,

**.... ... ... கரன்முரன்சி ரம்மவை**
**காலனோடு கூடவிற் குனித்தவிற்கை வீரனே!** [108]

என்றும்,

**கடுங்கவந்தன் வக்கரன் கரன்முரன்சி ரம்மவை**
**இடந்துகூறு செய்தபல் படைத்தடக்கை மாயனே!** [109]

என்று இந்த அவதாரத்தை அநுசந்திப்பதைக் **ஆரணியக் காண்டம்** காணலாம்,

இராமன் தன் தம்பியுடன் சீதையைத் தேடிக்கொண்டு வரும் வழியில் கிட்கிந்தையில் சுக்ரீவன் உட்படப் பலவானரப் படை களோடு தொடர்பு கொண்டு நாயகனாக விளங்கியதை,

**குரங்கையாள் உகந்தவெந்தை! கூறுதேற வேறிதே** [110]

என்றும், வாலியின் தம்பியான சுக்ரீவனுக்கு உதவி செய்ய இராம னாய் வந்து, ஒன்றோடொன்றாக நெருங்கி நிற்கும் ஏழு மராமரங்களையும், ஏழு மலைகளையும், மற்றவற்றையும் ஒரே பாணத்தாலே துளைத்த நிகழ்ச்சியையும் [111] ஏழு மராமரங்களைத் துளைத்ததும் பின்னர் வாலியைக் கொன்றதுமான நிகழ்ச்சியையும் **கிட்கிந்தாக்காண்டம்** அநுசந்திக்கின்றார். [112]

**இது விலங்கு வாலியை வீழ்த்ததுவும்** [113]

என்ற, நிகழ்ச்சியையும் மிக்க கோபத்தையுடையவனும், மிக்க வலி மையுடையவனும், குரங்குகட்கு அரசனுமாகிய வாலியினுடைய மதத்தை தொலைத்த சார்ங்கவில்லை ஆள்பவனான இராமபிரான் தனது நெஞ்சில் எழுந்தருளியிருப்பதையும், [114] நினைந்து உகக்கின்றார் ஆழ்வார்.

---

108 திருச். விரு., 59
109 ஷை 104
110 ஷை 21
111 ஷை 81
112 ஷை 78, 111
113 நான். திரு., 28
114 ஷை 85

இராமபிரான் இலங்கைக்குச் செல்வதற்காகக் கடலில் சேதுவைக் கட்ட வருணனை வேண்டி நின்றபோது, கடலரசன் வராமையால் கோபம் கொண்டு, கடல்நீர் கொதிக்கும்படி வில்லை வளைத்தான் என்பதை,

வேலைவேவ வில்வளைத்த வெல்சினத்த வீர! [115]

என்றும்,

வெண்திரைக் கருங்கடல் சிவந்துவேவ முன்னோர்நாள்
திண்திறல் சிலைக்கைவாளி விட்டவீரர் சேருமூர் [116]

என்றும் சேதுகட்டிய நிகழ்ச்சியை,

... ... ... ... பெளவநீர்
படைத்தடைத் ததிற்கிடந்து முன்கடைந்தபெற்றியோய் ![117]

என்பதையும்

வெற்பெடுத்து வேலைநீர் வரம்புகட்டி வேலைசூழ், [118]

என்றும்,

... ... ... ... வேலைநீர்
படைத்தடைத் ததிற்கிடந்து முன் கடைந்த[119]

என்பதையும்,

... ... ... ... குன்றினால்
துள்ளுநீர் வரம்புசெய்த தோன்றலொன்று சொல்லிடே[120]

என்றும்,

---

115 திருச். விரு., 31
116 ஷை 50
117 ஷை 28
118 ஷை 29
119 ஷை 92
120 ஷை 102

இலங்கையை சீர் குலையும்படியாக வானர சேனையைத் துணைக்கொண்டு கட்டின சேதுவை காணுங்கள்[121]

என்றும்,

... ... ... தடங்கடலைக்
கற்கொண்டு தூர்த்த கடல்வண்ணன்[122]

என்பதையும் அநுசந்தித்து மகிழ்கின்றார் ஆழ்வார்.

குரங்கினப் படைகொடு குரைகடலின் மீதுபோய் [123]

இலங்கையை அடைந்ததையும் அநுசந்திக்கின்றார்.

இலங்கைச் சென்று அரக்கர்களை அழித்த செய்தியைப் பல பாசுரங்களில் கூறி மகிழ்கின்றார். இராமபிரான் சேதுவைக் கட்டி வானர சேனையுடன் கடலைக் கடந்து, இலங்கைக்கு வந்து, அதன் அரணையும், பல அரக்கர்களையும் அழித்ததை,

வெற்பெடுத்த இஞ்சிசூழ் இலங்கைகட் டழித்தநீ;[124]

என்றும், இலைபோன்ற நுனியையுடைய அம்புகளைப்பிரயோகித்து இலங்கையினுடைய அரண்களை அழியச் செய்த இராமபிரான்.[125] என்றும், குறிஞ்சி, காந்தாரம், காமரம் முதவிய பண்கள் (இராகம்) விளங்குகின்ற இனிய பேச்சையுடைய, வாள் போன்று பெரிய கண்களையுடையவளுமான பிராட்டிக்காகக் கணக்கில்லாத அரக்கர்களை அம்புகளின் தீயினாலே தொலைத் தருளினவனே![126] என்றும்,

இரும்பரங்க வெஞ்சரந் துரந்தவில் லிராமனே![127]

என்றும் பல அரக்கர்களை அழித்ததைக் காட்டுகிறார்.

121 நான். திரு, 28
122 ,, 71
123 திருச். விரு., 32
124 ,, 39
125 ,, 54
126 ,, 91
127 ,, 93

உகம்புருவன் தானே யொளியுருவன் தானே
மகப்புருவன் தானே மதிக்கில் — மிகப்புருவம்
ஒன்றுக்கொன் றேரசனையான் வீழ ஒரு கணையால்
அன்றிக்கொண் டெய்தா னவன்[128]

என்றபடி சீறிக் கொண்டு செல்லும் ஒரு கணையால் கும்பகருணனை அடித்தழித்ததையும், அங்ஙனமே,

சரங்களைத் துரந்துவில் வளைத்திலங்கை மன்னவன்
சிரங்கள்பத் தறுத்துதிர்த்த செல்வர்மன்னு பொன்னிடம்[129]

என்றும், இராவணனை அழித்ததையும் அன்று இராவணனுடைய பத்தாகிய (ஐந்தொடு ஐந்து) வலிய தலைகள் பூமியிலே உருண் டோடும்படி, அதனால் அவ்வரக்கன் அஞ்சிக் கலங்கும்படியாகக் குலைப்போல் நெருங்கிய அவனுடைய தலைகளை அறுத்து ஒழித்ததை,

சங்குதங்குமுன்கை நங்கை கொங்கை தங்கலுற்றவன்
அங்கு மங்கவன்று சென்று அடர்த்தெறிந்த வாழியான்[130]

என்றும் தனித்தனியே சில பாசுரங்களில் அநுசந்தித்து மகிழ் கின்றார். இராவணனை விண்ணுலகுக்கு அனுப்பி அவன் தம்பி வீடணனுக்கு அருள் புரிந்து முடிசூட்டி அரசு அளித்த செய்தியை,

மின்னிறத்து எயிற்றரக்கன் வீழவெஞ் சுரத்துரந்து
பின்னவற் கருள்புரிந்து அரசளித்த பெற்றியோய்![131]

என்று போற்றி (**யுத்த காண்டம்**) மகிழ்கின்றார்.

இறுதியாக, 'அறிவுகெட்ட அரக்கர்கள் (கல்லாதவர்) உடைய இலங்காபுரியின் அரணழித்த இராமபிரானையல்லது வேறொரு தெய்வத்தை நான் தெய்வமாகக் கொள்ளமாட்டேன் ; கண்கொண்டு காணக்கூடாத தேவதைகளையும், தெய்வத் தன்மையற்றவர் களாயும், பிராட்டியின் சம்பந்தமில்லாமலே (திருஇல்லா) தேவரென்று பேர் சுமப்பவர்களாயுமுள்ள சிலரைத் தெய்வமாக நீங்கள் நினைக்க வேண்டாம்'[132] என்று முதலில் தம்மைப் பற்றி கூறிப், பின்னர் மற்றவர்களுக்கும் உபதேசம் செய்கிறார்.

---

128 நான். திரு., 29
129 திருச். விரு., 55
130 ஷை 33, 56, 57, 116; நான்: திரு., 8, 28
131 திருச். விரு., 33
132 நான். திரு., 53

இங்ஙனம் திருமழிசையார் இராமாவதாரத்தை அநுசந்தித்தது போல் மற்ற ஆழ்வார்களும் அநுசந்தித்திருப்பதைக் காணலாம்.

**மன்னுபுகழ்க் கௌசலைதன்**
**மணிவயிறு வாய்த்தவனே !**

**தென்னிலங்கைக் கோன்முடிகள்**
**சிந்துவித்தாய் ! செம்பொன்சேர்**

**கன்னிநன்மா மதிள்புடைசூழ்**
**கணபுரத்து என்கருமணியே !**

**என்னுடைய இன்னமுதே !**
**இராகவனே ! தாலேலோ,**[133]

என்றும்,

**கற்பார்இராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ?** [134]

**சிலையால் மராமரமெய்த தேவனைச் சிக்கெனநாடுதிரேல்**[135]
**தலையால் குரங்கினம் தாங்கிச் சென்று தடவரை**
**கொண்டடைப்ப**

**பண்டு ஒருநாள், கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்**[136]

என்று ஆழ்வார்கள் நுவலுவதை, ஸ்வாமி தேசிகரும் இராமாவதாரத்தில் ஈடுபட்டு இராமனை 'கருணாகாகுத்ஸ்த்த' [137] என்று போற்றுகிறார்.

**இராமாவதாரத் தத்துவம் :** (1) ஏகபத்தினி விரதம் மேற்கொண்டு ஒருவனுக்கு ஒருத்தி என்று வாழ்ந்து காட்டுதல்; (2) தந்தை சொல்லைக் காப்பாற்றுதல்; (3) தன்னைச் சரண் அடைந்தவர்களைக் காப்பாற்றுதல்; (4) சாதி வேற்றுமையின்றி அனைவரையும் உடன் பிறந்தவர்களாக நினைத்தல்; (5) பிறர் மனைவியை விரும்புவர்களுக்குத் தக்க தண்டனை கிடைக்கும் என்பதையும்; (6) ஆழ்ந்த நட்பு முதலியவை எடுத்துக்காட்டுதல் இவ்வவதாரமாகும்.

8. **பலராம அவதாரம்:** 'பரசுராமாவதாரத்தைப் போன்று சொரூபாவேச அவதாரம் பலராமாவதாரம். இராமாவதாரத்தில் ஆதிஷேசனது அம்சமாய்த் தோன்றிய இலக்குவன், தனக்குச் செய்த அரிய பெரிய பணிவிடைக்கு உவந்த ஸ்ரீமந்

133 பெரு. திரு., 1-8:1
134 திருவாய். 7-5:1
135 பெரியாழ். திரு.- 4-1:3
136 திருப்பாவை, 10
137 தசாவதாரத் தத்துவங்கள், ப. 45

நாராயணன் அந்நன்றிக் கடனைத் தீர்க்கும் பொருட்டு ' மற்றோர் அவதாரத்தில் உமக்குத் தம்பியாய் பிறந்து உம்மைப் பூசிக்கக் கடவேன்' என்று தந்த வரத்தின்படியே தேவகியின் கருவில் புகுந்து பின் யோக மாயையால் வசுதேவருடைய முதல் மனைவியும் நந்த கோபருடைய இல்லத்தில் வசிப்பவளுமான ரோகிணியின் கர்ப்பத்தில் இடம் பெற்று அவதாரம் செய்தவர் பலராமர். இவருக்குப் பவித்திரர், நம்பிமூத்தபிரான் போன்ற திருநாமங்கள் உண்டு. கலப்பையை ஆயுதமாகக் கொண்டவ ராகையால், ' ஹலி ' என்றும் ' ஹலாயுதன் ' என்றும் வழங்கப்படுபவர். ரைவத ராஜபுத்திரி ரேவதியை மணம் புரிந்தவர் ......... கலப்பையை ஒரு தோளில் சுமந்து கொண்டு வெளியே செல்வதால் பார்க்கிறவர் களுக்கு ஒரு காதுதான் தெரியும். அதனால் ' ஒற்றைக் குழை ' [138] * என்றும் இவரை அழைப்பதைக் காணலாம்.

திருமழிசையார் இந்த அவதாரத்தை வெளிப்படையாக அருளவில்லை. பாசுரத்தில் மிக நுட்பமாக உட்பொருளாக வைத்து சுட்டிக் காட்டியுள்ளார்.

பத்தினாய தோற்றமோடு ஓராற்றல்மிக்க வாதிபால் [139]

என்றும், இப்பாசுரத்தில் தசாவதாரத்தை குறிப்பிடும்போது, அவ் அவதாரத்தின் ஓர் ஆற்றல் மிக்க பெருமாளாகப் பலராம அவதாரம் எடுத்தார் என்பதை குறிப்பாகச் சுட்டிக் காட்டுகிறார். மேலும் 'பத்தினாய தோற்றமோடு' என்பதில் பலராம அவதாரமும் அடங்கும்.

நடந்த கால்கள் நொந்தவோ ! நடுங்க ஞாலம் [140]

என்றும், இவ்விடத்தில் பலராமர் பாரதப்போர் நடத்தும்போது தீர்த்த யாத்திரைக்காகப் புறப்பட்டு பல தலங்கள் சென்று சேவித்து விட்டுப் பாரதப் போர் முடிந்ததும் திரும்பி வந்தார். இங்ஙனம் தீர்த்த யாத்திரை செய்யும்போது உமக்கு 'நடந்த கால்கள் நொந்தவோ' என்கின்றார். 'இவர் கோபத்துடன் நடந்து செல்லும்போது பூமியானது நடுங்குமாம். இதனை 'நடுங்க ஞாலம்' என்ற சொல்லால் சுட்டிக் காட்டுவார். 'எதற்காக இப்படி சயனக் கோலம் கொண்டிருக்கிறாய்?' என்று ஆழ்வாரும் ஆவேசத்துடன் கேட்கும்போது இவ் அவதாரம் சுட்டிக்காட்டப்படுகின்றது.

---

138 தசாவதாரத் தத்துவங்கள் பக் 49-51

*ஒற்றைக்குழையும் நாஞ்சிலும் ஒருபால் தோன்றத் தான்தோன்றி.

பெரிய திருமொழி:, 8-8:8

139 திருச். விரு., 79

140 ஷை 61

பலராமருக்கு 'பலதேவர்' என்ற திருநாமமும் உண்டு. இத் திருநாமத்தை உட்பொருளாக ஆழ்வார் சுட்டியிருப்பதாக தெரிய வருகிறது.

பலதேவர் எத்தப் படிகடந்தான் பாதம்[141]

என்று வரும் பாசுரத் தொடர்களில் காட்டிய நுட்பக் குறிப்புகளால் இதனை அறியலாம்.

இவ்வாழ்வார் கருத்துக்கு அரண் சேர்க்க ஆண்டாளும்,

செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா![142]

என்று விளித்துப் பாசுரத்தில் போற்றியுள்ளார். அடுத்து வரும் பாசுரத்தில் கிருஷ்ணாவதாரத்தை குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். எனவே, அவ் அவதாரத்திற்கு முந்திய பலராம அவதாரத்தை நுட்பமாக வைத்து, இப்பாசுரத்தில் அருளியுள்ளார் என்பதே பொருத்தமாக விளங்குகின்றது. ஸ்வாமி தேசிகரும், இவ்வவதாரத்தில் ஈடுபட்டு ஹேலாஹலிந் என்று துதிக்கின்றார்.

**பலராம அவதார தத்துவம்:** 1. அநீதிகளை எதிர்த்து நீதியை நிலைநாட்டுதல், 2. மன்னன் என்ற நிலையில் தம்மிடம் வந்தவர்களைப் புகலிடம் கொடுத்துக் காப்பாற்றுதல் என்பனவையாகும்.

9. **கிருட்டிணாவதாரம்:** மதுரையில் வசுதேவர் - தேவகிக்கு மகனாக அவதரித்து, ஆயர்பாடியில் நந்தகோபன், — யசோதை என்பவர்களால் வளர்க்கப்பட்டவர் கண்ணபிரான். பலராமருக்குத் தம்பியாக அமைந்தவர். மற்ற அவதாரங்களைக் காட்டிலும் இவ் அவதாரத்தில் கோபர் - கோபியர்களிடையே குள்ளக்குளிர உறவாடி மகிழ்ந்தவர். அவர்கட்கு நேரிட்ட பல தீமைகளை எதிர் நின்று தடுத்து அருள் செய்தவர். சௌலப்பியத்துடன் பரத்துவத்தை நிலை நாட்டியது கண்ணன் அவதாரமாகும். திருமழிசையார் தமக்கும் கண்ணனைப்போல பிறவியில் இரு அவதாரமாக அமைந்தமையால் கிருட்டிணாவதாரத்தில் ஆழங்கால் பட்டு பலப்பாசுரங்களில் இவ் அவதாரத்தைப் போற்றி இருப்பது மகிழத்தக்கது.

141 நான். திரு., 15
142 திருப்பாவை, 17

கண்ணன் அவதாரத்தை அருளும்போது, உலகத்தில் எங்கும் பரந்து இருக்கின்ற பொருள்கள் யாவும் ஒரு நிமிடமும் ஓயாமல் கண்ணனுடைய சங்கல்பத்தினால் உயிர்பெற்று இயங்குகின்றன. மேலும் ஆய்ந்த திருக்குணங்களை உடையவனான அப்பெருமானின் திருவடிகளைப் போற்றி வணங்குங்கள் என்பதை.

> கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றி னுள்ள
> உதைப்பளவு போதுபோக் கின்றி — வதைப்பொருள்தான்
> வாய்ந்த குணத்துப் படாதது அடைமினோ
> ஆய்ந்த குணத்தான் அடி[143]

என்ற பாசுரத்தில் உபதேசிக்கின்றார் ஆழ்வார்.

**கண்ணனின் உருவத்தோற்றம்—வளர்ச்சி :** கண்ணன் திருவுருவத்தில் அதிக ஈடுபாடு இருப்பதால் அவனது திருமேனியை வருணனை செய்கிறார். கண்ணனின் திருவுருவம் கிளர்ந்தெழுந்த கரிய நிறத்துடைய காளமேகத்தினை ஒத்திருக்கும். இக்கருத்தினை

> —மொய்த்தெழுந்த
> கார்மேக மன்ன கருமால் திருமேனி
> நீர்வானம் காட்டும் நிகழ்ந்து[144]

என்ற பாசுரப் பகுதியில் கண்டு மகிழலாம். இங்ஙனம், கண்ணனின் உருவத்தையும், அவனுடைய நிறத்தையும் சில இடங்களில் சுட்டியிருப்பதை, 'புனக்காயா வண்ணனே!'[145] 'செங்கண்மால்'[146] 'கடல் வண்ணன்'[147] என்ற பாசுரத் தொடர்களால் அறியலாம். மேலும்,

> உன்கருத்தை யாவர்காணவல்லர்? கண்ணனே![148]

என்றும் போற்றுகின்றார். வஞ்சி கொம்புபோலும், அரவும்போலும், நுட்பமான இடையை உடைய இடைப்பெண்ணுக்குப்(யசோதைக்கு) பிள்ளையாக அவதரித்து, எம்பிரானுமாக நின்ற நிலையும் என்ன

143 நான். திரு., 32
144 ,, 23
145 51
146 ,, 69
147 ,, 77
148 திருச். விரு., 25

அற்புதம்?[149] என்றும், பொன்மயமான ஆபரணங்களை அணிந்த ஸ்தனங்களையுடைய யசோதையாகிய இடைச்சியினுடைய பிள்ளையாக அவதரித்த கண்ணன், பின் பொன் வளைகள் அணிந்த கைகளையுடைய கோபிகைகளுடைய அதரத்திலுள்ள (இதழ்) அமுதத்தைப் பருகினது என்ன வியப்பு?[150] என்றும்,

... ... ... ... கண்ணனென்பரால்
ஆய்ச்சி பாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணையுண்டு[151]

என்ற திருவிளையாட்டையும் கூறி, "கண்ணன்" என்ற திருநாமம் பெற்றதைக் குறிப்பிடுகிறார்.

இவ்வாழ்வார் கண்ணனின் பல தீராத விளையாட்டுக்கான பூதனை வதம், சகடம் உதைத்தது, புள்ளின்வாய் பிளந்தது, காளிங்கன் மீது நடம் பயின்றது, கேசி-தேனுகாசுரன் என்ற அரக்கர்களைக் கொன்றது, குருந்தம் ஒசித்தது, கோவர்த்தன மலையை தூக்கியது, குவலயாபீடம் என்ற களிற்றை கொன்றது, கம்சன் வதை, உருக்குமணிக்காக அரசர்களோடு போரிட்டது, நப்பின்னையை மணக்க ஏழு வல்லேறுகளை அடக்கியது, குடக் கூத்து ஆடியது, காலநேமி, சிசுபாலன்-பவுண்ர வாசுதேவன்-சீமாலிகன் இவர்களை வதைத்தது, தேர்த்தட்டிலிருந்து, கொண்டு கீதை (சரமசுலோகம்) உபதேசித்தது, போரில் ஆழியால் பகலவனை மறைத்தது போன்ற அற்புதச் செயல்களைப் பாசுரங்களாகப் பல இடங்களில் பரக்க அருளிச் செய்துள்ளார். (பின்னிணைப்பில் கண்டுகொள்க).

இறுதியாக, ஆழ்வார் கண்ணபிரானையே தான் எந்நாளும் தொழுவதையே நாட்கடமையாக ஏற்றுக் கொண்டிருந்ததை,

பிதிரும் மனமிலேன் பிஞ்ஞகன் றன்னோடு
எதிர்வன் அவன் எனக்கு நேரான் — அதிரும்
கழற்கால மன்னனையே கண்ணனையே நாளும்
தொழக்காதல் பூண்டேன் தொழில்[152]

என்றும்,

149 திரு. விரு., 35
150 ,, 36
151 ,, 37
152 நான். திரு., 84

காப்பு மறந்தறியேன் கண்ணனே யென்றிருப்பன்
ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்—ஆக்கை
கொடுத்தளித்த கோனே! குணப்பரனே! உன்னை
விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்[153]

என்றும் கூறுவார். காப்பு மறந்தறியேன்—எம்பெருமான் தன்னைக் கரு இருந்த நாள் முதற்கொண்டு இன்றுவரை காத்து அருளியதையும், தான் எம்பெருமானுக்கு மங்களாசாசனம் செய்வதையும் மறக்க முடியாது என்றும் கூறுகின்றார்.

இவ்வாழ்வார் சௌலப்பியத்தின் எல்லையைக் குறிப்பிடும் கிருஷ்ணாவதாரத்தை போற்றி அருளியிருப்பது போல மற்ற ஆழ்வார்களும் அநுபவித்துப் பல பாசுரங்களை அருளிச் செய்துள்ளதை நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் கண்டு தெளியலாம். கோவலனாய் விளையாடிய கண்ணபிரானைக் 'க்ரீடாவல்லவ' என்று ஸ்வாமி தேசிகன் போற்றுகிறார்.[154]

**கிருஷ்ணாவதார தத்துவம்:** (1) எம்பெருமானை நம்பினவர் கைவிடப்படமாட்டார்; (2) பெரியவர்களிடம் பணிந்து போதல்; (3) அகங்காரம், மமகாரமின்றி சத்துவ குணத்துடன் செயல்படுதல்; (4) சௌலப்பிய குணத்தை எடுத்துக்காட்டுதல்; (5) தீமை அழிந்து நன்மை நிலைநாட்டப் பெறுதல் என்பனவை இவ்வவதாரத்தின் சிறப்புகளாகும்.

**10. கல்கி அவதாரம்:** இறுதியாக அமைவது கல்கி அவதாரம். பூவுலகில் கலிகாலத்தில் தருமம் ஓங்கி நிற்காது; அதர்மம் ஓங்கி நிற்கும்; நல்லவர் நலிவர்; தீயவர் மலிவர்; கடவுளின் பெருமையறியார்; இங்ஙனம் பலவிதமான நிகழ்ச்சிகள் நடைபெறும்போது திருமால் கல்கி அவதாரம் எடுப்பார். அப்பொழுது விஷ்ணு கீர்த்தி என்னும் அந்தணருக்குக் குழந்தையாக அவதரிப்பார். பெரியவரானதும் தேவதைகளால் கொடுக்கப்பெற்ற வெண்குதிரையில் ஏறுவார்; அதர்மத்தை அழிப்பார்; தர்மத்தை நிலை நிறுத்துவார்''.[155] திருமழிசையாழ்வார், வெண்குதிரை ஏறப்போகும் கல்கி அவதாரத்தை,

'பத்தினாய தோற்றமோடு ஒராற்றல்மிக்க ஆதிபால்'[156]

153 நான். திரு. 93
154 தசாவதாரத் தத்துவங்கள், ப. 93
155 ,, ப. 68
156 திருச். விரு., 79

என்று குறிக்கிறார். பத்து அவதாரங்களில் கல்கி அவதாரத்தில் ஓர் ஆற்றல் மிக்க ஆதிப்பெருமானாக அவதரிப்பார் என்றும், பத்து அவதாரங்களில் கல்கி அவதாரமும் அடங்கும் என்றும் நுட்பமாகக் கூறுகிறார். இவ்வாழ்வார் கூறும் இவ் அவதாரத்தை, 'தாமோதரனாய்க் கற்கியும்[157] என்ற திருமங்கையாழ்வாரின் பாசுரப் பகுதியும் உறுதி செய்கிறது. ஸ்வாமி தேசிகரும் இவ்வவதாரத்தை கல்கவாஹந என்று கொண்டாடுகின்றார்.

**கல்கி அவதார தத்துவம்:** (1) தீயவரை வென்று நல்லவரைக் காப்பாற்றுதல், (2) அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டுதல் என்பனவாகும்.

**தசாவதாரத்தின் உட்பொருள்:** தசாவதாரத்தை அறிவியல் முறைப்படி (Scientific method) ஆராய்ந்தால் புதிய கருத்துக்கள் பெறப்படுகின்றன. இதனைக் கீழ்வருமாறு காணலாம்.

I. 1. **மச்சாவதாரம் (மீன்)** —நீர் வாழ் உயிரினப் பொருளாக அவதரித்தது;

2. **கூர்மாவதாரம் (ஆமை)**—நீரிலும்-நிலத்திலும் வாழ் உயிரினப் பொருளாக அவதரித்தது;

3. **வராகாவதாரம்(பன்றி)**—நீருமின்றி, நிலமுமின்றி இடைப்பட்ட சேற்றுநில உயிரினப் பொருளாக அவதரித்தது;

4. **நரசிம்மாவதாரம் (சிங்கம்-மனிதன்)** —விலங்கினமாகப் பாதி, மனிதராக பாதியுமாக நிலவாழ் உயிரினப் பொருளாக அவதரித்தது;

5. **வாமனாவதாரம் (குள்ள மனிதன்)** —உயிர்கள் மானுட உருவம் பெற்று முதல் வளர் நிலையான குள்ளமான வளர்ச்சிப் பொருளை காட்ட அவதரித்தது;

6. **பரசுராமாவதாரம் (சற்று வளர்ந்த நிலை)** —உயிரினங்கள் சற்று வளர்ந்ததும் கடமை ஆற்றும் பொருளாகச் செயல் படுவதைக் காட்ட அவதரித்தது;

7. **இராமாவதாரம் (உயர்ந்த வளர்நிலை)** —உயிரினங்கள்தான் என்ற உணர்வு இன்றி முழுப் பொருளாகச் செயல் படுவதைக் காட்ட அவதரித்தது;

157 பெரிய, திரு., 8•8:10

8. பலராமாவதாரம் (மிக உயர்ந்த வளர்நிலை) —உயிரினங்கள் தருமத்திற்குக் கட்டுப் பட்டு நேர்மையுடைய பொருளாகச் செயல்படுவதைக்காட்ட அவதரித்தது;

9. கிருஷ்ணாவதாரம் (மிகமிக உயர்ந்த நிலை) —உயிரினங்கள் தான் என்ற கடமை உணர்ந்து அற்புத ஆற்றல் உடைய பொருளாகச் செயல்படுவதைக் காட்ட அவதரித்தது;

10. கல்கி அவதாரம் (தெய்வ நிலை) —உயிரினங்கள் தருமத்தை நிலை நாட்ட வேண்டுவதைக் காட்ட அவதரித்தது.

மச்சம் முதல் பேரறிவுடைய கல்கி ஈறாக திருமால் அவதரிக் கின்றார். உயிரினங்களான: நீந்துவன, ஊர்வன, நடப்பன என்ற அடிப்படையில் நீர், நீர்-நில, உயிரினமாகி; விலங்கினமாகி; விலங்கினத்திலிருந்து பாதி மனித உருவம் பெற்று, உயர்ந்த மனித உருவமாக வளர்ந்த நிலை எடுத்துக்காட்டப்படுகிறது. உயிரினங்கள் படிப்படியாக வளர்ந்து வந்திருக்கின்றன என்னும் அறிவியல் உண்மையை அதாவது மேலைநாட்டார் உணர்த்திய டார்வின் கண்ட பரிணாமக் கொள்கையை (கூர்தல் அறம்) (Theory of Evolution) தசாவதாரங்கள் அன்றும், இன்றும், நாளையும் காட்டி விளங்கிவருவது கவனிக்கத்தக்கது.

II. (1) வாமன, பரசுராம - அந்தணர் குலத்தை எடுத்துக்காட்டு கிறது.

(2) இராம, பலராம, கிருஷ்ண - க்ஷத்திரியக் குலத்தை எடுத்துக் காட்டுகிறது.

(3) கல்கி தெய்வத்தன்மை — எடுத்துக் காட்டுகிறது.

III. மனிதனுக்கு ஏழு பிறவிகள் உண்டு என்பதை தசாவதாரம் உணர்த்துவதை,

முதல் பிறவி — நீர் வாழ் உயிரினமாக (மச்சம்)

இரண்டாம் பிறவி — நீர்-நில உயிரினமாக (கூர்மம்-வராகம்)

மூன்றாம் பிறவி — நிலவாழ் விலங்கு உயிரினமாக (நரசிம்மம்)

நான்கு முதல் ஏழு பிறவி வரை — மனித உயிரினமாக (வாமன– பரசுராம இராம -பலராம - கிருஷ்ண)

ஏழாம் பிறவிக்குப் பின்—உத்தம மனிதன். தெய்வநிலை அடை வதைக் காட்டும் பிறவி (கல்கி அவதாரம்).

IV. விலங்கினங்களுக்குப் பகுத்தறிவு குறைவு காரணமாக ஒரு முறை தான் பிறப்பு என்பதை (முதல் நான்கு அவதாரங்கள்) காட்ட திருமால் ஒரு முறைதான் அவதரித்துக் காட்டினார். ஆனால் மனிதன் பகுத்தறிவு உடையவன் என்பதாலும், ஒவ்வொரு பிறவியிலும் ஆன்ம பரிபக்குவம் அடைந்து உயரவேண்டும் என்பதைக் காட்டவே பலமுறை (ஐந்து முதல் ஒன்பது அவதாரங்கள்) அவதரித்துக் காட்டினார். மனிதனின் ஆன்ம பரிபக்குவம் அடைந்தபின் எழு பிறவிக்குப்பின் அவன் தெய்வநிலை அடைவதை எடுத்துக் காட்டுவது கல்கி அவதாரம்.

V. ஆயுதங்கள் : தசாவதாரத்தில் மச்சம் முதற்கொண்டு கல்கி ஈறாக படைக்கலக் கருவிகளும் (ஆயுதங்கள்), படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்திருப்பது கூர்ந்து கவனிக்கத் தக்கது.

இவ்வியலில் திருமழிசையாழ்வார் தமது பாசுரங்களில் சுட்டிக்காட்டிய தொடக்கமான கஜேந்திர மோட்சம், மார்க்கண்டேயர் வரலாறு, பாணாசுரன் வரலாறு, கபால மோட்சம், மதுகைடவர் வதை, மது அசுரன் வதை ஈறான புராணக் கதைகள் போன்றவை எடுத்து காட்டப்பட்டன. அடுத்து மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, இராம, பலராம, கிருஷ்ண, கல்கி போன்ற தசா அவதாரங்களையும், இவ்வவதாரங்களின் தத்துவ உட்பொருள்களையும் ஆராயப்பட்டு தலைக் கட்டுவதாயிற்று.

# திருமழிசையாழ்வாரின்—
# வைணவ தத்துவம்

## இன்ப வீடு

'இயக்கறாத பல்பிறப்பில்
என்னைமாற்றி, இன்றுவந்து
உயக்கொள்மேக வண்ணன்நண்ணி
என்னிலாய தன்னுள்ளே
மயக்கினான்தன் மன்னுசோதி
ஆதலால், என் னாவிதான்
இயக்கெலாம் அறுத்துஅறாத
இன்பவீடு பெற்றதே'

—திருச். விருத்தம் 120

# திருமழிசையாழ்வாரின் — வைணவ தத்துவம்

**இவ்வியலில்** தத்துவம், இதம், புருஷார்த்தம் என்ற வைணவ தத்துவத்தையும், இரகசியங்கள் (மந்திரங்கள்) பற்றியும் திருமழிசையாழ்வார் அருளிச் செயல்களில் கிடைக்கும் குறிப்புகளைக் கொண்டும் ஆராயப் பெறுகின்றன.

வைணவ சமயம் பல உயரிய தலையாய கொள்கைகளை உள் அடக்கிய, ஒரு பரந்த சமயமாக விளங்குகின்றது. இச் சிறந்த கொள்கையான வேதாந்தக் கோட்பாட்டுக்கு, ஆசாரியார்கள் தரும் விளக்கத்தினையே 'வைணவ சித்தாந்தம்' என்பர்.[1] வேதாந்தக் கோட்பாட்டினர் பலரும் ஏற்றுக்கொள்ளும் பிரஸ்தானத்திரைய மான (பிரஸ்தான-முக்கிய; திரையம்-மூன்று) உபநிடதம், பிரம்ம சூத்திரம், பகவத்கீதை என்னும் நூற்களை அடிப்படையாகக் கொண்டே வைணவ சித்தாந்தம் நிலுவப்படினும், ஆசாரியர் களின் இவ்விளக்கத்திற்கு ஆழ்வார் பாடல்களும் வைணவ சம்ஹிதைகளும் சிறந்த கருவி நூற்களாக உள்ளன.[2]

இவ்வேதாந்தக் கோட்பாட்டை அத்வைதம், துவைதம், விசிட்டாத்வைதம என்று மூன்று விதமாகத் தத்துவ விசாரம் செய்யப்படுகிறது.[3] விசிட்டாத்வைத தத்துவத்தையே

1 வைணவ சமயம், ப. 118

2 ,, பக். 18-19

3 1) அத்வைதம் (சங்கரர்) - பரமான்மா ஒருவனே உண்மை என்பர். பரமான்மா— சீவான்மா—இரண்டும ஒனறே, இது கேவலாத்துவிதம் அலலது ஏகான்மாவாதம் எனறும கூறுவா. இறைவன (ஈசுவரன்,)

2) துவைதம் - பரமானமா-சீவானமா இரணடும்,—உண்மை. இறைவன் உயிர் (ஈசுவரன - சிதது).

3) விசிட்டாத்வைதம் - பரமான்மா, உயிருள்ள பொருள், உயிரற்ற பொருள். எனற மூன்றும் ஒனறே என்பது உண்மை, இறைவன்— உயிர் - உலகு (ஈசுவரன் - சிதது - அசித்து).

ஆழ்வார்களும்[4] ஆசாரியர்களும்[5] தமது அருளிச் செயல்களில் வெளியிட்டுள்ளனர்.

**வைணவ தத்துவம்:** வைணவ சமயத்தின் தலையாய கொள்கைகள் '**தத்துவம்**', '**இதம்**' '**புருஷார்த்தம்**' என்று முப்பிரிவு களாகப் பேசப்பெறும்.

## (1) தத்துவம்

வைணவ சமயத்தின்படி இறைவனை அடைவதில் இச்சை யுடைய முமுட்சுவான சேதநனுக்கு மோட்சமுண்டாகும்போது தத்துவத்திரய ஞானமுண்டாக வேண்டும். தத்துவமாவது, **சித்து**, **அசித்து**, **ஈசுவரன்**,[6] என்பன. இவை மூன்றும் உயிர், உலகு, இறைவன் என வழங்கப்படும். இது **தத்துவத்திரயம்**' (திரயம்—மூன்று) என்ற பெயராலும் வழங்கி வருகின்றது.

'சித்து' என்பது உயிர்த்திரள்; சீவான்மா என்றும் கூறலாம். '**அசித்து**' என்பது உயிரற்ற பொருள்களான பஞ்ச பூதங்கள், மற்றும் இவற்றின் சேர்க்கையால் ஏற்பட்ட பொருள்கள் இவையே 'அசித்து' என்றும் கூறுவர். மேலும் இதனை 'மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது; பிரகிருதியை மூலப்பகுதி என்பர்'[7] '**ஈசுவரன்**' என்பது, கடவுள் அல்லது இறைவன் எனப் படும். 'வைணவர்கள் இறைவனை உணர்த்தப் **பகவான்** என்ற சொல்லைப் பெரிதும் பயன்படுத்தினும், தத்துவத்தை விளக்கும் போது '**ஈசுவரன்**' என்ற சொல்லையே மிகுதியும் பயன்படுத்து கின்றனர்[8]. '**ஈசன்**' என்ற சொல் வைணவ இறைவனாகிய திருமாலுக்கு உரியது.

'எங்கள் மால் இறைவன் ஈசன்'[9]

என்ற தொண்டரடிப்பொடியாழ்வார் பாசுரத்தாலும் மூன்றாவது தத்துவம் குறிப்பிடப்படுகிறது.

---

4 'யாவையும் எவரும் தானாய்' அவரவர் சமயந் தோறும்;
தோய்விலன் புலனைந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி;
ஆவிசேர் உயிரினுள்ளால் ஆதுமோர் பற்றிலாத
பாவனை தனைகக்கூடில் அவனையும் கூடலாமே' (திருவாய். 3.4:10).

5 '... ... ... ... கருதரிய
பற்பல்லுயிர்களும் பல்லுலகு யாவும் பரனதென்னும்
நற்பொருள் தன்னை இந்நானிலத் தேவந்து நாட்டினனே'
(இராமா. நூற். 53)

6 தத்துவத்திரயம், மூலம் 2

7 சில நோக்கில் நாலாயிரம், ப. 82

8 வைணவ சமயம், ப. 120

9 திருமாலை. 23.

## 1. சித்து

சித்து என்பது அறிவுக்கு ஆதாரமான பொருள் எனப்படும். ஞானத்திற்கு இடமான ஆன்மா அல்லது உயிர் சித்து என வழங்கப்பெறுகின்றது. இஃது அன்னமயம், பிராணமயம், மனோமயங்கட்கு அப்பாலாயிருப்பது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும், அறிவும், அறியப்பெறும் பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினை உடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவமானது; என்றும் நிலைபெற்றிருப்பது. இது கண் முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது; மனத்தாலும் இதனை நினைக்க முடியாது. இதனைப் பகுதிகளாகவும் பிரிக்க முடியாது; அவயமும் அற்றது; வளர்தல், பகுத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவுமயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு 'தர்மபூதஞானம்' என வழங்கப்பெறும். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது; அவனால் தரிக்கப்பெற்று, அவனுக்கு அடிமையாகவே இருப்பது.[10]

**சித்தின் வகை :** உயிர்த்திரளாகிய சீவான்மாக்கள் எண்ணற்றவர். இவர்களின் ஆன்மசொரூபந்தான் பத்தர், (தளைப் பட்டிருப்பவர்) முக்தர், நித்தியர்[11] என்று மூவகைப்பட்டிருப்பர். இவர்களுள், பத்தரென்போர்,[12] அநாதியான அசித்து தொடர்புடையவர்களாய் சம்சாரிகளாயிருக்குமவர்கள்; இவர்கள் பகவானின் மாயையால் மறைக்கப்பெற்ற உருவத்தை உடையவர்கள், அநாதி அஞ்ஞானத்தால் தேடிய பாவ-புண்ணியமாகிய வினைகளால் சூழப்பட்டவர்கள். அவரவருடைய வினைக்குத் தக்கவாறு மாறி மாறித் தேவ—மனித—விலங்கு—தாவர வடிவங்களாகப் பிறந்து துக்க பரம்பரைகளை அநுபவிக்கும் உலக வாழ்வில் ஈடுபட்ட சம்சாரிகளாவர். முத்தரென்போர், சம்சார சம்பந்தமற்றவர்களைக் குறிக்கும்.[13] சம்சார சம்மந்தமற்ற நலமந்தமில்லதோர் நாட்டிலே சென்று சேர்ந்தவர்கள் முக்தாத்மாக்கள் எனப்படுவர். சீவான்மாவாகப் பிறந்த இவர்கள் பகவத் கருணையாலே பாவங்களிலிருந்து விடுபட்டு, பிரகிருதி சம்பந்தம் நீங்கி, சரீரத்தைவிட்டு, 'அர்ச்சிராதி' மார்க்கத்தாலே சென்று திவ்ய சரீரம் பெற்று பரமபதத்தை அடைந்து இறைவனுக்குப் பகவதநுபவ கைங்கரிய போகராய்

10 தத்வத்திரயம் மூலம், 3
11 ,, 42
12 ,, 43
13 ,, 44

வாழ்பவர்கள். நித்யரென்போர், ஒருநாளும் சம்சார சம்பந்த உணர்வு இல்லாத அனந்த கருட விஷ்வக்சேனாதிகள் போன்றவர்களாவர்.[14]

மேலும் சித்து பின் வருமாறும் வகைப்படுத்தப்படுவதுண்டு. (1) ஆர்த்தி: ஏழையாயிருப்போர் செல்வத்தின்மீது பெரிதும் அவாவுற்றிருப்பர். இஃது இயல்பு. தாகம் எடுத்தவன்-விடாய் தீர்க்கப் பேராவல் உறுவதுபோல. (2) அர்த்தார்த்தி : அர்த்தம்-பொருள், ஆர்த்தி-மேலும், மேலும் சேர்க்கப் பேராசை கொண்டவர்கள். (3) ஜிக்ஞாசு : தத்துவத்தை ஆராய்பவர்; ஞானவேட்கை உடையோர். (4) ஞானி: இறைவனுக்கு விருப்பமானவர்கள். என நான்கு வகையாகக் கொள்ளப்படும். ஆர்த்தி + அர்த்தார்த்தீ—ஐச்வர்யார்த்திகள் என்றும், ஜிக்ஞாசு என்பவரை — கைவல்யார்த்தி, ஆன்மாநுபவத்தை நாடுபவர்கள் என்றும் கொள்ளப்படுவதுண்டு. ஞானியை — 'முமுட்சு' மோட்சத்தை விரும்புகிறவர்கள் என்று சொல்வர்.[15] இந்த நான்குவித நல்லார்களையும் கண்ணபெருமான் கீதையில் அருளியுள்ளமை ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.[16]

**பாசுரங்களில் சித்து:** இனி, சித்து என்ற தத்துவத்தைப் பற்றிய குறிப்புகள் ஆழ்வார் பாசுரங்களில் மிகுதியாகக் காணலாம். இவ்வாழ்வாரின் சில பாசுரங்களைத் தவிர மற்ற அனைத்துப் பாசுரங்களிலும் 'சித்து' என்ற தத்துவத்தை நுட்பமாகவும், வெளிப்படையாகவும் நுவலப்பட்டு இருப்பதைக் காணலாம். சித்தின் வகைகளைப் பற்றி அறுதியிடும் ஓரிரு இடங்கள் ஈண்டுத் தொகுத்துக் கூறப்படுகின்றன.

நித்தியரை பற்றி சுட்டும் இடங்கள்: (எ.டு.) ஆசையாமவர்க்கலால் அமரராகலாகுமே.[17] (நித்யசூரிகள்) விண்ணவர்க்கு நற்பொருள்தான்;[18] வானோர்க்கும்,[19] விண்ணோர் தொழுவதும்,[20] தேவராய் இருக்கிலாத[21] என்று நித்தியர்களைக் குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம்.

---

14 தத்வத்திரயம் மூலம் 45

15 விவேகானந்தர் கல்லூரியில் ஓய்வு பெற்ற தமிழ் பேராசிரியர் திரு. சி. ஜகந்நாதாசாரியர், எம்.எ., எல்.எடி. அவர்களிடம் ஆய்வாளர் பாடம கேட்டபோது அறிந்தவை.

16 'துன்புற்றவன் ஞானவேட்கையுடையவன், பொருளின்பம் தேடுபவன் ஞானி ஆக நான்கு விதமான அறச் செயலாளர்கள் என்னைப் போற்றுகின்றனர்' —பகவத்கீதை, 7:16

17 திருச். விரு., 80

18 நான். திரு., (விண்ணோர்) 13

19 ,, 45

20 ,, 48

21 ,, விரு., 66

முக்தர்களைச் சுட்டும் இடங்கள்: (எ.டு.) விலங்கு நூலர் வேத நானர் நீதியான கேள்வியார்[22] உம்பர், உம்பர்[23]; பத்தரா மவர்[24] மறந்தும்புறந் தொழாமாந்தர்[25], அன்பினால் வாய்ந்த மனத் திருத்த வல்லார்கள்[26] வீற்றிருந்து விண்ணாள வேண்டுபவர்[27] வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு[28] வீடுபெற்றுமேல், கண்டுவீடிலாத காதல் இன்பநாளுமெய்துவீர்[29] (முமுட்சுகள்) என்பதை குறிப்பிடுகிறார்.

பத்தரைப்பற்றி நுவலும் பாசுரங்கள்; மாயையால் மறைக் கப்பட்டு அஞ்ஞானத்தால் வினைக்குத் தக்கவாறு தாவர விலங்கு, மனிதர்களாகப் பிறப்பதை, 'எவ்வுயிருக்கும்'[30] என்று சுட்டி, 'நிற்பவுந்திரிபவும்' [31] (தாவர முதலிய உடல்கள்) 'தலைக் கணத்துகட் குழம்புசாதி' [32] (தேவ, தாவர, மனித,) 'நான்கும்', (தேவ, மனித, விலங்கு, தாவர) என்று பல பிறவிகளைக் குறிப்பிடுகின்றார். இவர்கள் சாத்துவிக, இராசத, தாமச குணங்களால், பிறப்பதை, 'முந்நிறத்து வாணியந்து,[34] என்ற பதத்தில் அடக்கிக் கூறுகிறார். பின் மனிதர்களாகப் பிறந்து துன்புறுவோரை (குடும்பப்பந்தம்) 'மண்ணுள்ளே மயங்கி நின்று[35] என்று குறிப்பிட்டு, அம்மனிதர்களுக்குத் தேவு அமைத்து அளித்தவன் என்பதை,

> நன்றுசென்ற நாளவற்றுள் நல்லுயிர் படைத்தவர்க்கு
> அன்றுதே வமைத்தளித்த ஆதிதேவ னல்லையே[36]

என்று சுட்டியபின், மனிதப்பிறவி பிறந்து நன்முறையில் வாழ முடியாதவர்களைப்பற்றி முழுமையாக ஒரு பாசுரத்தில் அருளி, பரமபதம் அடைய ஒருவரும் இல்லையே என்பதை,

---

22 திருச் விரு.. 56
23 ,, 75
24 ,, 79
25 நான். திரு., 68
26 ,, 79
27 ,, 90
28 ,, 45
29 திருச். விரு, 67
30 நான. திரு, 19
31 திருச், விரு. 10
32 ,, 16
33 நான. திரு., 5
34 திருச். விரு., 68
35 ,, 45
36 ,, 43

**இன்றுசாதல் நின்றுசாதல் அன்றியாரும் வையகத்து**
**ஒன்றிநின்று வாழ்தலின்மை கண்டும்நீச ரென்கொலோ**
**அன்றுபா ரளந்தபாத போதையுன்னி வானின்மேல்**
**சென்றுசென்று தேவராய் இருக்கிலாத வண்ணமே**[37]

என்று அருளிச் செய்திருப்பதைக் காணலாம். மனிதப் பிறவியைப் பற்றிப் (**ஆர்த்தி, அர்த்தார்த்தி**) பல இடங்களில் சுட்டுகிறார்.[38]

**ஆழ்வார் அருளுதல்:** ஆழ்வார் தாம் மனிதப் பிறவி யாகப் அவதரித்தும், தாவர முதலிய பிறவிகளிலிருந்து (**பத்தர்**) தம்மை **முத்தர், நித்தியராக** ஏற்று அருளுமாறு; தாமே சித்து நிலையில் ஏறிட்டுக் கொண்டு அருள்வதைக் காணலாம்.

**குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்**
**நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவின்றிலேன்**
**புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனித! நின்**
**இலங்குபாத மின்றிமற்றோர் பற்றிலேனெம் மீசனே!**

என்றும்,

**கண்ணலாலோர் கண்ணிலேன் கலந்தசுற்ற மற்றிலேன்**
**எண்ணிலாத மாய! நின்னை என்னுள்நீக்க லென்றுமே,**

என்றும்,

... ... ... ... **நின்றனக்கு**
**அடைக்கலம் புகுந்த வென்னை அஞ்சலென்ன வேண்டுமே,**

என்றும்,

**அடைக்கரும் புலன்களைந் தடக்கிஆசை யாமவை**
**துடக்கறுத்து வந்துநின் தொழில்கணின்ற வென்னைநீ**
**விடக்கருதி மெய்செயாது மிக்கொராசை யாக்கிலும்**
**கடற்கிடந்த நின்னலாலோர் கண்ணிலேனெம் மண்ணலே!**[39]

என்றும் தாம் பிறவாதிருந்த முதற்காலத்திலே இருந்து அப்போது (அன்று) தாம் ஞானப்பிறவி பெறவில்லை; அது (அறிவு) பிறந்த பின்பு ஆதிப்பிரானை மறக்கவில்லை. ஆதலால் எம்பெருமான் **திருவூரகத்தில்** நின்றும், **திருப்பாடகத்திலே**

37 திருச், விரு., 66
38 ,, 82, 117
நான். திரு., 14 31 , 38, 52, 54, 75, 83, 88.
39 திருச். விரு., 90, 91, 92, 95.

வீற்றிருந்தும், திருவெஃகாவில் கிடந்தும் செய்யும் செயல்கள் எல்லாம் இப்பொழுது தமது நெஞ்சினுள்ளே என்றும் செய்தருள்கிறான் என்பதை வெளியிடுகிறார்.[40] மேலும் சில பாசுரங்களில்,

> பின்பிறக்க வைத்தனன்கொல் ? அன்றிநின்று தன்கழற்கு
> அன்புறைக்க வைத்தநாள் அறிந்தனன்கொல் ஆழியான்
> தன்திறத்தொ ரன்பிலா அறிவிலாத நாயினேன்
> என்திறத்தி லென்கொல்?-எம்பிரான் குறிப்பில் வைத்ததே[41]

என்றும், பெறுவதற்கு முடியாத அரியமாயனே ! பிறப்பு முதலிய இடர் சுழிகளிலிருந்து நீக்குவதற்கு உறுப்பான தத்துவ இதங்களை மறைந்து ஒழிந்த ஞான நீசரை கரையிலே கொண்டு சேர்க்கும் படியான பெறற்கு அரிய எம்பெருமான் திருவடிகளைப் பற்ற பக்தியாகிய மரக்கலத்தைத் தமக்குத் தந்தருளுமாறு ஆழ்வார் வேண்டுகிறார். [42]

முதலில் வேண்டியபடி திருமால் தமக்கு அருள் செய்தார் என்பதையும், இன்றைக்கும் தொடர்ச்சி மாறாமல் நெடுகச் செல்லும் படியான பலவகைப் பிறப்புகளினின்றும் தம்மை மாற்றத் திருவுள்ளம் கொண்டு வந்து தம்மிடம் நண்ணினர்; அவிநாத பூதமான தம்முள்ளே தன்னுடைய நித்திய ஒளிமயமாக மயங்கினான். திவ்விய மங்கள விக்கிரகம் இப்படி புரையறக் கலந்தருளுகையாலே தனது ஆவிதான் இயக்கம் எல்லாம் வேரறுத்து ஒருநாளும் விடமுடியாத ஆறாத இன்பமாகிய வீட்டின்பத்தை (மோட்சம்) பெற்றது என்று மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்றார். [43]

'தம்மை ஆட்கொண்டு அருள்பவனான திருஅரங்கநாதன் தம்மைக் குடும்ப வாழ்க்கையாகிய நாடக சாலையில் புகுந்து விடாமல் (அவனென்னையாளி யரங்கத்து அரங்கில்......எய்தாமல் காப்பான்) காத்தருள்வான்[44] என்றும், மெய்வினை நோய் வந்து சேராதபடி தானே அவற்றைப் போக்கி அருளும் தன்மையுடைய அப்பெருமானின் திருவடிகளை வெறுப்பனோ? என்று தம் மனக் கருத்தை வெளியிடுகிறார்.[45]

40 திரு, விரு. 64
41 ,, 84
42 ,, 100
43 ,, 120
44 நான் திரு, 30
45 ,, 34

இறுதியாக, ''சீலமில்லாச் சிறியேனாயினும் தம் பக்கம் அருள் செய்ய வேண்டும்; குற்றமே வடிவமாக உள்ளவர்களை இகழ்ந்து ஒழிய வேண்டுமேயன்றி, கைக்கொள்வது கூடுமோ? என்றும், திருவுள்ளம் பற்றலாகாது என்பதை உவமை மூலம் வெளிப்படுத்துவதை, ''வேப்பிலை கசக்கும் என்றாலும் அதைக் கறியாகச் சமைத்து உட்கொள்ள வேண்டுமென்றும், விருப்புடையார்க்கு வேப்பிலை கறியாகின்றது போல ('அருளடியேற்கு வேம்புங்கறியாகுமேயன்று') அப்படியே குற்றவாளரைக் கைக்கொள்வதே சீரியது என்று தெளிந்தவர்கள் என்போல்வாரை ஏன் அங்கீகரிக்க மாட்டார்கள்? அங்கீகரித்தே தீருவார்கள். எம்பெருமானே! என்னுடைய குற்றங்களை நற்றமாகவே கொண்டோ அல்லது அவற்றின் திருக்கண் செலுத்தாமலோ எம்மை ஏற்று அருளவேண்டும்'' என்று எடுத்தியம்புகிறார்.[46]

தம் வேண்டுகோளுக்கு எம்பிரான் அருள்கொண்ட திறத்தை வெளியிடுகிறார். ''இறைவனுக்கு பக்தி என்ற அடிமை செய்ய ஏற்றுக்கொண்டேன். இதனால் இல்வாழ்க்கையில் ஏற்படும் துக்கங்களினின்றும் (பிறப்பிடும்பை) நீக்கினேன். அமரர்கள் என் அருகு நாடவொண்ணாதபடி ஞானம், பக்தி நிரம்பப்பெற்றேன், சுவர்க்கம் முதலிய லோகங்களையும், இம்மண் நாட்டையும் கைவிட்டு, எல்லாவற்றிற்கும் மேற்பட்ட தன்மையுடைய (அடியார்கள் குழாங்களுக்குத் தகுதியான) இடம் உடையதான திருநாட்டைக் கண்டு அநுபவிக்கலாம் என்ற பரமபக்தி நிரம்பப் பெற்றேன்'' இவ்வாறு தாம் ஈசுவர தத்துவத்தை அடைந்ததை தம்முடைய ஞானப் பேற்றினை கொண்டாடி வெளிப்படுத்துவதைக் காணலாம்[47].

## 2. அசித்து

அசித்து என்பது, அறிவில்லாத பொருள். இது விகாரத்திற்கு இடமானது, அஃதாவது முன்னைய நிலையை விட்டு வேறு நிலைகளை அடைவதாகின்ற வேறுபாட்டிற்கு இடமாய் இருக்கும். இந்த அசித்து இராசச, தாமசங்கள் கலவாத **'சுத்த சத்துவம்'** என்றும், இராசச தாமசங் கலந்த **மிச்ரதத்துவம்** என்றும், சத்துவம் முதலிய குணங்களற்ற தன்மையே **'சத்துவ சூனியம்'** என்றும் மூவகைப்படும்[48].

---

46 நான். திரு., 94

47 ,, ,, 95

48 தத்துவத்திரவியம், மூலம், 77, 78.

**சுத்த சத்துவம்:** இஃது இராசச, தாமசுக்கள் கலவாத தன்மையுடையது. ஆதல், அழிதல் இல்லாதது. ஞானத்தையும் ஆனந்தத்தையும் உண்டாக்க வல்லது. பரமபதத்தில் விமானம், கோபுரம் முதலிய வடிவுடன் தோற்றக்கூடியது, இது வைகுந்தத்திலிருந்து மேலே எல்லையின்றி எங்கும், பரவிநிற்கும், நெருப்பு கதிரவன் முதலிய ஒளியுள்ள பொருள்களும் மின்மினிக்கு ஒப்பாகும்படி அளவிறந்த ஒளிவடிவினது. இது நித்தியர், முக்தர், ஈசுவரன் இவர்கள் ஞானத்தால் தன்னை அறியவொண்ணாதபடி ஒளிவிட்டுத் திகழும். ஆனால் இவ் ஒளி சம்சாரிகட்கு அங்ஙனம் தோன்றாது.[49] ஆழவார் இச்சுத்த சத்துவத்தைப் பல புரசுரங்களில் மிக நுட்பமாக அருளியுள்ளார்.

**மிச்ர தத்துவம்:** சாத்துவிகம், இராசசம், தாமசம் ஆகிய மூன்றும் கூடி கர்மவான்களாகிய சேதநருடைய (சம்சாரி) ஞான ஆனந்தங்கட்கு மறைவை உண்டாக்கும்; அது வல்லாததனை அதுவாக நினைக்கும் விபரீத அறிவினையும் விளைவிக்கும். இஃது உற்பத்தி (படைப்பு) விநாசமில்லாதது. இஃது ஈசுவரனுடைய உலகப் படைப்பு முதலியவற்றிற்கு விளையாட்டுக் கருவியாக இருக்கும், ஏற்றத்தாழ்வு உள்ள இடம், அவை இல்லாத இடம் என்ற இட வேறுபாட்டாலும்; அழிக்குங்காலம், படைப்புக்காலம் ஆகிய இரண்டு வகையான காலத்தின் வேறுபாட்டாலும்; சூக்குமம், தூலமான விகாரங்களையும் உண்டாக்கக் கடவதாய், 'பிரகிருதி' 'அவித்யை'' 'மாயை' என்கிற பெயர்களை உடையதாய் இருக்கும்.[50] இம் மிச்ரதத்துவம் அசித்தின் இருபத்து நான்கு வடிவங்களையும் கலந்து இருப்பது. ஈசுவரன் இவற்றை கலந்து தானாக முன்நின்றும், நான்முகன் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கிறான்.[51]

இந்த மிச்ர தத்துவம் 'இருபத்து நான்கு வடிவங்களாக' இருப்பதை ஆழ்வார்,

> **ஐந்து மைந்து மைந்துமாகி அல்லவற்று ளாயுமாய்**
> **ஐந்துமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே!**[52]

என்று குறிப்பிடுவர்.

49 தத்துவத்திரவியம் 79
50 ,, 85
51 ,, 89
52 திருச்., விரு., 8 ஒப்பிடுக, திருவாய்., 10.7:10.

ஐந்து — மண், நீர், தீ, காற்று, ஆகாயம் (நிலம், நீர், எரி, கால், விசும்பு) என்ற பஞ்ச பூதங்களும்;

ஐந்து — செவி, வாய், கண், மூக்கு, மெய் என்ற பொறிகள் ஐந்தும்;

ஐந்து — வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் (வாய், கை, கால், குதம், குறி) என்ற கருமேந்திரியங்கள் ஐந்தும்;

ஐந்து — சப்த, பரிச, ரூப, ரச, கந்த (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்) என்ற தந்மாத்ரைகள் ஐந்தும்;

மூன்று — ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும், மகத் (மான்) தத்துவம் ஒன்றும், அகங்கார தத்துவம் ஒன்றும் ஆகிய மூன்றும்;

ஒன்றுமாகி — மனம் ஒன்றுமாகி நின்ற ஆதிதேவனே! உன்னை யார் அறியவல்லார்?

என்று போற்றித் துதிக்கின்றார். ''எட்டு மெட்டு மெட்டுமாய்''[53] என்ற பாசுரத்தில் அசித்தின் இந்த இருபத்து நான்கு தத்துவங்களுக்கும் தலைவனான ஈசுவரன் தானாகவும், நான்முகன் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கின்றான் என்பதை புலப்படுத்துகின்றார்.

மகாகவி பாரதியாரும் இறைவனின் இவ்வுலகப் படைப்பையும் (மிச்ர தத்துவத்தை) களிப்புடன் போற்றுவதை,

> சித்தினை அசித்துடன் இணைத்தாய்—அங்கு
> சேரும்ஐம் பூதத்து வியனுல கமைத்தாய்
> அத்தனை யுலகமும் வண்ணக்களஞ்சிய
> மாகப் பலபலநல் லழகுகள் சமைத்தாய்[54]

என்பது இங்கு ஒப்பிடத்தக்கது.

**சத்துவ சூனியம்:** கால தத்துவம் என்று இதனை வழங்குவர். இதில் சத்துவம், இராசசம், தாமசம் என்ற பிரகிருதியின் மூன்று குணங்களும் இல்லை. ஈசுவரப் படைப்பின் பரிணாமங்

53 திருச். விரு., 77.

54 பாரதியார் கவிதைகள், தோத்திரப் பாடல்கள், ப. 96.

களுக்குக் காரணமாய் தோற்றம் - ஈறு அற்றதாய் அவனுடைய, படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய விளையாட்டிற்குக் கருவியாய் அவனுக்கு உடலாகத் திகழும். வைகுந்தத்தில் முன் பின் என்ற அளவிற்குக் காலம் இருப்பதாயினும், அதன் சம்பந்தமின்றி அனைத்தும் எம்பெருமானது சங்கற்பத்தால் மட்டிலும் நடை பெறுவனவாகும்.[55]

இச் சத்துவ சூனியம், ஆழ்வார் பாசுரத்தில் இடம் பெறுவதை ஈண்டுக் காணலாம். திருவனந்தாழ்வானாலே தரிக்கப்பட்ட திருமேனியை உடைய திருமாலே! சுவர்க்க லோகத்தைத் தரிக்கிற மேரு பர்வதத்தையும், திருவனந்தாழ்வான் அல்லது திக்கஜங்களால் (திசை யானைகள்) தரிக்கப்பட்ட பூமியையும், பரமபதத்தையும், ஆகாயத்தாலே தரிக்கப்பட்ட சிறந்த கங்கையையும், மேக மண்டலத்தையும், ஓர் தீயையும் (வைச்வாநராக்நியையும்) ஐந்து வகை வாயுக்களையும் அமைத்துக் காத்து, ஒரு பொருளாகவே எல்லாவற்றையும் ஏந்தி நிற்கிறதென்று உபநிடதங்களில் சொல் லப்பட்டுள்ள குணம் திருமாலிடம்தான் இருக்கின்றது என்று இறைவன் படைப்பு, காத்தல் (அளிப்பு) நிலைகளுக்கு ஆதார மாகத் திகழ்வதை நுட்பமாக வெளியிடுகின்றார்.[56]

படைப்பு அளிப்பு பற்றிக் கூறி, உலக இயக்கம் எல்லாம் இறைவன் இடத்தில் திகழ்வதை,

> தன்னுள்ளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
> தன்னுள்ளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தம்மைபோல்
> நின்னுள்ளே பிறந்திறந்து நிற்பவுந் திரிபவும்
> நின்னுள்ளே யடங்குகின்ற நீர்மைநின் கணின்றதே[57]

என்றும்,

> அழகியான் தானே யரியுருவன் தானே
> பழகியான் தாளே பணிமின் — குழவியாய்த்
> தானே ழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே[58]

என்ற இப்பாசுரத்தில் இறைவன் தானே படைத்தும் காத்தும் தன்னுள்ளே அடக்கிக் கொள்கின்றான் என்பதை குறிப்பிடு கின்றார். இங்ஙனம் சத்துவ சூனியத் தத்துவத்தை ஆழ்வார் விளக்குகிறார்.

---

55 தத்துவத்திரயம், 119.
56 திருச். விரு., 6
57 ௸ 10.
58 நான், திரு., 22.

**சரீர-சரீரிபாவனை:** ஈசுவரனுக்கு அடிமையாகவுள்ள ஆன்மா, ஆன்மாவை விட்டுப் பிரிந்திராத உடலைப்போல் ஆண்டானாகிய ஈசுவரன் தனியாகவும், தான் வேறாகவும் காணப்பெறுதல் இல்லை. இந்த முறையில் ஒவ்வோர் ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும். இவ்வாறு அசித்து, சித்துடன் ஈசுவரன் இணைந்து, அந்தர்யாமியாய் உடலில் எழுந்தருளியிருக்கின்றான். எனவே, சேதநா-சேதநங்கள் எம்பெருமானின் சரீரமாக அமைந் துள்ளன. இந்நிலையைச் சரீர-சரீரிபாவனை (உடல்-உயிர் உறவு) என்று வழங்கப்பெறும். இத் தத்துவம்,

> ஐந்து மைந்து மைந்துமாகி அந்தரத்தணைந்து நின்று
> ஐந்து மைந்து மாயநின்னை யாவர்காண வல்லரே? [59]

என்று பாசுரத்தில் விளக்கம் அடைகின்றது.

## 3. ஈசுவரன்

" ஸ்ரீமந் நாராயணனே சர்வேசுவரன் " இறைவன். ஈசுவரன் என்ற சொல்லுக்கு ' ஏவுவோன் ' என்பது பொருள். இறைவனை 'விபு' என்று குறிப்பிட்டு இறைவன் எல்லா இடங்களிலும் வியாபித் துள்ளதைக் கூறுவர். இதனைக் கரந்தசிலிடந் தொறும் இடம்திகழ் பொருள்தொறும், 'கரந்தெங்கும் பரந்துளன்' [60] என்ற பாசுரம் விளக்குகிறது.

முன் உள்ள சித்து, அசித்து என்ற இரண்டு தத்துவத்தையும் நியமிப்பவன் (இயக்குபவன்) ஈசுவரன். இவன் எப்பொழுதும் மாறுபடாத் தன்மையுடையவன். சத்தியம், ஞானம், ஆனநதம் இவற்றின் சொரூபமாக இருப்பவன். இடத்தாலும், காலத்தாலும் அளவிடப்பெறாதவன். சேதந - அசேதந பரிணாம உருவ வேறுபாட்டின் குறைகள் தட்டாதவன். நான்குவித பலன்களையும் (அறம், பொருள், இன்பம், வீடு) உயிர்களுக்கு அருளி அவற்றின் புகலிடமாக இருப்பவன், தன் சொரூபம், திருமேனி ஆகியவற்றால் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். 'ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜசு' முதலிய மங்கள குணங்களால் நிறையப்பெற்றவன். அவனிடம் இக்குணங்கள் ஆதல், அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர ' வாத்சல்யம், சௌசீல்யம், சௌலப்பியம் ' முதலிய எண்ணற்ற குணங்களையும் உடையவன். [61]

---

59 திருச். விரு., 3
60 திருவாய்., 1-1:10.
61 தத்துவத்திரயம்., 141.

'உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய வற்றுக்கு காரணபூதன். அனைத்திற்குத் ஆதாரமானவன்.......... நான்முகன் முதற்கொண்டு சகல தேவர்களையும் படைப்பவன். மேலும் லீலாவிபூதியில் உயிர்கள் தம்தம் வினைகட்கேற்ப உடல்களை அடைவதற்கும், பிறகு வீடுபேறு அடைவதற்கும் இவனே காரணன்.[62] பரமபதத்தில் (நித்தியவிபூதி) இவனுக்கென்று தனியான ஈடு இணையற்ற பேரொளியுடைய திருமேனி உண்டு. இப்பேரொளி கண்டாரை ஈர்ப்பது; யோகிகளின் தியானத்திற்கு ஏற்றது. அவ்வொளியுடன் தமது தேவிமார்களுக்கும் நாயகனாக திகழ்பவன். ஈசுவரன் உலகப் படைப்புக்கு, முதல்-நிமித்தம்-துணைக் காரணமாக இருப்பவன்.

உலகிற்கு குட்சுமமான சித்து, அசித்துக்களின் இயல்புகளுடன் கூடிய (விசிஷ்ட) பிரமம் 'முதல் காரணம்' (உபாதானம்); சங்கல்பத்தில் (நினைவில்) இயல்புடன் கூடிய (விசிஷ்ட) பிரமம் உலகிற்கு 'நிமித்த காரணம்'. காலம் முதலியவற்றின் இயல்போடு கூடிய (விசிஷ்ட) பிரமம் 'துணைக் காரணம்'. இந்தத் தூலமான சித்து, அசித்து, வசிஷ்டப்பிரமம், சித்து எனப்படும். சூட்சும சித்து, அசித்து வசிஷ்டப் பிரம்மமாக இருந்தது; இரண்டாவதற்றதாக இருந்தது என்பது உபநிடதம். இதனால் இறைவனே உலகிற்கு மூவகைக் காரணமும் ஆகின்றான் என்று வைணவம் உறுதி செய்கின்றது[63]. இம் முக்காரணங்களால் இறைவன் ஆதியாக நின்று விண்ணுக்கும் மண்ணுக்கும் காரண பூதனாக இருக்கிறான் என்றதை ஆழ்வார்,

**ஆதியாதி யாதிநீ ஓரண்டமாதி யாதலால்**
**சோதியாத சோதிநீ அதுண்மையில் விளங்கினாய்**
**வேதமாகி வேள்வியாகி விண்ணினோடு மண்ணுமாய்**
**ஆதியாகி யாயனாய மாயமென்ன மாயமே ?[64]**

என்றும் விளக்குவார்.

**தேவராய் நிற்குமத் தேவும் அத்தேவரில்**
**மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும் - யாவராய்**
**நிற்கின்ற தெல்லாம் நெடுமால்.[65]**

என்று மேலும் விளக்குகிறார். பின்னர் ஈசுவரன் தம் சங்கற்பத்தால் மற்ற தெய்வங்களை படைத்தருளியதை,

---

62 சில நோக்கில் நாலாயிரம்., ப. 86.
63 வைணவத் தத்துவ அடிப்படைகள்., பக். 180-182.
64 திருச். விரு., 84. இதன் திவ்வியார்த்த தீபிகையையும் காண்க.
65 நான். திரு., 54.

நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்

என்றும்,

... ... ... ... நின்னுந்திவாய்
அன்றுநான் முகற்பயந்த ஆதிதேவ னல்லையே ?[66]

என்றும் இறைவன் எல்லோர்க்கும் ஒருவனே; அவனுடைய படைப்பின் விளையாட்டு பெருமைகளை யாரும் அறியமாட்டார் என்பதை,

தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர்
ஆரு மறியா ரவன்பெருமை[67]

என்று சுட்டி ஞாலத்து ஒரு பொருளான ஆதிபூதன் அவனே என்றும், அவனே அனைத்திற்கும் காரணமானவன் என்றும் கூறி முதலில் படைக்கப்பட்ட அப்பொருளைத் தாம் கண்டு அறிந்ததை மகிழ்ச்சியுடன் மொழிகின்றார்.[68]

உலகங்கட்கெல்லாம் நிர்வாகனன் இறைவனே! இவ்வுலகங்கள் சத்தைப்பெற்று நிற்பதும் இறைவன் அருளே! நான்முகனையும் பசுபதியையும் பிரகாசிக்கும் தீயையும், பெரிய குல பர்வதங்களையும், எண் திசையையும், சகல பொருள்களையும், ஆகாயத்தில் உள்ள சந்திர-சூரியர்களையும் ஆகிய அனைத்தையும் படைத்தவன் என்பதை,

நீயே யுலகெல்லாம் நின்னருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும் - நீயே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும், அண்டத்
திரிசுடரு மாய மிவை.[69]

என்றும், வான், கடல், தீ, உலாவுகின்ற காற்று, வெண் கதிர், குளிர்ந்த மதி, மேலே உலாவுகின்ற மேகங்கள், ஏழு மலைகள், ஏழு தீவுகள், ஏழு கடல்கள், பத்து திசைகள்,

---

66 நான். திரு., 1, திருச். விரு., 5.

67 நான், திரு., 2.

68 ஷை 3.

69 ஷை 20.

அத்திசைகளுக்குரிய திக்குப்பாலர்கள், ஏழு வகைத் தாவரங்கள், நவகிரகங்கள், பதினான்கு மேகங்கள், உடன் நிற்கும் புண்ணிய பாவங்கள் இவற்றிற்குத் தலைவன் என்பதையும் விளக்குவார். மருங்கு இருக்கிற தேவர்கள், அசுரர்கள், இப்பூமி, எல்லா பொருள்கள் ஆகியவற்றைப் படைத்த சர்வேசுவரன் என்பதைச் சுட்டிக்காட்டியும் அநுபவிக்கின்றார்.[70] மேலும், இறைவன் இயல், இசை, இதிகாசம், புராணம், நான்கு மறைகள் முதலியவற்றைப் படைத்ததை,

> பாட்டும் முறையும் படுகதையும் பல்பொருளும்
> ஈட்டிய தீயு மிருவிசும்பும் — கேட்ட
> மனுவும் சுருதி மறைநான்கும் மாயன்
> தானமாயையில் பட்ட தற்பு.[71]

என்ற பாசுரத்தில் அநுசந்திக்கின்றார். இப்படிப் பல பாசுரங்கள்.[72]

எம்பெருமானே! நான்முகன், உருத்திரன் முதலியோருக்குத் தெய்வமென்றும், எல்லா உயிர்களுக்கும் காரணபூதன் என்றும், இதற்கு முன் அறியப்பட்ட பொருள்களும், இனிமேல் அறியப்படும் பொருள்களுமாய் இருப்பவன் அவனே என்றும் தான் அறிந்து அறுதியிட்டதை,

> இனியறிந்தே னீசற்கும் நான்முகற்குந் தெய்வம்
> இனியறிந்தேன் எம்பெருமான் ! உன்னை — இனியறிந்தேன்
> காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை
> நாரணன்நீ நன்கறிந்தேன் நான்,[73]

என்று பாசுரத்தில் விளக்குவர். முச்செயல்களையும் இயக்குபவன் இறைவனே என்பதைக் கம்பநாடனும்.

> உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்,
> நிலை பெறுத்தலும், நீக்கலும் நீங்கலா
> அலகி லாவிளையாட்டுடையாரவர்
> தலைவர் ; அன்னவர்க் கேசரண் நாங்களே[74]

விளக்குவார்.

70 நான். திரு., 87, 57; திருச். விரு., 77, 79.
71 நான். திரு., 76,
72 திருச், விரு., 16, 26, 11, 12, 28. 30, 41, 48.
73 நான். திரு., 96.
74 கம்பராமாயணம், காப்புசெய்யுள்,

இங்ஙனம் வியாபக நிலையில் பரந்துள்ளதால் உயிர்களுக்கும் ஈசுவரனுக்கும் உள்ள வேறுபாட்டை ஜீவான்மா — சரீர அளவில் வியாபித்திருப்பதும் 'தன் ஞானத்தால்' என்றும், அவ்வாறன்றி 'ஈசுவரனோ தன் சொரூபத்தாலேயே' எங்கும் வியாபித்துள்ளான், என்பதையும் விளக்குகிறார்,[75] ப. அருணாசலம்.

முப்பொருள்களில் (சித்து, அசித்து, ஈசுவரன்) திருமால் எப்பொழுதும் இணைந்து இயக்கத்துடன் செயல்பட்டாலும், சேதநம், அசேதநம் ஆகியவற்றுடன் அந்தர்யாமியாகவும் கலந்துள்ளான் என்பதை,

> உலகுதன்னை நீபடைத்தி உள்ளொடுக்கி வைத்தி மீண்டு
> உலகுதன்னு ளேபிறத்தி ஓரிடத்தை யல்லையால்
> உலகுநின்னோ டொன்றிநிற்க வேறுநிற்றி யாதலால்
> உலகில்நின்னை யுள்ளசூழல் யாவருள்ள வல்லரே ?[76]

என்பதைப் புலப்படுத்துவார்.

இப்படிப்பட்ட வியப்பான நிலையையுடைய உன்னை அறிய வல்லார் உளரே என்று, உலகில் ஊடுருவி நின்றாலும் அவற்றி லிருந்து வேறாக இறைவன் திகழ்கின்றான் என்பதை ஆழ்வார்

> நான் புலப்படாதிருக்கும் நிலையில் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறேன். எல்லாவுயிர்களும் என்னில் உள்ளன. ஆனால் அவற்றுள் நான் அடங்கவில்லை [77]

என்ற கருத்தைக் குறிப்பிடுவதை நோக்கித் தெளியலாம்,

இதுவரை ஆழ்வார் ஈசுவரன் தான் காரணமாக இருந்து உலகினைப் படைத்தருளிய திறத்தினை எடுத்துக்காட்டி விளக்கப் பட்டது.

இனி, ஈசுவர தத்துவத்தில் இறைவனுடைய திருக்குணங்கள், இறை நிலைகள் ஐந்து ஆகியவை ஈண்டு காணத்தக்கவை.

**(அ) இறைவனின் திருக்குணங்கள் :-** இறைவன் பல திருக்குணங்களால் அலங்கரிக்கப் பெற்றவன். இவை 'திவ்விய குணங்கள், கல்யாண குணங்கள்' என இரண்டாகப் பிரித்துப் பேசப்படும்.

---

75 வைணவசமயம்., ப, 121.

76 திருச். விரு., 12.

77 பகவத்கீதை, 7:12.

உண்மையுமாதல் (சத்யத்துவம்), அறிவுமயமாதல் (ஞானத்துவம்), வரம்பின்மையாயிருத்தல் (அநந்தித்துவம்) இன்பமயமாதல்(ஆநந்தத்துவம்), மாசின்மையாயிருத்தல் (அமலத்துவம்), என்னும் குண இயல்புகளும், மிகுதியாகக் குறிக்கப்படும். புரையறக்கலத்தல், எளிமையாக இருத்தல், அருள்பாலித்தல் (சௌசீல்யம், சௌலப்பியம், வாத்சல்யம்) என்னும் பேரருட் குணங்களும் திருமாலின் 'திவ்விய குணங்களாகக்' கூறப் பெறுகின்றன. மேலும், 'ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜசு என்னும் ஆறு வகை இறைவனின் 'கல்யாண குணங்களாக உடையவன். இப்படிப்பட்ட பல குணங்களை உடைய இறைவன் எப்பொழுதும் மாறுபடாத தன்மையுடையவன். அவனின் இக்குணங்கள் ஆதல், அழிதல், இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இறைவனின் இக்குணங்களை இரத்தினச் சுருக்கமாக,

> சொல்லினாற் சுருங்க நின்குணங்கள் சொல்லவல்லரே ?[78]
>
> நின்று நின்றவன் குணங்கள் [78A]

என்று குறிப்பிடுவதையும் காணலாம்.

**(ஆ) இறைவனின் ஐந்து நிலைகள் :** இறைவன் ஐந்து நிலைகளில் பரந்து உளன். பரம்பொருளைத் திருமாலாக நினைத்து வழிபடும்போது ஒரு குறிப்பிட்ட வடிவமும், நாமமும் கொள்ளப் படுதல் இயல்பே. திருமால் மூர்த்தி — பேதங்கள் என்ற முறையில் ஐந்து நிலைகள் குறிக்கப்படுகின்றார். அவை,

எம்பெருமான் திருமேனி பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகளில் அமைந்திருக்கும். பரம் என்பது, வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவனுடைய உருவம்; வியூகம் என்பது, வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் என்ற உருவங்கள்; இவை பாற்கடலில் உள்ள இருப்புகள்; விபவம் என்பது, எண்ணற்ற அவதார மூர்த்திகள்; அந்தர்யாமித்துவம் என்பது, எல்லோருடைய இதய கமலத்தில் கட்டைவிரல் அளவு எழுந்தருளியிருக்கும் நிலை; அர்ச்சை என்பது, திவ்வியதேசங்கள் தோறும் திருமேனி கொண்டு (விக்கிரகம்) எழுந்தருளியுள்ள நிலையும், மற்றும் பக்தர்களின் விருப்பத்தின்படி அவரவர் இல்லங்களில் திருமேனி உருவம் கொண்டு எழுந்தருளி நிற்கும் நிலைகள்.[79]

78 திருச், விரு., 11,
78A ௸ 75.
79 தத்துவத்திரயம், 182—200.

இந்த ஐந்து நிலைகளை ஆழ்வார் தமது பாசுரங்களில் எங்ஙனம் சுட்டிக் காட்டியுள்ளார் என்பதைத் தனித்தனியே காணலாம்.

(1) **பரம் :** 'ஆவரண ஜலம் போலவே பரத்வம்'[80]. இவ்வுலகைக்காட்டிலும் மூன்று மடங்கு பெரியது பரமபதம்[81]*. ஆதலால் இவ்வுலகை முக்கால் பங்கு (திரிபாத் விபூதி) என்றும் மண்ணுலகைக் கால்பங்கு என்றும் கூறுவர். இது நித்தியர் முத்தர்களால் போற்றப் படும், பரசொரூபமான இடம் (பரமபதம்). இங்கு மூன்று தேவி மார்களும் இருக்கின்றனர். இப்படித் திகழும் இறைவன் உருவத்தையே திவ்விய மங்கள விக்கிரகம் என்பர். இவ்வுலகைத் திருமழிசையார்,

> அங்கு ஆரவாரம்; அது கேட்டு அழல் உமிழும் (பரமபதம்)
> '**வைகுந்தம்**'[82]
>
> '**விண்ணாளவேண்டுவார்; மேலையிடநாடு**'[83]

என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

(2) **வியூகம் :** 'பாற்கடல் போலே வியூகம்'[84] கடல் சேரும் திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருளும் நிலையே வியூக மெனப்படும். திருமால் உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல் போன்ற செயல்களை செய்யவும், மக்கள் வணங்கி உய்வு பெறு வதற்கும் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன் என்ற நான்கு வியூக வடிவங்களைப் பெறுகின்றான். இந்த நான்கு வடிவமும் திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் நிலையில் அடங்கும். இந்நிலையை ஆழ்வார்,

> ... ... ... ... '**தடங்கடற் புணத்தலை,**
> **செங்கண்நாகணைக் கிடந்த செல்வ மல்கு சீரினாய்**'[85]

என்றும்,

> ' **பாலிற் கிடந்ததுவும்.**'[86]

என்றும்,

80 ஸ்ரீவசனபூஷணம், 39

81 *பரமபதத்தைத் திருநாடு, வைகுந்தம், மோட்ச உலகு, கதி அருளும் நாடு, விண்ணுலகு என்று பலவாறாக வழங்குவர்.

82 நான்., திரு., 10, 19, 79

83 ஷை 90, 95,
திருச். விரு., மாகம்(6), ஏகமூர்த்திஆய்(17), விண்ணிநாதனே(85), வீடு பெற்று(67,108)

84 ஸ்ரீவசனபூஷணம், 39.

85 திருச். விரு., 15.

86 நான். திரு., 8, 86,

' நாகத்தணைப் பாற்கடல் கிடக்குமாதி நெடுமால்' [86A]

என்றும்,

' நாகமூர்த்தி சயனமாய் நலங் கடற்கிடந்து' [87]

என்றும், குறிப்பிடுவதைக் காணலாம். இந்தச் சயனத் திருக் கோலத்தை

விடத்தவா யொராயிரம் இராயிரங்கண் வெந்தழல்
விடுத்துவீள் விலாதபோகம் மிக்கசோதி தொக்கசீர்
தொடுத்துமேல் விதானமாய பௌவநீ ரராவணை
படுத்தபாயல் பள்ளிகொள்வது என்கொல் வேலை வண்ணனே! [88]

இங்ஙனம், விளக்கமாக வருணித்திருப்பதையும் நோக்கலாம். மேலும்,

பானிறக் கடற்கிடந்த பற்ப நாபனல்லையே ? [89]

என்றும்,

படைத்தடைத்து அதில் கிடந்து முன்கடந்த பெற்றியோய்!
பௌவநீர் [90]

என்றும், சுருக்கமாகக் குறிப்பிடுவதையும் காணலாம், இதே நிலை மேலும் நான்கு இடங்களில் குறிப்பிட்டு அநுசந்திப்பதையும் பார்க்கலாம். பரவாசுதேவன் நித்திய விபூதியையும், வியூக மூர்த்திகள் லீலா விபூதியையும் நிர்வகிப்பர்,

மேற்குறிப்பிட்ட 'நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும் மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங்களாகப் பிரியும்,' அவை :

*வியூக வாசுதேவன்— கேசவன், நாராயணன், மாதவன்
சங்கர்ஷணன் — கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன்.
பிரத்யும்னன் — திரிவிக்கிரமன், வாமன், சிரீதரன்.
அநிருத்தனன் — இருடிகேசன், பதுமநாபன், தாமோதரன்.

---

86A நான். திரு., 36
87 திருச். விரு., 17.
88 ௸ 18.
89 ௸ 23.
90 ௸ 28,29.

*வாசுதேவன் — ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம் தேஜசு.
சங்கர்ஷணன் — ஞானம், பலம்.
பிரத்யும்னன் — ஐசுவரியம், வீரியம்.
அநிருத்தனன் — சக்தி, தேஜசு, எனப்பிரிந்து செயல்படுவர்,

என்ற கிளைகளாகப் பிரிந்து பன்னிரு திருநாமங்கள் பெறும். இவையாவும் பன்னிரு திங்களின் தலைவர்களாக இருக்கும். இவற்றின் அறிகுறியாக வைணவர்கள் தம் உடலில் துவாதசமாகத் திருமண் காப்பிட்டுக் கொள்வர்.

ஈசுவரனின் ஆறு திரு குணங்களும் நான்கு மூர்த்தியாய் இருந்து செயல்படுவதை,

***ஏகமூர்த்தி, மூன்றுமூர்த்தி, நாலுமூர்த்தி நன்மைசேர்**
**போகமூர்த்தி புண்ணியத்தின் மூர்த்தியெண்ணில் மூர்த்தியாய்**
**நாகமூர்த்தி சயனமாய் நலங்கடற் கடந்து மேல்**
**ஆகமூர்த்தி யாயவண்ணம் என் கொல்? ஆதி தேவனே!**

—திருச்சந்த விருத்தம் 17

என்பதையும் திருச்சந்த விருத்தத்தில் விவரமாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். மேலும் நான்கு இடங்களில் குறிப்பிட்டு அநுசந்திப்பதையும் பார்க்கலாம்.[91]

(3) விபவம்: 'பெருக்காறு போலே விபவங்கள்'[92] இராம-கிருஷ்ணாதி அவதாரங்கள் எடுத்து மண்மீது உலாவி அருள் செய்பவனாகிய எம்பெருமானின் எண்ணற்ற அவதார மூர்த்தியாக விளங்கும் நிலை இது.

---

*ஏக மூர்த்தி — பரவாசுதேவன்.
மூன்று மூர்த்தி — சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தனன்.
நாலு மூர்த்தி — ப்ரதாநம், புருஷன், அவ்யக்தம், காலம்
போக மூர்த்தி — அர்கமானமூர்த்தி.
புண்ணியத்தின் மூர்த்தி — புண்யமே, வடிவு கொண்ட தொரு மூர்த்தி.
எண்ணில் மூர்த்தி— பலபல மூர்த்திகள்.
நாக மூர்த்தி — திருப்பாற்கடலில் திருக்கண் வளர்ந்தருளும் மூர்த்தி.
ஆக மூர்த்தி — அடியார்கள் உகந்த உருவமாகிய அர்ச்சாவதார மூர்த்திகள்,

91 திரு, வி௫., 48, 81, 92, 95.
92 ஸ்ரீவசனபூஷணம், 39.

"தீயோரை அழித்து நல்லோரைப் பேணவும் தருமத்தை
நிலை நாட்டவும் நான் அவ்வப்போது அவதரிக்கிறேன்"[93]

என்ற கீதையின் சுலோகம் இதனை விளக்கும். திருமால் பத்து அவதாரங்கள் எடுத்து அருள் செய்தார். இவ்வவதாரங்களை தவிர, 'பத்மநாபன் முதலாக முப்பத்தாறு அவதாரங்கள் உண்டு என்பர்[94] திருமால் எடுத்த அவதாரங்கள் கணக்கில. இங்கு, பத்து அவதரங்கள் பற்றி ஆழ்வார் பாசுரங்களில் சுட்டி இருப்பினும், பல ஆண்டுகள் உலக மக்களிடையே வாழ்ந்து இரண்டறக் கலந்து பல லீலா விநோதங்கள் செய்த இராம-கிருட்டிண அவதாரங்களே, அதிகமாக இந்த ஆழ்வாரின் பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன; சில இடங்கள் மட்டும் ஈண்டு நுவலப்படுகிறது.

'ஆய ; கண்ணனே! பூணிபேணுமாயனாகிப்,[95]

என்று இவ் கிருட்டிணாவதாரத்தை எடுத்துக் காட்டிய ஆழ்வார் வேறு பல இடங்களில்[96] சுட்டிக்காட்டுவார். அடுத்து நான்முகன் திருவந்தாதியில்,

'கதைப் பொருள்தான் கண்ணன் !'; 'கண்ணனையே நாளும்';

'கண்ணனே யென்றிருப்பன்'[97]

என்றும் சுட்டுவார். இன்னும் பல இடங்களில்[98] இவ் 'அவதாரத்தை அநுசந்தித்து மகிழ்வார்'. இ ரா ம ா வ தா ர த் தை திருச்சந்த விருத்தத்தில் 'சங்கவண்ண மன்னமேனி சார்ங்கபாணி யல்லையே ? 'குரங்கையாளு கந்த வெந்தை' என்றும் பல இடங்களில்,[99] குறிப்பிடுகின்றார். நான்முகன் திருவந்தாதியிலும், இந்த அவதாரத்தை,

......... ......... ......... 'ஈசனை வென்ற
சிலைகொண்ட செங்கண்மால்'[100]

என்பது போன்று பல இடங்களில் குறிப்பிட்டு மகிழ்வார்.

---

93 பகவத்கீதை 4:8.
94 வைணவதத்துவ ஞான அடிப்படைகள், ப. 201.
95 திருச். விரு., 2, 25, 26.
96 ஷை, 31, 33, 35, 38, 40—44, 52, 55, 58, 80, 86, 89, 92, 97, 99.
97 நான். திரு., 32, 84, 93.
98 ஷை. 16, 23, 24, 33, 71, 87.
99 திருச். விரு., 15, 21, 28, 30—33. 39, 50. 51, 54, 56, 57.
100 நான்., திரு., 8, 28, 29 53, 85.

4. அர்ந்தர்யாமித்துவ சொரூபம் :

'பூகத ஜலம் போல அந்தர்யாமித்துவம்.[101] எம்பெருமான் நம் இதயத்தில் இருப்பினும், அவனைப் பற்ற வேண்டும் என்னும் விருப்பம் உண்டாகில், அந்த இருப்பு கட்புலனுக்குத் தோன்றா மையின் பயன்பட்டிலது. நீர் வேட்கையுற்றவன், மிக்க தொலைவு சென்று பருக வேண்டாதவாறு தான் நிற்கும் நிலத்தின் அடியி லேயே நீர் இருப்பினும், அந்நீர் அவ்வமயம் பருகுவதற்குப் பயன் படாது போன்றுள்ளது.[102] இந்நிலையை பரிபாடலும்,

தீயினுள் தெறல் நீ பூவினுள் நாறறம்நீ
......... ......... ......... .........
அனைத்தும் நீ அனைத்தினுட் பொருளும்நீ[103]

என்று சுட்டிக்காட்டுகிறது.

ஈசுவரனுடைய அர்ந்தர்யாமித்துவ நிலையில்; ஈசவரன் சேதநர் களின் உள்ளே இருந்து எல்லாச் செயல்களுக்கும் தான் ஏவுபவனாக இருப்பதோடன்றி அவர்களைக் காப்பதற்காகவும் அழகே வடிவெடுத்தாற்போன்ற மங்களகரமான திருமேனியுடன் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவனாய்ப் பெரிய பிராட்டி யோடு கட்டைவிரல் அளவாக இதய கமலத்துள்ளே எழுந்தருளி யிருக்கும் இருப்பே இந்நிலையாகும்.[104]

ஆழ்வார் பாசுரங்களில் அந்தர்யாமித்துவம் : திருமழிசை யாழ்வார் முதல் யோக பக்தியால் இறைவனை தன் மனத்தில் என்றும் 'துளக்கமில் விளக்கமாய்'[105] (அந்தர்யாமியாய்) எழுந் தருளச் செய்தார். இவர் மனத்தில் எழுந்தருளியிருக்கும் திருமால் இவரை யாகசாலையில் சடங்கர்கள் இகழ்ந்தபோது ஆழ்வாரின் பக்தி வேண்டுகோளுக்குக் கட்டுபட்டும், அந்தர்யாமியாய் இருக்கும் இறைவன் சடங்கர்களுக்குப் புறம்பொசிந்து காட்டினர் என்பது: இவருடைய அவதார அக நிகழ்ச்சியே ஆதாரமாகச் சான்று பகர் கின்றது. இறைவன் தம்முள் அந்தர்யாமியாக எழுந்தருளியிருப் பதைத் திருச்சந்த விருத்தத்தில்,

101 ஸ்ரீவசநபூஷணம், 39.
102 விட்டுசித்தன் விரித்த தமிழ். ப. 212.
103 பரிபாடல்., 3; 63—68,
104 சில நோக்கில் நாலாயிரம்., ப. 30.
105 திருச். விரு., 4.

நின்றது மிருந்ததும் கிடந்ததும் மென்னெஞ்சுளே (64)

என்றும்,

முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார் (115)

என்பதையும் சுட்டிக்காட்டுவார். திருமால் தம்நெஞ்சில் அந்தர்யாமியாய் இருப்பதை மேலும் சில இடங்களில்[106] குறிப்பிடுகிறார். நான்முகன் திருவந்தாதியில்,

நிறை பொருளாய் நின்றானை நேர்பட்டேன் (69)

என்றும்,

என்றும் மறந்தறியேன் என்னெஞ்சத் தேவைத்து
நின்று மிருந்தும் நெடுமாலை (92)

என்றும் குறிப்பிடுவார். மேலும் சில பாசுரங்களில்[107] இந்த நிலையை அநுசந்தித்து மகிழ்கின்றார்.

5. அர்ச்சை : "அதில் தேங்கின மடுக்கள்போல அர்ச்சாவதாரம்"[108]. இந்நிலை காலத்தாலும் இடத்தாலும் விலகியிராமல், எல்லோரும் அடைவதற்கு எளிமையாக அண்மையிலே இருப்பது. இறைவன், தம் அடியார்கள் 'அது செய்யார், செய்தாரேல் நன்று செய்தார்' என்று குற்றங்களைப் பொறுத்தருளும் குணக் கடலாக விளங்கும் நிலையாகும். (எ.-டு.) திருக்கோவில்கள், வீடுகள் இங்கெல்லாம் தொழப்படும் திருவுருவங்கள், திவ்விய தேசங்களில் திருமேனி கொண்டுள்ள அர்ச்சாவதார மூர்த்திகள். மேலும், அர்ச்சை நிலை எம்பெருமான் "தானாக அவதரித்து (ஸ்வயம் வியக்தம்), தேவர்களால் நிறுவப்பட்டது. (தைவம்), (சித்தர்கள் நிறுவியது. (சைத்தம்), மனிதர்கள் ஏற்படுத்தியது (மானுஷம்) என நாலு வகையாகப் பேசப்பெறுவான்"[109] இங்ஙனம் அன்பர்கள் விரும்பிய வடிவத்துடன் இறைவன் எழுந்தருளியிருப்பான். இவை பொன், வெள்ளி, செம்பு, கல் முதலான திருமேனிகளாலானது. இந்த நிலை வடிவே இறைவனிடம் சேவை செய்ய விரும்பும் பக்தர்களுக்கு புகலிடமானது. இவ் ஐந்தாவது நிலை, மற்ற நிலைகளான தமக்கு எட்டாத பரம் போன்று திருப்பாற்கடல் (வியூகம்), விபவ

106 திருச், விரு., 65, 76, 119, 120.
107 நான். திரு., 27, 57, 58, 66, 86.
108 ஸ்ரீவசநபூஷணம், 39.
109 வைணவத்தத்துவ ஞான அடிப்படைகள்,, ப. 205.

(இராம-கிருஷ்ண) நிலை போன்று அல்லாமல் உடனே துய்த்து இன்பம் கொள்ள முடியாதவர்களுக்கு, எப்பொழுதும் மக்கள் நினைத்தவுடனே இன்பம் தரும் இறைவனின் வடிவநிலை அர்ச்சையாகும். எல்லோருடைய கண்களுக்கும் புலனாகுமாறு காட்சியளித்துக்கொண்டு, நீர் விடாய்க் கொண்டவன், அவ்விடாய் தணியுமாறு பருவத்திற்கேற்பப் பெருக்காற்றில் 'தேங்கிய மடுக்கள் போன்றுள்ளது. ஆதலின், இவற்றுள்[110] அர்ச்சாவதாரமே சேதநருக்கு நலம் அளிப்பது என்றாகின்றது.

**அர்ச்சாவதரத்தின் எல்லை நிலம் :** சௌலப்பியத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.[111] திருமாலின் திவ்விய தேசங்கள் நூற்றெட்டு. இந் நூற்றெட்டு தலங்களில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளே அர்ச்சாவதாரம். இவ்வவதார மூர்த்திகளை ஆழ்வார்கள் அனைவரும் மங்களாசாசனம் அருளியுள்ளனர். ஆழ்வார்கள் வரிசையில் திருமழிசையார் அர்ச்சாவதார பெருமாள் களிடமே அதிக ஈடுபாடு உடையவர். எனவே பதினேழு திவ்விய தேச அர்ச்சை நிலை மூர்த்திகளை மங்களாசாசனம் செய்துள்ளார்.

**அர்ச்சாவதார இயக்கம் :** திருமழிசையாழ்வார் தமது அகவாழ்வில் ஏற்பட்ட சூழ்நிலைகளில், அர்ச்சாவதார பெருமாள் களையே தமது பக்திக் கட்டளைக்கு இணங்கும்படி சாதனை செய்து காட்டியவர். கணிகண்ணனுக்காக திருவெஃகா பெருமானை நோக்கி விண்ணப்பம் செய்து (சொன்னவண்ண செய்த பெருமாள்), தம் பின்னே தொடருமாறு இயக்கினார். பின் திருக்குடந்தையில் சென்று ஆராவமுதனை நோக்கி தம்முடன் பேசுமாறு, சயனகோல பெருமாளை எழுந்திருக்கும்படி செய்து பின் அப்பெருமாளுக்கு மங்களாசாசனம் செய்து மகிழ்ந்தவர்.

**ஆழ்வார் அருள் செயலில் அர்ச்சை :** திருமழிசை யாழ்வார் அர்ச்சைநிலைப்பற்றி அருளிய திவ்ய தேசங்களாவன ; **அரங்கம், அல்லிக்கேணி, அன்பில், ஊரகம், எவ்வுள், கபிஸ்தலம், குடந்தை, குறுங்குடி, கோட்டியூர், துவாரகை, (துவரை) பாடகம், பாற்கடல், பேர்நகர், வெஃகா, திருமலை, பரமபதம் என்பன.**

**திருவரங்கம் :** ஆழ்வார் திருவரங்கத்தைச் சுட்டிக்காட்டும் பாசுரங்கள் : 'பண்டரங்கம்'[112], 'அரங்கத்து அவன்'[113],

110 விட்டுசித்தன் விரித்த தமிழ்., ப. 176.
111 முமுட்சுப்படி., 139.
112 நான். திரு., 3.
113 ஷை 30.

"நாகத்து அணை அரங்கம்"[114], அரங்கனே ![115] என்பவை அரங்கம் பற்றிய குறிப்புகளைக் கொண்டவை. திருச்சந்த விருத்தத்தின் பல பாசுரங்களில் இறுதியில், 'அந்தணீரரங்கமே' (49) 'மன்னுசீரரங்கமே '(50) 'அரங்கமென்பர்'(51), 'அந்தணீரரங்கமே'(52), 'அரங்கமென்றபேரதே'(53) 'அரங்கமேய அண்ணலே' (54), 'பொன்னிசூழரங்கமேய (55) 'அரங்கவாணனே' (93), 'பொன்னிசூழ் அரங்கமேயபூவைவண்ண! (119) என்று பலவாறு திருவரங்கபெருமானை அநுசந்திக்கின்றனர். அர்ச்சாவதார மூர்த்திகளாகிய பெரிய பெருமாள், அரங்கநாதன், நம்பெருமாள் அழகிய மணவாளன் ஆகிய பெருமாள்களை மங்களாசாசனம் செய்துள்ளார் ஆழ்வார்.

**திருவல்லிக்கேணி :** திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் சர்வேசுவரன் (அரங்கநாதன்) எதற்காக திருவாய் திறவாமல் கிடந்த நிலையில் உள்ளான் என்பதை,

> தாளா லுலக மளந்தவசவே கொல் ?
> வாளா கிடந்தருளும் வாய்திறவான் - நீளோதம்
> வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
> ஐந்தலை வாய் நாகத் தணை[116]

என்று அநுசந்தித்து மகிழ்கின்றார்.

**அர்ச்சாவதார மூர்த்திகள் :** ரங்கநாதர், மன்னாதன் முதலிய பெருமாள்களை மங்களாசாசனம் செய்துள்ளார்.

**திருவெவ்வுள், திருப்பேர் நகர், திருஅன்பில் :** ஒரே பாசுரத்தில் விரைவாக ஏழு திவ்வியதேசப் பெருமாள்களை அநுசந்திப்பதை,

> நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
> நாகத்தணை யரங்கம் பேரன்பில் - நாகத்
> தணைப்பாற்கடல் கிடக்குமாதி நெடுமால்
> அணைப்பார் கருத்த னாவான்.[117]

பாசுரத்தில் கண்டு மகிழலாம்.

---

114 நான். திரு., 36.
115 திருச், விரு., 21.
116 நான், திரு., 35.
117 ஷை 36.

**அர்ச்சாவதார மூர்த்திகள் :**

திருவெவ்வுள் : வீரராகவப் பெருமாள்.

திருபேர்நகர் : அப்பக்குடத்தான், அப்பாலா ரெங்கநாதன்

திருஅன்பில் : வடிவழகியநம்பி முதலிய பெருமாள்களுக்கு மங்களாசாசனம் செய்துள்ளார்.

திருஊரகம், திருபாடகம், திருவெஃகா : இந்த மூன்று திவ்விய தேசத்து எம்பெருமான்களை

'வெஃகா '[118]

என்றும்,

'குன்றிருந்த மாடநீடு பாடகத்து மூரகத்தும்
நின்றிருந்து வெஃகணைக் கிடந்தது என்ன நீர்மையே? [119]

என்றும்,

நின்றதெந்தை யூரகத்து இருந்ததெந்தை பாடகத்து
அன்றுவெஃக ணைக்கிடந்தது என்னிலாத முன்னெலாம் [120]

என்றெல்லாம், அநுசந்தித்து அகமகிழ்வதைக் காணலாம்.

**அர்ச்சாவதார மூர்த்திகள் :**

திருஊரகம் : திரிவிக்கிரமன், உலகளந்த பெருமாள், பேரகத்தான்.

திருப்பாடகம் : பாண்டவ தூதர்.

திருவெஃகா : யாதோக்தகாரி, சொன்னவண்ணம் செய்த பெருமாள், ஆழ்வார் தம் பின்னே வந்த பெருமாளுக்கு மங்களாசாசனம் செய்தது நினைக்க.

திருகபிஸ்தலம் : இத்திருத்தலத்து எம்பெருமானை,

—ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும் மாயன்
உரைக்கிடக்கும் உள்ளத் தெனக்கு [121]

என்று இவ்வாழ்வார் ஒருவர் மட்டுமே மங்களாசாசனம் செய்து சேவிப்பது குறிப்பிடத்தக்கது.

118 நான். திரு., 36
119 திருச், விரு., 63
120 ஷை 64
121 நான். திரு., 50

**அர்ச்சாவதார மூர்த்திகள்:**

கஜேந்திர வரதன், ஆற்றங்கரையில் கிடக்கும் கண்ணன் என்று ஆழ்வாரே மங்களாசாசனம் செய்துள்ளார்.

**திருக்குடந்தை ;-** ஆழ்வார் தம் கடைசிக் காலத்தை இத் தலத்தில் கழித்தமையால் தம் அன்புக்குக் கட்டுப்பட்ட பெருமாள் சிறப்பையும், திருக்குடந்தையையும் பலவாறு வருணனை செய்து போற்றியுள்ளதை கண்டு மகிழலாம். நான்முகன் திருவந்தாதியில் பல தலங்களைக் குறிப்பிடும் போக்கில் ;

'குடந்தை'[122] என்றும் திருச்சந்த விருத்தத்தில்,

'வலங்கொளக் குடந்தையுள் கிடந்தமாலு மல்லையே'?(56)

'பொங்குதண் குடந்தையுள் கிடந்த புண்டரீகனே' (57)

'வரங்கொளக் குடந்தையுள் கிடந்தமாலு மல்லையே?(58)

'கோலமாட நீடுதண் குடந்தைமேய கோவலா'! (59)

'செழுந்தடங் குடந்தையுள் கிடந்தமாலு மல்லையே?(60)

'கடந்தகால் பரந்தகா விரிக்கரைக் குடந்தையுள்

கிடந்தவா றெழுந்திருந்து பேசுவாழி கேசனே'!(61)

என்று ஏழு பாசுரங்களில் குடந்தையில் எழுந்தருளியிருக்கும் சார்ங்கப்பெருமானைப் போற்றுகின்றார்.

**அர்ச்சாவதார மூர்த்திகள் :** சார்ங்கபாணி, ஆராவமுதன்; ஆராவமுதாழ்வார், உத்தாநசாயீ ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்றவை.

**திருக்குறுங்குடி :** இந்தத் திருத்தலத்து எம்பெருமானை,

'கரண்ட மாடு பொய்கையுள் கரும்பனைப் பெரும்பழம்
புரண்டுவீழ வாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய்'![123]

என்று இயற்கையுடன் இணைத்துப் போற்றியுள்ளதைக் காணலாம். இங்கு எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதார மூர்த்திகள் வைணவ

---

122 நான். திரு., 36.
123 திருச். விரு., 62.

நம்பி, மலைமேல் நம்பி, நின்ற நம்த, இருந்த நம்பி, கிடந்த நம்பி திருப்பாற்கடல் நம்பி என்ற ஆறு மூர்த்திகளை மங்களாசாசனம் செய்துள்ளார்.

**திருக்கோட்டியூர் :** 'குறிப்பெனக்குக் கோட்டியூர்' [124] என்ற பாசுரத்தின் தொடரால் கோட்டியூர்ப் பெருமானைப் அநுசந்திக்கின்றார். இங்கு எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதார எம்பெருமான் சௌமிய நாராயணனை மங்களாசாசனம் செய்துள்ளார்.

**திருதுவராகை :** 'ஆயன் துவரைக் கோனாய் நின்ற' [125] இப்பாசுரத் தொடரில் ஆயர்பாடியில் வளர்ந்து துவாரகையில் மன்னனாக நின்ற கோலத்தை அநுசந்திக்கின்றார்.

**அர்ச்சாவதார மூர்த்திகள்:** கல்யாண நாராயணன், துவாரகாதீசன் (மூலவர்) பெருமாள்களை மங்களாசாசனம் செய்துள்ளார்.

**திருவேங்கடம் :** இத் திவ்யதேச எம்பெருமானைப் பல பாசுரங்களில் பரக்கக்குறிப்பிட்டுள்ளார். நான்முகன் திருவந்தாதியில் 'வேங்கடத்து மேயானை' (34) 'அழைப்பன் திருவேங்கடத்தானை' (39) என்ற தொடர்களால் விளித்துப் போற்றித் துதிக்கின்றார்.

'வெற்பென்று வேங்கடம் பாடினேன்' (40) 'வேங்கடவா !' (41), 'சேணுயர் வேங்கடம்'(42), 'வடவேங்கடத்தானை'(43), வேங்கட மலைக்கேபோம்' (44), 'தண்ணருவி வேங்கடம்'(45), 'குறவர்வில் லெடுக்கும் வேங்கடம்' (46), 'கானமும் வானரமும் வேடும் உடை வேங்கடம்'(47), 'வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும்' (48) என்று வேங்கடத்தையும், வேங்கடவாணனையும் பல இடங்களிலும்[126] அநுசந்தித்து மகிழ்கின்றார்.

**அர்ச்சாவதார மூர்த்திகள் :** கோவிந்தராசப் பெருமாள், திருவேங்கடமுடையான், ஸ்ரீநிவாசன், வேங்கடாசலபதி, பாலாஜி என்று பல திருநாமங்களில் வழங்கும் பெருமாளை மங்களாசாசனம் செய்துள்ளார்.

---

124 நான். திரு., 34.
125 ,, 71.
126 திருச். விரு., 48, 60, 81.

**திருப்பாற்கடல்:** இத் திவ்யதேச எம்பெருமான் நான்முகன் திருவந்தாதியில் இரண்டு பாசுரங்களில் இடம் பெறுகின்றார். 'பாலிற் கிடந்ததுவும்' (3) 'பாற்கடல்'(36); திருசந்தவிருத்தந்தில் 'ஜலங்கடற்கிடந்து' (17) 'பௌவநீரராவணை' (18) 'பாஸிறக் கடற்கிடந்த பற்பநாபன்' (23) 'படைத்தடைத்ததிற்கிடந்து' (28) 'பௌவநீர் அணைக்கிடந்து' (29) 'நீளகடற்கிடந்து (48) 'கடைந்த பாற்கடற்கிடந்து' (81) 'படைத்து அடைத்து அதிற் கிடந்து' (92) கடற்கிடந்த கண்ணனே (93) 'கடற்கிடந்தநின் அலால்' (95) என்று பல இடங்களில் திருப்பாற்கடல் நாதனை அநுசந்தித்து மகிழ்கின்றார். இங்குள்ள பெருமான்; திருப்பாற் கடல் நாதன்.

**அரச்சாவதார மூர்த்தி:** திருப்பாற்கடலில் உள்ள 'க்ஷீராப்தி நாதன்' (வியூக நிலை) பெருமாளை குறிப்பிட்டு மங்களாசாசனம் செய்துள்ளார்.

**பரமபதம் :** (வைகுந்தம்) என்ற இத் திவ்விய தேசம் கட் புலனுக்குப் புலப்படாதது. இதனை நான்முகன் திருவந்தாதியில்,

மேலையிட நாடு (95) என்றும், திருச்சந்தவிருத்தத்தில் 'வான் இருந்து' (48) என்று பல இடங்களில் போற்றியுள்ளதைக் காணலாம்.

**அர்ச்சாவதார மூர்த்தி:** பரமபதநாதனைப் (பரத்துவநிலை) போற்றி மங்களாசாசனம் செய்துள்ளார்.

இதுவரை பாசுரங்களில் ஈசுவர தத்துவம் அமைந்திருப்பது சுட்டிக்காட்டப்பட்டது.

## (2) இதம்

வீடுபேற்றிற்குச் சாதனமாக அநுட்டிக்கப்பெறும் வழியே 'இதம்' என்பது. வைணவ சமயத்தின் 'சித்தோபாயம், சாத்தியோ பாயம்' என்ற இரு நெறிகள் பேசப்பெறுகின்றன. சித்தோபாயம் என்பது, நம்மால் செய்யப்பெற வேண்டியதாயதன்றி முன்பேயுள்ள நெறி; சாத்தியோபாயம் என்பது, நம்மால் மேற்கொள்ளப்பெறும் உபாயமாகும். இது பக்திநெறி என்றும், பிரபத்தி நெறி என்றும் சாத்திரங்களில் இரு வகையாகப் பேசப்பெறும்.[127]

127 ஆன்மீகமும், அறிவியலும், ப. 257.

(1) பக்திநெறி: கண்ணன் அருச்சுனனுக்குக் கீதை உபதேசம் செய்தபோது 'கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம்' என்று மூன்று யோகங்களைப் பற்றி விரிவாக அருளிச் செய்து நிலைநாட்டியுள்ளார். மூன்று யோகங்களையும் மூன்று நிலைகளில் பயிற்சியடைய வேண்டிய நெறி என்று கூறுவர். பக்தி நெறியில் பல படிகள் உண்டு. இவற்றை எட்டு அங்கங்களாக முறைப்படுத்தி வகுத்துக் காட்டுவர். தவிர, பக்தி நிலையும், 'பரபக்தி, பரஞானம், பரமபக்தி' என்று மூன்று பிரிவுகளாக வேறுபடுத்திக் காட்டும் மரபும் உண்டு'.[128]

இப் பக்தி நெறி, பிரபத்தி நெறி இரண்டையும் திருமழிசையாழ்வார் தமது அகவாழ்வில் எவ்வாறு அநுட்டித்து வீடுபேறு பெற்றார் என்பதைப் பாசுரங்களில் காணலாம்.

(i) **கர்மயோகம் :** பரம்பொருளிடம் காட்டும் பக்தியின் ஒரு பகுதியே கர்மயோகம் என்று கூறுவர். இப்பக்தியை விளக்கும் போது விரதம் இருத்தல், வேள்வி செய்தல், மந்திரம் ஓதல் வணங்குதல், திருநாமத்தை எழுதுதல் போன்றவற்றைக் கடைப் பிடிக்க வேண்டும். இம்முறைகளை,

> ......... ......... —தெரித்தெழுதி
> வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும்
> பூசித்தும் போக்கினேன் போது [129]

என்ற பாசுரத்தில், காணலாம். மேலும் இதனை,

> ......... ......... ......... நல்லிதழ்த்
> தாமத்தால் வேள்வியால், தந்திரத்தால் மந்திரத்தால்
> நாமத்தால் ஏத்துதிரேல் நன்று [130]

என்ற பாசுரத்தில் கூறப்பெற்றிருப்பது ஒப்புநோக்கத் தக்கது.

இத்தகைய முறையைப் பின்பற்றியதோடு அஷ்டாங்க யோகத்தையும் அநுட்டித்து விரைவில் இறைவனைக் காணப் பெற்றார்.

---

128 ஆன்மீகமும் அறிவியலும், 257—258

129 நான். திரு., 63.

130 முதல். திரு., 70.

(ii) **ஞானயோகம்** : செயல்களால் செய்யும் வழிபாட்டை அடுத்து இடையறாத சிந்தனையால் செய்யும் வழிபாட்டை ஞானயோகம் என்பர். கர்மயோகத்தால் ஏற்பட்ட மனம் ஒன்றிய நிலையில் (ஆன்ம தியானம்) ஞானயோகம் கைவரப் பெறும். இதனை,

> **சொல்லினுந் தொழிற்கணும் தொடக்கறாத வன்பினும்**
> **அல்லினும் நன் பகலினோடும் ஆனமாலை காலையும்**
> **வல்லிநாண் மலர்க்கிழத்தி நாத ! பாத போதினை**
> **புல்லியுள்ளம் வீள்விலாது பூண்டுமீண்ட தில்லையே**[131]

என்ற பாசுரத்தில் கை எந்தத் தொழிலில் ஈடுப்பட்டிருந்த போதிலும், உள்ளமானது காலையிலும், மாலையிலும், இரவிலும், பகலிலும், அன்பனாகிய ஆழியானின் திருவடிகளிலேயே ஒன்றி நின்றதே தவிர மீண்டது இல்லை என்பதைக் குறிப்பிடுகின்றார்.

> **என்னதாவி யென்னும்வல் வினையினுட் கொழுந்தெழுந்து**
> **உன்னபாத மென்னநின்ற ஒண்சுடர்க் கொழுமலர்**
> **மன்னவந்து பூண்டுவாட்ட மின்றியெங்கும் நின்றதே**[132].

இஙஙனம் இப் பாசுரத்தில் தமது பக்திநிலை உச்சநிலை அடைந்து விட்டதால் தம்மை ஈடேறச் செய்வதற்காக, இறைவன் தம் இடத்திற்கே வந்துவிட்டதைக் கூறுகிறார். நின்றது, மிருந்ததும், **கிடந்தது** மென்னெஞ்சுளே! [133] என்ற பாசுரத்தால் வெளியிடுகிறார்.

(iii) **பக்தியோகம்** : இது பல நிலைகளில் அநுட்டிக்கப் பெறுதல் வேண்டும். பலன் பெற நெடுங்காலம் ஆகும். திருமழிசையாழ்வார் 'பக்திசாரர்' என்ற திருநாமத்திற்கு ஏற்ப பக்தி நெறியைப் பின்பற்றி பரமயோகியாக விளங்கினர். தமது பக்திநெறியைப் பல பாசுரங்களில் புலப்படுவதைக் காணலாம்.

> **செக்விகின்ப மாவதுவும். செங்கண்மால் நாமம்**
> **புவிக்கும் புவியதுவே கண்டீர்**[134]

என்றும்,

131 திருச்., விரு., 118.
132 ,, 119.
133 ,, 64, 65.
134 நான். திரு., 69

தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாம மேத்த
பொழுதெனக்கு மற்றதுவே போதும்[135]

என்றும் கூறியிருத்தலை நன்கு அறியலாம். இவர் கொண்டிருந்த பக்தியின் உறைப்பினை,

வெற்பென்று வேங்கடம் பாடினேன்; வீடாக்கி
நிற்கின்றேன் ; நின்று நினைக்கின்றேன்;—கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண் ![136]

என்றப் பாசுரத்தால் சுட்டிக் காட்டினார், என்றும் பக்தியை நாடி நின்றவர் இந்த ஆழ்வார் என்பதை,

பெறக்கரிய நின்னபாத பத்தியான பாசனம்
பெறற்கரிய மாயனே! யெனக்குநல்க வேண்டுமே[137]

என்கிற பாசுரத்தால் தெளியலாம். திருவடியை நாடி நிற்கும் பத்தியாகிய மரக்கலத்தைத் தமக்குத் தந்தருளுமாறு வேண்டுகிறார். இதனால் பத்தி பிறவிப் பெருங்கடல் நீந்துவதற்கேற்ற புணையாக இருக்கும் என்பது ஆழ்வாருடைய திடமான நம்பிக்கை என்பதை அறிய முடிகின்றது.

இறைவன் தாளை வணங்குவதற்கு அவன் கிருபை வேண்டும் என்பதை நன்கு உணர்ந்த ஆழ்வார்,

பரந்த சிந்தை யொன்றிநின்று நின்னபாத பங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே[138]

என்று விண்ணப்பித்து நிற்கின்றார் ; இக்கருத்தினையே,

கிடந்திருந்து நின்றியங்கு போதும்நின்ன பொற்கழல்
தொடர்ந்துவீள் விலாததோர் தொடர்ச்சிநல்க வேண்டுமே[139]

என்றும்,

---

135 நான். திரு., 85.
136 ,, 40.
137 திருச். விரு., 100
138 ,, 101
139 ,, 104

... ... ... ... பங்கயக்
கண்ண! நின்ன வண்ணமல்ல தில்லையெண்ணும் வண்ணமே[140]

என்றும்,

பொறுத்தநின் புகழ்க்கலாலோர் நேசமில்லை நெஞ்சமே![141]

என்பதையும் வற்புறுத்தி இறைவனிடம் வேண்டுவதைக் காணலாம்'

(2) **பிரபத்தி நெறி:** இதனைச் சரணாகதி நெறி என்றும் வழங்குவர். பக்தியோகத்தை அநுட்டிக்க முடியாதவர்கள் இந்த வழியை மேற்கொள்ளுவர். ஆழ்வார்கள் அனைவரும் மேற்கொண்ட பொதுவழி பிரபத்தியே ஆகும். இவ் ஆழ்வார் முதலில் பக்தி நெறியை அநுட்டித்து, பின்னர் பேயாழ்வார் என்ற குருவின் அடிச்சேரப்பெற்று 'ஆசார்யபிமாநமே உத்தாரகம்'[142] என்ற வாக்கியத்திற்கேற்ப அவர் நிழலில் ஒதுங்கி, அருள் பெற்றதால் இறைவன் திருவருள் எளிதில் கிடைக்கப் பெற்றார். இதனை,

... ... ... ... ... —வேறாக
ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தியிருப்பார் தவம்[143]

என்ற பாசுரத்தில், தாம் இறைவனிடம் பிரபத்தி முறையை அதிகம் அநுட்டித்ததை வெளியிடுகின்றார். மேலும் இதனை,

... ... ... ... நின்றனக்கு
அடைக்கலம் புகுந்தஎன்னை 'அஞ்சல்' என்ன வேண்டுமே![1]

என்பதனாலும்,

... ... ... ... புனித! நின்
இலங்குபாத மின்றிமற்றோர் பற்றிலேனெம் மீசனே![145]

என்பதனாலும் அறியலாம். நான்முகன் திருவந்தாதியிலும்,

என்றேனடிமை யிழிந்தேன் பிறப்பிடும்பை (95)

என்றும்,

---

140 திருச். விரு, 105
141 ,, 106
142 ஸ்ரீவசநபூஷணம், 447
143 நான் திரு., 18
144 திருச் விரு., 92
145 ,, 90

... ... ... ... —பொன்பாவை
கேள்வா! கிளரொளி யென்கேசவனே! கேடின்றி
ஆள்வாய்க் கடியேனா னாள் (59)

என்றும், இறைவனை வேண்டிச் சரணாகதி செய்து நின்றதை வெளியிடுகின்றார்.

ஆழ்வார் பலவாறு பிரபத்தியை அநுட்டித்து இறைவனிடம் சரணாகதி செய்தவுடன் திருமால் தம்மை ஆட்கொண்டதைத் திருச்சந்த விருத்தத்தில்,

அத்தனாகி யன்னையாகி யாளுமெம் பிரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப் பொழித்துநம்மை யாட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்துநம்முன் மேவினார்[146]

என்றும், இறைவனுடைய திருவடி என்கிற அழகிய சுடர்மிக்க மலரே நிலையாக வந்து படிந்து எங்கும் பரவி நின்றதை,

என்னதாவி யென்னும்வல் வினையினுட் கொழுந்தெழுந்து
உன்னபாத மென்னநின்ற ஒண்சுடர்க கொழுமலர்
மன்னவந்து பூண்டுவாட்ட மின்றியெங்கும் நின்றதே[147]

என்ற பாசுரத்தாலும் வெளிப்படுத்துகின்றார்.

இதுகாறும் பாசுரங்களில் 'இதம்' அமைந்திருப்பது நுட்பமாகக் காட்டப்பட்டது.

# (3) புருஷார்த்தம்

புருஷார்த்தம் என்பது: புருஷன்—ஆன்மா, அர்த்தம்—பொருள்; ஆன்மா அடைய வேண்டிய பொருள் என்று பொருள்படும். ஆன்மா அடைய வேண்டிய குறிக்கோள் நிலையைக் குறிப்பிடுவது புருஷார்த்தம். அஃதாவது 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' புகுவது ஆகும். இதனை நம்மாழ்வார்,

புலனைந்து மேயும் பொறியைந்தும் நீங்கி
நலமந்தமில்லது ஓர்நாடு புகுவீர்[148]

என்ற பாசுரத்தால் விளக்குவார். இத்திருநாட்டை திருவள்ளுவரும்

146 திருச் விரு., 115
147 ,, ,, 119
145 திருவாய். 2.8:4

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார்[149]

என்ற குறளில், வீட்டை (மோட்சம்) 'நிலம்' என்றார். இக்கருத்தினையே அவர் 'வரன் என்னும் வைப்பு என்றும்,[150] 'வானோர்க்கு உயர்ந்த உலகம்'[151] என்றும், 'வானம்'[152] (வீட்டுலகம்) என்றும் பலவாறு விளக்கியருள்வர்.

இந்த உடலை விட்டுப் பிரியும் ஆன்மா கதிரவன் மண்டலத்தைப்பிளந்து கொண்டு 'அர்ச்சிராதிகதி' மார்க்கமாகச் சென்று பரமபதம் என்னும் நாட்டை அடையும். அங்கே நித்தியசூரிகளுடன் ஆராவமுதத்தை அநுபவிக்கும்; அங்கிருந்து ஒருபோதும் மண்ணுலகுக்குத் திரும்புதல் இல்லை. 'ஆன்மா தன் விருப்பப்படி' நடப்பதும் பகவத் கைங்கரியத்தில் அடங்கியதே. தன் இச்சையுடன் பிரகிருதி மண்டலத்திற்கு வந்து சென்றாலும் ஆன்மாவுக்கு பகவதநுபவ ரசத்திற்கு இடையூறு ஒன்றும் இல்லை. இத்தகைய பகவதநுபவமே 'பரிபூர்ண பிரம்மாநுபவம்' எனப்படும். இதுவே 'பரமபுருஷார்த்தம்' என்பது.[153]

ஆன்மா தன் உடலைவிட்டு அர்ச்சிராதி நெறியில் தனித்துச் செல்லும்போது, சூரிய மண்டலத்தை கடந்து பரமபதம் அடைந்து இன்பம் அடைவதை,

சண்டமண்ட லத்தினூடு சென்றுவீடு பெற்றுமேல்
கண்டுவீடி லாதகாதல் இன்பநாளு மெய்துவீர்![154]

என்று பாசுரத்தால் சுட்டிக்காட்டுகிறார். பின்னர்,

ஆர்வமோ டிறைஞ்சிநின்று அவன்பெய ரெட்டெழுத்தும்
வாரமாக வோதுவார்கள் வல்லர்வான மாளவே[155]

என்றும்,

பத்தரா மவர்க்கலாது முத்திமுற்ற லாகுமே?[156]

என்றும்,

149 திருக்குறள், 3
150 „ 24
151 „ 349
152 „ 353
153 சில நோக்கில் நாலாயிரம், பக். 89-90
154 திருச். விரு., 67
155 „ 78
156 „ 79

> ... ... ... ... கழற்கு
> ஆசையாம வர்க்கலால் அமரராக லாகுமே?[157]

என்றும் வீடுபேற்றைக் குறித்துக் காட்டி, வீடுபேற்றை அடைந் தாலும், தாம் விடாது எம்பிரானைச் சேரவேண்டும் என்ற ஆசையைத் தவிர மற்றொன்று தம் நெஞ்சமானது நினைக்காது என்பதை,

> வீடதான போகமெய்தி வீற்றிருந்தபோதிலும்
> கூடுமாசை யல்லதொன்று கொள்வனோ? குறிப்பிலே[158]

என்று உரைத்து,

> மாளுநாள தாதலால் வணங்கிவாழ்த்தென் னெஞ்சமே
> ஆளதாகு நன்மையென்று நன்குணர்ந்த தன்றியும்
> மீள்விலாத போகம்நல்க வேண்டுமால பாதமே[159]

என்றும் விண்ணப்பித்தும் நிற்கின்றார். பின்னர் தாம் இன்ப வீடு பெற்றதை,

> இயக்கறாத பல்பிறப்பில் என்னைமாற்றி, மின்றுவந்து
> உய்க்கொள்மேக வண்ணன்நண்ணி யென்னிலாய தன்னுள்ளே
> மயக்கினான்தன் மன்னுசோதி ஆதலாலென் னாவிதான்
> இயக்கெலா மறுத்துஅறாத வின்பவீடு பெற்றதே[160]

என்று மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறார். தம்மை ஆட்கொண்டு வீடுபேற்றை அளித்ததுபோல் மற்ற உயிர்களுக்கும் வீடுபேற்றை அளிக்கவேண்டும் என்பதை,

> ... ... ... ... —உவந்தெம்மைக்
> காப்பாய்நீ, காப்பதனை யாவாய்நீ வைகுந்தம்
> ஈப்பாயு மெவ்வுயிர்க்கும்நீ[161]

என்ற வரிகளால் விண்ணப்பிக்கிறார். இறுதியாக, தாம் பக்தியால் நிரம்பப் பெற்று இப்போது திருநாட்டைக் கண்டு, அநுபவிக்கும் பேறு பெற்றதை,

---

157 திருச், விரு., 80
158 ,, 108
159 ,, 112
160 ,, 120
161 நான். திரு., 19

ஏன்றேனடிமை; யிழிந்தேன் பிறப்பிடும்பை;
ஆன்றே னமரர்க் கமராமை; - ஆன்றேன்
கடனாடும் மண்ணாடுங் கைவிட்டு மேலை
இடநாடு காண இனி[162]

என்ற பாசுரத்தால் அநுசந்திக்கின்றார். இங்ஙனமாக ஆழ்வார் புருஷார்த்த தத்துவத்தைப் பாசுரங்களில் புலப்படுத்துகிறார்.

## மந்திரங்கள்

'எழுத்துக்களில் நான் அகரம்'[163] என்பது கீதையின் சுலோகம், வள்ளுவரும் 'அகர முதல எழுத்தெல்லாம்' என்று அகரத்தைச் சுட்டுகிறார். ஆகவே எழுத்துக்களின் அகரம் திருமாலைக் குறிக்கும். ஓம் என்பது அ, உ, ம என்னும் மூன்று எழுத்துக்களின் சேர்க்கையே. இதில் 'அ' திருமாலையும், 'உ' அநந்யார்ஹத்துவத்தையும், 'ம' உயிர் அல்லது சீவான்மாவையும் குறிக்கும். மகார வாச்சியான திருமழிசை யாழ்வார் சிறு வயதிலே பிராட்டியாலும், எம்பெருமானாலும் வாழ்த்தப்பெற்று ஞானபக்தி உடையவராக விளங்கினார். இறையருள் நிரம்பப்பெற்ற இவர்தம் பாசுரங்களில் மந்திரங்களை உட்பொருளாக அமைத்திருப்பதில் வியப்பொன்றும் இல்லை. வைணவ முறைப்படி மோட்சத்தை அடைய விரும்புவர்கள் முறைப்படி அறிந்துகொள்ள வேண்டிய இரகசியங்கள்[164] மூன்று. இது 'இரகசியதிரயம்' என்று வழங்கப்பெறும்.

திருமால் தன் நிர்ஹேதுக கிருபையாலே சகல வேத சாரமாய் இருக்கும் முதன்மை பெற்ற மூன்று இரகசியங்களைச் சேதநர்கள் அறிந்து உய்யும்படி வெளியிட்டருளினார்.

அவை: (1) திருமந்திரம்; (2) துவயம் (3) சரமசுலோகம், என்பன 1. பெரிய திருமந்திரமென்றும். மூல மந்திரமென்றும் சொல்லப் படுகின்ற திருஎட்டெழுத்து (அஷ்டாக்ஷரம்) மந்திரத்தைத் திருமால் தானே ஆசாரியனாய் நின்று நரனுக்குப் பதரிகாச்சிரமத்தில் உபதேசித்தார் என்பது வரலாறு. 2. மந்திர ரத்நமாகிய துவயம் வைகுந்தத்திலே பரந்தாமனால் பெரிய பிராட்டிக்கு அருளப் பெற்றதாகும். 3. சரமசுலோகம் பாரதப்போரில் கண்ணப்பிரான் தேர்த் தட்டிலிருந்து கொண்டு அர்ச்சுனனுக்கு அருளப்பட்டது.

162 நான். திரு., 95
163 பகவத்கீதை, 10:33
164 மந்திரங்களின் பெருமைகளை உணராதார் காதில் விழாதவாறு மறைக்கப் பெற்றதால் இவை 'இரகசியங்கள்' எனப்பட்டன,

**1. திருமந்திரம் :** முதலில் உள்ள திருமந்திரத்தில் 'ஓம்' 'நம' 'நாராயணாய' என்று மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்ற சொல்லின் பொருளையே ஏனைய இரண்டு சொற்களும் நன்கு விரிவுப்படுத்துகின்றன. இந்த இரண்டு சொற்களின் பொருளையே 'துவயம்' என்ற இரண்டாவது மந்திரம் விவரிக்கின்றது. இத்தத்துவத்தின் பொருளையே 'சரமசுலோகம்' என்ற மூன்றாவது மந்திரம் மேலும் விவரிக்கின்றது.[165]

மேற்சுட்டிய 'மூன்று பதமும்' மூன்று அர்த்தத்தை சொல்லுகிறது. அதாவது சேஷத்துவமும், 'பாரதந்தரியமும், கைங்கரியமும்'[166] என்பனவற்றைக் குறிக்கும். ஓம்-சேஷத்துவம்-அடிமையாய் இருத்தல்; **நம** - பாரதந்தர்யம் - பரனுக்கு வசப்பட்டிருத்தல் ; **நாராயணாய** கைங்கரியம்-சேதநன் ஈசுவரனுக்குச் செய்ய வேண்டிய முகமலர்ச்சியுடன் கூடிய சேவை. **ஆய** - நான்காம் வேற்றுமை உருபு 'கு' என்ற பொருளது.

**திருமந்திரம் உட்பொருள் 1. ஓம் :** 'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம்.[167] மூன்று பதங்களும் எட்டு எழுத்துகளுமாக அமைந்துள்ளது. இவற்றுள் "முதற்பதமான ஓம் என்பது ப்ரணவம். இது 'அ' என்றும், 'உ' என்றும் 'ம' என்று மூன்று பதமாய் இருப்பது. இவை, மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமா போலே மூன்று வேதத்திலும் மூன்று எழுத்தையும் எடுத்தது"[168] என்று நுவலுவர். அகாரம் - திருமாலையும், உகாரம் - "திருமகளையும் (பிராட்டி)", மகாரம் - உயிரையும் குறிக்கும். உயிர் இறைவனோடு இணைவதற்கு உதவியாக புருஷகார பூதையாக இருப்பவள் பிராட்டியாகும். இதுவே பிரணவ மந்திரத்தின் அடிப்படைத் தத்துவம்.

---

165 சில நோக்கில் நாலாயிரம், ப, 199

166 முமுட்சுப்படி, 29, 30

167 ஓம் — ஓரெழுத்து—(ஏகாக்ஷரம்)
ராம —இரண்டெழுத்து மந்திரம்
கோவிந்தா — மூன்றெழுத்து மந்திரம்
ஓம் நமோ நாராயணாய —எட்டெழுத்து மந்திரம் — (அஷ்டாக்ஷரம்)
ஓம் பகவதே வாசுதேவாய நம — பன்னிரெண்டெழுத்து மந்திரம்—(துவாதசக்ஷரம்)
பேராசிரியர் ஸ்ரீமான் C. ஜகந்நாதாசாரியர், எம்.எ., எல்.டி., அவர்களிடம் பாடம் கேட்டப்பொழுது ஆய்வாளருக்கு விளக்கியவை.

168 முமுட்சுப்படி, 32, 33

2. நம: 'நம' என்ற ஒலி உயிர் நிலையானது. இதன் பொருள் 'மந' என்பதாகும். அதாவது எனக்கென்று ஒன்றுமில்லை. எல்லாம் அவனுக்கே என்ற அருங்கருத்தை உள்ளடக்கியது ஆகும். ஆக இந்த ஆன்மா அத்யந்த பாரதந்தரிய நியதனாய் எம்பெருமானுக்கே உரியனாய் அவனுடைய அடியார்க்கடிமை செய்பவனாய் இருக்க வேண்டுமென்று 'நம' பதத்தின் பொருள் தெரிவிக்கிறது. இதனையே ஆழ்வாரும், 'யானேநீ என்னுடைமையும் நீயே' (திருவாய் 2-9:9) என்று நம்மாழ்வாரும், 'உனக்கே நாம் ஆட் செய்வோம் மற்றை நங்காமங்கள் மாற்று' (திருப்பாவை - 29) என்று ஆண்டாளும்' நானுன்னை யன்றியிலேன் கண்டாய் நாரணனே! நீ யென்னையன்றி யிலை' (நான். திரு. 7) என்று திருமழிசை யாழ்வாரும் அருளிச் செய்துள்ளனர்.

3. நாராயணாய: நாராயணன் என்ற சொல் மிகுந்த ஆழ்பொருளை உடையது. இந்த ஆழ்பொருளை, நாராயணன் — நாரம் + அயநம்; நாரங்களுக்கு — அயநமாக இருப்பவன்; நாரங்களை அயநமாக உடையவன்; அயநம் — இருப்பிடம்; நாரங்களாவன — நித்திய வஸ்துக்களின் திரள்; அவையாவன — பரமபதம், பிற அண்டங்கள் முதலியன;

ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும். ஜ்ஞாந ஸக்தியாதிகளும், வாத்ஸல்யஸௌ ஸீல்யாதிகளும், திருமேனியும், காந்திஸௌ குமார்யாதிகளும். திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்தியசூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசற்காக்கும் முதலிகளும், கணாதி பரும், முக்தரும், பரமாகாஸமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும், காலமும், மஹதாதிவிகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக் குட்பட்ட தேவாதிபதார்த்தங்களும் (முமுட்சுப்படி — 95 - 97) ஆகும்.

4. 'ஆய' 'ஆய' என்கிற (சதுர்த்தியால்) நித்திய கைங்கர்யப் ப்ரார்த்தனையை விவரிக்கிறது. 'ஒழிவில் கால மெல்லாம் உடனாய் மன்னி வழுவில்லா வடிமை செய்ய வேண்டும்' (திருவாய். 3-3;11) என்று அவனுக்கேயாகும் கைங்கர்யத்தைச் செய்வதாகும். 'நாராயணாய' என்பதில் ஆய என்பது நான்காம் வேற்றுமையாகும். அகங்கார, மமகாரம் இன்றி நாராயணனின் முக உல்லாசத்திற்காகவே கைங்கர்யம் செய்தல் என்பது இந்தத் திருமந்திரத்தின் சாரமான பொருளாகும்.

இந்தக் கருத்தினைத் திருமழிசையாழ்வாரின் பல பாசுரங்களில் காணலாம். முக்குணங்களையுடையவர்களை தம் குழுவில் இணைய

அழைக்கிறார் ஆழ்வார்; மூன்று வகைப்பட்ட மனிதர்களான இராச, தாமச, சாத்துவிக என்ற குணங்களைக் கொண்டவர்களாக ஞானிகளையும்; கைவல்யார்த்திகள், ஐச்வர்யாத்திகளையும் உய்வ தற்கு வழி இல்லை என்று எண்ணமாய் சாத்விக குணம் உடைய வர்களையும் தம்முடைய குழுவில் வந்து சேர அழைக்கும்போது,

> ... ... ... உபாய மில்லையுங்குறில்
> தொத்திறுத்த தண்டுழாய் நன்மாலை வாழ்த்தி வாழ்மினோ![169]

என்றும், சர்வேசுவரனை நாளும் வாழ்த்தி வணங்கினால் பாவம் நீங்கும், நல்ல ஞானபக்தி தழைக்கும் என்று தம்முடன் இணைந்த வர்களுக்குக் கூறும்பொழுது,

> செறிந்தெழுந்த ஞானமோடு செல்வமுஞ் செறிந்திடும்
> மறிந்தெழுந்த தெண்டிரையுள் மன்னுமாலை வாழ்த்தினால்
> பறிந்தெழுந்த தீவினைகள் பற்றுதல் பான்மையே [170]

என்றும், அவன்நாமத்தை ஓதுவதால் பரமபதத்தை ஆள்வதற்கும் வல்லவர் என்பதை,

> ... ... ... ... ... ... நின்மலனலங்கழல்
> ஆர்வமோ டிறைஞ்சிநின்று அவன்பெய ரெட்டெழுத்தும்
> வாரமாக வோதுவார்கள் வல்லர்வான மாளவே[171]

என்றும் விளக்குகிறார். தொடர்ந்து நாராயண மந்திரத்தைச் சுட்டு வதை; 'எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே' [172] 'நாராயணன்'[173]; நாரணனே![174] 'நற்பொருள்தான் நாராயணன்'[175] 'நாராயணன் என்னை'[176]; 'நாரணன்'[177]; 'நல்லானை; நாரணனை'[178]; 'நாரணனை, நம்பதியை'[179] 'நாரணனே'[180]; 'நாரணன் நீ, நன்கறிந்தேன் நான்'[181]

---

169 திருச். விரு., 68
170 ,, 74
171 ,, 78
172 ,, 77
173 நான். திரு., 1
174 ,, 7
175 ,, 13
176 ,, 14
177 ,, 31
178 ,, 64
179 ,, 67
180 ,, 72
181 ,, 96

என்று பல பாசுரத் தொடர்களில் நாராயண நாமத்தைச் சுட்டிக் காட்டுகின்றார். இறுதியில் நாராயணன் யார் என்பதையும், அவன் நாமத்தைத் தான் நன்கு அறிந்து கொண்டதையும் கூறுகின்றார் திருமங்கையாழ்வார்,

> **நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்**
> **நாராயணா வென்னும் நாமம்** [182]

என்று அருளிச்செய்திருப்பதையும் ஈண்டு நினைவு கூறலாம்.

இதுவரை பாசுரங்களில் திருமந்திர தத்துவம் எடுத்துக் காட்டப்பட்டது.

(2) **துவயம்** : வைணவ ஞானமாகிற ஆலமரத்தின் தாய்—அடி—உள்—ஜீவ—விழுது அர்த்த பஞ்சகம். இந்த அர்த்த பஞ்சக அடியின் உள், உயிர் நாடி விழுதே 'துவயம்' என்னும் 'மந்திர ரத்தினம்'. இதில் பூர்வ வாக்கியம், உத்தர வாக்கியம் என்ற இரு வாக்கியங்கள் உள்ளன (துவயம்—இரண்டு).

**பூர்வ வாக்கியம்** : இது 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே' என்பது இதில் 'சரணௌ' என்ற பதம் இரண்டு என்ற பொருளைக்கொண்டதாகும். வடமொழியில் ஒருமை, இருமை, புன்மை என்ற இலக்கண அமைப்பு இருப்பதுபோல 'சரணௌ' என்பது இரண்டினைக் குறித்து இறைவனின் இரண்டு திருவடிகளைக் காட்டுகிறது.

**உத்தர வாக்கியம்**: இது ஸ்ரீமதே நாராயணாய நம: என்பது முன்னதுடன் பின்னதான இதனையும் இணைந்து ஒரு மந்திர மாகக் கருதப்படுகிறது. இதன்உட்பொருள் 'பிராட்டி சம்பந்தத்தோடு என்றும் கூடியவன் நாராயணன்' என்பதாகும். 'ஸ்ரீமந் நாராயணன்' என்ற தொடர் இலக்குமியோடு (ஸ்ரீயோடு) மன்னிக்கிடப்பவன் நாராயணன் என்று பொருள்படும்.

**துவயத்தின் ஏற்றம்** : எல்லாச் சாத்திரங்களும் ஒருவனுக்குத் தேகத்தாலே பேறு கிடைக்கும் என்கிறது; திருமந்திரம் ஆன்மாவாலே பேறு கிடைக்கும் என்கிறது; சரமசுலோகம் ஈசுவரனாலே பேறு கிடைக்கும்; என்று பகருகின்றது. ஆனால், துவயமோ ஒருவனுக்குப் பேறு கிடைப்பது பெரிய பிராட்டியாலே என்று இயம்புகின்றது.[183] ஆன்மாவோடு கூடிய தேகத்தை அடக்குவது கடினம்; எனவே தேகத்தால் பேறுபெறுவதும் கடினம்.

182 பெரிய. திருமொழி., 1 . 1 : 1
183 முமுட்சுப்படி, 118

சர்வ சுதந்திரனான ஈசுவரனும், நம் வசப்படுவது அரிது. ஆகையால் ஈசுவரனால் பேறு பெறுவதும் கடினம். ஆனால் நம் "தாயாராகிய பெரிய பிராட்டியோ, நம்மைக் காப்பாற்றவே காத்துள்ளார். எனவே 'துவயமந்திரமே' நமக்குத் தஞ்சமாக அமைகிறது.

**துவயமந்திரத்தின் சொற்பொருள் :**

(1) ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே!

(2) ஸ்ரீமதே நாராயண ஆய நம:

என்ற துவயமந்திரத்தின் இரு வாக்கியங்களுள் பத்துப் பதங்களும்,[184] இருபத்தைந்து எழுத்துக்களுமாக அமைந்துள்ளன. அவை ;

(1) ஸ்ரீமங் — எம்பெருமானை ஆச்ரயித்திருக்கும் பெரிய பிராட்டியாரோடு நித்திய யோகமுடைய,

(2) நாராயண — எல்லா கல்யாண குணங்களை யுடைய எம்பெருமானுடைய,

(3) சரணௌ — இரண்டு திருவடிகளை,

(4) சரணம் — உபாயமாய்,

(5) ப்ரபத்யே! — அடியேன் ஆச்ரயிக்கின்றேன்.

இதுவரை, முதல் வாக்கியத்தில் உள்ள ஐந்து நிலையாகும் (பூர்வ வாக்கியம்). இனி இரண்டாவது வாக்கியத்தில் அமைந்துள்ள ஐந்து நிலைகள் (உத்திரவாக்கியம்):

(6) ஸ்ரீ — பெரிய பிராட்டியாரோடு,

(7) மதே — நித்தியமாய்க் கூடியிருக்கும்,

(8) நாராயண — சர்வசேஷியான எம்பெருமானின் முக உல்லாசத்தின்,

(9) ஆய — பொருட்டு,

(10) நம: — கைங்கரியத்திற்குத் தடையாயிருப் பவைகளைப் போக்குகிறது.

---

184 ஸ்ரீவைணவ மகா சங்க செயலாளர், திரு. நா. வேனுகோபால நாயகர், பி.ஏ., பி.எல்., அவர்கள் ஆய்வாளருக்கு விளக்கியது.

எனவே, மேற்காட்டிய துவயத்தின் முதல் வாக்கியம் பெரிய பிராட்டியாரைத் துணைக் கொண்டே பெருமாளுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்ற வேண்டுமென்று போதிக் கின்றது. இரண்டாவது வாக்கியம் பெரிய பிராட்டியாரும், எம்பெரு மானுமாகிற இருவருடைய சேர்த்தியில் எப்போதும் அடிமையும், குற்றேவலும் புரிய வேண்டுமென உபதேசிக்கிறது. "இதில் முற்கூற்றால் பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச் சேர்த்தியிலே அடிமையிரக்கிறது"[185] என்று முமுட்சுப்படியும் அறுதியிடுகிறது.

**முதல் ஏற்றத்தின் முழு முழக்கம்:** திருமழிசையில் பிரப்பம் புதரில் கீழ்க் கிடந்து இருந்து, பசி தாகத்தால் அழுத திருமழிசையாருக்கு, அத்தலத்தில் உள்ள ஜகந்நாதப் பெருமாளும், திருமங்கைவல்லித் தாயாரும் புதரின் அருகில் எழுந்தருளி,

> திருமகள் முலையீற் றீம்பால் பரிதிநேர் சிறுவன் செங்கைப்
> பெருவிர லூதவும் வண்ண மருளினன் பெருமான் றானும்
> அருள்பல வரமு மீயா வாயுவு மளித்தான் பின்னும்
> இருவரும் புதல்வன் றன்னை வாழ்ததி வைத்தேகினாரால்[186]

பிராட்டியும், பெருமாளின் அருளும் கிடைத்ததோடு இருவரும் இணைந்து பல வரங்களை ஆழ்வாருக்கு இளங்குழந்தைப் பருவத்திலே வழங்கினார்கள். எனவே, பிறவியிலே இவருக்குத் துவயததின் முதல் துணை கொண்டு பெருமாள் அருள் கிடைத் தமையால், இவர் அவதாரமே துவயத் தததுவத்தின் முதல் முழு முழககமாக அமைநதுவிட்டது. எனவே, திருமழிசையாழ்வார் அருளிய இரு பிரபந்தங்களிலும் ஞானச்சுவைகொண்ட இருநூற்றுப் பதினாறு (96+120—216) பாசுரங்களிலும் துவய ஞானமே முழு முழக்கமாக அமைந்துள்ளது. எனவே, தமது அருளிச் செயல் களில் துவயத்தின் பேற்றை பரக்கப் போற்றிச் சரண் செய்து உவக்கின்றார.

**பாசுரங்களில் துவயமந்திரம்:** துவய மந்திரத்தை இரண்டு பிரபந்தங்களிலும் பல இடங்களில் உட்பொருளாக விரவி கூறப்பட்டு இருப்பினும், வெளிப்படையாக துவயத்தைச் சுட்டிக் காட்டும் பகுதிகள் ஆராயத்தக்கன.

185 முமுட்சுப்படி., 122
186 திருமழிசைப்பிரான் வைபவம், பு. 8

'தெய்விகத் தன்மை சுடர்விடும் பரமபதத்தில் எழுந்தருளியுள்ளபோது பெரிய பிராட்டியார் - பூமிப்பிராட்டியார் (உபயதாயார்) என்ற இருவரைக் குறிப்பிடுவது போல, இவர்கள் மண்ணுலகத்தில் (லீலாவிபூதி) தெய்விகத் தன்மையை மறைத்துக் கொண்டு அவதரித்தருள்கையில் பிராட்டி என்பது மரபு. இவர்களைப் பிராட்டியார் என்னாமல் பிராட்டி என்றாலும் சாலும். 'நப்பின்னைப் பிராட்டி', 'உருக்குமிணிப் பிராட்டி', 'சீதா பிராட்டி' எனச் சொல்வழக்குகள் ஏற்பட்டுள்ளன.[187]

ஆழ்வார் மேலே சுட்டிக்காட்டிய பிராட்டிமார்கள் அனைவரையும் தமது பாசுரத்தில் துவயமந்திரமாக அருளியிருப்பதை; **'பின்னை கேள்வ னென்பர்'**[188] என்றும், **'கலந்த சீர்; புண்டரீக பாவை சேருமார்ப பூமிநாதனே!**[189] என்றும், **'மங்கை மன்னி வாழும் மார்ப'**[190] என்றும், **'உரத்திலு மொருத்தி தன்னை வைத்து உகந்ததன்றியும்'**[191] என்றவாறு சில பாசுரங்களில் கண்டு மகிழலாம். இங்ஙனமாக பல பாசுரங்களில் துவயத்தை வெளியிட்டுள்ளார்.[192]

**துவயத்தின் திரட்டும் முடிவும்:** துவயத்தின் இரு வாக்கியங்களின் அமுத ஞானத்தைத் திரட்டி அருளினார் திருமழிசையாழ்வார். இவர் அவதாரத்தின் முதல் நிலையிலே திருவுக்கு ஆளாகி அவள் கருணையால் திருவே மகிழ்ந்து ஞானத் திருமுலைப்பாலைப் புகட்டி இவரை ஆட்கொண்டதால், என்றும் திருமகளுக்கு மகிழ்ந்த 'திருமழிசையாழ்வார்' என்ற திருநாமம் அமைந்திருப்பது ஏற்புடையதாக அமைகின்றது. மேலும், ஆழ்வார்கள் வரிசையில் முதல் திரு என்ற அடைமொழி சேர்க்கப் பெற்ற முதல் ஆழ்வாராகத் திருமழிசையாழ்வார் திகழ்கிறார். இவருக்குப் பின்னர்தான், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்று ஆழ்வார் வரிசையில் இடம் பெறுகின்றனர். திருவுக்கு ஆளாகிய இவர் பரந்துபட்ட முறையில் துவயத்தை ஏற்புடையதாகக் காட்டுகிறார்.

---

187 ஸ்ரீவைணவ மகா சங்க செயலாளர், திரு. நா. வேணுகோபால நாயகர் அவர்களிடம் உரையாடியபோது ஆய்வாளருக்கு விளக்கியவை.

188 திருச். விரு., 13

189 ,, 22

190 ,, 24

191 ,, 29

192 ,, 33, 40 - 42, 55, 91, 92, 97, 99, 103, 108, நான், திரு., 6, 23, 53, 59, 62, 92, காண்க. ஒப்பிடுக பெரியாழ்வார் திருப்பல்லாண்டு.

பகுத்தறிவும், மனமும் சாட்சி சொல்ல, தருக்கமும், மேதா விலாசமும் மெச்சும்படியாக விளங்கி (பாசுரங்களின்) துவய மந்திரமே ஸ்ரீவைணவ ஞானத்தின் சிகரமாக அமைகின்றது.

நம்மை எல்லாம் உய்ய வழிசெய்வது 'பிராட்டியாலே பேறு' என்று எளிதாக எடுத்து வழியைக் காட்டி, விளக்கியும், தம்மையும் உய்வித்தது 'துவயமே', என்பதைச் சுட்டிக்காட்டியும், மற்றவர் களுக்கும் உய்ய வழிசெய்வதும் துவயமே என்றும் அறுதியிடுகிறார்.

1. பிராட்டியை முன்னிட்டுப் புரியும் சரணாகதியே சாலச் சிறந்தது என்று துவயம் போதிப்பதால் இதனை 'மந்திர இரத்தின' மாகப் பொலியச் செய்கிறார்.

2. இத்துவயத்தைப் பதினெட்டு இரகசியங்களுள் ஒன்றான 'சாரசங்கிரகம்' என்னும் நூலில் வைணவ ஆசாரியரான திரு. பிள்ளைலோகாசாரியார் 'துவயார்த்தம் - தீர்த்த சரணாகதி' என்று அருள்கிறார்.

3. நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் ஆகிய இரண்டையும் தூக்க சரணாகதி பிரபந்தம் எனப்போற்றலாம். ஆகவே, 'நான்முகன் திருவந்தாதி-திருச்சந்த விருத்தமே துவயம், என்றும்; 'துவயமே நான்முகன் திருவந்தாதி-திருச்சந்த விருத்தம் என்றும் கொள்ளலாம. 'திருமழிசையாழ்வாரே துவயம் எனவும, 'துவயமே திருமழிசையாழ்வார்' என்றும் போற்றிக் கூறலாம்.

4. 'திருமந்திரத்தில், பிராட்டியைப்பற்றிய பேச்சு வெளிப் படையாக இல்லை. 'சரம சுலோகத்திலோ' பிராட்டியைப் பற்றிய பேச்சு அமையவில்லை. ஆனால் பிராட்டியைப் பற்றியே கூறும் இவ்விரண்டு வாக்கியங்களால் ஆன 'துவய மந்திரமோ' உயவதற்கு வழி காட்டும் இரு விழிகளாக அமைந்துள்ளதாகச் சுட்டுவர் வைணவப் பெருமககள்.

**நடைமுறையில் துவயம்:** துவய மந்திரத்தைத் திருமழிசை யாழ்வாரும், ஏனைய ஆழ்வார்களும் ஆசாரியார்களும் சிறப்பித்துப் போற்றி உள்ளனர். இவ் உண்மையுடைய துவயத்தின் சிறபபை நாம் நடைமுறையில் ஆராய்ந்து உணர்ந்து கொள்ளலாம. இறைவனிடம் சரணாகதி அடையும்போது நமது இரு கரங்களையும கூபபுகின்றோம அல்லவா? அவ்விதமாகத் தமது இரு கரங்களையும் இறைவனை நோக்கிக் கூப்புகையில் துவயம் மந்திரத்தைக் கொண்டு சரணாகதி புரிவதாகவே அமையும்.

(1) துவயம் இரண்டு வாக்கியங்களால் ஆனது. நாமும் இரண்டு கரங்களால் கூப்புகிறோம்.

(2) இதனை ஒட்டியே துவய மந்திரத்தின் ஒவ்வொரு வாக்கியமும் ஐந்து சொற்களால் அமைந்துள்ளது. நமது ஒவ்வொரு கரமும் ஐந்து விரல்களால் அமைந்துள்ளது.

(3) துவய மந்திரத்தில் இரு வாக்கியங்களிலும் மொத்தம் பத்துச் சொற்கள் அமைந்துள்ளன. நம் இரு கரங்களிலும் பத்து விரல்கள் அமைந்துள்ளன. எனவே, நாம் நமது இரு கரங்களிலும் உள்ள பத்து விரல்களையும் ஒன்றோடு ஒன்று சேர்த்துக் கூப்பித் தொழுகையில் இச்செயல் துவய மந்திரத்தில் உள்ள, 1. ஸ்ரீமந், 2. நாராயண, 3. சரணௌ, 4. சரணம், 5. பிரபத்யே!, 6. ஸ்ரீ, 7. மதே, 8. நாராயண, 9. ஆய, 10. நமः என்னும் பத்து (தச) பதங்களையும் நம் கையால், சாடையால் குறிப்பிடுவதாகவே கொள்ளலாம்.

இவ்விதம் நாம் செயல் முறையில் துவயத்தைக் கடைப்பிடித்து நிற்கும்போது 'ஸ்ரீமந் நாராயணன்', 'வெறிதே அருள்செய்யுங்' குணம் உடையவன் ஆதலால் அவனே வந்து இவ் துவயத்தின் செயல் முறையில் ஏற்றருள்வான் என்று உறுதி கொள்ளலாம்.

நாம் இரு கையைக் கூப்புவதிலேயே, துவய மந்திரம் நம் கைகளில் தானே வந்து காந்த சக்திபோல் ஒட்டிக்கொள்வதைப் போன்று வேறு மந்திரத்தில் அமையாது. ஆகவே, மூன்று மந்திரங்களிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட துவய மந்திரமே 'மந்திர ரத்தினம' எனச் சிறப்பித்துப் போற்றப்படுகிறது.[193]

(3) சரமசுலோகம்: 'சரமசுலோகம் ஈசுவரனாலே பேறு' என்றபடி. 'கீழே சில உபாயச் செய்திகளை உபதேசிக்க அவை துச்சகங்களென்றும், ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்து சோகாவிஷ்டனான உருவான அர்ஜ்ஜுநனைக் குறித்து, அவனுடைய சோகத்தை நிவர்த்திக்க இனி இதற்கு அவ்வருகில்லை யென்னவும் படியான சரமோபாயத்தை அருளிச் செய்கையாலே சரம சுலோகமென்று இதற்குப் பேராயிருக்கிறது,[194]

193 ஸ்ரீவைணவ மகா சங்க செயலாளர், திரு. நா. வேணுகோபால நாயகா, பி.ஏ., பி.எல்., அவர்கள் ஆய்வாளருக்கு விளக்கிய கருத்து.

194 முமுட்சுப்படி, 185

சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருளிதுவென்ற தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும்; 'இறைவன் அடி' என்பதை ஏற்றுக்கொண்டு 'கடவுள் வாழ்த்தில், ஏழு இடங்களில் திருவடிகளை பற்றி அழுத்தி உரைக்கின்றார்.[195] பின் ஒரு குறளில் சரணாகதியாகிய கீதையின் சரமசுலோகத்தின் ஆழ்பொருளை,

> 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு[196]

என்று வெளியிட்டும் இருப்பது குறிப்பிடத்தக்கது.

**சரமசுலோகம்—அமைப்பு—சொற்பொருள் :** பகவத் கீதையில் கடைசி அத்தியாயமாகிய பதினெட்டாவது அத்தியா யத்தில் அறுபத்து ஆறாவது சுலோகமே சரமசுலோகமாகும். இதற்குப் பின்னர் சில சுலோகங்கள் இருப்பினும் இதனையே சரம சுலோகம் என்று (சர்வதர்மான்) அனைவரும் பாராட்டி அழைக் கின்றனர். ஆகவே, இது ஓர் உயிர் அறியப்படவேண்டியவனாகிய (உபேயமாக உள்ள) இறைவனை அடைவதக்குரிய இறுதி வழியாக (உபாயமாக) உள்ள சரணாகதியைக் (பிரபத்தியை) காட்டுவ தாகும். 'சரமம்' என்ற சொல்லுக்குக் கடைசி என்பது பொருளாகும்.

**சரமசுலோகத்தின் தோற்றம் :** சரம சுலோகம் கண்ணன் காண்டீபனுக்குக் 'கர்ம, ஞான, பக்தி' யோக உபாயங்களை எல்லாம் விளக்கமாகத் தெரிவித்த பின்னரும், அவன் கண்ணனைப் பார்த்து ''கண்ணா!, எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறதே; நான் என்ன செய்வேன்?'' என்று கூறி மனம் குழம்பியபோது, ''கண்ணன் அர்ச்சுனா! உனக்கு இறுதியாக ஓர் எளிதான உபாயத்தை அருள்கிறேன்; கேட்பாயாக; நீ அதனை உறுதியாகப் பின்பற்றினால் அதுவே போதும்'' என்றார். இறுதியாகக் கூறிய இதுவே (சரமம் - இறுதி) சரமச்லோகமாகும்.

> 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!
> அஹம் த்வா ஸர்வபா பேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச!!:[197]

---

195 வாலறிவான் நற்றாள், மாணடி, வேண்டுதல் வேண்டாமையிலானடி தாள் சேர்ந்தார், அறவாழி அந்தணன் தாள், இறைவன் அடி.

196 குறள், துறவு., 10

197 கீதை, 18 : 66

என்பது சுலோகம். முதல் வாக்கியத்தில் ஆறு பதங்களும் இரண்டாம் வாக்கியத்தில் ஐந்து பதங்களும், இரண்டு வாக்கியங்களிலும் சேர்ந்து முப்பத்திரண்டு எழுத்துகளுமாக உள்ளன.

(1) **சரமசுலோகத்தின் சொற்பொருள்:** இனி சொற்பொருளைக் காண்போம்:

1. **ஸர்வதர்மாந்:** கர்மம், ஞானம், பக்தி முதலிய எல்லாத் தர்மங்களையும்,

2. **பரித்யஜ்ய:** உலகியல் பொருட்டு நித்திய நைமித்திக கருமங்களை மட்டிலும் கைங்கர்ய ரூபமாகச் செய்துகொண்டு, புருஷார்த்தங்கட்குக் கேடு விளைவிப்பவற்றைச் செய்யாமல்,

3. **மாம்:** வாத்சல்யம், சுவாமித்துவம் முதலிய குணங்களையுடைய என்னை (விஸ்வ ரூபத்தில் கண்ணனாய் நிற்கும் நிலையை),

4. **ஏகம்:** ஏ, என்னை ஒருவனையே,

5. **சரணம்:** உபாயமாய்,

6. **வ்ரஜ!:** நம்பு; உறுதியாகப்பற்று (முதல் வாக்கியம் முற்றும்).

7. **அஹம்:** எல்லாவற்றையும் அறிந்த நான்,

8. **த்வா:** என்னையே உபாயமாய் நம்பியிருக்கும் உன்னை,

9. **ஸர்வபாபேப்யோ:** என்னை அடைவதற்குத் தடைகளாகவுள்ள கர்ம வாசனை, ருசி முதலியவற்றிலிருந்து,

10. **மோட்சயிஷ்யா'மி:** முக்தனாம்படி பண்ணக் கடவேன்,

11. **மாசுச!!:** *நீ துக்கமடைய வேண்டிய அவசியமில்லை* என்பதை முமுட்சுப்படியின் வியாக்கியானம் அறுதியிடுகின்றது. இதனை மேலும் எளிய முறையில் விளக்கலாம்:

**(2) சரமசுலோகம் சொற்பொருள் விளக்கம் :**

1. **ஸர்வதர்மாந் :** எல்லாத் தர்மங்களையும் விட்டுவிடாமல் பற்றவேண்டும் என்பதில்லை. (இதனால் பற்றவேண்டும் என்பது உட்பொருள் பெறப்படுகிறது, ஆனால் 'நாம் செய்கின்றோம்' என்ற அகங்காரம் கூடாது.

2. **பரித்யஜ்ய** — தியாகம் .

3. **மாம்** — என்னை, எந்த என்னை[198] (கையும், உழவு கோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், சேநாதூளி தூசரித மான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்திய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்[199],

4. **ஏகம்** — என்னையே,

5. **சரணம் வ்ரஜ!** — திருவடிகளைப் பற்றுவாயாக,

6. **அஹம்** — நான்,

7. **த்வா** — உன்னுடைய,

8. **ஸர்வபா பேப்யோ**—எல்லாப் பாவங்களையும் போக்கி,

9. **மோக்ஷ, இஷ்யாமி** — மேலான முக்தியை அளிப்பேன்,

10. **மாசுச:!!** — வருந்தாதே.

''எல்லா அறங்களையும் விடுத்து பலன்களைக் கருதாது விடுத்து என்றபடி. என்னையே சரணடைக ; நான் உன் பாவங்கள் அனைத்தினின்றும் விடுவிப்பேன் ; துயருறாதே !'', என்பது இதன் பொருளாகும்.

கீதை, 'முக்குணமாயும், தெய்விகமாயும், உள்ள எனது மாயை தாண்டற்கரியது ; என்னையே சரணமாகப் பெற்றவனே அதைத் தாண்டுவான்', என்ற சரணாகதித் தத்துவத்தை இது விளக்குகிறது, ஆகையினால் ஞானம் இல்லாவிட்டாலும், பக்தி பண்ணத் தெரியாமல் இருந்தாலும், பரவாயில்லை, எம்பெருமான் திருவடிகளைப் பற்றினால் மட்டுமே போதும் என்கிறது. இதனையே கவிச்சக்கரவர்த்தி கம்பரும் தம் நூலின் தொடக்கத்தில்,

---

198 'வரிசிலை வாள் முகத்து **என்னை** மார்தாம் வந்திட்டு' (நாச்சியார் திருமொழி 6 : 9) என்ற பாசுரத்தில் **என்னை** என்ற பதத்தை அழுத்தமாக விளக்கியிருப்பது ஒப்பு நோக்கி காணத்தக்கது

199 முமுட்சுப்படி, .218

'தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே '[200] என்ற சரணாகதி தத்துவத்தை வெளியிட்டுள்ளார், இறைவனின் திருவடிகளைப் பற்றினால் உயிர்களுடைய பாதக மலங்கள் நீங்கும். எனவேதான் இராமனின் திருவடியின் கால்பட்டுக் கல்லும் பெண்ணாகி வாழ்க்கைப் பெற்றது (அகலிகை) என்றும், இராமனின் பாதம்பட்ட பாதுகையும் சிறப்புப் பெற்றது, (பரதன் நந்தி கிராமத்தில் இராமனின் திருவடிகள் பதித்த பாதுகைகளைப் பதினான்கு ஆண்டுகள் பூசித்து சேவை செய்தது) என்கிற சரணாகதி தத்துவத்தையும் இராமாயண காவியம் அறுதியிடுகிறது.

**திருமழிசையாரின் சரணாகதி தத்துவம்:** திருச்சந்த விருத்தத்தில்,

'நன்மாலை வாழ்த்தி வாழ்மினோ!' (68) என்றும்,

'அடைந்தமால பாதமே அடைந்து நாளு முய்ம்மினோ!' (81) என்றும்.

'பற்றலா லோர்பற்று மற்ற துற்றிலேன் '(87) என்றும்,

'தொடக்கறுத்து வந்து நின் தொழிற் கணின்ற
வென்னைநீ' (95) என்றும்,

உன்பாதமென்ன சிந்தை மன்னவைத்து 'நல்கினாய்' (55) என்றும்,

அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென்ன வேண்டுமே! (92) என்றும் பல இடங்களில் இதனை அநுசந்திப்பதைக் காணலாம்.[201]

நான்முகன் திருவந்தாதியின் ஒரு பாசுரத்தில் திருமாலிடம் எப்படிச் சரணாகதி செய்து வாழ்த்தி வணங்க வேண்டும் என்பதை,

வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி மகுடம்
தாழ்த்தி வணங்குமின்கள் தண்மலரால்—சூழ்த்த:
துழாய்மன்னு நீள்முடியென் தெல்லைமால் தன்னை
வழா வண்கைகூப்பி மதித்து (11)

என்று முழுமையாக புலப்படுத்துகிறார். பின்னர் அதே அந்தாதியில்,

200 கம்பராமாயணம், காப்பு செய்யுள்

201 திருச். விருத். 80, 96 - 99, 101, 102, 104, 105, 107 - 110, 112. 114, 118, 119.

பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான் பாதம்
வழுவாவகை நினைந்து வைகல் — தொழுவாரை
கண்டிறைஞ்சி வாழ்வார்.(89)

என்றும்,

தாள் தாமரை மலர்களிட்டிறைஞ்சி மால்வண்ணன்
தாள்தாமரை யடைவோ மென்று (91)

என்பதையும்,

கேள்வா! கிளரொளி என் கேசவனே! கேடின்றி
ஆள்வாய்க்கு அடியேனா னாள் (59)

இங்ஙனமாக சரணாகதி தத்துவத்தை வெளியிடுவதைக் கூர்ந்து மகிழத்தக்கது.[202]

முடிவுரை: இவ்வியலில் திருமழிசையாழ்வார் பாசுரங்களில் உள்ள சித்தின் வகை, பாசுரங்களில் சித்து, அசித்து, சுத்தசத்துவம்; மிச்ரதத்துவம், சத்துவசூனியம், சரீர-சரீரிபாவனை, ஈசுவரன், இறைவனின் திருக்குணங்கள், இறைவனின் (ஈசுவரன்) ஐந்து நிலைகள், (பரம், வியூகம், விபவம், அர்ந்தர்யாமித்துவம், அர்ச்சை) (வியூகங்கள்) இதம், பக்திநெறி, கர்மயோகம் ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம், புருஷார்த்தம் முதலிய வைணவ தத்துவங்களும், திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்ற வைணவ இரகசியங்களும் ஆராயப்பெற்று தலைக்கட்டுவதாயிற்று.

---

202 நான். திரு., 15, 27, 32, 34, 40, 42, 45, 55, 67, 75, 84,89.

# ஆய்வு முடிவுகள்

## நாரணனே பரதெய்வம்

இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை-இனியறிந்தேன்
காரணன்நீ; கற்றவைநீ; கற்பவைநீ; நற்கிரிசை
நாரணன்நீ; நன்கறிந்தேன் நான்.

—நான்முகன் திருவந்தாதி (96)

# ஆய்வு முடிவுகள் ★

'திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள்—ஒரு பொதுநிலை ஆய்வு, முதன்முதலாக நிகழ்த்தப்படுகிறது. ஆழ்வாரின் அருளிச் செயல்கள் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் என்ற பக்தி இலக்கியத்தில் ஒரு பகுதியாகும். இது பிரபந்தத்தின் பண்புகளையும் பெற்று விளங்கு கிறது. கால வெள்ளத்தின் இயற்கை சூழல்களை முறியடித்துக் கொண்டு தன்னை ஒரு சிறந்த தெய்வீக இலக்கிய ஏடாக, திவ்வியப் பிரபந்தத்தில் நிலை நிறுத்திக் கொண்டும், மக்களிடையே நீடித்த பக்தி வளர்ச்சியையும் அளித்து இருக்கிறது.

**பொதுநிலை முடிவுகள் :** 1. திருமாலின் சுதர்சன அம்சமே திருமழிசையாழ்வாராக அவதரித்திருக்கின்றார் என்பது காட்டப் பெற்றது.

2. திருமாலும், நான்முகனும் திருமழிசைத் தலத்தின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றனர் என்பதும் விளக்கப் பெற்றது.

3. திருமழிசையாழ்வார் பல சமயங்களில் சென்று ஆராய்ச்சி நடத்தியதால் ஆழ்வார் வரிசையிலும், சிறந்த சான்றோர் வரிசை யிலும் ஒருவராகத் திகழ்கிறார் என்பதும் நிலை நிறுத்தப்பெற்றது.

4. இரு பிரபந்தங்களிலும் சமுதாய உணர்வும், பக்தி உணர்வும், தத்துவங்களும் அருளிச் செய்திருப்பது எடுத்துக் காட்டப் பெற்றது.

5. ஆழ்வார்கள் பரம்பரையில் முதல் இரு குரு - சீடர் பரம்பரை அமைந்திருத்தல். இந்த ஆழ்வாரின் வாழ்க்கையில் இருந்து புலப்படுத்தப் பெற்றது.

---

★ முடிவுரையாக அமைந்ததை ஆய்வு முடிவுகளாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

6. சாதி (குலம்) வேறுபாடின்றி அனைவரும் ஒரு குலம் என்றும், அக்குலம் தொண்டர் குலமே என்றும் அதற்கு ஆழ்வாரே எடுத்துக்காட்டாகவும் அமைத்திருக்கிறார் என்பதும் சுட்டப்பெற்றது

7. திருமழிசையாழ்வார் போதித்த கருத்துக்கள் சமுதாய தினருக்கு வழிகாட்டுகின்றன என்பதும் உணர்த்தப் பெற்றது.

8. ஆழ்வார்கள் நீண்ட காலம் இப்பூவுலகில் வாழ்ந்தார் என்பதற்கு குருபரம்பராப்ரபாவம் மூலம் அறிய வருகின்றது.

9. ஆழ்வார் தமது அகவாழ்வில் பல அற்புதங்கள் நிகழ்த்தி ஏற்றங்களைப் பெற்றிருக்கிறார் என்பதும் சுட்டப்பெற்றது.

10. தமது நெஞ்சில் எழுந்தருளியுள்ள திருமாலை புறம் போசிந்துக் காட்டினார் என்பதும் உணர்த்தப் பெற்றது.

**சிறப்பு நிலை முடிவுகள் :** 1. பேயாழ்வார், சிவன் இவர்கள் மூலம் பக்திசாரர் என்று விருதைப் பெற்றார் என்பதும் சுட்டப்பெற்றது.

2. திருமழிசையாழ்வாரின் இடைவிடாப் பக்தியும், அன்பின் ஈர்ப்பின் மூலம் திருமால் வலிய வந்து ஆட்கொண்டமை; தம் மனதில் என்றும் எழுந்தருளியிருக்கும் நிலையும் காட்டப்பெற்றன.

3. அர்ச்சாவதார எம்பெருமான்களை இயங்கும்படி செய்தது (சொன்னவண்ணம் செய்த பெருமாள், ஆராவமுதன்) உணர்த்தப் பெற்றது.

4. 'மறந்தும் புறந்தொழா மாந்தராகவும்', 'நாக்கொண்டு மானிடம் பாடாக் கவியாகவும்' விளங்கித் திருமாலின் சிறப்பை எடுத்துக் காட்டி பரத்துவ நிர்ணயம் செய்தது பகரப் பெற்றது.

5. முதன் முதலில் ஆழ்வார் தமது பாசுரங்களில் இராமாயண யுத்தகாண்ட செய்தியும், இராமன் கூனியின் முதுகில் உண்டை வைத்துஅடித்த நிகழ்ச்சியும் எடுத்துக்காட்டியதும் இயம்பப்பெற்றது

6. பாசுரங்களில் கடின பகுதிகளுக்கு வினா எழுப்பி விடை யளிப்பது போன்று உத்திமுறைகளைக் கையாண்டு அரிய கருத்துக்களைக் விளக்குவதும் இந்த ஆழ்வாரின் தனிச் சிறப்பு என்பதும் காட்டப்பெற்றது.

7. கஜேந்திர மோட்சம், மார்க்கண்டேயன் வரலாறு, பாணா சூரன் வரலாறு, கபால மோட்சம் போன்ற புராண நிகழ்ச்சி களை ஆழ்வார் எடுத்துக்காட்டியும் கஜேந்திர யானை, மார்க்கண் டேயன், பாணாசூரன், சிவன் இவர்கள் வாக்குகளால் திருமாலே முதற் கடவுள் என்பதும் உறுதி செய்யப்பெற்றது.

8. அறிவூட்டுவதே நோக்கமெனக்கொண்ட இந்த ஆழ்வாருடைய தத்துவம், பத்தி, பிரபத்தி நெறிகளையும் ஒழுக்கங்களையும், பயன்தரும் கருத்துக்களையும் வெளியிட்டதால் இவரது பிரபந்தங்கள் பக்தி இலக்கியமாக மக்களிடையே போற்றப் பெறுகின்றன.

9. சமயக் காழ்ப்பு இருந்த காலத்தில் இலட்சிய வெறியுடன், உணர்வு வேகமும் கொண்டு திருமாலின் சிறப்பை எடுத்துக்காட்டி வைணவ சமயத்தை நிலைநாட்டி வளர்ச்சி பெறச் செய்தது இவரே என்பது நிலை நிறுத்தப் பெற்றது.

10. இவருடைய பாசுரங்கள் படிப்போரின் ஆற்றலை ஊக்குவிக்க உறுதுணையாக இருக்கின்றன. பாசுரங்களின் சொல்லாட்சி, சந்த நயங்கள் பாசுரங்களைப் பயில்வோரின் மனம் திளைத்து ஒன்றி நிற்கச் செய்வதும், சமய பிரசார நோக்கில் பிறசமயக் கடவுளின் குறை நிறைகளைச் சுட்டிக் காட்டியும் திருமாலின் சிறப்பைப் பாராட்டிக் கூறும் பாங்கும் இவரது தனிச்சிறப்புகளாகும்.

இனி இவ்வாய்வுச் சிந்தைனைகள் மூலம் புலப்பட்ட கருத்துச் சிதறல்களாக வருங்கால ஆய்வாளருக்குக் குறிப்பிடத் தகுந்தவையாக அமைந்தவை:

1. நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் ஆகிய இரு பிரபந்தப் பாசுரங்களைப் பிற ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்களுடன் ஒப்பிட்டு ஆராயலாம்.
2. திருமழிசையாழ்வாரும், சிவவாக்கியாரும் ஒருவரா ? என்பது பற்றிய ஆய்வு.
3. திருமழிசையாழ்வாரின் பக்தி நெறி பற்றிய ஆய்வு.
4. திருமழிசையாழ்வாரின் பாசுரங்களில் உளவியல் கோட்பாடு.
5. திருமழிசையாழ்வார் பாசுரங்களில் காணப்படும் தத்துவங்கள்.
6. திருமழிசையாழ்வார் பாசுரங்களில் வாழ்வியல் கருத்துகள்.
7. திருமழிசையாழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ள அர்த்த பஞ்சகம்.
8. நான்முகன் திருவந்தாதியும், திருவிருத்தமும் ஓர் ஒப்பாய்வு.
9. திருமழிசையாழ்வாரும் திருமூலரும் பற்றிய ஆய்வு.
10. நான்முகன் திருவந்தாதியும், அபிராமி அந்தாதியும் ஓர் ஒப்பாய்வு.

# பின்னிணைப்பு-1

## துணைநூற் பட்டியல்

## (அ) தமிழ் நூல்கள்

### முதன்மை ஆதாரம்

அண்ணங்கராசாரியார், பி.பி.: நாலாயிரத் திவ்யப் பிரபந்தவுரை. (திவ்யார்த்த தீபிகை), 1944.

### துணைத் தமிழ் நூல்கள்

அருட்கவி அரங்க சீனிவாசன் : வைணவத் தத்துவ ஞான அடிப் படைகள், முதற்பதிப்பு, பாரி நிலையம், 1984.

அருணாசலம், ப. : வைணவ சமயம், முதற்பதிப்பு, பாரி புத்தகப் பண்ணை, 1982.

ஆசுகவி, ஆராவமுதன் : வானத்திற்கு ஏது வரப்பு, கலா பிரிண்டர்ஸ், 1987.

இராகவையங்கார், மு. : ஆழ்வார்கள் காலநிலை, புதிய பதிப்பு, 15, மணிவாசகர் பதிப் பகம், 1981.

இராஜகோபாலன், டி. எஸ். : ஆழ்வார்கள் வரலாறு,

இளங்குமரன், இரா. : சிவவாக்கியர் பாடல்கள், திருநெல்வேலி கழக வெளியீடு, 1984.

இளம்பூரணர் : தொல்காப்பியம் பொருளதிகாரம், மறுபதிப்பு, திருநெல்வேலி, கழக வெளியீடு, 1982.

இராமலிங்கத் தம்பிரான், திரு. கொ. : தண்டியலங்காரம், மறுபதிப்பு, திருநெல்வேலி, கழக வெளியீடு, 1983.

கலிய பெருமாள், பி. : அந்தாதி இலக்கியங்கள், முதற் பதிப்பு, மணிவாசகர் பதிப்பகம், 1967.

கோவிந்தராச முதலியார், கா.ரா. : ஆழ்வார்கள் வரலாறு (இரண் டாம் புத்தகம்). மறுபதிப்பு, திருநெல்வேலி, கழக வெளியீடு, 1975.

கோபாலகிருஷ்ணமாசாரியார்: வை.மு. (பதிப்பாசிரியர்). கம்பராமாயணம் ஆரணியக் காண்டம், அர்ஜி அச்சுக்கூடம்; 1936.

கோதண்டபாணி, இரா. : கம்பராமாயணம் யுத்த காண்டம் முதற் தொகுதி, உ. வே. சாமி நாதையர் நூல் நிலையம், 1962.

கோபால் நாயகர், டி. : நாலாயிரத் திவ்விய பிரபந்தம், சென்னை கோல்டன் எலெக்ட்ரிக் பிரஸ், 1925.

சாமிநாதையர், உ. வே. : சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் ஏழாம் பதிப்பு, உ. வே. சாமி நாதையர் நூல் நிலையம், 1978.

சிதம்பரன், பழ., (ப.ஆ.) : திருக்குறள் பரிமேலழகர் உரை, ஐந்தாம் பதிப்பு. பாரதி பதிப் பகம், 1964.

சுப்பிரமணிய பாரதியார், சி. : பாரதியார் கவிதைகள், ஏழாம் பதிப்பு, பாரதி பதிப்பகம், 1965.

சாமி சிதம்பரனார் : ஆழ்வார்கள் அருள்மொழி தமிழ்ப் புத்தகாலயம், 1960.

சிவஞான முனிவர் : காஞ்சிபுராணம், திருநெல்வேலி கழக வெளியீடு.

சீனிவாசன், ரா. : தொல்காப்பியமும் நன்னூலும், நான்காம் பதிப்பு, அணியகம் வெளியீடு, 1980.

ஸ்ரீராமலு தேசிகன், ஏ. : தசாவதாரத் தத்துவங்கள், முதற் பதிப்பு, ஆழ்வார்கள் அமுத நிலையம், 1985.

சுவாமி சித்பவானந்தர் : ஸ்ரீமத் பகவத்கீதை (வியாக்கியானம்), தபோவன வெளியீடு, 1964.

சுப்பு ரெட்டியார், ந. : சில நோக்கில் நாலாயிரம், முதற் பதிப்பு, பாரி நிலையம். 1983.

........................... : விட்டு சித்தன் விரித்த தமிழ் முதற்பதிப்பு, பாரி நிலையம், 1987.

சுப்பு ரெட்டியார், ந. : ஆழ்வார்கள் ஆராவமுது, முதற் பதிப்பு, ஐந்திணைப் பதிப்பகம், 1987.

.............................., , ஆன்மிகமும் அறிவியலும், முதற் பதிப்பு, பாரி நிலையம், 1985.

சேஷாத்ரி மணவாளன் : திருமாலடியார்கள், முதற்பதிப்பு, சுகந்தா வெளியீடு, 1976.

சோமசுந்தரனார், பொ. வே. : (உரையாசிரியர், பெருமழை புலவர்). பரிபாடல், மூலம் உரையும், திருநெல்வேலி கழக வெளியீடு.

நாகராசன், கரு. : திவ்விய பிரபந்தத்தில் மனம், முதற் பதிப்பு, உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம், 1982.

பாஷ்யம், தி. : ஆழ்வார்கள் அமுதமொழி, முதற் பதிப்பு, டி.டி. ராஜன் பிரிண்டர்ஸ் 1978.

பிள்ளை லோகாசார்யார் : ஸ்ரீவசனபூஷணம் - மணவாள மாமுனிகள் வியாக்கியானம் - தமிழாக்கம் (புருடோத்த நாயுடு பதிப்பு)

பி. ஸ்ரீ. : தொண்டர் குலமே தொழுகுலம், முதற் பதிப்பு, கலைமகள் காரியா லயம், 1957.

புலியூர் கேசிகன் : ஔவையார் தனிப் பாடல்கள், மூன்றாம் பதிப்பு, பாரி நிலையம், 1973.

குமரகுருபர சுவாமிகள் : மீனாட்சி அம்மன் பிள்ளைத்தமிழ், (பிரபந்த திரட்டு), முதற்பதிப்பு, திருநெல்வேலி கழக வெளியீடு. 1924.

குமாரசுவாமிப் புலவர், அ. : யாப்பருங்கலக் காரிகை, இரண் டாம் பதிப்பு, வித்தியா நூதன யந்திரசாலை, 1925.

ராமநாதன், அரு. (பதிப்பாசிரியர்), : பன்னிரு ஆழ்வார்கள் கதைகள், நான்காம் பதிப்பு, பிரேமா பிரசுரம், 1987.

## (ஆ) தமிழ் மணிப்பிரவாள நூல்கள்

அண்ணங்கராசார்ய சுவாமிகள், பிரதிவாதி பயங்கராம், : தத்வத்ரயம், (சாரார்த்த தீபிகை) கிரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சிபுரம், 1962.

இராஜகோபால் நாயுடு, ஆர்., (ப—ஆ.), : ஸ்ரீவசந பூஷணம், மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம், ஸ்ரீமத் காஞ்சி முனி நூற்பதிப்புக் கழகம், 1936.

கிருஷ்ணவேணி அம்மையார், எஸ். : செம்பொருள், திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடு, 1952.

கிருஷ்ணமாசார்யஸ்வாமி : இராஜகோபால பிள்ளை, ம. : அரங்கசாமி முதலியார், ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி அரங்கசாமி முதலியார், இ. குருபரம்பராப்ரபாவம், (ஆறாயிரப்படி பன்னிராயிரப்படி), சச்சிதானந்த அச்சியந்திரசாலை, 1909.

சடகோபராமாநுஜாசாரியார், : வை.மு. கிருஷ்ணமாசாரியார், கோபாலகிருஷ்ணமாசாரியார், வை.மு. அஷ்டபிரபந்தம், (பிள்ளைப் பெருமாளய்யங்கார் அருளியது), கணேச அச்சுக்கூடம், நள ஆண்டு.

திருக்கச்சிநம்பிதாஸர், கா.வெ., (ப.ஆ.) : முமுட்சுப்படி, (மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம்), ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய புஸ்தக சாலை, 1911.

திருவேங்கட ராமாநுஜதாசன், டி. (ப.ஆ.), : நித்யாநுசந்தானம் (பூர்வாசார்யர்கள் அநுசந்தித்த முறை), ஸ்ரீவைஷ்ணவ நூற்பதிப்புக் கழகம், 1965.

நாகரத்ன ராமாநுஜதாஸர் : திருமழிசைப்பிரான் வைபவம், ஹரிஸமய திவாகரம் பிரஸ், மதுரை, 1963.

புருஷோத்தம நாயுடு, பு.ரா. : ஆசாரிய ஹிருதய மூலம், மணவாள மாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கம் (தொகுதி 1-2), சென்னைப் பல்கலைக் கழகம், 1965.

ரங்கநாத முதலியார், ஆ. : ஸ்ரீவைஷ்ணவம், சுவர்ண விலாஸ், 1937.

## (இ) இதழ்கள் முதலியவை

கிருஷ்ணமாசாரியார், : ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா, விபவ ஆண்டு (ஆடி) 1988.

ஸ்தல சயனத்துறையார், உ.வே. திருமழிசையாழ்வார் வைபவம், திருமழிசையின் ஸ்தல சிறப்பும் முக்கியத்துவமும்.

### மலர்

ஸ்ரீமத் திருவேங்கட ராமநுஜாசார்யரால் தொகுக்கப்பட்டு, கிருஷ்ண ராமாநுஜதாஸர் கோ.கா.து. முத்து கிருஷ்ண ராமாநுஜதாசர், எஸ். அவர்களால் வெளியிடப்பட்டது, திருமந்த்ரார்த்த ஸாரம், ஸ்ரீவைணவ மகா சங்க பொன் விழா வெளியீடு, 1975.

### கலைக்களஞ்சியம்

கலைக்களஞ்சியம், தொகுதி 6, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, முதற்பதிப்பு, 1959.

கலைக்களஞ்சியம், தொகுதி 7, தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, முதற்பதிப்பு, 1960.

### அகராதி

சிங்காரவேலு முதலியார்: அபிதான சிந்தாமணி, Asian Educational Society, New Delhi, 1982.

## (ஈ) ஆங்கில நூல்

Subbu Reddiar, N., Religion and Philosophy of Nalayira Divya Prabandam with special Reference to Nammalwar (Phd. Thesis) Sri Venkateswara University, Tirupati-2, 1968.

# பின்னிணைப்பு - 2

## சிறப்புப் பெற்ற பாசுரப் பகுதிகள்

### 1. நான்முகன் திருவந்தாதி

*நான்முகன் திருவந்தாதி திருச்சந்த விருத்தம் என்ற இரண்டு பிரபந்தங்களில் சிறப்புப் பெற்ற சில அடிகள் :*

... ... ... —வேறாக
ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தி யிருப்பார் தவம்.(18)

திறம் பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தரை — இறைஞ்சியும்
சாதுவராய்ப் போது மின்களென்றான் நமனும்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.(68)

செவிக்கின்பமாவதும் செங்கண் மால்நாமம்
புவிக்கும் புவியதுவே கண்டீர் — கவிக்கு
நிறை பொருளாய் நின்றானை நேர்பட்டேன் பார்க்கில்
மறைப்பொருளும் அத்தனையே தான்.(69)

சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்.(71)

... ... —மதித்தவன்தன்
வல்லாகத் தேற்றிய மாமேனி மாயவனை
அல்லாதுஒன் றேத்தாதென் நா.(74)

நாக்கொண்டு மானிடம் பாடேன்.(75)

பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான் பாதம்
வழுவா வகை நினைந்து வைகல் — தொழுவாரை
கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்த வினைகெடுத்து
விண்திறந்து வீற்றிருப்பார் மிக்கு (89)

### 2. திருச்சந்த விருத்தம்

எட்டினாய பேதமோடு இறைஞ்சி நின்றவன் பெயர்
எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர்வான மாளவே.(77)

ஆர்வமோடு இறைஞ்சிநின்று அவன்பெய ரெட்டெழுத்தும்
வாரமாக வோதுவார்கள் வல்லவர்வான மாளவே.(78)

எட்டினோ டிரண்டெனுங் கயிற்றினால் மனந்தனைக்
கட்டி வீடிலாது வைத்த காதலின்ப மாகுமே (83)

மறந்துறந்து வஞ்சம் மாற்றி ஐம்புலன்களாசையும்
துறந்து நின் கணாசையே தொடர்ந்து நின்ற நாயினேன் (98)

பரந்த சிந்தை யொன்றி நின்றுநின்ன பாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே.(101)

# பின்னிணைப்பு - 3

## ஆழ்வார் நெஞ்சில் எம்பெருமான் நித்தியவாசம் புரிதல்

முதலில் எம்பெருமான் யோகிகள் நெஞ்சிலும், பின் திருவூர கத்திலே நின்றருளி, திருப்பாடகத்திலே வீற்றிருந்தும், திருவெஃகாவில் கண்வளர்ந்தும் இருந்தருளியதை,

நன்றிருந்து யோகநீ திநண்ணுவார்கள் சிந்தையுள்
சென்றிருந்து தீவினைகள் தீர்த்த தேவதேவனே!
குன்றிருந்த மாடநீடு பாடகத்தும் ஊரகத்தும்
நின்றிருந்து வெஃகணைக் கிடந்து என்ன நீர்மையே?

—திருச். விரு. (63)

என்று குறிப்பிட்ட ஆழ்வார் (எம்பெருமான் முன்பு எல்லா யோகிகளின் மனத்திலும், மூன்று திவ்ய தேசங்களிலும் இருந்தான்). இப்பொழுதுதான் பக்தி செய்ததின் வசீகரத்தால் திவ்ய தேசங்களில் உள்ள (திருவூரகம், திருப்பாடகம், திருவெஃகா எம்பெருமான்கள் அத்தலத்தை விட்டு என் நெஞ்சில் புகுந்து என்றும் நின்றும், இருந்தும், கிடந்தும் துளக்கமில்லா ஒளியாக எழுந்தருளியிருக்கிறான் என்பதைத் தமது பாசுரத்திலே அறுதியிட்டுக் கூறுவதை,

நின்றதெந்தை ஊரகத்து இருந்ததெந்தை பாடகத்து
அன்று வெஃக ணைக் கிடந்தது என்னிலாத முன்னெலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும்என் னெஞ்சுளே.

—திருச். விரு. (64)

முன்பு தலங்களில் செய்த செயல்களை இன்று என் மனத்தில் செய்தருளுகிறான் என்பதையும் அழுத்தி உரைக்கிறார். மேலும் அடுத்த பாசுரத்திலும் மகிழ்ச்சியுடன் கூறுவதை காணலாம்;

நிற்பதுமோர் வெற்பகத்து இருப்பும்விண் கிடப்பதும்
நற்பெருந்திரைக் கடலுள் நானிலாத முன்னெலாம்
அற்புதனநந்த சயநன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும்இருப்பதும் கிடப்பதும மென்னெஞ்சுளே

—திருச். விரு. (65)

அடுத்து, இப்படிப்பட்ட எம்பெருமான் திருப்பாற்கடல் முதலிய தலங்களில் செய்யும் செயல்களை எல்லாம் விட்டு விட்டு என் நெஞ்சிலே அச்செயல்களைச் செய்கிறான் (நிற்பதும், இருப்பதும், கிடப்பதும்).

குடதிசை முடியை வைத்துக் குணதிசைபாதம் நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கைநோக்கி

—திருமாலை (19)

துயில் கொள்கின்ற அழகைக் காட்டி, அப்பெருமான் என்னை இல்வாழ்க்கையாகிய (சம்சாரமாகிய) நாடகச் சாலையில் புகா வண்ணம் காத்தருள்வதற்காக என் நெஞ்சிலே நிரந்தரமாகத் தங்க விருப்பம் கொண்டு, நிற்பதும், இருப்பதும், கிடப்பதுமான செயல்களைச் செய்கின்றான். இனி அப்பெருமான் திருப்பாற் கடலில் கண்வளர்வனோ, கண் வளரமாட்டானோ என்பதை,

அவனென்னை யாளி யரங்கத்து அரங்கில்*
அவனென்னை காப்பான் — அவனென்ன
துள்ளத்து நின்றா னிருந்தான் கிடக்குமே
வெள்ளத் தரவணையின் மேல்.

— நான். திரு. (30)

* அரங்கில் ''ரங்கம்'' என்றும் வடசொல். கூத்தாடுமிடம் என்னும் பொருளது. அதுவே தமிழில் 'அரங்கு' எனத் திரிந்தது. நாடகசாலையில் ஒவ்வொருவனே பலபல கோலங்களைப் பூண்டு கொண்டு வருதல்போலே, இந்த இல்லறத்தில் (சம்சாரத்தில்) ஒவ்வொரு ஆத்மாவும் பலபல கோலங்களைத் தரித்துக்கொண்டு அனேக பிறவிகளில் (யோனி) பிறப்பது பற்றிக் குறிப்பிடவே இல்லற வாழ்க்கையை நாடக சாலையாகச் சொல்வது பொருந்தும். இதனை 'பிறவி மாமாயக்கூத்து' என்று நம்மாழ்வாரும் எடுத் தியம்புகிறார் என்றவாறு இதற்கு காஞ்சி, அண்ணங்கராசாரிய சுவாமிகள் உரை தருவார்.

# பின்னிணைப்பு - 4

## நான்முகன் திருவந்தாதியில் திருக்குறள் இடம்பெறும் தன்மையும்-அரிய பதங்களும்

### 1. திருக்குறள்

திருவள்ளுவர் நான்முகன் திருவந்தாதியில் உள்ள தொடரைப் பொன்னே போலப் போற்றித் தம் குறளில் கையாண்டுள்ளது சிறப்புடையது. அஃது திருக்குறளில் விருந்தோம்பல் அதிகாரத்தில்,

> வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சில் மிசைவான் புலம். —குறள். (85)

இக்குறள், இல்லத்தில் விருந்துண்ண வந்திருக்கும் விருந்தினரை முன்னே உபசரித்து (மிசைவித்து), பின் மிகுந்ததை உள்ள மிசைவானது (நெல்) தான் விளைபுலத்திற்கு வித்திடுதலும் வேண்டுமோ? வேண்டாவா? எனக் கேட்கிறார், 'வித்தும் இடல் வேண்டும் கொல்லோ' என்ற தொடரை அன்றே ஆழ்வார் தமது பிரபந்தத்தில் முத்திரையுடன் விளங்குமாறு எடுத்தாண்டு இருப்பதை,

> வித்து மிடவேண்டுங் கொல்லோ? விடையடர்த்த
> பத்தி உழவன் பழம்புனத்து - மொய்த்தெழுந்த
> கார் மேக மன்ன கருமால் திருமேனி
> நீர்வானம் காட்டும் நிகழ்ந்து.
>
> —நான். திருவந். (23)

என்ற பாசுரத்தில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். எம்பெருமானே, மக்கள் தன்னிடம் பத்தி செய்யவேண்டும் என்று தானே முயற்சியுடன் கருணை செய்கின்றாராம். ஆகவே, மக்களாகிய நாம் அவனுடைய தலத்தில் (தம் மனத்தில்) சுயமுயற்சியுடன் விதையை விதைக்க வேண்டுமா, வேண்டாவா, என்று வினாவினைக் கேட்டு, பத்தியான விதையை விதைத்துவிட்டால் திரண்டு எழுந்த காளமேகம் போன்ற கரிய திருமேனியை உடைய திருமாலின் உருவம் எதிரே நின்று காண்பிக்கும் என்ற பதிலையும் எடுத்துரைக்கிறார்.

இங்கு, வள்ளுவர் கூறும் வினாவிடையைவிட, திருமழிசையார் கேள்வியும் கேட்டு பதிலையும் எடுத்துரைக்கின்ற நிலையில் உயர்ந்து நிற்கின்றார்.

| திருவள்ளுவர் | திருமழிசையாழ்வார் |
|---|---|
| 1. புலம் (நிலமான பூமி) | 1. மனமாகிய நிலம் (பழம் புனத்து) |
| 2. வித்து (நெல் இடவேண்டும்) | 2. பக்தியாகிய விதையை இட வேண்டும். |
| 3. விருந்தினரை உபசரிக்க | 3. ஞானத்தால் புத்திக்குக் கட்டுப்பட்டு வந்திருக்கும் இறைவனை (திருமாலை) உபசரிக்க. |
| 4. இல்வாழ்க்கை என்ற வீடு. | 4. மோட்சமென்ற பரமபத வீடு |

வள்ளுவர் இல்லறத்தில் விருந்தினரை உபசரிக்க, நிலத்தில் விளைவித்த தானியத்தை அறுவடை செய்து அதைக்கொண்டு விருந்தினரை உபசரித்து மகிழ்ச்சிப்படுதத வேண்டும் என்கிறார்.

ஆழ்வாரோ விருந்தினராக இருக்கும் திருமாலை உபசரிக்க தம் மனமான நிலததில் பக்தி என்ற விதையை விதைத்து, ஞானம் என்ற பயிரைச் செழுக்கச் செய்த பின், அறுவடை செய்த பததியைக் கொண்டு திருமாலை மகிழ்ச்சிப்படுத்தினால், ஆறாத இன்ப வீடு கிடைக்கும் என்று எடுததுரைக்கிறார்.

## 2. அரிய பதங்கள்

1. .... ... ... வைகுந்தம்
ஈப்பாயும் எவ்வுயிர்க்குமீ
ஈப்பாயும் (அளிப்பவன்) —நான். திருவந். (19)

2. 'பழகியான்' (புராண புருடன்)—நான். திருவந். (22)

3. 'பத்தியுழவன்' —நான். (திருவந். 23)

# பின்னிணைப்பு - 5

## ஆழ்வார் காலத்தைக் கழித்த விதம்

திருமழிசையாழ்வார் தமது வாழ்நாட்களில் திருமாலை வணங்கி வழிபட்ட விதத்தைக் கூறும் பாசுரங்கள் எடுத்துக் கூறுகிறார். உலகில் உள்ள மக்கள் அனைவரும் இம்முறையைக் கடைப்பிடித்துத் தமது வாழ்நாட்களைக் கழிக்க வேண்டும் என்பதையும் நுட்பமாக வெளியிடுகிறார். இனி, ஆழ்வார் குறிக் கோளுடன் காலத்தைக் கழித்ததைப் பின்வரும் பாசுரங்களால் அறியலாம்.

1. தரித்திருந்தே னாகவே தாராக ணப்போர்
விரித்துரைத்த வெந்நாகத் துன்னை—தெரித்தெழுதி
வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது.

—நான். திருவந். (63)

2. ஆய்ந்துகொண்டோதிப் பெருமானை அன்பினால்

—நான். திருவந். (79)

3. ... ... ... —அதிரும்
கழற்கால மன்னனையே கண்ணனையே நாளும்
தொழக்காதல் பூண்டேன் தொழில்.

—நான். திருவந். (84)

4. தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாம மேத்த
பொழுதெனக்கு மற்றதுவே போதும்—கழிசினத்த
வல்லாளன் வானரக்கோன் வாலி மதனழித்த
வில்லாளன் நெஞ்சத் துளன்.

—நான். திருவந். (85)

5. என்றும் மறந்தறியேன் என்னெஞ்சத் தேவைத்து
நின்றும் இருந்தும் நெடுமாலை—என்றும்
திருவிருந்த மார்பன் சீரீதரனுக் காளாய்
கருவிருந்த நாள்முதலாகக் காப்பு.

—நான். திருவந். (92)

# பின்னிணைப்பு - 6

## நாக்கொண்டு மானிடம் பாடாத கவி

திருமழிசையாழ்வார் 'புறந்தொழா மாந்தராக இருப்பதோடு' மறந்தும் நாக்கொண்டு மானிடம் பாடாத கவியாகவும், விளங்குகிறார். இவ்வாழ்வாரைப் போலவே இவருடைய சீடரும் (கணிகண்ணன்) நாக்கொண்டு மானிடம் பாடாத கவியாகத் திகழ்கிறார் (பல்லவ அரசன் வேண்டியபோது). இனி இவ்வாழ்வார் பிற தெய்வங்களையும், மனிதர்களையும் நாக்கொண்டு பாட மாட்டேன் என்று சபதம் செய்வதை,

**1. ... ... ... —மதித்தவன்தன்**
**வல்லாகத் தேற்றிய மாமேனி மாயவனை**
**அல்லாதுஒன் றேத்தாது என்நா.**

—நான். திருவந். (74)

என்று அருளித் திருமாலைத் தவிர மற்றவர்களை எந்நாவினால் பாடமாட்டேன் என்பதை,

**2. நாக்கொண்டு மானிடம் பாடேன் நலமாகக்**

—நான். திருவந். (75)

என்பதை எடுத்துக்கூறி, திருமாலின் திருவடியைத் தவிர மற்றவர்களைப் பாடமாட்டேன் என்ற வைணவக் குறிகோளை உறுதியாக நிலை நாட்டுகிறார். இவ்வாழ்வார் கருத்துக்கு அரண் சேர்க்க பிள்ளைப்பெருமாள் அய்யங்காரும்,

**ஐயாது வந்தனை நாயேனை யஞ்சன வெற்பவென்றுங்**
**கையாது வந்தனை நின்னையல்லாற் கண்ணுதன் முதலோர்**
**பொய்யாது வந்தனையார் முகங்காட்டினும் போற்றியுரை**
**செய்யாது வந்தனை பண்ணாது வாக்குமென் சென்னியுமே.**

—திருவேங்கடத்தந்தாதி (14)

என்று தமது பிரபந்தத்தில் அருளிச் செய்துள்ளார்.

# பின்னிணைப்பு - 7

## மறந்தும் புறந்தொழா மாந்தர்

திருமழிசையார் பல சமயங்களில் புகுந்து அவற்றை ஆராய்ந்த பின் வைணவத்தில் குருவின் அருளால் பரம்பொருளை (திருமால்) அறிந்துகொண்டதும், 'மறந்தும் புறந்தொழா மாந்தராக' விளங்கினார். இவரைப்போல மற்றவரும் அமைய வேண்டும் என்பதை யமனும் தனது சேவர்களை அழைத்து, அவர் களுடைய காதில், சேவர்களே, இப்பொழுது உங்களுக்கு இடும் ஆணையிலிருந்து தவறக் கூடாது என்பதை,

திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தரை—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்க ளென்றான் நமனும்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

—நான். திருவந். (68)

என்பதை எடுத்துக்கூறி, அவர்களிடம் திருமாலின் திருநாமத்தை மறந்தொழிந்தாலும், பிற தெங்வங்களை வணங்காத ஒத்த மனிதர் களைக் கண்டால் அவர்களைத் திருமால் பக்தர்களாக எண்ணி வணங்கி நில்லுங்கள். மேலும் அவர்களிடம் (புறந்தொழா மாந்தர்) சிறிதும் அதிகாரம் செய்யவேண்டாம்; அவர்கள் அருகிலும் செல்லக் கூடாது. ஒருகால் அவர்களிடம் செல்ல நேர்பட்டால் அவர்களை வணங்கி வலம் செய்து சாதுக்களாகப் போய் விடுங்கள் என்றும் உபதேசமும் செய்தான்.

இங்ஙனமாக வழங்கிய யமன் வாக்கின்மூலம் தாம் புறந் தொழாமாந்தராக இருந்தமை சுட்டிக்காட்டினார், மற்றவர்களும் புறந்தொழா மனிதர்களாக இருக்க வேண்டும் என்று குறிப்பாக அறுதியிடுவதை இவரது பாசுரத்தில் காணலாம்.

இவ்வாழ்வார் குறிப்பிடும் இக்கருத்தை மற்ற ஆழ்வார்களும் தமது பாசுரங்களில் அருளிச் செய்திருப்பதை,

அவன்தமர் எவ்வினைய ராகிலும் எங்கோ
வைன்தமரே என்றொழிவதல்லால்—நமன்தமரால்
ஆராயப்பட்டு அறியார் கண்டீர் அரவணைமேல்
பேராயதற்கு ஆட்பட்டார் பேர்.

—பொய்கையாழ்வார் முதல் திருவந். (55)

கெடும் இடராய வெல்லாம் கேசவாளென்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்
—திருவாய். (10.2:1)

நாவலிட்டு உழிதருகின்றோம் நமன் தமர்தலைகள்மீதே (1)

நமனும் முற்கலனும் பேச நரகில்நின் றார்கள்கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி (12)
—தொண்டரடிப்பொடியாழ்வார் (திருமாலை 1, 12)

ஏத்திஉன் சேவடி எண்ணி யிருப்பாரை
பார்த்திருந்து அங்குநமன் தமர் பற்றாது.
—திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி (8, 10:6)

இங்ஙனம் திருமழிசையாழ்வார் கூறிய மறந்தும் புறந்தொழா மாந்தரைக் குறிப்பிட்டு முன்மொழிந்து சொல்வதை மற்ற ஆழ்வார்களும் இவருக்குப் பின் வழிமொழி நின்றனர்.

# பின்னிணைப்பு - 8

## ஆழ்வார் பிற தெய்வங்களைக் கண்டித்துப் பேசும் பாசுரங்கள்

திருமழிசையார் பரம்பொருளை அறிய பல சமயங்களுக்குச் சென்று ஆராய்ந்து அறிந்தபின், பரத்துவம் அளிப்பவன் திருமாலே! என்று அறிந்து கொண்டார். இப்படிப்பட்ட பரம் பொருளை வணங்காமல், பிற மத தெய்வங்களை வணங்கியும் உய்வு பெறாமல் இருப்பதைச் சுட்டிக்காட்டியும், அத்தெய்வங்களின் செயலை எடுத்துக்காட்டிக் கண்டித்துக் கூறுவதைக் காணலாம்.

அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார் செப்பில்—வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார்
ஈனவரே யாதலால் இன்று.
—நான். திரு. (6)

இப் பாசுரத்தில் திருமாலின் பெருமையையும், பரத்துவ உண்மையையும் சமணர்கள் அறியமாட்டார்கள் என்றும், ஆத்மா இல்லையென்றும் ஆத்மா இருக்கிறது என்றும், அயர்ந்து நின்றனர் பௌத்தர்கள் என்றும், படைக்கப்படும் பொருள்களுக்கு எல்லாம் சிவனே பரதெய்வம் என்றும், நினைத்துத் துதித்து நின்றவர்கள் சில சமயத்தவர் என்றும், பரிமளமே வடிவெடுத்த திருமாலை என்றும் ஏத்தாதவர்கள் துன்பம் உடையவர்கள் ஆவார் [illegible] எடுக்குரைக்கிறார்.

திருமாலின் திருநாமத்தைப் போற்றிப் புகழாத பாக்கியம் அற்றவர்களான பிணச்சமயர்கள் (சைவ, சமண, பௌத்த) புறம்பான கருத்தைப் பேச, அவற்றைக் கேட்டுத் தாங்களும் அப்படியே நின்று ஆசைப்பட்டு நிற்பார்கள் என்பதனை,

> நாராயண னென்னை யாளி நரகத்துச்
> சேராமல் காக்கும் திருமால்தன் —பேரான
> பேசப் பெறாத பிணச்சமயர் பேசக்கேட்டு
> ஆசைப் பட்டாழ்வார் பலர்
>
> —நான். திரு. (14)

என்றும், திருமாலின் சிறப்பை அறிந்து ஏத்தி வணங்கினால் உய்ந்து போகலாம். இல்லையேல் மாறி மாறிப் பல பிறப்புக்கள் பிறந்து துன்பங்கள் படுவது மகாபாரதம் போல பெரிய கதைப் புத்தகமாக எழுதி வைக்கத்தகும் என்பதை,

> ... ... ... ... —வானோர்
> பெருமானை யேத்தாத பேய்காள்! பிறக்கும்
> கருமாயம் பேசின் கதை.
>
> —நான். திரு. (31)

என்று எடுத்துக்காட்டி,

> விலைக் காட்படுபவர் விசாதி யேற்றுண்பர்
> தலைக்காட் பலிதிரிவர் தக்கோர்—முலைக்கால்
> விடமுண்ட வேந்தனையே வேறா வேத்தாதார்
> கடமுண்டார் கல்லா தவர்
>
> —நான். திரு. (52)

இப்பாசுரத்தில், பூதனையின் முலையிடத் துண்டான நஞ்சை உட்கொண்ட பெருமானை வேறு ஆக ஏத்தாதார் அறிவுக் கேடர்கள் ஜீவனத்திற்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டிருப்பர்கள். பிறருடைய வியாதிகளைத் தாம் வாங்கி அநுபவிப்பர்கள். ஒருவன் தலைக்காகத் தம் தலையை அறுப்பதாகச் சொல்லி நரபலியாகத் திரிபவர்கள் என்றும், அடுத்து பாசுரத்தில் தேவதாந்தர பக்தியை விலக்கிக் கொள்ளுமாறு பிறர்க்கு உபதேசிப்பதை,

> கல்லாதவர் இலங்கை கட்டழித்த காகுத்த
> னல்லாலொரு தெய்வம் யானிலேன்—பொல்லாத
> தேவரைத் தேவரல் லாரை திருவில்லாத்
> தேவரைத் தேறேன்மின் தேவு.
>
> —நான். திரு. (53)

அறிவுகெட்ட அரக்கர்களுடையதான இலங்கையின் அரணழித்த இராமபிரானை அல்லது வேறொரு தெய்வத்தை நான் (ஆழ்வார்) தெய்வமாகக் கொள்வேனல்லேன் என்று தம்மைப் பற்றிக் கூறியபின், கண்கொண்டு காணக்கூடாத தேவதைகளையும்' தெய்வத் தன்மை அற்றவர்களையும், பிராட்டியின் (திரு.) சம்பந்த மில்லாத தேவர்களையும் (தெய்வங்கள்) நீங்கள் நினைக்க வேண்டாம் என்பதை,

**காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்**
**பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை**
**ஆணமென்ற டைந்துவாழும் ஆதர்காள் ! எம் மாதிபால்**
**பேணிநும் பிறப்பெனும் பிணக்குஅறுக்க கிற்றிரே.**

—திருச்சந். (69)

இங்ஙனம் தேவதாந்தரங்களினுடைய செயல்களை நன்றாக எடுத்துக்காட்டி, இப்படிப்பட்ட தேவதாந்தரங்களை உதறித் தள்ளிவிட்டு உலக காரணபூதனான எம்பெருமானை அடிபணிந்து முக்தர்களாகச் சிறப்பு பெறுங்கள் என்றும்,

**அகைப்பில் மனிசரை ஆறு சமயம்**
**புகைத்தான் பொருகடல் நீர்வண்ணன்—உகைக்குமேல்**
**எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும்**
**அப்போ தொழியு மழைப்பு.**

—நான். திரு. (38)

ஆறு சமயங்களில் (சாக்கியர், உலூக்யர், அக்ஷயபாதர், க்ஷபணர், கபிலர், பதஞ்சலி) புகும்படி செய்தாலும், திருமாலைப் பற்றி அலட்சியமாக இருந்துவிடும் சமயத்தில் அப்பொழுதே எந்த தேவர்களுடைய உணவும், யாகங்களும் ஒழிந்து போய்விடும் என்பதை அறுதியிடுகிறார். இக்கருத்தை நம்மாழ்வாரும்,

**அவரவர் தமதமது அறிவறிவகை வகை**
**அவரவர் இறையவர் என அடியடைவர்கள்**
**அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்**
**அவரவர் விதிவழி அடைய நின்றனரே.**

—திருவாய்மொழி (1.1: 5)

என்பதையும் அருளிச்செய்து பிற தெய்வங்களின் உள்ளத்திலும் திருமால் அந்தர்யாமியாய் இருந்து அருள் செய்கின்றார் என்பதை

**'' அந்தர் பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்யம் நாராயணஸ்தித :''**

என்ற சுருதி வாக்கியத்தை நினைக்க.

# பின்னிணைப்பு - 9

## நான்முகன் திருவந்தாதியில் முத்தாய்ப்பாக அமைந்த பொருள் நயங்கள்

திருமழிசையாழ்வார் தமது நான்முகன் திருவந்தாதியில் திருமலையைப்பற்றி வருணனை செய்யும்போது அம்மலையில் நடக்கும் ஒரு நிகழ்ச்சியை முத்தாய்ப்பாக அப்படியே எடுத்துரைத்து நமது மணக்கண்முன் நிறுத்துகிறார். இதனை;

**வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று**
**எப்பொழுதும் கைநீட்டும் யானையை—எப்பாடும்**
**வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே**
**நாடுவளைத் தாடுதுமேல் நன்று.**

—நான். திரு. (46)

திருமலையில் வசிக்கும் ஓர் யானையானது, ஆகாயத்தில் விளக்குப் போல தோன்றும் சந்திரனைக் கண்ட அளவிலே 'நாமும் கைங்கரியம் (தொண்டு) செய்வோம்' என்று நினைத்து அத்திங்களை தனது துதிக்கையால் பிடித்தெடுத்துத் திருவேங்கட முடையானின் சந்நிதியில் நந்தா விளக்காக வைத்திட்டால் நன்றாக இருக்கும் என்று கருதியே, அச்சந்திரனைப் பிடிப்பதற்காக நீட்டியது. தும்பிக்கையை நீட்டினபடியே, வேறு ஒரு சிந்தனை யின்றிச் சந்திரனைப் பிடிக்க வேண்டும் என்ற செயல் ஒன்றிலே ஊன்றி இருந்தது என்று கூறியிருப்பதும் உற்று நோக்கத்தக்கது.

இப்பிரபந்தத்தில் (12 ஆம் பாசுரம்) 'கஜேந்திரன் மோட்சம்' பற்றிக் கூறும்போது யானையானது 'ஆதிமூலமே!' என்று ஆதிநாதனிடம் சரண் அடைந்தபோதும் காத்து அருள் செய்தார். அன்று தமக்கு அருள் செய்த திறத்திற்காக வாயில்லாத விலங்கான யானை ஆதிப்பெருமானுக்கு ஒரு கைம்மாறாக சந்திரனைப் பிடித்துத் தமது பரிசுப்பொருளாக அளித்திடவே எண்ணியது. ஆகவே, திங்களைப் பிடிக்கத் துதிக்கை நீட்டுகிறது என்று பொருள்படும்.

இங்ஙனம் ஒரு நிகழ்ச்சிக்கும், அந்நிகழ்ச்சியின் தொடர்பாக அதனுடன் இணைத்து மற்றொரு நிகழ்ச்சியையும் ஒப்பிட்டுக் கூறுவது ஆழ்வாரின் பக்தித் திறனையும், செய்ந்நன்றி அறியுந் தன்மையும் உணர்த்துவதோடு ஆழ்வாரின் தத்துவ உள இயல்பையும் சுட்டிக் காட்டுகின்றது.

யானையானது தம் துதிக்கையால் திங்களைப் பிடித்துக் கொண்டால் திங்களை மேகத்தால் மறைக்க முடியாது என்றும், இத்திங்களைப் பிடித்து வெண் ஒளி சிந்தும் நந்தாவிளக்காகத் திருமாலின் ஆலயத்தில் வைப்பதாக என்றே எப்பொழுதும் மாமதியைத் பிடித்துக் கொண்டிருக்கின்றது என்றும் பொருள்படும்.

இங்ஙனம் பிரதி உபகாரமாகச் செய்யும் அந்த யானையையே பற்றாகக் கொண்டு வேடர்கள் மெல்ல அருகில் வந்து வளைத்துக் கொள்ள, குறவர் அம்பு தொடுக்கின்றனர் என்று அடுத்த அடிக்குப் பொருள் கூறுகிறார்.

யானையானது மதியைப் பிடிக்க முயல்வது வெளிக்குத் தெரியுமேயன்றி, இன்ன செயலுக்காக அதனைப் பிடிக்க முயல்கிறது என்பது தெரிய வராது. ஆனால், திருமலைநாதன் அன்று தமக்கு செய்த நன்றியை மறப்பது நன்று அன்று என்பதற்காகவே, நந்தாவிளக்காக வைப்பதற்குப் பிடித்து தனது செய்ந் நன்றி மறவாத் தன்மையைக் காட்ட முயல்கின்றது என்று பொருள் கொண்டால் ஆழ்வாரின் உள்ளத்துக்கு ஏற்றதாக அமையும்.

'மாமதியை மாலுக்கு மணிவிளக்கா வைப்பன்' என்று கைநீட்டும் யானையைக் கண்டு விரும்பிய வேடர்கள் வளைக்க, குறவர் அம்பு தொடுக்கின்றனர் என்று பொருள் கொள்வது பொருத்தமாக அமையாது (பாசுரத்தின் பொருள்படி). எனவே இதை மாற்றிப் பொருள்நயத்துடன் ஆழ்ந்து பொருள் கொண்டால் சிறப்புடையதாக அமையும்.

**'வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும்'** என்பதை மாற்றி, **'குறவர் வில்லெடுத்து வேடுவரை வளைக்க'** என்று உள்பொருள் கொள்ளவேண்டும். காரணம், நந்தா விளக்கு வைக்க கைங்கரியம் செய்யும் யானையை வில்லால் அடிப்பது நல்லதா ?

அடுத்து, குறிஞ்சிநில மக்களாகிய 'குறவர்' தம் குறிஞ்சி நிலத்தில் வாழும் யானையை அடிக்க வில்லெடுப்பார்களா ? மேலும் குறிஞ்சிநிலக் கருப்பொருள் யானை. யானையைக் காப்பாற்றவே நினைப்பார்கள். தங்கள் நில விலங்கை தாங்களே அடிக்க மாட்டார்கள். ஆகையால் பாலைநில மக்களாகிய **'எயினர்கள்'** (வேடுவர்) தம் நில விலங்கைவிட்டு, பிறநிலமாகின்ற குறிஞ்சிநில விலங்கான யானையை வளைப்பதைக் கண்டு, குறிஞ்சிநில மக்களாகிய குறவர் கோபம்கொண்டு. வேடுவர் மீது அம்பைத் தொடுக்க வில்லை எடுத்தனர் என்று கூறினால் பொருள் சிறந்து நிற்கும், இஃது ஆழ்வார் உள்ளத்துக்கும் பொருந்தும்.

இல்லையேல் இருவருமாகச் சேர்ந்து கைங்கரியம் செய்ய நின்ற யானையை அடிக்க முற்பட்டனர் என்பது ஆழ்வார் உள்ளத்துக்குப் புறம்பானது. (ஆழ்வார் உள்ளத்தில் இறைவனுக்குக் கைங்கரியம் செய்யவேண்டும் என்ற சிந்தனையே வைத்திருப்பதால்) யானையின் செயலைத் தமது உள்ளத்துக்குப் புறம்பாக வைத்து அருளிச் செய்திருக்க மாட்டார். உள்ளத்துக்குப் பொருந்தும் கருத்துடனே தான் இப்பாசுரத்தில் பொருளை அருளியிருப்பார் என்று அவரது உளக்குறிப்பைக் கொண்டும் அறியலாம்.

நந்தா விளக்கு வைக்கத் தமது துதிக்கையை நீட்டிச் சந்திரனைப் பிடிக்க முயலும் இவ் யானையின் செயலை முத்தொள்ளாயிரமும்;

> செங்கண்மாக் கோதைசின வெங் களியானை
> திங்கள்மேல் நீட்டும் தன்கை — செய்யுள் (15)

என்று அடிகளில் கூறுவதும் ஒப்புநோக்கத்தக்கது.

# பின்னிணைப்பு-10

## நான்கு என்ற எண் இடம் பெறும் இடங்கள்

திருமழிசையாழ்வார் தமது இரு பிரபந்தங்களிலும் சில இடங்களில் நான்கு என்ற எண் அடிப்படையில் வைத்துப் பாசுரங்களை அருளியுள்ளார். 'நான்கு' என்ற எண் சிறப்புடையது. நான்கை— 'சதுர்' என்று வடமொழியில் வழங்குவர். நான்கின் சிறப்புகளாவன:

| | | |
|---|---|---|
| வேதம் | — | நான்கு |
| திசைகள் | — | நான்கு |
| யுகங்கள் | — | நான்கு |
| பிறவி வகைகள் | — | நான்கு |
| குலம் | — | நான்கு |
| யுகவர்ணம் | — | நான்கு |
| புனல் குணம் | — | நான்கு |
| முனிவர்கள் | — | நான்கு |
| முகம் | — | நான்கு |
| மூர்த்தி | — | நான்கு |

இங்ஙனமாக உள்ள நான்கின் சிறப்புகளை ஆழ்வார் தமது பாசுரங்களில் எங்கெங்கு சிறப்பித்துச் சுட்டிக்காட்டுகிறார் என்பதைக் காணலாம்.

வேத நான்கும் — திருச். விரு. (15)

நலங்களாய நற்கலைகள் — திருச்.விரு. (90)

(ரிக், யஜுர், சாம, அதர்வணம் என்ற நான்கு வேதங்கள்)

நானிறத்த வேத நாவர் — திருச். விரு. (23)

(உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என்கிற நால் வகை சுவரங்களையுடைய வேதங்கள்).

[கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற யுகங்கள் (காலங்கள்) நான்கும்]. அவை,

பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம்
போலும் நீர்மை... ... ... ... ... ... ... ...
நீல நீர்மை யென்றிவை நிறைந்த கால நான்குமாம்

—திருச். விரு. (44).

நிகழ்ந்தாய் பால்பொன் பசுப்புக் கார்வண்ணம் நான்கும்

—நான். திரு. (24).

(யுக வர்ணங்கள் நான்கும் அடங்கும்).

அரு நான்கு மானாயறி
மதித்தாய் போய்நான்கின் மதியார் போய்வீழ

—நான். திரு. (5,12)

(தேவர், மனிதர், விலங்கு, தாவரங்கள் என்ற பிறவி வகைகள் நான்கும்),

தலைக் கணத்து ... ... ... ...
நிலைக் கணங்கள்... ... ... ...
கலைக் கணங்கள்... ... ... ...
மலைக் கணங்கள்... ... ... ... —திருச். விரு. (16).

(தேவர், தாவரங்கள், வேதாதி சாத்திர சமூகங்கள், மலைக் கணங்கள் என்ற நான்குவகைப் பிறப்புகளைச் சுட்டும்).

குலங்களாய ஈரிரண்டிலும் — திருச். விரு. (90)

(அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற குலங்கள் நான்கும்).

புனற்கணின்ற நான்குமாய் — திருச். விரு. (1)

(ஓசை, ஊறு, ஒளி, சுவை (சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம்) என்ற புனலின் குணங்கள் நான்கும்)

ஆல நிழற்கீ ழ்அற நெறியை நால்வர்க்கு—நான். திரு.(17)

(அகஸ்தியர், புலஸ்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர் என்ற நான்கு முனிவர்களுக்கு சிவன் தத்துவம் உபதேசம் செய்தா னென்று நூல்கள் கூறுவதை, சைவ சமயத்தினர் சனகர், சனத்குமாரர், சனாதர், சனந்தர் என்ற நால்வர்க்கு சிவன் தத்துவம் உபதேசித்தார் என்று கூறுவர்).

நான்முகனை... ... ... ... நான்முகனும்
மேல் நான்முக னரனை,
கடிக்கமல நான்முகனும்,
நான்முகற்குந் தெய்வம் — நான். திரு. (1,31,42,96)

(நான்கு முகங்களைக் கொண்ட நான்முகனைப் பற்றிக் குறிப்பது).

நாலு மூர்த்தி — திருச். விரு. (17)

(வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தனன் என்ற திருமாலின் (வியூக மூர்த்தி) நிலைகள் நான்கும்.

இங்ஙனமாக, ஆழ்வார் நான்கு வகைத் தன்மைகளைச் சிறப் பித்துப் பாசுரங்களில் போற்றியுள்ளார்.

# பின்னிணைப்பு - 11

## திருமால் நான்கு யுகத்தில் நான்கு வர்ணங்களில் அவதரித்தது.

திருமழிசையாழ்வார் தமது பிரபந்தங்களில் திருமால் (தேவர் களைக் காப்பாற்றுவதற்காக) நான்கு யுகங்களில், நான்கு வர்ணங் களாக (நிறம்) அவதரித்ததைச் சுட்டும் இடங்களாவன :

| | | |
|---|---|---|
| கிருதயுகம் | — | 'சத்துவகுணம்' நிறைந்தவர்களாய் சுத்தமான நிறத்தை உகக்குமவர் களுக்காக எம்பெருமான் பால் (வெண்மை) போன்ற நிறத்தைக் கொண்டார். |
| திரேதாயுகம் | — | சிவந்த (பொன்) நிறத்தைக் கொண் டார். |

| | | |
|---|---|---|
| துவாபரயுகம் | — | பசுமை நிறத்தைக் கொண்டார். |
| கலியுகம் | — | எந்த நிறத்திலும் கொண்டாலும் ஈடுபாடுவாரில்லாமையாலே இயற்கையான நீல, கார் நிறத்தைக் கொண்டார். |

மேல் சுட்டிய வண்ண அடிப்படையில் திருமால் அவதரித்தமையை,

நிகழ்ந்தாய் பால்பொன் பசப்புக் கார்வண்ணம்நான்கும்
— நான். திரு. (24)

பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம்
போலும்நீர்மை பொற்புடைத்தடத்து வண்டு விண்டுலாம்
நீலநீர்மை யொன்றிவை நிறைந்த கால நான்குமாய்
மாலினீர்மை வையகம் மறைத்த தென்ன நீர்மையே?
— திருச். விரு. (44)

அழகிய தடாகத்திலே உள்ள வண்டுகள் சிறகு விரித்துப் பரவா நிற்கும் கருநெயதல் பூவின் நிறம் போன்ற கருநிறம்.

மேலும் இவ்வண்ண அடிப்படையில் ஒரு சமயம் மூன்று உருவங்களாக அவதரித்ததை,

உகப்புருவன் தானே யொளியுருவன் தானே
மகப்புருவன் தானே மதிக்கில்
—நான். திரு. (29)

1. உகப்பு உருவன் தானே — மநோகரமான திருமேனியை உடையவன். (இராமனின் வடிவழகைக் கண்ட மிதிலை மக்கள் ''தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாருமஃதே'' என்று அவனது ஒவ்வொரு அங்க அவயங்களைக் கண்டு மயங்கி நின்ற மநோகரமான திருமேனித் தோற்றம்).

2. ஒளி உருவன் தானே — தேஜஸ் புஞ்ஜமே ஆன திருமேனியை உடையவன் ''குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு'' என்ற தேஜஸ் புஞ்ஜமே உடைய திருமேனி தோற்றம்.

3. மகப்புருவன் — மிகவும் அற்புதமான உருவத்தை உடையவன்.

இவ்வாறு திருமால் நான்கு வர்ணங்களில் நான்கு யுகங்களில் அவதரித்தமையைச் சுட்டித் துதிக்கின்றார்.

# பின்னிணைப்பு - 12

## திருமாலின் திருநாமங்கள்

திருமழிசையாழ்வார் குருவின் அருளால் மனமாற்றம் அடைந்த பின் யோகத்தில் அமர்ந்தார். யோகத்தின் பயனால் விரைவில் பரம்பொருள் (திருமால்) தரிசனம் கிடைக்கப் பெற்றார். தமக்கு அருள் செய்த திருமாலை நினைத்து பல திருநாமங்களால், தமது பாசுரங்களில் முதலிலும், நடுவிலும், இறுதியிலும் பரக்கப் போற்றித் துதிப்பதைக் கண்டு பூரிக்கலாம்.

| எண் (1) | திருநாமங்கள் (2) | நான். திருவந். பாசுரங்கள் (3) | திருச். விரு. பாசுரங்கள் (4) |
|---|---|---|---|
| 1. | நாராயணன், நாரணன் சீரணனை | 1, 7, 13, 14, 31, 64, 67, 72, 96 | ... |
| 2. | கடல் வண்ணன் | 26, 77 | ... |
| | பொருகடல் நீர்வண்ணன் | 38 | |
| | வேலை வண்ணன், | | 18, 110 |
| | பூவை வண்ணன் | | 99,119 |
| 3. | கேசவன் | 59 | 20, 61 |
| 4. | சிரீதரன் | 62, 92 | ... |
| 5. | மாதவன், மாலவன், மாயவன் | 6, 65, 74 | 65 |
| 6. | கண்ணன் | 32, 50, 80, 84, 93 | 25, 37, 47, 52, 86, 93, 105, 110 |
| 7. | கோன், துவரைக்கோன் | 71, 93 | ... |
| 8. | ஆதிபெருமாள் | 79 | ... |
| 9. | மால்வண்ணன் | 83, 91 | ... |
| 10. | குணபரன் | 93 | ... |
| 11. | நேமியான் | 83 | 19 |
| 12. | கோள்அரி (அரி), சிங்கம் | 18, 21, 22 | 62 |
| 13. | திருவிருந்த மார்பன் | 62, 92 | ... |
| | பொன்பாவை கேள்வன் | 59 | ... |
| 14. | திருவேங்கடத்தான் | 39, 90, | 81 |
| 15. | தேவன் | 2 | ... |
| 16. | எம்மான், பெருமான், (ஆதி) எம்பெருமான் | 4, 16, 49, 51, 64, 79, 96 | 10, 17 |
| 17. | மால், கருமால், ஆதிமால், செங்கண்மால், கொல்லைமால், திருமால் | 5, 8, 11, 14, 23, 27, 37, 46, 69, 85 | 53, 56, 58, 60, 68, 74, 75, 112 |

| எண் | திருநாமங்கள் | நான். திருவந். பாசுரங்கள் | திருச். விரு. பாசுரங்கள் |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 18. | மதுசூதன் | 61 | ... |
| 19. | ஞானப்பிரான், ஞான மூர்த்தி | | 27, 29 |
| 20. | நூலாட்டிகேள்வன் | 40 | ... |
| 21. | மவால்லிக்கேணியான் | 35 | ... |
| 22. | அரங்கத்து அவன் அரங்கன் | 30, 36, 60 | 21, 49-55, 93 |
| 23. | நெடுமால், ஆதிநெடுமால் | 36, 54, 55, 92, | 53 |
| 24. | மாயன் | 6, 16, 50, 71, 74, 76 | 2, 7, 24, 28, 41, 71, 85, 91, 96, 98, 100, 102, 104, 111, 119 |
| 25. | ஈசன், எம் ஈசன் | 86 | 4, 35, 90, 107 |
| 26. | ஆதிதேவன் தேவ, தேவ! (ஆதி) | ... | 3, 5, 14, 17, 22, 24, 43, 48, 63, 77, 79, 109 |
| 27. | சக்கரபாணி, | | |
| | சார்ங்கபாணி, | 85 | 14, 15 |
| | வல்வில்லிராமன், | | 31, 81, 93, 94, |
| | வில்லாளன் (காகுத்தன்), | 53, 85 | |
| | இராமன் | | |
| 28. | புண்டரீகன் | ... | 22, 30, 33, 55, 57, 67, 96, 105 |
| 29. | பற்பநாபன், பாற்கடலான் | 89 | 23, 32 |
| 30. | வீரன், விற்கைவீரன் | ... | 31, 56, 59, 102, 116, 117 |
| 31. | பூமிநாதன் | ... | 22 |
| 32. | கள்வன், கேள்வா! | 59 | 26 |
| 33. | மூர்த்தி | ... | 17, 27, 31, 114 |
| 34. | ஆழிமேனிமாயன், ஆழியான்பால், ஆழியாய் | 2, 19, 73 | 19, 24, 57, 76, 84 |
| 35. | எம்பிரான் | 58 | 35, 73, 84, 94, 115 |
| 36. | நாதன், நாத, வேத! | ... | 27, 29, 38, 49, 86, 87, 96, 97, 111, 117, 118 |

| எண் (1) | திருநாமங்கள் (2) | நான். திருவந். பாசுரங்கள் (3) | திருச். விரு. பாசுரங்கள். (4) |
|---|---|---|---|
| 37. | கோவலன், பண்பன் | ... | 31, 59 |
| 38. | அற்புதன், ஆதிபூதன், அனந்தசயனன் | ... | 65 |
| 39. | மாயவாமனன், வாமன் | ... | 37, 74 |
| 40. | புனக்காயா வண்ணன் | 51 | ... |
| 41. | ஞாலநாதன் | ... | 111 |
| 42. | வேதகீதன், சாம வேத கீதன் | ... | 14, 117 |
| 43. | அத்தன், அன்னை, முக்தனார், முகுந்தனார், அம்மா | ... | 101, 115 |
| 44. | மேகவண்ணன், கொண்டல்வண்ணன் | ... | 38, 39, 120 |
| 45 | பின்னைகேள்வன், ஆயன் | 58, 71 | 2, 7, 13, 26, 33, 34, 41, 99, 103 |
| 46. | அண்ணல், எம் அண்ணல் | ... | 24, 54, 95 |
| 47. | தேவ, தேவ, தேவனே | ... | 103 |
| 48. | புனிதன், நின்மலன் | ... | 45, 90, 103 |
| 49. | வருவேங்கடவா, வேங்கடவா | 34, 41 (39-48) | ... |
| 50. | வானோர் பெருமான், விண்ணின் நாதன் | 31 | 47 |
| 51. | நல்மணி வண்ணன், மால்வண்ணன் | 47, 83, 91 | ... |
| 52. | புண்ணியா, மன்னன் | 84 | 45 |
| 53. | ஓர் பாலன், குமரன் | 3, 17, 44, 70 | 22, 31 |
| 54. | காலநேமி காலனே! கீர்த்தியாய், | ... | 31, 38, 43 |
| 55. | கூத்தன் | ... | 38 |
| 56. | பாகன், நெடுந்தகாய் | ... | 52, 62 |
| 57. | அழகியன், பழகியான் | 22 | ... |
| 58. | ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன் | 50 | ... |
| 59. | ஆராமுதம் | 59 | ... |
| 60. | உத்தமன், உருத்தமா | 86 | 43, 58 |
| 61. | அச்சுதன் | ... | 117 |
| 62. | வள்ளல் | ... | 88 |
| 63. | பத்தியுழவன் | 23 | ... |

# பின்னிணைப்பு - 13

## நாயக—நாயகி பாவனை

இறைவன்மீது பக்திக் காதலுள்ளவர்கள், தங்களை நாயகியாகப் (காதலிமார்களாகப்) பாவித்துக் கொண்டு பக்தி செய்து, பாடும் முறை, ஆழ்வார்களின் பக்திப் பூங்காவில் காணலாம். இதனை 'நாயக—நாயகி பாவனை' என்று வழங்குவர். கம்ப நாடனும்,

> ... ... ... ...கண்ணில் காண்பரேல்
> ஆடவர் பெண்ணமாய அவாவும் தோளினாய்
>
> —தாடகை வதை (11)

என்று முற்றும் துறந்த மண்படைத்த முனிவர் விசுவாமித்திரரே இராமபிரானது பேரழகில் ஈடுபட்டு வருணித்துள்ளார்.

பரமாத்மாவுக்கும், ஜீவான்மாவிற்கும் ஒன்பது வகை (நவவிதசம்பந்தம்) உறவுத் தொடர்புகள் உள்ளன என்பது வைணவ தத்துவம் நுவலுகிறது. இவ்வொன்பது வகை உறவுத் தொடர்புகளில் சிறந்தது, உயிர் நாடியானது, 'நாயக—நாயகி பாவனை' (தலைவன் — தலைவி) ஆகும். இம்முறையில் பரமான்மாவைத் தலைவனாகவும், ஜீவான்மாக்களாகிய ஆழ்வார்களிற் சிலர் தங்களைத் தலைவியாகவும் ஏறிட்டுக் கொண்டு பாசுரத்தை அருளியிருப்பதைக் காணலாம்.

ஆழ்வார்கள் வரிசையில் திருமழிசையாழ்வார்தான் முதலில் எம்பெருமானை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் ஏறிட்டுக் கொண்டு மதுரபாவத்தில், சங்ககால அகப்பொருள் தத்துவத்தை ஒட்டி நாயகி பாவனை நிலையில் அநுபவித்துப் பாசுரத்தை அருளிச் செய்துள்ளார். இவ்வாழ்வாருக்குப் பின்னர்தான் மற்ற ஆழ்வார்களும் நாயகி (தலைவி), நற்றாய், தோழி என்ற நிலைகளில் அநுபவித்துப் பாசுரங்களை அருளிச் செய்துள்ளனர்.

'வைணவர்களிடையே நிலவும் ஒரு மரபினை ஈண்டு நினைவு கூர்தற்பாலது. தண்டகாரண்ய முனிவர்கள் இராமபிரானின் பேரழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயமங்கையர்களாகிக் கண்ணனைக் கூடினர் என்ற வழக்கு ஒன்று உண்டு. ஆனால் ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெண்மை நிலையை அடைந்து எம்பெருமானாகிய புருடோத்த

மனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர் என்று கூறுவர் பெரியோர்*. இவ்வாறு, ஆழ்வார்களிடம் காதல் பரிணமித்து நிற்பதால் இவர்கள் எம்பெருமான்மீது கொள்ளும் காமம் 'பகவத் விஷய காமம்' என்று வழங்கப்பெறும்.

இந்நிலையில் திருமழிசையாழ்வார் போன்ற ஞானபக்தி கொண்டவர்களிடத்திலும் சிலசமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும், சில சமயம் காதல் (பிரேமம்) மீதூர்ந்து நிற்கும். இந்த இவ்விரு நிலைகளிலிருக்கும்பொழுதும் ஆழ்வார்கள் பாசுரங்கள் அருளிச் செய்துள்ளனர். இதனை,

ஞானத்தில் தம் பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு

—ஆசாரிய ஹிருதயம்—சூர்ணிகை (118)

என்று குறிப்பிடுவர். ஆகவே ஞான நிலையிலிருக்கும் பொழுது அவர்கள் தாமான தன்மையிலே நின்று பேசுவர். பிரேம நிலையி லிருக்கும் பொழுது தலைவி (பிராட்டி) நிலையை ஏறிட்டுக் கொண்டு வேற்றுவாயால் பெண் பேச்சாகப் பேசுவர். அப்பொழுது நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குசநாயகி' என்ற பெண்மைப் பெயர் பெறுவதும், திருமங்கையாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயரும் அமைவதுபோல இங்குத் திருமழிசையாழ்வார் 'பக்திசாரர்' என்ற நிலையில் ஏறிட்டுக்கொண்டு மதுரபாவத்தில் அருள்கின்றார்.

இவ்வாறு ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது அவர்கள் தோழி, தாய், மகள் என்ற மூன்று நிலைகளான ஒருவரின் நிலையில் தம்மைப் பாவித்துக் கொண்டு கூற்றுகள் அமைப்பர். இதனை,

சம்பந்த உபாய பலன்களில் உணர்த்தி
துணிவு பதற்றம் ஆகிற பிரஜ்ஞாவஸ்
தைகளுக்கு தோழி தாயார் மகள் என்று பேர்

—ஆசாரிய ஹிருதயம்-சூர்ணிகை (133)

என்று ஆசாரிய ஹிருதயமும் இம்மூன்று நிலைகளாக அமைக்கும் பாசுரங்கட்குத் தத்துவம் கூறுகின்றது.

---

*சிலநோக்கில் நாலாயிரம்—பக். 195-196,

இம் மூன்று நிலைகளில் மகள் (நாயகி) நிலையை அடைந்து 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெறவேண்டும் என்ற பதற்றத்தை உடைய வளாக இருக்கின்றாள் இவள். இந்த மனநிலை தான் மகள் (தலைவி) என்று குறிப்பிடப் பெறுகின்றது என்பதை பெரியோர் விளக்குகின்றார்.

இங்ஙனம் நான்முகன் திருவந்தாதியில் திருமழிசையாழ்வார் மதுரபாவத்தில் பாசுரம் அருளியிருப்பதை இனி காணலாம்.

முன்பு யோக நிலையில் இருந்த தமக்குத் திருமால் தரிசனம் கிடைக்கப் பெற்றதும், மகிழ்ந்த நிலையில் இருந்தபோது திருமால் மறைந்துவிட்டார். தம் உள்ளத்தில் திருமால் என்றும் குடிகொண்டிருந்த போதிலும், தலைவன் தம்மை விட்டுப் பிரிந்ததும், மீண்டும் தாம் தலைவனுடன் கூட வேண்டும் என்று வருந்திப் பிரிவுத்துயர் அடைகிறார். இந்நிலையில் தான் விரும்பிய காதலர் தன்னிடம் வந்து விரைவில் கூடுவரோ கூடமாட்டாரோ என்று ஏங்கிய மதுரபாவ (நாயகி நிலை அடைந்து) நிலையில் 'திருக்கூடல்' இழைக்கிறார்.

திருக்கூடலிழைத்தல் : கூடலிழைத்தல் என்பது, (இது கண்ணை மூடிக் கொண்டு செய்யப்படும் ஓர் உத்திமுறை). இம்முறையில் கூடல் இழைத்து மனத்தேர்வு அடையலாம். 'கூடல்', 'கூடலிழைத்தல்', 'கூடல் வளைதல்', 'கூடற்குறி' என்று பல திருநாமங்களாலும் வழங்கப் பெறுகின்றன. கூடலிழைத்தலாவது மணலில் வட்டமாகக் கோடு கீறி அதற் குள்ளே சுழிசுழியாகச் சுற்றும்படியாக சுழித்து இரண்டிரண்டு சுழி யாகக் கூட்டிப் பார்க்கும்போது இரட்டை எண்ணிக்கையில் முடிவு பெற்றால் கூடுகை ; ஒற்றை எண்ணிக்கையில் முடிவுப்பெற்றால் கூடாமை என்ற ஒரு நம்பிக்கை. இவ்விரு நிலைகளில் தலைவ னுடன் கூடுவோமோ இல்லையா என்று தலைவி கூடலிழைத்துப் பார்த்து மனத்தெளிவு அடைவதாகும்.

இவ் ஆழ்வாரும் பக்தி பழுத்த நிலையில் மதுர பாவத்தை அடைந்து திருவேங்கடமுடையானிடம் கூடவேண்டும் என்று நினைத்துத் திருக்கூடலிழைப்பதை,

அழைப்பன் திருவேங்கடத் தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட—மழைப்பே

—நான். திரு. (39)

என்று, தாம் தலைவன் எழுந்தருளியிருக்கும் திருமலைக்குச் சென்று விரைவில் கூடவேண்டும் என்றே 'இழைப்பன்' என்ற பதத்தால் அழுத்தித் திருக்கூடலிழைத்துத் திருவேங்கடமுடையானை காண வேண்டும் (சேவிக்க), என்று ஆவல் (பக்தி பிரேமத்தால்) கொண்டு மதுரபாவத்தில் திருக்கூடலிழைத்துப் பார்க்கின்றார். திருமழிசை யாழ்வார் காட்டிய மதுரபாவத்தை அடியொற்றி, ஸ்ரீ ஆண்டாளும் தமது பிரபந்தத்தில் இப் பாவத்தை கையாண்டுள்ளாள். முதலில் எழுந்த மதுரபாவமே பின்னர் நாயக—நாயகி பாவனையாக வளர்ச்சி பெற்றது என்பர். இந்நிலையில் ஸ்ரீ ஆண்டாள் 'கூடலிழத்தல்' என்றொரு தனி பதிகத்தையே அருளிச் செய்துள்ளாள். ஆக மதுர பாவத்திற்கு (நாயக—நாயகி) முன்னோடியாகத் திகழ்கின்றார் திருமழிசையாழ்வார்.

> தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்
> வள்ளல் மாலிருஞ் சோலை மணாளனார்
> பள்ளி கொள்ளு மிடத்து அடிகொட்டிட
> கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே!
>
> —நாச்சியார் திருமொழி (4:1)

என்று அருளியிருப்பதையும் இங்கு ஒப்பு நோக்கிப் பார்க்கலாம்.

# பின்னிணைப்பு - 14

## ஆலநிழல்கீழ் நால்வர்க்கு உபதேசித்தது

சிவன் முன்பு ஒரு காலத்தில் ஆலமரநிழலில் அமர்ந்துகொண்டு முனிவர்களுக்கு நாராயண பரத்துவத்தை உபதேசம் செய்ததைத் திருமழிசையாழ்வார் தமது பிரபந்தத்தில் காட்டுகின்றார். அவை,

> ஆல நிழற் கீழறநெறியை நால்வர்க்கு
> மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத்தோன் — ஞால
> மளந்தானை யாழிக் கிடந்தானை ஆல்மேல்
> வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு
>
> —நான். திரு. (17)

மெய்யான தவநெறியை உடையவனான சிவன் உலகளந்தவனும், திருப்பாற்கடலில் ஆலிலை மேல் வளர்ந்தவனுமான பெருமானைத் தான் வழிப்படும் மார்க்கமாகிய நல்வழியை, முன் யுகத்திலே ஓர் ஆலமரத்தின் நிழலிலே அமர்ந்து கொண்டு அகஸ்தியர், புலஸ்தியர் தக்ஷர், மார்க்கண்டேயர் என்கிற நான்கு முனிவர்களைச் சீடர் களாக அமைத்துக் கொண்டு,

1. நானும் தலைசாய்க்கப் பெற்ற திருவடித் தாமரைகளை யுடையவன் காண்மின் ஸ்ரீமந்நாராயணன் ;

2. அவன் உலகங்களை எல்லாம் தன் திருவடிக்கீழ் அகப் படுத்திக் கொண்டவன் ;

3. திருப்பாற் கடலிலே உறங்குவான் போல் யோகுசெய்து கொண்டிருந்து காத்தருள்பவன் ;

4. பிரளய காலத்திலே நானுமுட்பட எல்லாப் பொருள்களும் அழிந்து போவதாக இருக்கையில், எல்லாவற்றையும் வாரி விழுங்கி ஆலந்தளிரிலே திருக்கண் வளர்ந்த அற்புத ஆற்றல் வாய்ந்தவன்.

என்று உபதேசித்தார் என்பதைப் புலப்படுத்துகிறார்.

இவ்வாழ்வாருடைய கருத்துக்கு,

... ... ... ... அறிவானாம்
ஆலமரநீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த
ஆலமமர் கண்டத் தரன்

—முதல். திரு. (4)

என்று பொய்கையாழ்வாரும் அரண் சேர்க்கின்றார்.

இங்ஙனமாக, சிவன் ஆலமரநிழல்கீழ் நால்வர்க்கு உபதேசித் ததைப் பாசுரத்தில் அறுதியிடுகிறார்.

# பின்னிணைப்பு - 15

## திருச்சந்த விருத்தமும் — சிவவாக்கியர் பாடலும்

திருமழிசையாழ்வார் அருளிச் செய்த இரு பிரபந்தங்களில் 'திருச்சந்த விருத்தம்' என்பதிலுள்ள பாசுரங்கள் மிகவும் இனிய ஓசையுடையதாய், சந்த நயத்துடன் (க, த, ந, ட, ல, ள, று) என்ற எழுத்துகள் தக்கவாறு ஒப்பற்றனவாக அமைந்து படிப்பவர் மனத்தைத் திளைத்து மெய்மறக்க செய்வதால் இப்பிரபந்தம் சந்த விருத்தம் என்று வழங்கலாயிற்று. இதில் 'திரு' என்ற அடைமொழி சேர்த்து 'திருச்சந்த விருத்தம்' எனச் சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறது.

சிவவாக்கியர் என்ற சித்தரும் சந்தப் பாடல்களைக் பாடியிருப் பதால் திருமழிசையாழ்வாரும் சிவவாக்கியரும் ஒருவரே என்று பொருள் கொள்கின்றனர்.

| திருமழிசையாழ்வார் | சிவவாக்கியர் |
|---|---|
| 1. இவர் சித்தராக இருந்தவர். | 1. இவரும் சித்தராக இருந்தவர். |
| 2. நாலாயிரத்து ஏழுநூறு வருடங்கள் வாழ்ந்தவர். | 2. நீண்டநாள் வாழ்ந்தவர். |
| 3. சைவ சமயத்தில் இருந்தபோது சிவவாக்கியம் என்ற நூலைச் செய்தார் என்றும் கூறுவர். | 3. சிவவாக்கியம் என்ற நூலைச் செய்தார் என்றும் கூறுவர். |
| 4. சந்த நயத்துடன் தத்துவ அடிப்படையில் பாசுரம் பாடுவதில் வல்லவர். | 4. சந்த நயத்துடன் தத்துவ அடிப்படையில் பாடல்கள் பாடுவதில் வல்லவர். |

மேற்சுட்டிக் காட்டிய காரணங்களால் இருவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தமையாலும், இருவருடைய சந்தப் பாடல்களும், சந்த நயத்திலும், பொருள் அடிப்படையிலும் ஒத்திருப்பதாலும், ஆழ்வார் சிவவாக்கியர் என்ற திருநாமம் கொண்டு இருந்தபோதும் சிவவாக்கியம் நூலைச் செய்தார் என்று கூறுவதால் திருமழிசையாழ்வாரும் சிவவாக்கியரும் ஒருவரே என்று பொருள் கொள்வர். இனி இவர்கள் செயத சந்தப் பாடல்கள் ஒரு சில சான்றுகளால் இருவருடைய பாடல்களும் ஒத்திருப்பது மட்டும் சுட்டிக் காட்டப்படுகிறது.

**திருமழிசையாழ்வார் :**

1. பூநிலாய வைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்
நீநிலாய வண்ணநின்னை யார்நினைக்க வல்லரே ?

—திருச். விரு. (1)

**சிவவாக்கியர் :**

பூவில் ஆய ஐந்துமாய், புனலில் நின்ற நான்குமாய்
தீயிலாய மூன்றுமாய்ச் சிறந்தகால் இரண்டுமாய்
வேயிலாய தொன்றுமாய் வேறுவேறு தன்மையாய்
நீயிலாயல் நின்ற நேர்மை யாவர் காண வல்லரே ?

—சிவவாக்கியர் பாடல் (303)

திருமழிசையாழ்வார் :

2. ஐந்துமைந்து மைந்துமாகி அல்லவற்று ளாயுமாய்
ஐந்துமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே !
ஐந்துமைந்து மைந்துமாகி அந்தரத் தணைந்துநின்று
ஐந்துமைந்து மாய நின்னை யாவர்காண வல்லரே ?

—திருச். விரு. (3)

சிவவாக்கியர் :

ஐந்தும்ஐந்தும் ஐந்துமாய் அல்லவற்று உளாயுமாய
ஐந்தும்மூன்றும் ஒன்றுமாய் நின்றஆதி தேவனே ;
ஐந்தும்ஐந்து ஐந்துமாய் அமைத்து அமைந்து நின்றநீ
ஐந்தும் ஐந்தும் ஆயநின்னை யார்காண வல்லரே.

—சிவவாக்கியர் பாடல் (261)

திருமழிசையாழ்வார்:

3. ஏகமூர்த்தி மூன்றுமூர்த்தி நாலுமூர்த்தி, நன்மைசேர்
போகமூர்த்தி புண்ணியத்தின் மூர்த்தியெண்ணில் மூர்த்தியாய்
நாகமூர்த்தி சயனமாய் நலங்கடற் கிடந்துமேல்
ஆகமூர்த்தி யாயவண்ணம் என்கொல்? ஆதி தேவனே !

—திருச். விரு. (17)

சிவவாக்கியர் :

ஏகர்த்தி மூன்றுமூர்த்தி நாலுமூர்த்தி நன்மைசேர்
போகமூர்த்தி புண்ணியத்தில் மூர்த்தியன்று மூர்த்தியாய்
நாகமூற்ற சயனமாய நலங்கிடல் கடந்தநீ
யாகமூர்த்தி ஆகிநின்றது என்கொல்ஆதி தேவனே !

—சிவவாக்கியர் பாடல் (259)

திருமழிசையாழ்வார் :

4. எட்டுமெட்டு மெட்டுமாய் ஒரேழுமேழு மேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனை
எட்டினாய பேதமோடு இறைஞ்சிநின்ற வன்பெயர்
எட்டெழுத்தும் மோதுவார்கள் வல்லர் வானமாளவே !

—திருச். விரு. (77)

**சிவவாக்கியர் :**

**எட்டும்எட்டும் எட்டுமாய் ஓர்எழும்எழும் எழுமாய்**
**எட்டு மூன்றும் ஒன்றுமாகி நின்றஆதி தேவனே !**
**எட்டுமாய பாதமோடு இறைஞ்சிநின்ற வண்ணமே !**
**எட்டுஎழுத்தும் ஓதுவார்கள் அல்லல்நீங்கி நிற்பரே !**

—சிவவாக்கியர் பாடல் (263)

இங்ஙனம் இருவருடைய பாடல்களும் சந்த நயத்திலும் தத்துவப் பொருள் கூறுவதிலும் மட்டும் ஒத்து இருக்கின்றன. இச் சந்த நயத்தை வைத்து இருவரும் ஒருவரே என்று கொள்வதைத் தவிர்த்து இருவருடைய வாழ்க்கையையும் படைப்புகளையும் தீர ஆராய்ந்து ஒருவர் என்று மெய்ப்பிப்பது மேலும் ஆராய்ச்சிக்குரியதாக அமைகின்றது.

# பின்னிணைப்பு - 16

## ஆழ்வார் நெஞ்சை நோக்கி விளிக்கும் இடங்கள்

திருமழிசையார் (பக்திசாரர்) தாம் செய்த இடைவிடா ஞான பக்தியின் விளைவால் எம்பெருமானைத் தம் நெஞ்சில் (உள்ளம்-மனம்) என்றும் எழுந்தருளியிருப்பதை,

**'நின்றதும்இருந்ததும் கிடந்ததும் என்நெஞ்சுளே'**

**'அற்புதனநந்தசயநன் ஆதிபூதன் மாதவன்**
**நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என்நெஞ்சுளே'**

—திருச். விரு. (64. 65)

என்பதை அழுத்தமாக வெளியிட்டுத் தம் நெஞ்சில் திருமால் வந்து புகுந்ததையும், தம் நெஞ்சை நோக்கி விளிக்கும் கருத்துக்களையும் பாசுரங்களில் எதிரொலிக்கச் செய்கிறார். 'அவையாவன' :

—நான்முக. திரு.: 8, 16, 27, 30, 36, 41, 50, 57, 58, 60, 62, 65, 66, 79, 81, 82, 85, 86, 92.

—திருச். விரு. : 4, 55, 63, 64, 65, 76, 99, 101, 102, 106, 112, 113, 115, 120.

இங்ஙனமாகப் பல இடங்களில் தம் நெஞ்சை நோக்கி விளித்து மார்தட்டி பேசுகின்றார்.

# பின்னிணைப்பு-17

## பெரிய பிராட்டியார்

பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும்போது பெரிய பிராட்டியார் என்றும், பூமிப் பிராட்டியார் என்றும் முறையே திருமகளையும், மண் மகளையும், நீளாதேவியையும் குறிப்பிடுவது போல, இவர்கள் மண்ணுலகத்தில் தெய்விகத் தன்மையை மறைத்துக் கொண்டு அவதரித்து அருள் செய்யும்போதும் பிராட்டி என்பது மரபு.

சீதாப்பிராட்டி, உருக்குமிணிப் பிராட்டி, நப்பின்னைப் பிராட்டி, எனச் சொல் வழக்குகள் ஏற்பட்டுள்ளன. இங்ஙனம் திருமகளுடன் சேர்ந்து 'திருநின்ற மார்பனாக' திருமால் விளங்குகின்றார். மேலே குறிப்பிட்ட பிராட்டியார்களைத் திருமழிசையார் தமது பாசுரத்தில் போற்றித் துதிப்பதை காணலாம்.

**நான்முகன் திருவந்தாதி :**

'மாதவனை' (திருமகள் கொழுநன்) (6)

'விடையடர்த்த' (நப்பின்னை பிராட்டிக்காக) (23)

'வடிப்பவள வாய்ப்பின்னை' (33)

'நூலாட்டி கேள்வனார்' (40)

'திருவில்லாத் தேவரை' (53)

(பிராட்டியின் சம்பந்தமில்லா தேவர்)

'பொன்பாவை கேள்வா!' (59)

'நின்ற திரு' (61)

'திருநின்ற பக்கம்' (62)

'திருவிருந்த மார்வன் சிரீதரன்' (92)

திருச்சந்த விருத்தம் :

' கலந்தசீர்புண்டரீகபாவை சேருமார்ப! பூமிநாதனே! (22)

' தேனுலாவு மென்மலர், மங்கை யன்னி வாழுமார்ப ! ' (24)

' உரத்திலு மொருத்தி தன்னை ' (29)

' பின்னை கேள்வ ! மன்னுசீர் ' (33)

' மையரிக்கண் மாதரார் திறத்து ' (நப்பின்னை) (40)

' ஆயர் மங்கை ' (நப்பின்னை) (41)

' ஏறு சென்றடர்த்த ஈச ! ' (42)

' மன்னுமாமலர்க் கிழத்தி வைய மங்கை மைந்தனாய்
பின்னுமாயர் பின்னை தோள்மணம் புணர்ந்ததன்றியும்' (55)

' சங்கு தங்கு முன்கை நங்கை ' (57)

' பேதில்மங்கை பூதலக்கிழத்தி தேவியன்றியும் ' (72)

' பண்ணுலாவு மென்மொழிப் படைத்தடங்கணாள்
பொருட்டு ' (91)

' வென்றிவேற்கண் மாதரார் ' (92)

' செய்ய போதில் மாது சேரும் மார்ப! ' (97)

' பின்னைகேள்வ! ' (99)

' திருக்கலந்து சேரும்மார்ப! ' (103)

' இன்சொல் மங்கை ' (105)

' வல்லிநாண் மலர்க்கிழத்தி நாத! ' (118)

இங்ஙனமாக இருபத்தைந்து இடங்களில் தமக்கு அருள்புரிந்த புருஷகாரத்தைப் போற்றிப் பரக்க அருளிச் செய்துள்ளார்.

# பின்னிணைப்பு - 18

## திருவனந்தாழ்வான்

'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் — என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூமபட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு'

—முதல். திரு. (53)

என்ற பாசுரத்திற்கு ஏற்பத் திருமாலுக்கு மிக அரிய சேவைகளை ஆற்றுபவர் திருவனந்தாழ்வான் (நாக அணை). இவர் ஆயிரந் தலையும் ஐந்தலையும் அமையப் பெற்று ஆதிசேஷனாக விளங்கு கின்றார்.

திருவனந்தாழ்வான்மீது திருமால் பள்ளி கொண்டிருக்கும் நிலைகளைத் திருமழிசையாழ்வார் பாசுரங்களில் பரக்க அருளிச் செய்துள்ளார் : அப்பாசுரங்கள் :

முதலில் திருவனந்தாழ்வானை வருணனை செய்வது சுட்டிக் காட்டப்படுகிறது.

ஆங்கார வாரமது கேட்டு அழலுமிழும்
பூங்கா ராவணையான் பொன்மேனி

—நான். திரு. (10)

என்ற பாசுரத்தில் பரமபதத்திலே நித்திய முக்தர்களுடைய சாமகான சப்தத்தைக் (ஒலி) கேட்டவாவிலே, வேதஒலி என்பதை மறந்து அசுரர்கள் இங்கும் வந்து ஆரவாரம் செய்வதாகத் திகைத்து நஞ்சுகலந்த தீயைக் கக்குகின்ற அழகிய சீற்றத்தையுடைய திருவனந்தாழ்வானை அணையாகவுடைய எம்பெருமான் என்று திருவனந்தாழ்வான் செயலை விளக்கி அடுத்து உருவ அமைப்பைச் சுட்டிக் காட்டுகிறார். இது ''அஸ்தாநே பயசங்கைக்கு'' நல்ல எடுத்துக்காட்டாகும்.

விடத்தவாய் ஓராயிரம் இராயிரங்கண் வெந்தழல்
விடுத்துவீழ்வி லாதபோகம் மிக்கசோதி தொக்கசீர்
தொடுத்துமேல் விதானமாய பௌவநீர் அராவணை
படுத்தபாயல் பள்ளிகொள்வது என்கொல்! வேலைவண்ணனே!

—திருச். விரு. (18)

என்றும், பெரிய திருவடியை (கருடன்) வாகனமாகக் கொண்டு செல்லாமல், திருப்பாற்கடலிலே கருடனுக்கு இயற்கையான பகைவனாயிருக்கும் திருவனந்தாழ்வானுடைய திருமேனியை விரும்பிக் கண்வளர்ந்தருளுவது என்னோ என்றும் சாதிக்கின்றார்.

— திருச். விரு. (19)

**திருவனந்தாழ்வானை ஆதரித்தது :**

பழைய எதிரியான பெரிய திருவடிக்கு அஞ்சிப் பரம்பின அலைகளோடே கூடின நீரையுடைத்தான கடல்போலக் குளிர்ந்த திருப்படுக்கையைப் புகலிடமாக நம்பி வந்து பற்றின ஒளி பொருந்தின அரவமாகிய சுமுகனை ஆதரித்து (நாகம்) சத்ருவான அந்தக் கருடனுடைய வலிமை தாங்கிய தேகத்திலே ஏறவிட்டவனும், மாமேனி மாயவன் என்பதைக் காட்டி எம்பெருமான் திருவனந்தாழ்வானைக் காப்பாற்றியதைக் குறிப்பிடுகின்றார்.

—நான். திரு. (74)

அடுத்து திருவனந்தாழ்வானைச் சுட்டிக்காட்டும் பாசுரங்கள்:

## 1. நான்முகன் திருவந்தாதி

'ஆழி கிடந்தானை' (17)

'வெள்ளத் தரவணையின்மேல்' (30)

'ஐந்தலைவாய் நாகத்தணை' (35)

'நாகத்தணை' (36)

'படநாகணை நெடியமாற்கு' (66)

'பைதெளிந்த பாம்பினணையாய்' (94)

## 2. திருச்சந்த விருத்தம்

'நாகமேந்தும்...' (6)

'தடங்கடற் பணத்தலை செங்கண்நாக அணை' (15)

'நாகமூர்த்தி சயனமாய்' (17)

'மாசுணம் படுத்து' (20)

'பௌவநீரணைக் கிடந்து' (29)

'அனந்தன்மேற்கிடந்த' (45)

'நீரிடத்து அராஅணை கிடத்தி' (47)

'அனந்தசயனன்' (65)

'நீரராவணைக்கிடந்த' (78)

'அராவணைத் துயின்ற' (82)

'நச்சராவணைக்கிடந்த' (85)

'நீர்ப்பள்ளிமாய' (102)

'வேலைநீர்ப் பாயலோடு' (110)

'நச்சுநாகணைக் கிடந்த' (117)

இங்ஙனமாக ஆழ்வார் திருவனந்தாழ்வானைச் சுட்டிக் காட்டுவது புலனாகின்றது.

# பின்னிணைப்பு - 19

## பாசுரங்களில் திரு ஆழி ஆதிக்கம்

திருமாலின் பஞ்சாயுதங்களில் **திரு ஆழி** (சுதர்சனம்) ஒன்றாகும். இது திருமால் அறிவிப்பதற்கு முன்னே அவர் மனக்குறிப்பை அறிந்து, நினைத்த மாத்திரத்திலே செயற்பட்டுச் சேவை செய்து முடிக்கும் பேராற்றல் உடையது. இத்திரு ஆழி திருமாலின் வலது திருக்கரத்தில் இருந்து ஏற்றம் பெறுகின்றது. திருமழிசையார் இத்திரு ஆழியைக் குறிப்பிட்டுக் காட்டும் இடங்களாவன:

### 1. நான்முகன் திருவந்தாதி

'ஆழியான்பால்' (2)

'கோள்விடுப்பான் ஆழிவிடற்கு' (12)

'தேராழியால், (16)

'ஆழியாயன்றே' (19)

'தன்னாழிப்படை தொட்டு' (48)

'பேர் ஆழியான்தன் பெருமையை' (73)

'நேமியான்' (83)

### 2. திருச்சந்த விருத்தம்

'சக்ரபாணியல்லையே' (14)

'அதென்கொல் மின்கொள்நேமியாய்' (19)

'அங்கையாழி' (24)

'ஆழியார்' (35)

'அன்பிலன்றி ஆழியானை' (76)

'வெய்யவாழி' (97)

'அறுத்தஆழி' (106)

திருச் சங்கின் சேவையோ அளவிற்கடங்காதது. ஆழ்வார் திருச்சங்கின் சேவையைச் சில இடங்களில் மட்டுமே வெளியிட்டு உள்ளார். காரணம், இவர் திருவாழியின் அம்சம் ஆகையினால் தம்மைப் பற்றித் தாமே புகழ்ந்து கொள்ளாமையை நோக்குக. மேலும் இவர் பல அற்புதங்களும் செய்து ஏற்றமும் பெற்றதால் இவ்வாழ்வாரை, ''சக்கராம்சம் பார்க்கவோத்பவம்'' என்று வைணவ உலகம் போற்றித் துதித்தும் வருகின்றது.

# பின்னிணைப்பு - 20

## திருமாலின் திருவடிகள் ஏற்றம் பெறும் இடங்கள்

'பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' —குறள் (350)

என்று தெய்வப்புலவர் இறைவனின் திருவடிகளைச் சுட்டிக் காட்டுவதைப்போல் திருமழிசையாரும் சரம சுலோகத்தைக் கடைப்பிடித்து திருமாலின் திருவடிகளைப் போற்றித் துதிக்கின்றார்.

### 1. நான்முகன் திருவந்தாதி

'அண்டத்தான் சேவடியை' (9)

'படிகடந்தான் பாதம்' (15)

'தாளே பணிமின்' (22)

'தூரகல சேவடியை' (27)

'ஆய்ந்த குணத்தானடி' (32)

'அடிச்சகடம்' (33)

| | |
|---|---|
| 'தன்மையான்தாள்' | (34) |
| 'தாளாலுலகமளந்த' | (35) |
| 'கால்வலையில் பட்டிருந்தேன்' | (40) |
| 'அடிக்கமலம்' | (42) |
| 'தாளால் பண்டெண்ணி' | (44) |
| 'புண்டரீகப் பாதம்' | (45) |
| 'நின் அடியை' | (55) |
| 'நின்தாள்' | (60) |
| 'அடிப்படுத்த' | (70) |
| 'அதிரும் கழற்கால மன்னனையே' | (84) |
| 'பாற்கடலான் பாதம்' | (89) |
| 'தாள் தாமரை' | (91) |

## 2. திருச்சந்த விருத்தம்

| | |
|---|---|
| 'நீதியால் வணங்குபாத' | (9) |
| 'பாத பங்கயத்து' | (24) |
| 'பற்ப பாதன்' | (32) |
| 'மண்ணளந்துகொண்ட காலனே! | (43) |
| 'உன்ன பாதம்' | (55) |
| 'மண்ணளந்த பாத' | (58) |
| 'நடந்த கால்கள்' | (61) |
| 'பாரளந்த பாத போதையுன்னி' | (66) |
| 'புண்டரீக பாதன்' | (67) |
| 'அடியிணை வணங்கினால்' | (74) |
| 'நலங் கழல்' | (78) |
| 'கழற்கு' | (80) |
| 'மாலபாதமே' | (81) |
| 'தன்கழற்கு' | (84) |
| 'பாத போதினில்' | (85) |
| 'சாடுசாடு பாதனே! செய்ய பாதம்' | (86) |
| 'வணங்கு பாத' | (87) |
| 'நின் இலங்கு பாதமன்றி' | (90) |

| | |
|---|---|
| ' அலர்ந்த பாதமே விரும்பி ' | (93) |
| ' வந்து நின்கழல் பொருந்துமா ' | (96) |
| ' நின்ன பாதம் ' | (100) |
| ' நின்ன பாதபங்கயம் நிரந்தரம் ' | (101) |
| ' விளங்குபாத போதில் வைத்து ' | (102) |
| ' நின்னபொற்கழல் ' | (104) |
| ' மால பாதமே ' | (112) |
| ' எந்தை பாதமெண்ணியே ' | (114) |
| ' பாத போதினை ' | (118) |
| ' உன்ன பாதம் ' | (119) |

இங்ஙனமாக ஆழ்வார் திருமாலின் திருவடிகளைப் பரக்கப் போற்றித் துதித்துச் சரணாகதி (சரமசுலோகம்) அடைந்து மற்றும் லீலாவிபூதி யுள்ளவர்களுக்கும் வழி காட்டுகின்றார்.

# பின்னிணைப்பு - 21

## திருத்துழாய் (துளசி)

திருமாலுக்கு மிகவும் உகந்தது துளசியாகும். இதை வைணவ பரிபாஷையில் ' திருத்துழாய், திருத்துளவம்' என்று வழங்குவர். எம்பெருமான் ஆராதனமே திருத்துழாயினை எழுந்தருளச் செய்வதில்தான் (துளசி சேகரித்தல்) தொடங்குகிறது. இது திருமாலின் பரத்துவத்துக்குஅடையாள மாலையாகும். எம்பெருமானை அடியவரிடத்தில் பிணைத்துப் பரத்துவ இன்பத்தை அளிக்க வல்ல சிறப்புடையது. இத்திருத்துழாய் சிறப்பினைத் திருமழிசையார் தமது பாசுரங்களில் சிறப்பித்துக் கூறியுள்ளமை :

' சூழ்த்த, துழாய் மன்னு நீண் முடியென் ' (நான். திரு. (11)

' வண்டுலவு தண்டுழாய் தார்தன்னைச்சூடித்தரித்து '
—நான். திரு. (62)

' துழாயலங்கல் மாலையாய் !' —திருச். விரு. (14)

' வண்டுகிண்டு தண்டுழாய் அலங்கலாய் ! '
—திருச் விரு. (22)

' தேனகஞ் செய்தண்ணறு மலர்த்துழாய்நன்மாலையாய் '
—திச்ரு. விரு. (80)

'கொண்டல் வண்ண! தண்டுழாய்; வடங்கலந்த மாலை மார்ப!' —திருச். விரு. (38)

'புனந்துழாயலங்கலம் புனிதனே'! —திருச். விரு. (45)

'தோடுபெற்ற தண்டுழாய் அலங்கலாடு சென்னியாய்' —திருச். விரு. (46)

'தொத்திறுத்த தண்டுழாய் நன்மாலை' —திருச். விரு. (68)

'மட்டுலாவு தண்டுழாய் அலங்கலாய்' —திருச். விரு. (83)

'சுரும்பரங்கு தண்டுழாய் துதைந்தலர்ந்த பாதமே' —திருச். விரு. (93)

'சுரும்புலாவுதண்டுழாய்' —திருச். விரு. (110)

'அலங்கல் மார்வில்' —திருச். விரு. (113)

—மொத்தம் பதின்மூன்று இடங்களில் திருத்துழாய் ஏற்றத்தைப் பற்றிப் போற்றியும், திருத்துழாயுடன் திருமாலையையும் இணைத்தும் கொண்டாடியுள்ளார் ஆழ்வார்.

ஆழ்வாரை அடியொற்றி ஆண்டாளும் திருத்துழாயைக் கொண்டாடியுள்ளாள், "நாற்றத்துழாய் முடி நாராயணன்" * என்று.

அவன் திருமார்பில் தரித்திருக்கின்ற திருத்துழாய் மாலையின் நறுமணம் ஒன்று போதுமே! இன்றளவும் கூட அதன் நறு நாற்றத்தை மறைக்க முடியாதே; சர்வ கந்தஹ: அல்லவா!

கன்றிய வெங்கரன் முதலோர் களத்தில் வீழக்
கவிகுல நாயகன் இதயம் கலங்கி வீழ
ஒன்றுபடு மரம் ஏழும் உததி ஏழும்
ஊடுருவச் சரந்தொடுத்த ஒருவில்வீரன்
துன்றி எழுபது வெள்ளம் குரங்கின் சேனை
சூழ்போத வாய்த்த திருத்துணைவனோடும்
சென்ற வழி இன்றளவும் துளவம் நாறும்
சேது தரிசனம் செய்தான் திறல் வல்லோனே!
—(வில்லிபாரதம்.)

மேற்கண்ட பாடலால், திரேதாயுகத்தில் அவதரித்தவன் இராமபிரான். அவன் சீதைக்காக அன்று எழுபது வெள்ளம் குரங்கின் சேனையோடும், தம் திருத்துணைவனோடும் சென்ற

* திருப்பாவை. 10

வழியானது (சேது தரிசனம் — இராமேஸ்வரம்) '' இன்றளவும் துளவம் நாறும் '' என்பதற்கு துவாபர யுகத்தில் தோன்றிய அர்ச்சுனன் சேது தரிசனம் செய்தபோதும் [ஆதி பருவம், தீர்த்த யாத்திரைச் சருக்கம், (45)] திருத்துளவத்தின் நாற்றத்தினை அறுதியிட்டான்.

கலியுகத்தில் (இன்றளவும்) எமது ஆசாரியரும், ஸ்வாமியுமான பேராசிரியர், ஸ்ரீமான் உ. வே. C. ஜெகந்நாதாசாரியர் (Tamil) அவர்களுடன் பேராசிரியர். ஸ்ரீ R. S. சக்ரவர்த்தி ஐயங்கார் (History), பேராசிரியர், ஸ்ரீ P. விஜயராகவன் (Chemistry), ஆகியோர் 1951-இல், சேது தரிசனம் செய்தனர். அவ்வமயம் முதலில் எமது பேராசிரியர் சிறிது மண்ணையெடுத்து முகர்ந்து அர்ச்சுனன் அநுபவத்தில் துளவம் நாறுகிறதா! என்று திளைத்து நிற்கப் பார்த்து, மற்ற இரு பேராசிரியர்களும், அவர் சுட்டிக் காட்டிய அநுபவத்தில் பங்குகொண்டு திருத்துளவத்தின் நாற்றத்தில் நிலைத்தும், மெய்ம்மறந்து நின்றதையும் இன்றளவும் நினைவுபடுத்தி அறுதியிடுவதும் மிகப் பொருத்தமாக அமையுமே. ஆக, திருத்துளவத்தின் நாற்றம் நாராயணனைக் (அவனே) காட்டிவிடும் என்பது புலனாகிறது அல்லவா!

ஆக, ஆழ்வார்கள், ஆசாரியர்கள், வில்லிபுத்தூரார் முதற்கொண்டு இன்றளவும், எமது பேராசிரியர் பெருந்தகை ஈறாகத் திருத்துழாய் மகிமைக்கும், ஏற்றத்திற்கும், உள்ள அதன் பெருமையை கொண்டாடி அறுதியிடுவதையும் கண்டு மகிழத்தக்கது.

# பின்னிணைப்பு - 22

## திரு கபித்தலம்

நூற்றெட்டுத் திவ்விய தேசங்களில் 'திரு கபிலத்தலம்' ஒன்று. இதற்குத் திருக்கவித்தலம், கபிஸ்தலம் என்ற பெயரும் உண்டு. இத்தலத்தைக் 'கண்ணன் கபித்தலம்' என்று வழங்குவர். திருமழிசையாழ்வார் இத் திருக்கபிலத்தலத்தை,

'ஆற்றங்கரை கிடக்குங் கண்ணன் கடல் கிடக்கும் மாயன்'

நான். திருவந். (50)-என்று அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில், திருக்காவேரி ஆற்றங்கரைப் பக்கத்தில் திருமால் திருக்கண்வளர்ந்திருப்பதனால், தம் திருவுள்ளக் கருத்துப்படி எம்பெருமானுக்கு 'ஆற்றங்கரைக் கிடக்கும் கண்ணன்' என்ற திருநாமமிட்டு மங்களாசாசனம் செய்து கொண்டாடி மகிழ்ந்துள்ளார்.*

* இவ் திவ்ய தேசத்திற்குத் திருமழிசையாழ்வார் ஒருவர் மட்டுமே மங்களாசாசனம் செய்துள்ளது குறிப்பிடத் தக்கது.

இவருடைய திருவுள்ளக் கருத்தைக் கண்டறிந்து கூறும் பேராற்றலுடைய பிள்ளைப்பெருமாளையங்காரும்,

காணியு மில்லமுங் கைப்பொருளு மீன்றோரும்
பேணிய வாழ்க்கையும் பேருறவுஞ் — சேணிற்
புவித்தலத்தி லின்பமும் பொங்கரவ மேறிக்
கவித்தலத்திற் கண்டுயில்வோன் கால்.

—நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி (28)

என்ற பாசுரத்தால் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

இங்கு கவித்தலத்தில் முன்பிருந்த முத்தைய மூப்பனாரென்பவர் ''அனையுங் காத்தவனே எனைக் காப்பதரிதல்லவே'' என்பதனை ஈற்றடியாக வைத்து ஒரு பாடல்பாடும்படி சொன்னபோது கவித்தலம் வேலையரென்னும் வீரசைவ வித்துவான்,

சோனையுங் காத்துநல் லானையுங் காத்துத் திரௌபதிதன்
தூனையுங் காத்தடைந் தானையுங் காத்துத் தடத்தகலி
மானையுங் காத்தனு மானையுங் காத்து மடுவில்விழும்
ஆனையுங் காத்தவனே ! எனைக் காப்பதரிதல்லவே

—சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், உ.வே. சாமிநாதையர், ப. (175) என்ற தனிப்பாடல் பாடியதும் நினைவிற்கு வருகிறது.

# பின்னிணைப்பு - 23

## திருக்குறுங்குடி

நூற்றெட்டுத் திவ்ய தேசங்களில் எண்பத்து ஒன்பதாவது திவ்யதேசம் திருக்குறுங்குடி. இத் திவ்யதேசத்தில் எழுந்தருளி, யுள்ள எம்பெருமானைத் திருமழிசையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். அவை :

கரண்டமாடு பொய்கையுள் கரும்பனைப் பெரும்பழம்
புரண்டுவீழ வாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய் !
திரண்ட தோளி ரணியன் சினங்கொளாக மொன்றையும்
இரண்டுகூறு செய்துகந்த சிங்க மென்பதுன்னையே

—திருச். விரு. (62)

இப்பாசுரத்தில் திருக்குறுங்குடியின் இயற்கை வருணனையை வருணித்தும் அங்கு நடக்கும் ஒரு நிகழ்ச்சியையும் சித்தரித்துக் காட்டுகிறார்.

நீர்க்காக்கைகள் உலாவுகின்ற பொய்கையிலே கரிய பெரிய பனம்பழங்களானவை நீரிலே விழுந்து புரள, அவற்றை நீர்க் காக்கையாகக் கருதி வாளை மீன்களானவை அஞ்சித் துள்ளிப் பாய்ந்து ஓடி ஒளிக்கின்ற திருக்குறுங்குடியிலே எழுந்தருளியிருக்கிற மகாநுபாவனே! (நெடுந்தகாய்) என்று அருளிச் செய்கிறார்.

**உள்ளுறை பொருள்:** பனம்பழத்தை நீர்க்காக்கை என்று அஞ்சியது மயக்க அணி 'இறைச்சிதானே பொருள் புறத்ததுவே' என்ற இலக்கணத்திற்கு ஏற்ப, வாளை மீன்கள் பனம் பழத்தை நீர்க்காக்கை எனப் பொருள் கொண்டு துள்ளி ஓடியது—

எம்பெருமானுக்கு என்ன வருகிறதோ என்று அந்தக் குறுங் குடியில் இருக்கின்ற பொருள்கள் திருக்குறுங்குடி நம்பி பக்கலிலே பிரேமத்தின் அதிசயத்தாலே அஞ்சுகின்றனவாம் என்ற கருத்து உள்ளுறையாக அமைகிறது. இது " அஸ்தானே பயசங்கைக்கு " நல்ல எடுத்துக்காட்டு. அதாவது 'அஞ்ச வேண்டாத இடத்திலே அஞ்சுவது. இந்த நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டி அன்பு மிகுதி யால் அருளிச் செய்கிறார்.

இவ்வாழ்வார் காட்டும் இவ் இயற்கை நிகழ்ச்சியைக், கம்பரும்,

> **எவ்வமோங்கிய இறப்பொடு பிறப்பிவையென்னக்**
> **கவ்வு மீனோடு முழுகுவ வெழுவென கரண்டம்**
>
> —பம்பைப்படலம் (16)

என்பதைக் கிட்கிந்தா காண்டத்தில் குறிப்பிடுவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**குறுங்குடி நெடுந்தகாய்:** இப்பாசுரத்தில் திருக்குறுங் குடியைப் போற்றி இருப்பதால் அங்கே கிடந்த நம்பி, திருப்பாற் கடல் நம்பி என்று இரண்டு மூர்த்திகள் சயனத்திருக்கோலத்தில் எழுந்தருளி உள்ளனர், அவர்களைக் கொண்டு இப்பாசுரம் மங்களாசாசனம் செய்திருக்கக் கூடுமோ என்ற எண்ணம் எழுவது இயல்பு. என்னெனில் இதற்கு முன் உள்ள பாசுரங்களில் சயனக் கோலத்தில் உள்ள திருக்குடந்தை பெருமாளைப் பற்றியே பாசு ரங்கள் அமைந்துள்ளன. ஆகையினால் தொடர்ச்சியாக இதுவும்

சயனக்கோலத்தைக் காட்டுவது என்று எண்ணுவார். ஆனால் இப்பாசுரத்தில் 'நின்ற திருக்கோலத்தில்' உள்ள வைணவ நம்பியையே குறிப்பது.

திருக்குறுங்குடியிலே வைணவ நம்பி, மலைமேல் நம்பி, நின்ற நம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி, திருப்பாற்கடல் நம்பி என்ற ஆறு மூர்த்திகள் காணப்படுவர். இவர்களில் குறுங்குடிக்கு முக்கிய மூல மூர்த்தியாக விளங்குபவர் நின்ற திருக்கோலத்தில் காணப்படும் வைணவ நம்பியே. இந்த நம்பியைப் பற்றித்தான் ஆழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். காரணம் 'குறுங்குடி நெடுந்தகாய்' என்ற விளியால். நீண்டவனாக இருந்தவனே! என்று நின்ற நிலையைச் சுட்டிக் காட்டி இதற்குச் சான்று பகருகின்றது. *

வரலாற்று நிகழ்ச்சி: 1. சிவபெருமான் நான்முகனின் தலையைக் கிள்ளிக் கபாலம் கையில் ஒட்டிக் கொள்ளவும் திருமால் சொல்லியபடி திருக்குறுங்குடியில் எழுந்தருளியுள்ள திருக்குறுங்குடி வல்லியுடன் திருமால் வாச நீரும், செங்குருதியும் அம்ருதமாகப் பிச்சையிட்டுக் கபால சாபத்தை நீக்கியும், எம்பெருமான் சுதர்சன மந்திரத்தைச் சிவனுக்கு உபதேசிக்கவும், சிவனும் அம்மந்திரத்தை ஜெபித்து சுத்தனானான் என்ற வரலாற்று நிகழ்ச்சியும் உட்பொருளாக அமைகிறது.

2. திருமழிசையாழ்வார் போற்றி மங்களாசாசனம் செய்துள்ள இத் திருக்குறுங்குடியில்தான் திருமங்கையாழ்வார் மோட்சம் அடையப் பெற்றார்.

3. திருமால் வாமன (திருவிக்ரம) அவதாரம் எடுத்து வானத்தை அளந்தபோது திருவடி சலங்கையிலிருந்து சிலம்பாறு உண்டானதாகவும் தல வரலாறு குறிக்கிறது.

4. கரண்டமாடு : இப்போதும் திருக்குறுங்குடி நம்பி திருத்தலத்தில் உள்ள புஷ்கரிணிக்குக் 'கரண்டமாடு பொய்கை' என்ற திருநாமம் வழங்கி வருகிறது. ஆழ்வார் 'கரும்பனைப் பெரும் பழம்' என்று பணித்தது பழுதாகாமைக்காக அப்புஷ்கரிணியின் கரையில் ஒரு திருப்பனைமரம் நம்பியின் அருளால் இன்றும் வளர்ந்து வருதலும் அறியத்தக்கது.

இங்ஙனம் திருக்குறுங்குடியின் சிறப்பு பல வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டுள்ளது.

* பேராசிரியர், ஸ்ரீமான். C. ஜெகந்நாதாசாரியர் அவர்கள் உகப்புடன் ஆய்வாளருக்குச் சுட்டிக்காட்டியது.

# பின்னிணைப்பு - 24

## திருமால் உறையும் திவ்ய தேசங்கள் நூற்றெட்டு ஆகும். இதில் ஆழ்வார் பாசுரங்களில், மங்களாசாசனம் பெற்ற திவ்ய தேசங்கள்

| எண் | இடம் | திவ்யதேச வரிசை எண் | திவ்ய தேசங்கள் | நான். திருவந். பாசுரங்கள் | திருச். விரு. பாசுரங்கள் | மொத்த எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|
| 1. | சோழநாடு | 1 | திருவரங்கம் | 3, 30, 36, 50, 60 | 21, 49-55, 93, 119 | 15 |
| 2. | சோழநாடு | 4 | திரு அன்பில் | 36 | ... | 1 |
| 3. | சோழநாடு | 8 | திருப்பேர் நகர் | 36 | ... | 1 |
| 4. | சோழநாடு | 14 | திருக்குடந்தை | 36 | 56-61 | 7 |
| 5. | சோழநாடு | 28 | திருகபித்தலம் | 50 | ... | 1 |
| 6. | பாண்டிய நாடு | 42 | திருக்கோட்டியூர் | 34 | ... | 1 |
| 7. | பாண்டிய நாடு | 57 | திருக்குறுங்குடி | ... | 62 | 1 |
| 8. | தொண்டை நாடு | 78 | திருப்பாடகம் | ... | 63, 64 | 2 |
| 9. | தொண்டை நாடு | 81 | திருஊரகம் | ... | 63, 64 | 2 |
| 10. | தொண்டை நாடு | 82 | திருவெஃகா | 36 | 63, 64 | 3 |
| 11. | தொண்டை நாடு | 90 | திருஎவ்வுள் | 36 | ... | 1 |
| 12. | தொண்டை நாடு | 94 | திருவல்லிக்கேணி | 35 | ... | 1 |
| 13. | வட நாடு | 96 | திருவேங்கடம் | 34, 39-48, 90 | 48, 60, 65, 81 | 16 |
| 14. | வட நாடு | 104 | திருத்துவாரபதி | 71 | ... | 1 |
| 15. | வட நாடு | 107 | திருப்பாற்கடல் | 31, 30, 36, 50, 73 75, 79, 89 | 15, 17-20, 23, 28, 29 47, 48, 65, 74, 78, 81, 82, 88, 92, 93, 95, 102, 110 | 29 |
| 16. | வட நாடு | 108 | திருப்பரமபதம் | 10, 19, 45, 65, 73, 75, 79, 89, 90, 95 | 6, 17, 27, 45, 48, 65-67, 77, 78, 83, 84, 108, 104, 107, 120 | 26 |
| | | | | | ஆகமொத்தப் பாசுரங்கள் | 108 |

# பின்னிணைப்பு- 25

## கிருஷ்ணாவதாரத்தில் பல தீராத விளையாட்டுக்கள் அற்புதச் செயல்கள்

| திருவிளையாட்டுக்கள் 1 | நான். திருவந். 2 | திருச். விரு. 3 |
|---|---|---|
| 1. பூதனை வதம் | 33, 52 | 36, 43 |
| 2. சகடம் உதைத்தது | 33 | 36, 37 43, 86 |
| 3. காளிங்க நர்த்தனம் | 33 | 38, 86 |
| 4. கேசி வதை | ... | 37, 58, 107 |
| 5. புள்ளின்வாய் பிளந்தது | ... | 36 |
| 6. விளாங்கனி எறிந்தது | ... | 37 |
| 7. தேநுகாசுரன் வதை | ... | 37, 86, 107 |
| 8. குருந்தம் ஒசித்தது | 57 | 37 |
| 9. கோவர்த்தனமலை | 87 | 39, 40, 106 |
| 10. குவலயாபீடம் இறுத்தது | 33 | 38, 40, 43, 52, 58 |
| 11. கம்சன் வதை | ... | 43 |
| 12 ருக்குமணிக்காக வக்ரன் பௌவுண்ட்ரக வாசுதேவன் அரசர்களிடம் போரிடுதல் | ... | 59, 104, 107 |
| 13. நப்பின்னைக்காக ஏழு வல்லேறுகளை அடக்கியது | 23, 33 | 13, 33, 40-42, 55, 92, 99 |
| 14. காலநேமி வதை | ... | 31, 38, 59, 81, 106 |
| 15. சிசுபாலன் வதை | ... | 111 |
| 16. மாலி சீமாலிகன் வதை | ... | 107 |
| 17. குடக்கூத்து ஆடியது | .... | 38 |
| 18. பாரதப் போரில் கண்ணனின் பங்கு | 24, 94 | 26, 89 |
| 19. சரம சுலோகம் நினைவு கூர்வது | 50 71, 73 | 115 ... |
| 20. சூரியனை மறைத்தது | 16 | 89 |
| 21. கண்ணனே என்று விளிப்பது | 32, 80, 83 84, 93 | 25, 37, 47, 86, 87 93, 105, 110 |
| 22. யசோதைக்கு பிள்ளை | ... | 35, 36 |
| 23. வெண்ணெய் நெய்யுண்டது | ... | 37, 40 |

# பின்னிணைப்பு - 26

## நைச்யாநுஸந்தானம் (நாயினேன்)

திருமகள் கேள்வனால் ஆட்கொள்ளப்பட்ட திருமழிசையார் அவருடைய திருவருளால் எல்லா வகையிலும் சிறக்கப் பெற்று, தன் நெஞ்சிலே திருமாலை எழுந்தருளியிருக்கும்படி செய்த பெருமை உடையவர். ஆனால் இவர் தம்மைப் பற்றித் தானே உயர்த்திச் சொல்லிக் கொள்ளவில்லை. தாம் எவ்வளவு பெரிய வராக இருந்தாலும் இறைவனிடம் எளிமையாகத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு 'நாயினேன்' (நைச்யாநுஸந்தானம்) என்று சொல்லிக் கொண்டு சரணடைகிறார்.

திறந்த வாசல்தோறும் புகுவதும், அழுக்கை நக்கி உண்பதும், ஒருகால் வெறுத்துக் கக்கியதை மீண்டும் உண்பதும், நல்லோர் அவையில் புகும் தகுதியில்லாததும், நாய்க்கு இயல்பு. அதுபோல அழுக்காகிய உடம்பை வளர்த்துச் சிற்றின்பமாகிய அழுக்கை நுகர்ந்து கொண்டு, ஒருகால் தீயதை வெறுத்தாலும், மீண்டும் அத்தீய வழக்கத்தில் ஈடுபடுவதும், நல்லோர் குழுவில் (சத்சங்கம்) ஈடுபடாமல் இருப்பதும் இழிந்தவர் இயல்பு. அத்தகைய இயல்புடையவராகத் தம்மைத் தாழ்த்தி ஏறிட்டுக் கொண்டு 'நாயினேன்' என்று பாசுரங்களில் அருளிச் செய்வதை,

நாடுபெற்ற நன்மைநண்ண மில்லை யேனும்நாயினேன்
வீடுபெற் றிறப்பொடும் பிறப்ப றுக்கு மாசொலே

—திருச். விரு. (46, 47)

தன்றிறத்தோ ரன்பிலா அறிவி லாத நாயினேன்
என்றிறத்தி லென்கொல் எம்பி ரான்குறிப்பில் வைத்ததே

—திருச். விரு. (84)

எய்தலாகு மென்பர் ஆதலாலெம்மாய, நாயினேன்
செய்த குற்றம் நற்றமாக வேகொள் ஞால நாதனே

—திருச். விரு. (111)

என்று சுட்டிக் காட்டி, திருமால் திருவடியைச் சரணடைந்தபின் நாயாக இருந்த தம்மை இறைவன் நாயகனாக இருந்து ஆட் கொண்டதைக் கடைசியில் புலப்படுத்துகின்றார். மேலும் தம்மை நாயாகப் பாவித்து அருளும்போது நைச்யாநுஸந்தானம் என்ற தத்துவத்தை உட்பொருளாக விளக்குகிறார். இவ் ஆழ்வார் கருத்தைக் கங்கைப் படலத்தில்,

> தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்
> நாவாய் வேட்டுவன்நாயடியே னென்றான்
>
> —அயோத்தியாகாண்டம் (39)

என்று குகன் வாக்காலும்,

> நாய்போல் பிறர்கடை தோறும் நுழைந்துஅவர் எச்சில்நச்சிப்
> பேய்போல் திரியும் பிறவி யினேனைப் பிறவி யென்னும்
> நோய்போம் மருந்தாம்நின் திருவாய்மொழி நோக்கு வித்துத்
> தாய்போல் உதவி செய்தாய்க்கு அடியேன் பண்டுஎன் சாதித்ததே. (17)

என்று சடகோபர் அந்தாதி வாக்காலும் அரண் செய்கின்றார் கம்பர். அடுத்து,

> வாய்க்குங் குருகைத் திருவீதி எச்சிலை வாரி யுண்ட
> நாய்க்கும் பரமபதம் அளித்தாய் அந்த நாய்போல் இந்தப்
> பேய்க்கும் வரம் அளித்தால் பழுதோ—பெருமாள் மகுடம்
> சாய்க்கும்படி கவி பாடிய ஞானத் தமிழ்க் கடலே

என்ற பாடலில் நைச்யாநுஸந்தானமும், திருவாய்மொழியைக் கேட்டுப் பெருமாளும் மகுடம் சாய்த்த திறமும் பெறப்படுகிறது.

# பின்னிணைப்பு - 27

## 1. வைணவ தத்துவம்




## 2. மந்திரங்கள்



# பின்னிணைப்பு - 28

## பிற நூல்களின் ஆட்சி

ஆழ்வார்கள் வரிசையில் சிறந்த சான்றோராகப் போற்றப் படுபவர் திருமழிசையாழ்வார் ஆவர். இவர் தமது அன்பு என்னும் ஞான பக்தியால் திருமாலைத் தம் நெஞ்சில் என்றும் எழுந்தருளி யிருக்கும்படி செய்தவர். எம்பெருமானைத் துதித்து இனிய தமிழால் பக்திப் பனுவல்களை அருளிச் செய்தவர். தாம் அருளிய 'நான் முகன் திருவந்தாதி,' 'திருச்சந்த விருத்தம்' என்ற இரு பிரபந்தங்களில் அரிய பதங்களையும் அழகான மேற்கோள்களையும், தத்துவக் கருத்துக்களையும் உள்வைத்துப் பாசுரங்களை அருளியுள்ளார்.

திருமழிசையாழ்வாருக்குப் பின்வந்த ஆசாரியர்கள் நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தத்தில் அமையப் பெற்றுள்ள மேற் கோள்களையும், தத்துவக் கருத்துக்களையும், அரிய பதங்களையும் கடைப்பிடித்து, தமது நூல்களான ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம், முமுட்சுப்படி போன்றவற்றில் மேற்கோள்களாக எடுத்தாண்டிருக்கின்றனர்.

### 1. ஸ்ரீவசநபூஷணம்

1. 'மாறாயதானவனை' நான். திருவந். (18) என்று அருளிச் செய்த வாக்கியத்தை 'பரகத ஸ்வீகாரமாகிற பரமோபாயத்துக்கு' மேற்கோளாகச் சூர்ணிகை — 460இல் எடுத்தாண்டுள்ளார்.

2. 'நாகத்தணைக் குடந்தை' —நான். திருவந். (36) என்ற பதத்தை மேற்கோளாக்கிச் சூர்ணிகை —171இல் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

3. 'பழுதாகாதென்றறிந்தேன்' —நான். திருவந். (89) என்பதை 'ஸ்வகத ஸ்வீகாரோபாயத்துக்கு மேற்கோளாகச் சூர்ணிகை — 459இல் எடுத்தாளுகிறார்.

4. 'புன்புலவழியடைத்து...காணவல்லரே'? - திருச்.விரு. (76) என்ற பாசுரம் மேற்கோளாகச் சூர்ணிகை —353இல் எடுத்தாளப் பட்டுள்ளது.

5. 'அடக்கரும் புலன்கள்...எம் அண்ணலே!' —திருச். விரு. (95) என்ற பாசுரம் மேற்கோளாகச் சூர்ணிகை —355இல் எடுத்தாளப்பட்டுள்ளது.

## 2. முமுட்சுப்படி

1. 'மறந்தும் புறந்தொழா மாந்தர்' — நான்.திருவந். (68) என்ற அரிய பதம், சுவாமியுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்றொரு கருத்தில் சேஷவ்ருத்தி பண்ணாதவர்கள் என்பதற்கு மேற்கோளாகி, சூர்ணிகை —64இல் எடுத்தாளப்படுகின்றது.

2. 'அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்' —திருச். விரு. (64) என்ற அடி, 'ப்ராப்ய வைலக்ஷண்ய ஜ்ஞாநம் பிறந்தார்படி யிதுவாகையாலே இந்தக் கைங்கர்ய ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கும் என்ற கருத்துக்கு மேற்கோளாகி சூர்ணிகை —111இல் எடுத்தாளப்பட்டுள்ளது.

## 3. ஆசார்ய ஹ்ருதயம்

1. 'அறிவித்தேன் ஆழ்பொருளை சிந்தாமல் கொண்மின்'. —நான். திருவந். (1) என்ற வரியை மேற்கோளாகச் சூர்ணிகை —71க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

2. 'எத்தவம் செய்தார்க்கும் அருள்முடிவது ஆழியான்பால்' —நான். திருவந். (2) என்ற அடியை மேற்கோளாகச் சூர்ணிகை —29க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

3. 'ஆல்மேல் வளர்ந்தானைத்தான் வணங்குமாறு— நால்வர்க்கு மேலையுகந்து உரைந்தான். நான். திருவந். (17) என்ற அடியை மேற்கோளாகச் சூர்ணிகை—55க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

4. 'பத்தி உழவன்' —நான். திருவந். (23) என்ற அரிய தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை 104க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

5. 'சினப் போர்ச்சுவேதனை' —நான். திருவந். (24) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 127க்கு எடுத்துக்காட்டப் படுகின்றது.

6. 'பாட்டும் முறையும்' —நான். திருவந். (76) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை —16க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

7. 'கேட்டமநுவும்' 'படுகதையும்' —நான். திருவந். (76) என்ற இரு பதங்கள் மேற்கோளாகச் சூர்ணிகை—70க்கு எடுத்தாளப் படுகின்றன.

8. 'கார்செறிந்த கண்டத்தான் எண் கண்ணான் காணான்' — நான். திருவந். (73) 'நீறாடிதான்...சேவடி' —நான். திரு. (27) என்ற இரு அடிகள் மேற்கோளாகச் சூர்ணிகை —59இல் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

9. 'கேட்பார்க்கு அரும்பொருளாய் நின்ற' —நான். திருவந். (60) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 59க்கு எடுத் தாளப்பட்டுள்ளது.

10. 'தெரித்து எழுதி வாசித்தும் கேட்டும்' —நான். திருவந். (63) என்ற அரிய தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 99க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

11. 'காமன் உடல்கொண்ட தவந்தான்' – நான். திருவந். (78) என்ற தொடர் சூர்ணிகை — 49க்கு மேற்கோளாக எடுத்தாளப் பட்டுள்ளது.

12. 'ஆள் பார்த்து உழிதருவாய்' —நான். திருவந். (60) என்ற பதம் மேற்கோளாகச் சூர்ணிகை — 94க்கு எடுத்தாளப் பட்டுள்ளது.

13. 'செயல்தீரச் சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்' —நான். திருவந். (88) என்ற பதம் மேற்கோளாகச் சூர்ணிகை — 25இல் எடுத்தாளப்பட்டுள்ளது.

14. 'முத்திறத்து வாணியத்து இரண்டில் ஒன்றும் நீசர்கள்' —திருச். விரு. (68) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை —6க்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

15. 'நான் இலாத முன் எலாம்' —திருச். விரு. (65) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 11க்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

16. 'குலங்களாய ஈர் இரண்டில் ஒன்று' —திருச். விரு. (90) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 16க்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

17. 'சலங்கலந்த செஞ்சடை' —திருச். விரு. (113) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை —49க்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளது.

18. 'சாமவேத கீதனாய சக்ரபாணி அல்லையே?' —திருச். விரு. (14) என்ற அரிய பதம் மேற்கோளாகச் சூர்ணிகை —52க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

19. 'ஆக மூர்த்தியாயவண்ணம் என்கொல்' —திருச். விரு. (17) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை—70க்கு எடுத்தாளப் பட்டுள்ளது.

20. பாலினீர்மை .. ... நீலநீர்மை —திருச். விரு. (44) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை —16க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

21. 'அனந்தன்மேல் கிடந்த எம் புண்ணியா' —திருச். விரு. (45) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை —92க்கு எடுத்தாளப் பட்டுள்ளது.

22. 'ஒன்றிநின்று நல்தவம்...தோறெலாம்'—திருச். விரு. (75) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை —99க்கு எடுத்தாளப்பட் டுள்ளது.

23. 'பெறற்கரிய நின்பாத பத்தியான பாசனம்' —திருச். விரு. (100) என்ற அரிய தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை — 90க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

24. 'ஈனமாய எட்டும் நீக்கி' —திருச். விரு. (114) என்ற தொடர் சூர்ணிகை —99க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

25. 'அவன் பெயர் எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர்... வானம் ஆளவே' என்ற அடியும், 'எட்டினாய பேதமோடு இறைஞ்சி' —திருச். விரு. (77) என்ற அடியும்; 'ஆர்வமோடு இறைஞ்சி நின்று அவன் பெயர் எட்டெழுத்தும் ஆளவே' – திருச். விரு. (78) என்ற மூன்று அடிகளும், மேற்கோள்களாகச் சூர்ணிகை —99க்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

26 'ஒன்றி நின்று நற்றவம் செய்து ஊழி ஊழிதோறெலாம்' —திருச். விரு. (75) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை—99ல் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

27. 'புன்புலவழியடைத்து...ஞான நற்சுடர்கொளீ' —திருச். விரு. (76) என்ற அடி மேற்கோளாகச் சூர்ணிகை —99இல் எடுத் தாளப்பட்டுள்ளது.

28. 'நன்றிருந்து யோக நீதி நண்ணுவார்கள்' —திருச். விரு. (63) என்ற தொடர் மேற்கோளாகச் சூர்ணிகை —99க்கு எடுத் தாளப்பட்டுள்ளது.

29. 'நிரந்தரம் நினைப்பதாக' —திருச். விரு. (101) என்பதும் 'சோர்விலாத காதலால்...மனத்தராய்' —திருச்.விரு. (78) என்பதும் மேற்கோள்களாகச் சூர்ணிகை —99க்கு எடுத்தாளப்பட்டுள்ளன.

30 'அன்று நான் பிறந்திலேன்' —திருச். விரு. (64) என்ற தொடர் மேற்கோளாக சூர்ணிகை - 121க்கு எடுத்தாளப்பட்டுள்ளது.

இங்ஙனம் மூன்று அரிய திவ்விய நூல்களில்,

> முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
> பொன்னேபோல் போற்றுவம்
>
> —நன்னூல் பொதுப்பாயிரம் (91)

என்ற இலக்கணத்திற்கேற்பத் திருமழிசையாழ்வாரின் கருத்துக்கள், அரிய பதங்கள், மேற்கோள்கள், தத்துவங்கள் ஆகியவற்றை ஆசாரியர்கள் தமது நூல்களில் எடுத்தாண்டுள்ளனர். இங்ஙனமாக, திருமழிசையாரின் சொல்லாட்சி பிற நூல்களில் ஆதிக்கம் பெறுவது வெளிப்படையாகின்றது.

# பின்னிணைப்பு - 29

## திருமழிசை திருத்தலம்பற்றிய குறிப்பும் அங்கு நடைபெறும் உற்சவங்களும்.

திருமழிசை, பன்னிரு ஆழ்வார் பெருமக்களுள் ஒருவராகக் கருதப்படும் திருமழிசையாழ்வாரின் அவதாரத் தலமாகும். இத் திருத்தலத்தில் திரு. ஜெகந்நாதப் பெருமாள், திருமங்கைவல்லித் தாயார், அழகிய சிங்கர், ஆண்டாள் மற்றும் திருமழிசையாழ்வாருக்கும் முறையே தனித்தனிச் சந்நிதிகள் அமைந்துள்ளன. திருமழிசை ஆதிபுராதனமானது. வரலாற்றுச் சிறப்பு மிக்கது. சோழ மன்னர்கள் இத்திருத்தலத்திற்குத் திருப்பணிகள் செய்ததாக இங்குள்ள கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

திருமழிசை, பல்லவர்கள் காலத்தில் புகழ் பெற்று விளங்கியது. இத்தலத்து எம்பெருமான் திருநாமம் — ஸ்ரீஜெகந்நாதப் பெருமாள், தாயார் திருமங்கைவல்லித்தாயார். ஜெகதானந்த விமானம், 'ப்ருகு புஷ்கரணி, இஃது 'மத்ய ஜெகந்நாதம்' எனவும் வழங்கப் படும். இங்கு, பெருமாள் வீற்றிருந்த திருக்கோலத்தில் ப்ருகு, மார்க்கண்டேயர்களுக்குச் சேவை தருகிறார். கிருஷ்ணாவதாரம், அருகே உருக்குமிணி, சத்தியபாமை இருவரும் இருபுறமும்

வீற்றிருந்த திருக்கோலத்திலேயே சேவை தருகின்றார்கள். சுதைத் திருமேனி; ஸ்ரீதேவி, பூதேவியுடன் கூடிய ஸ்ரீஜெகந்நாதப் பெருமாள் உற்சவருக்கு அருகே ப்ருகு, மார்க்கண்டேயர் இருவரும் வணங்கி வழிபடுகின்றனர்.

**வரலாற்றுச் சிறப்பு:** அத்திரி, வசிட்டர், ப்ருகு, பார்க்கவர், புலஸ்தியர், அங்கீரசு முதலிய முனிவர்கள் தவம் செய்து புகழ் பெற்ற திருத்தலம். இவர்களுக்கு நான்முகன் 'இதுவே பூமண்டலத்தில் சிறந்தது என' விசுவகர்மாவால் ஞான துலாக்கோல் மூலம் நிலைநாட்டிய பெருமையுடைய தலம். ஆதலின் 'மகிசாரம்' எனப் பெயர் பெற்றது.

இத்தகு பெருமை மிக்க திருமழிசை ஆழ்வாரின் திரு அவதார திருத்தலத்திற்குத் தெற்கே சிறிது தூரத்தில் திருமழிசை ஆழ்வார் அவதரித்த இடம் அழகியதோர் மண்டபமாக இன்றும் விளங்குகிறது.

**இக்காலச் செய்தி:** திருமழிசைத் தலத்திற்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பு திருப்பணி நடைபெற்றதாகத் தெரிகிறது. நமது தமிழக அரசு இந்து அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டின்கீழ் இயங்கி வருகின்றது. திருத்தலத்திற்குச் சுமார் நூற்று நாற்பத்தேழு ஏக்கர் நிலமும், சென்னையில் ஓர் இல்லமும், சுமார் மூன்று லட்ச முதலீடும் உள்ளதாகத் தெரிய வருகிறது. சமீபத்தில் இத்திருத்தலத்திற்கு சம்ரோக்ஷணம் வெகு சிறப்பாக நடைப்பெற்றது குறிப்பிடத் தக்கவை.

திருமழிசையில் மூன்று கால வழிபாடுகள் வைகானஸ ஆகம முறைப்படி நடைபெற்று வருகின்றன. இத்தலத்தில் ஒவ்வோர் ஆண்டும் ஆனியில் 'பிரம்மோத்ஸவமும்' (பெருவிழா), ஐப்பசியில் ஸ்ரீமணவாள மாமுனிகள் உற்சவமும், தையில் திருமழிசையாழ்வாருக்குத் திரு அவதார மகோத்சவமும், மாசியில் 'தெப்போத்சவமும்' (மூன்று நாட்கள்) சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

**ஆழ்வார்—உற்சவ விவரம் (திருவிழாக்கள்)**

ஒவ்வொரு ஆண்டும் தை மாதம் இரண்டாம் நாள் முதல் பன்னிரெண்டு நாள் வரை திருமழிசையாழ்வார் அவதார உற்சவம் நடைபெறுகிறது.

| | | |
|---|---|---|
| முதல் நாள் | — | தங்க விமானம், இரவு சிம்ம வாகனம். |
| இரண்டாம் நாள் | — | தங்கப் பல்லக்கு, இரவு யாளி வாகனம். |

| | | |
|---|---|---|
| மூன்றாம் நாள் | — | கேடயம், சந்திரப் பிரபை. |
| நான்காம் நாள் | — | தங்க விமானம். |
| ஐந்தாம் நாள் | — | தங்க முலாம் கேடயம், இரவு பெருமாள் கருடவாகனத்திலும், ஆழ்வார் ஹம்ச (அன்னம்) வாகனத்திலும் எழுந்தருளுவர். |
| ஆறாம் நாள் | — | காலை சேஷ வாகனம் (பைந் நாகப்பாய் சுருட்டி) இரவு குதிரை வாகனம். |
| ஏழாம் நாள் | — | தங்க விமானம், பெரிய மங்களகிரி. |
| எட்டாம் நாள் | — | தங்கப் பல்லக்கு, எண்ணெய்க் காப்பு திருமஞ்சனம், இரவு யானை வாகனம் (நாச்சியார் திருக்கோலம்). |
| ஒன்பதாம் நாள் | — | திருத்தேர், இரவு தோட்ட உற்சவம் |
| பத்தாம் நாள் | — | சாற்றுமுறை, தங்கப் பல்லக்கு, மூலவர் திருமஞ்சனம், கைத் தல சேவை, மாலை திருச் சந்த விருத்த சேவை. |
| பதினொன்றாம் நாள் | — | கந்தப்பொடி வசந்தம். |

## வரைபடம் - 1

திருமழிசையாழ்வார் அற்புதச் செயல்கள் மூலம் பெற்ற ஏற்றங்கள் சக்கர (சுதர்சனம்) வடிவில் அமைந்திருப்பது :




1. கணிகண்ணன் அவதாரம்
2. குரு-சீடர் பரம்புரை அமைத்தல்.
3. சிவனால் பக்திசாரர் விருது
4. சுக்திகாரனுக்குஅருளுதல்
5. கொங்கண சித்தனுக்குத் தத்துவம் உரைத்தல்.
6. முதலாழ்வார்களைத் தம்மிடம் வருமாறு வசீகரித்தது.
7. கிழவிக்கு இளமை தந்தது பல்லவனுக்கு அறிவு புகட்டப் பச்சைப் பசுங்கொண்டலைப் பின்வரச் செய்தது.
8. வேதியர்களுக்கு வேதப் பொருளை விளக்கியது.
9. சடங்கிகளுக்குத் தம் நெஞ்சில் திருமாலைப் புறம் பொசிந்துக் காட்டியது.
10. புதுப் புனல் வாதம்.
11. ஆராவமுதனை இயக்கி அருள் செய்தது.

அ) ஆழ்வார் 'நடந்தகால்கள் நொந்தவோ' என்ற அற்புதத்தின் மூலம் ஆராவமுதனும் ஆழ்வாரும் ஒருவருக்கொருவர் தங்கள் திருநாமத்தை மாற்றிக் கொண்டது.

ஆ) எம்பெருமான் தமது திரு அமுதை ஆழ்வாரைச் சுவீகரிக்கச் செய்த பின், தாம் சுவீகரித்த நிகழ்ச்சியின் மூலம் எல்லோரும் அறிய ஒருவருக்கொருவர் தங்கள் திருநாமத்தை மாற்றிக் கொள்வது.

★ நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் அருளிச் செய்தது.

## வரைபடம் — II

### செய்முறையில் துவயம்

துவய மந்திரத்தில் இரு வாக்கியங்களில் உள்ள பத்துச் சொற்களையும் நாம் கையிலுள்ள விரல்களின் அசைவால் (ஜாடையால்) இறைவனை வணங்கும்போது குறிப்பிடுவது.




**துவயமந்திரம்** :— (1) ஸ்ரீமந், (2) நாராயண, (3) சரணௌ, (4) சரணம், (5) ப்ரபத்யே, (6) ஸ்ரீ, (7) மதே (8) நாராயண, (9) ஆய, (10) நம:

**துவய மந்திரம் — மந்திர ரத்தினம்**



நாம் இறைவனை வணங்கும்போது இரு கை கூப்புகையிலேயே துவய மந்திரம் நம் கையில் தானே வந்து ஒட்டிக் கொள்வதால் '**துவய மந்திரம் மந்திர — ரத்தினம்**' எனப் போற்றப்படுகிறது.

# பின்னிணைப்பு-31

## பொருட்குறிப்பு அடைவு

### க



### கா



### கி



### கீ



### கு



### கூ



### கை



### கௌ



### ச



### சா



### சி



### சீ

## சு



## சை



## சே



## சோ



## த



## தி



## தீ

## பூ



## பெ



## பே



## பொ



## பௌ



## ம



## மா



## மி



## மு



## ய



## யோ



## வ



## வா

## ஸ்ரீ பக்திஸார மங்களம்

ஸ்ரீமந் மஹீஸாரபுரே ஸ்ரீமத் பார்க்கவ யஜ்வந :!
தீர்க்க ஸத்ரோத்பவாயாஸ்து பக்தி ஸாராய மங்களம்
பாஸ்கராக்யமஹாக்ஷேத்ரே அபர்யாப்தாம்ருத ஸேவிநே !
தத்வசீகாரவசஸே பக்திஸாராய மங்களம்.

குறிப்பு :—அருள் கூர்ந்து பிழைகளைத் திருத்திக்கொண்டு நூலைப் படிக்கவும்.

# பிழை-திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 21 | கருத்துப் | கறுத்துப் |
| | 22 | தோளுடையப் | தோளுடைப் |
| 15 | 30 | தருச்சந்துப் | தருச்சந்தப் |
| 18 | 23 | பெயரைக் | பெயரை |
| 20 | 1 | இருபத்தாராயிரத்துத் | இருபத்தாறாயிரத்துத் |
| | 13 | மான்வாயிற்றில் | மான் வயிற்றில் |
| | 16 | வசிட்டரும் | அகத்தியரும் |
| 22 | 3 | அவயங்களும் | அவயவங்களும் |
| | 8 | அமுதளவில் | அமுதவளவில் |
| 24 | 20 | சேர்ந்துபாய | சோர்ந்துபாய |
| | 21 | தத்துக் கொண்டால் | தத்துக் கொண்டாள் |
| | 22 | பெற்றால் | பெற்றாள் |
| 27 | 3 | திமுமழிசையார் | திருமழிசையார் |
| | 30 | வென்ற | வென்னை |
| 28 | 3 | முதலாகக் | முதலாக் |
| | 20 | உற்றனார் | உற்றனர் |
| 30 | 17 | திருமழிசைசப் பிரான் | திருமழிசைப்பிரான் |
| 32 | 23 | சேர்த்திய | சேர்ந்தாய் |
| | 33 | சித்தம் | சிந்தம் |
| 33 | 17 | பொழுது | போது |
| 36 | 34 | அடிப்படையகாகக் | அடிப்படையாகக் |
| 37 | 13 | ஒருவனை | ஒருவனையே |
| | 28 | நகையாடுவதற்குறிய | நகையாடுவதற்குரிய |
| 39 | 31 | அன்று | என்று |
| 40 | 28 | மண் | விண் |
| 41 | 28 | பரம்பொருளை காணக் | பரம்பொருளைக் காண |
| 42 | 18,20 | சமஸ்காரமும் | சம்ஸ்காரமும், |
| 43 | 1 | கொழுந்தே | கொழுந்ததே |
| | 24 | கைரவினிசரசு | கைரவிணிசரசு |
| 44 | 1 | கடற்கறையில் | கடற்கரையில் |
| | 17 | வல்வி | வல் |
| | 19 | பூன்டு | பூண்டு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 47<br>52<br>66 | 2<br>6<br>32 | ஆசாரியார் | ஆசாரியர் |
| 49 | 25 | இராமவதாரத்தில் | இராமாவதாரத்தில் |
| 53 | 30 | ஸ்ரீ மந் | ஓம் நமோ |
| 54 | 9 | முடிந்தளவு | முடிந்தவளவு |
| | 20 | வழிப்படுவது | வழிபடுவது |
| 55 | 12,13 | பறித்தெழுந்த, பற்றுதல் | பறிந்தெழுந்து, பற்றறுதல் |
| | 15 | என்புறுகு | என்புருகு |
| 56 | 1 | நாராயணனே! | நாரணனே! |
| | 12 | ஓரிரவில் | ஓரிரவில்......... |
| | 19 | மக | மகா |
| 57 | 16 | நிவேத்தனமாகிப் | நிவேதனமாகிப் |
| | 23 | அடைந்தும் | அடைந்ததும் |
| 57 | 30 | கனிகண்ணன் | கணிகண்ணன் |
| 59 | 23 | சங்கரனை | சங்கரனைத் |
| | 25 | பரதுத்வ | பரத்துவ |
| | 34 | அர்த்தனாகி | அத்தனாகி |
| 60 | 10 | ஆழ்வார்களில் | ஆழ்வார்களின் |
| 61 | 24 | அருளுவதை | அருளுவதைப் |
| 63 | 4 | மேனமாய | மேனமாய் |
| 64 | 12 | அத்வாயு | அத்வர்யு |
| 65 | 17 | கணிகண் | கணி |
| | 18 | கதிலே | கதிரே |
| 66 | 29 | ஆற்புதச் | அற்புதச் |
| 68 | 11 | நன்றெனச் | நன்றெனக் |
| | 26 | வடமுகாக்கினி | வடவாமுகாக்கினி |
| 69 | 1,4 | வர்த்தகம்,வர்த்தக | வர்த்தம்,வர்த்த |
| 71 | 35 | செப்பெருஞ் | செப்பருஞ் |
| 73 | 24 | ஏழுந்தருளி | எழுந்தருளி |
| | 24 | கைரவ | கைரவணி |
| 76 | 30,35 | உபாதனம் | உபாதானம் |
| 77 | 1,4,10 | ஆசிரியரை | ஆசாரியரை |
| 79 | 18 | அடதைல் | அடைதல் |
| 80 | 15 | பைந்தமிழ் | பைந்தமிழின் |
| 82 | 4 | வ்ரீஹணாம் | வ்ரீஹீணாம் |
| 83 | 34 | திருசங்கு | திருச்சங்கு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 84 | 4 | விக்கிக்ரத்தைச் | விக்கிரகத்தைச் |
| 85 | 18 | பொன்னிக்கு தனது | பொன்னிக்குத் தமது |
| | 23 | திர்த்தும் | எதிர்த்தும் |
| 86 | 3 | ஆராவமுதனை | ஆராவமுதனைத் |
| | 8 | அவற்றைபுவனத் திற்கு | அவற்றைப்புவனத்திற் [குக் |
| 87 | 16 | நடுங்கு ஞாலம் | நடுங்க ஞாலம் |
| | 17 | கிடந்த,இலங்குமால் | இடந்த, விலங்குமால் |
| | 31 | ஆதிசயனத்தில் | ஆதிசேஷசயனத்தில் |
| 88 | 13 | ஏனமாய்க் கிடந்த | ஏனமாய் இடந்த |
| | 20 | கடந்து | கடந்த |
| 89 | 29 | புட்கரலகம் | புட்கலாவர்த்தம் |
| 90, 5 | 17,20,9 | கேசவனே! | கேசனே! |
| 91 | 20 | ஏனைத்தளர்வே புற்றனை | ஏனைத்தளர்வே யுற்றனை |
| | 30 | நாகணையால் | நாகணையான் |
| 93 | 3 | அற்புதங்களிலும் | அற்புதத்திலும் |
| 95 | 18 | குருப்பரம்பரை | குருபரம்பரை |
| 96 | 7 | கைரவணிக் | கைரவிணிக் |
| | 15 | இகுந்தது | இருந்தது |
| 103 | 11 | காட்டுகிறார் | சுட்டுகிறார் |
| 109 | 24 | குறிப்பாக | குறிப்பாகத் |
| 111 | 16 | பூமியுலுள்ளவர் | பூமியிலுள்ளவர் |
| 115 | 14 | கூறியிருப்பதை | கூறியிருப்பதைக் |
| | 15 | முழுதினுயுடைய | முழுதினுடைய |
| 118 | 28 | மங்களாசாசன | மங்களாசாசனம் |
| 123 | 16 | இலக்கியங்களாக | இலக்கியங்களாகக் |
| 124 | 16 | தோன்றினாலும் | தோன்றினான்: ஆனாலும் |
| | 16 | இப் | அந்த யானை இப் |
| 125 | 21 | கதுவு | கதுவ |
| | 22 | அனைத்தினின்றும் | அனைத்தினும் |
| | 22 | ஒளி | ஒலி |
| | 23 | பரமாவென்று | பரமேயென்று |
| | 24 | எடுத்ததொரு | எடுத்தொரு |
| | 24 | ந்யோ | நீயோ |
| 127 | 1 | வ ராகில் | வலராகில் |
| | 22 | தன்னைக்கை | தன்னைக் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 127 | 29 | மார்க்கண்டேயனுச்கு | மார்க்கண்டேயனுக்கு |
| | 35 | நான். திரு., 31. | நான். திரு., 15. |
| 128 | 4 | ஏந்தாது | ஏத்தாது |
| | 8 | வெங்கூற்றத் | வெங்கூற்றந் |
| | 18 | போரில் | கண்ணபிரானோடு போரில் |
| | 33 | யணங்கவேல் | யணங்கவேள் |
| | 36 | தோற்றா | தோற்றா |
| 129 | 23 | தாங்கிய | தங்கிய |
| 130 | 4 | அந்த அந்தவா | அந்த அந்த |
| | 19 | உஷையின் | உஷையின் |
| 132 | 1 | முகரனை | முகனரனை |
| 133 | 10 | நலங்கொல் | நலங்கொள் |
| | 20 | தீர்த்(து) | தீர்த்து |
| | 21 | ஆயனுக் | ஆயானுக் |
| 134 | 2 | கொண்டுமின் | கொண்மின் |
| | 13 | கம்பாநாடனும் | கம்பநாடனும் |
| | 25 | சூழ்கி | மூழ்கி |
| 135 | 12 | புள்ளாகி | புள்ளதாகி |
| 139 | 18 | ஆயையான | ஆமையான |
| 141 | 15 | கோரைரப் | கோரைப் |
| | 16 | ளிவந்து | வெளிவந்து |
| 142 | 3 | ஓருராயிற்று | ஓரெயிற்று |
| 142 | 8 | ஏன் ஒரு | ஏனொரு |
| | 12 | அடியெற்றி | அடியொற்றி |
| 144 | 16 | பழுத்தாக்கின | பழுதாக்கின |
| | 18 | உம்மையுடைய | உம்முடைய |
| | 19 | சங்கல்பம் ? | சங்கல்பம் ! |
| 145 | 8 | தேனுலாவும் | தேனுலாவு |
| | 26 | சாத்தி | சார்த்தி |
| 146 | 2, 4 | சாத்தி | சார்த்தி |
| | 17 | இராமாநுஜருக்குப் | இராமாநுஜருக்குச் |
| 147 | 30 | கண்ணைக் | கண்ணைக் |
| 148 | 17 | நலனுக்காகப் | நலனுக்காகச் |
| 149 | 11 | அளந்தது | அளந்த |
| 150 | 16 | முனிகணங்கள் | முனிக்கணங்கள் |
| | 21 | மகாவலி | மாவலி |
| | 22 | மூலதா | மூவடிதா |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 151 | 2 | பெருமாளயங்காரும் | பெருமாளையங்காரும் |
| 152 | 29 | முதுமொழிகட்க்கு | முதுமொழிகட்கு |
| 154 | 26 | மதத்தை | மதத்தைத் |
| 155 | 16 | கடைந்த | கடைந்து |
| 156 | 16 | முதவிய | முதலிய |
| | 23 | நான். திரு.,71 | நான். திரு., 77 |
| 157 | 1 | உகம்புருவன் | உகப்புருவன் |
| | 3 | றேரசன்னயான் | றோசனையான் |
| | 15 | அங்கு | அங்க |
| | 31 | திருச். விரு., 55 | திருச். விரு., 51 |
| 158 | 14 | குரங்கினம் | குரக்கினம் |
| | 26 | என்பதையும் | என்பது, |
| | 30 | ஆதிஷசேனது | ஆதிசேஷனது |
| 160 | 10 | கிருஷ்ணாவதாரத்தை | கிருஷ்ணாவதாரத்தைக் |
| | 17 | என்பனவை | என்பவை |
| 162 | 10 | விளையாட்டுக்கான | விளையாட்டுக்களான |
| | 14 | மலையை, களிற்றை | மலையைத், களிற்றைக் |
| | 17 | பவுண்ர | பவுண்டர |
| | 31 | திரு. விரு., 30 | திருச். விரு., 36 |
| 164 | 21 | மனிதராக | மனிதராகப் |
| 166 | 20 | ஆராயப்பட்டு | ஆராயப்பட்டுத் |
| 170 | 29 | சம்மந்தமற்ற | சம்புந்தமற்ற |
| 171 | 25 | நித்தியரை | நித்தியரைப் |
| 172 | 1 | நூளர் | நூலர் |
| | 2 | நானர் | நாவர் |
| | 39 | திருச். விரு., 45 | திருச். விரு., 48 |
| 173 | 14 | மின்றிமற்றேர் | மன்றிமற்றொர் |
| | 23 | துடக்கறுத்து | தொடக்கறுத்து |
| | 23 | தொழில் | தொழிற் |
| 174 | 11 | மறைந்து | மறந்து |
| | 18 | அவிநாத | அவிநாச |
| 175 | 7 | அருளடியேற்கு | அருளாய் அடியேற்கு |
| | 7 | கறியாகுமேயன்று | கறியாகுமேன்று |
| | 10 | எம்மெருமானே | எம்பெருமானே |
| 180 | 2 | அனைத்திற்குத் | அனைத்திற்கும் |
| | 9 | நாயகனாக | நாயகனாகத் |
| | 12 | குட்சுமமான | சூட்சுமமான |
| | 17,18 | வசிஷ்டப்பிரமம் | விசிஷ்டப்பிரமம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 181 | 15 | நிர்வாகனன் | நிர்வாகன் |
| | 24 | திரி, மிவை | திரு, இவை |
| 182 | 12 | தான | தன |
| | 29 | விளக்குவார் | என்று விளக்குவார் |
| 183 | 13 | யாவாருள்ள | யாவருள்ள |
| | 16 | உளரே என்று, | உளரோ என்று. |
| | 23 | எடுத்துக்காட்டி | எடுத்துக்காட்டியமை |
| 184 | 34 | நிலைகள் | நிலையும் |
| 185 | 12 | உமிழும் | உமிழும் பூங்காரரவு |
| | 20 | பிரத்தியும்ணன் | பிரத்தியும்னன் |
| | 24 | புணத்தலை | பணத்தலை |
| 186 | 24 | வாமன் | வாமனன் |
| | 25,36 | அநிருத்தனன் | அநிருத்தன் |
| 187 | 5 | திரு | திருக் |
| | 9 | கடந்து | கிடந்து |
| | 21 | அநிருத்தனன் | அநிருத்தன் |
| 188 | 7 | அவதரங்கள் | அவதாரங்கள் |
| 189 | 8 | இந்நிலையை | இந்நிலையைப் |
| | 21 | இறைவனை தன் | இறைவனைத்தம் |
| | 25 | கட்டுபட்டும் | கட்டுப்புட்டும் |
| 191 | 6 | பருவத்திற்கேற்பப் | பருகுவதற்கேற்பப் |
| | 21 | சொன்ன வண்ண | சொன்னவண்ணஞ் |
| 192 | 8 | திருவரங்க | திருவரங்கப் |
| | 15 | மளந்தவசவே | மளந்தவசைவே |
| 196 | 12 | அரச்சாவதார | அர்ச்சாவதார |
| | 13 | பெருமாளை | பெருமாளைக் |
| 198 | 26 | புலப்படுவதைக் | புலப்படுத்துவதைக் |
| | 28 | செக்விகின்ப | செவிக்கின்ப |
| 200 | 23 | மின்றி | மன்றி |
| 201 | 28 | திருநாட்டை | திருநாட்டைத் |
| 202 | 22 | என்று | என்ற |
| 203 | 16 | உய்க்கொள் | உயக்கொள் |
| 204 | 31 | கண்ணப்பிரான் | கண்ணபிரான் |
| 205 | 29 | எகாக்ஷரம் | ஏகாக்ஷரம் |
| | 35 | துவாதசக்ஷரம் | துவாதசாக்ஷரம் |
| | 37 | கேட்டப்பொழுது | கேட்டபொழுது |
| 206 | 30 | வழுவில்லா | வழுவிலா |
| 207 | 6 | மில்லையுங் | மில்லையுய் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 206 | 13 | பற்றுதல் | பற்றறுதல் |
| 208 | 7 | கூறலாம் | கூரலாம் |
| | 31 | சிடைப்பது | கிடைப்பது |
| 209 | 21 | உத்திர வாக்கியம் | உத்தர வாக்கியம் |
| 210 | 4 | யெரிய | பெரிய |
| | 18 | மீயா | ம்வீயா |
| | 30 | உவக்கின்றாா | உவக்கின்றார் |
| | 33 | வெளிப்படையாக | வெளிப்படையாகத் |
| 212 | 24 | மந்திரமோ | மந்திரமே |
| 214 | 4 | திநவடிகளை | திநவடிகளைப் |
| | 31 | மாணடி | மாணடியின்பின் எண் குணத்தான்தாள் சேர்க்கவும் |
| 217 | 26 | தெல்லைமால் | தொல்லைமால் |
| 220 | 9 | வளர்ச்சியையும் | வளர்ச்சியை அளித்துக் கொண்டும் |
| 221 | 4 | சமுதாய | சமுதாயத் |
| | 13 | என்று | என்ற |
| 226 | 2 | பயங்கராம் | பயங்கரம் |
| 229 | 17 | கிடந்து | கிடந்தது |
| | 22 | திருவெஃகா | திருவெஃகா) |
| 230 | 7 | மென் | என் |
| | 23 | அவனென்னை | அவனென்னை யெய்தாமல் |
| | 27 | என்றும் | என்னும் |
| 233 | 15 | கொண்டோதிப் | கொண்டாதிப் |
| | 29 | முதலாகக் | முதலாக் |
| 234 | 7 | பவ்லவ | பல்லவ |
| 235 | 12 | தெங்வங்களை | தெய்வங்களை |
| | 26 | வைன் | னவன் |
| | 28 | பேராயதற்கு | பேராயற்கு |
| 236 | 1 | கேசவானென்ன | கேசவாவென்ன |
| 237 | 19 | காட்படுபவர் | காட்படுவர் |
| 239 | 7 | மணக்கண் | மனக்கண் |
| | 33 | தன்மையும் | தன்மையையும் |
| 240 | 17 | மனி | மணி |
| 240 | 18 | கண்டு | கண்டு அதனை |
| | 25 | வைக்க | வைக்கக் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 240 | 30 | விலங்கை | விலங்கைத் |
| 243 | 17 | அநிருத்தனன் | அநிருத்தன் |
| 244 | 2 | நிறத்திலும் | நிறத்தினைக் |
| 246 | 8 | மவால்லிக் | மாவல்லிக் |
| 247 | 35 | ஆராமுதம் | ஆரமுதம் |
| 248 | 9 | பெண்னமாய | பெண்மையை |
| 251 | 9 | கூடலிழத்தல் | கூடலிழைத்தல் |
| | 13 | கைதெழும் | கைதொழும் |
| | 15 | அடிகொட்டிட | அடிகொட்டிடக் |
| 252 | 30 | பாடல்களைக் | பாடல்களைப் |
| 254 | 21 | ஏகர்த்தி | ஏகமூர்த்தி |
| | 30 | எட்டெழுத்தும் | எட்டெழுத்து |
| 255 | 12 | மெய்பிப்பது | மெய்ப்பிப்பது |
| | 32 | மார்தட்டி | மார்தட்டிப் |
| 258 | 21 | கேட்டவாவிலே | கேட்டவளவிலே |
| 261 | 9,10 | சங்கின் | சக்கரத்தின் |
| 263 | 31 | திச்ரு | திருச் |
| 265 | 29 | ஆற்றங்க்கரை | ஆற்றங்கரைக் |
| 266 | 10 | அனையுங் | ஆனையுங் |
| 267 | 2 | சித்தரித்துக் | சித்திரித்துக் |
| 270 | 13 | கோவர்தன மலை | கோவர்த்தனமலை எடுத்தது |
| | 17 | பௌவண்ட்ரக | பௌண்ட்ரக |
| | 32 | யசோதைக்கு பிள்ளை | யசோதைக்குப் பிள்ளை |

மற்றும் பிழைகள் காணப்படினும் திருத்திக் கொள்ளவும்.

## இந்நூலாசிரியரைப் பற்றி....



இந்நூலாசிரியர் வழிவழியாக வரும் வைணவ குடும்பத்தைச் சேர்ந்தவர். வண்ணையம்பதியில் வாழ்ந்து வரும் இவர் அப்பகுதியிலுள்ள அரசு மகளிர் உயர்நிலைப் பள்ளியில் பயின்று பள்ளியிறுதித் தேர்வில் வெற்றி பெற்றார். பின்னர் பாரதி அரசு பெண்கள் கலைக் கல்லூரியில் சேர்ந்து புகுமுக வகுப்பில் தேர்வு பெற்ற பின் பி.ஏ. பொருளியல் வகுப்பிலும் சேர்ந்து பட்டம் பெற்றார். அடுத்து இராணிமேரி கல்லூரியில் எம்.ஏ. (தமிழ்) பயின்று பட்டமும், தொடர்ந்து எம்ஃபில் பட்டத் திற்குத் 'திருமழிசையாழ்வார் பாசுரங்கள்-ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் ஆய்ந்து பட்டமும் பெற்றவர். தற்சமயம் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி.எச்.டி. பட்டத்திற்குத் திருமங்கையாழ்வார் பாசுரங்களைத் தத்துவ நோக்கில் ஆய்ந்து நிறைவு செய்யும் நிலையில் உள்ளார். ஸ்ரீவைண மரபைச் சேர்ந்தவராதலால் ஆய்வில் ஆழங்கால்பட்டுத் தன்னையே மறந்த நிலையை எய்துவார். பல ஸ்ரீ வைணவ மாநாடுகளில் கலந்து கொண்டு உரையாற்றி வருகிறார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் நடை பெற்ற பல கருத்தரங்குகளில் கலந்து கொண்டவர். ஒரு முறை ஆய்வுக் கட்டுரையை வழங்கி நற்புகழ் பெற்றவர். எளிமை, அடக்கம், மரியாதை முதலிய பண்புகளுடன் இனிமையாகப் பழகும் வைணவச் செல்வி இவர்.

—டாக்டர் ந. சுப்புரெட்டியார்

---

MK Colour Process, Madras-14
Phone : 841478